# அஷ்டாவக்ர மகாகீதை

## நான்காம் பாகம்

## இப்பொழுது இங்கே இரு

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 99 முதல் 132 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

**ஓஷோ**

தமிழாக்கம்:
**டாக்டர் என். ஸ்ரீதரன்**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

# பொருளடக்கம்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

பாவாபாவ விகாரஸ்ச ஸ்வபாவாதிதி நிஸ்சயீ|
நிர்விகாரோ கதக்லேஷ: ஸுகேநைவோபஷாம்யதி|| (99)

ஈஸ்வர: ஸர்வநிர்மாதா நேஹான்ய இதி நிஸ்சயீ|
அந்தர்கலித ஸர்வாஷ: ஸாந்த: க்வாபி ந ஸஜ்ஜதே|| (100)

ஆபத: ஸம்பத: காலே தைவாதேவேதி நிஸ்சயீ|
த்ருப்த: ஸ்வஸ்தேந்த்ரியோ நித்யம் ந வாஞ்சதி ந ஸோசதி||
(101)

ஸுகதுக்கே ஜன்மம்ருத்யு தைவாதேவேதி நிஸ்சயீ|
ஸாத்யாதர்ஷி நிராயாஸ: குர்வன்னபி ந லிப்யதே|| (102)

சிந்தயா ஜாயதே துக்கம் நான்யதைஹேதி நிஸ்சயி|
தயா ஹீன: ஸுகீ ஸாந்த: ஸர்வத்ர கலிதஸ்ப்ருஹ:|| (103)

நாஹம் தேஹோ ந மே தேஹோ போதோஅஹமிதி நிஸ்சயீ|
கைவல்யமிவ ஸம்ப்ராப்தோ ந ஸ்மரத்யக்ருதம் க்ருதம்||
(104)

ஆப்ரம்ஹஸ்தம்பபர்யந்தமஹமேவேதி நிஸ்சயீ|
நிர்விகல்ப: ஸுசி: ஸாந்த: ப்ராப்தாப்ராப்தவினிர்வ்ருத:||
(105)

நானாஸ்சர்யமிதம் விஸ்வம் ச கிஞ்சிதிதி நிஸ்சயீ|
நிர்வாஸன: ஸ்பூர்த்திமாத்ரோ ந கிஞ்சித்வ ஷாம்யதி|| (106)

**இ**க்கரையில், இவ்வுலகில், மனிதன் தனக்கே அன்னியனாக உள்ளான். இங்கே அவனுக்கென்று இல்லம் ஒன்றும் இல்லை. அவன் தன்னையும் அறிந்தானில்லை; பிறரையும் அறிந்திருக்கவில்லை. தனக்குத் தானே பரிச்சயம் அற்றவனால் பிறரிடம் பரிச்சயம்கொள்ள

வழி ஒன்றும் இருக்க முடியாது. எத்தனை உபாயங்கள் செய்தாலும் எள்ளளவும் புரிதல் ஏற்படுவதில்லை. தண்ணீரில் இழுக்கப்படும் கோடுபோல்தான் உள்ளன நம்முடைய தொடர்புகளும். உண்டாகிய கணத்திலேயே அவை உடைகின்றன.

'இதோ என் குடும்பம், இதோ எனது சமூகம்' என்றெல்லாம் நாம் சொல்லும் எல்லாம் பிரமையே அன்றி வேறல்ல. இந்த அறிவிப்புகள் மனத்தைக் கிறங்கவைப்பவை மாத்திரமே. 'இது என் வீடு' என்று ஒரு மனிதன் சொல்லும்போது வேறெங்கும் தனக்கு வீடு கிடையாது என்றுதான் அவன் உணர்கிறான், உணர்த்துகிறான். இந்த வகையில், அவன் மேற்கொண்டு யோசிக்கையில், 'இவர்கள் எல்லாரும் எனக்கு பிரியமான சொந்தபந்தங்கள்; இதுவே உண்மை; இந்த உடலும் மெய்; இந்த உடலால் உணரப்படுவதொன்றே உலகம்; இதற்கப்பால் எதுவும் கிடையாது' என்றெல்லாம் நினைக்கிறான். இந்த நினைப்பு விரைவில் சிதைந்து விடுகிறது. இந்தச் சிந்தனை மனத்தின் ஒரு விளையாட்டு மாத்திரமே. அது நிஜமாவதில்லை. பொய்மை எவ்வளவு தத்ரூபமாக அமைந்தாலும் உயிரோட்டம் பெறுவதில்லை. ஏமாற்று வேலை வெற்றி பெறுவதில்லை. அதுவும் நல்லதற்குத்தான். மோசடி வென்றால் வாழ்க்கை பற்றிய தவறான முடிவுகளில் அல்லவா நாம் உழன்று கொண்டிருப்போம். மெய்ஞ்ஞானம் ஏற்பட வழி கிடைக்காது. சமாதிநிலை கைவசமாகும் சாத்தியக்கூறு கிடைக்காது.

எவ்வளவு முயன்றாலும் எதுவும் நிலையில்லை, நீடிப்பதில்லை. ஆகவே கவலை தோன்றுகிறது. நீ கருதுவதும் உணர்வதும் வெவ்வேறாக உள்ளது. 'இவள் என் மனைவி; இவள் என்னவள்' என்கிறாய். ஆனால் மனத்தின் ஆழத்தில் 'எதன் அடிப்படையில் இவளை நான் சொந்தம் கொண்டாடுகிறேன்?' என்று உனக்கு சந்தேகமும் உள்ளது. ஒருவனைச் சுட்டிக்காட்டி 'இவன் என் மகன்' என்கிறாய். அதேசமயம் உன் ஆழ்மனத்தில் 'எனது-உனது' என்பதெல்லாம் வெறும் கனவு என்ற உணர்வும் எழுகிறது. உள்ளே நெருப்பாக எரிகிறது; உள்ளத்தில் அம்பாகத் தைக்கிறது. 'எனக்கே என்னைச் சரிவரத் தெரியவில்லை. மற்றவர்களுடனான உறவையும் நான் புரிந்துகொள்ள இயலவில்லை. இந்த உலகமே எனக்கு அயலானது. இங்கே எனக்கென்று நிரந்தரமாக வீடொன்று எப்படி அமைய முடியும்?' என்று நீ சிந்திக்கத் தொடங்குகிறாய்.

இதன் விளைவாக, 'இவ்வுலகம் அன்னியமானது. இங்கு எதையும் பற்றிக்கொள்ள முடியாது. நான் வேற்றுநாட்டுவாசி' என்னும் உணர்வு தோன்றினால் உன்னிடம் உறுதி பிறந்துவிட்டது எனலாம். இக்கரையிலுள்ள கோணல்மாணலான பாதைகளில் அலைவதை நீ நிறுத்திவிட்டதாக அர்த்தமாகிறது. அக்கரை ஒன்றுள்ளது என்னும் விழிப்புணர்வு உனக்குத் தோன்றிவிட்டது. தற்சமயம் அது தொலைவிலுள்ளதாக, மூடுபனியால் சூழப்பட்டிருப்பதாக உனக்குத் தோன்றுகிறது. அதன் அழைப்புக் குரல் உனக்குக் கேட்கத் தொடங்கிவிட்டது. உனது வாழ்க்கை வேறு வடிவம் எடுக்க ஆரம்பித்துவிட்டது. இத்தகைய மாற்றமே அறப்புரட்சி என்று பெயர் பெறுகிறது.

**இந்த வளைகுடாவில்,**
**இந்த சோகச் சூழலில்**
**உனது படகைக் கட்டாதே**
**இந்த தேசம் வேறானது,**
**இங்கே படகைக் கட்டாதே**
**தொடர்பயணமே நன்மையானது,**
**இங்கே படகைக் கட்டாதே**
**பார்த்தாலே தெரிகிறதே இக்கரையில்**
**தண்ணீரின் கொந்தளிப்பு**
**கரையின் தரையும் சாதகமில்லை,**
**இங்கே படகைக் கட்டாதே**
**இங்கு நிலவும் தட்பவெப்பமும்,**
**வீசும் காற்றின் மண வகையும்**
**இந்த தேசமும் நமக்கு அன்னியம்,**
**இங்கே படகைக் கட்டாதே**
**இக்கரை நோக்கிவந்த படகுகள்,**
**எக்கதி ஆயின், தெரியவில்லை**
**இந்த வானம் வேறு, பூமி வேறு**
**இங்கே தங்கினால் அழிவது நிச்சயம்**
**இங்கே படகைக் கட்டாதே!**

ஆம், இந்தக் கரை, இந்த உலகம், மனத்தை மயக்குவதாகத்தான் உள்ளது. சொப்பன உலகம்போல் சுந்தரமாக உள்ளது. இங்கே மிகையான கவர்ச்சி நிறைந்திருக்கிறது. அதனால்தான் எண்ண முடியாத தலைமறைகளாக எண்ணற்ற மக்கள் உலகின் குறுக்குமறுக்கான

கவர்ச்சிகளில் உழல்கிறார்கள். கோடி கோடியாக மக்கள் அவ்வாறு இயங்குகிறார்கள் என்றால் இங்கே எதுவோ மனத்தை மயக்குகிறது; எதுவோ மனத்தைப் பிடித்துக் கட்டுகிறது.

எப்பொழுதாவது அரிதாக ஒருவன் விழித்துக் கொள்கிறான். அவன் அஷ்டாவக்கிரர்போல் ஆகிறான். மற்ற எல்லோரும் உறக்கத்தில் ஆழ்ந்து சொப்பன வாழ்வில் மகிழ்கின்றனர். உலக போதை வலுவாக மக்களைப் பிடித்துக் கொண்டு விடுகிறது. அவர்களைத் தட்டி எழுப்ப ஞானிகள் வருகிறார்கள்; எழுப்ப முயலுகிறார்கள். உலக போதையிலுள்ளவன் சிறிது புரண்டுவிட்டு மீண்டும் போதையில் தன்னை இழக்கிறான். எழுப்ப வந்தவர்கள் பலனின்றித் திரும்பிச் செல்கிறார்கள். அவர்களின் உபதேசங்களைத் தனக்குச் சாதகமாக வளைத்து அவன் அர்த்தம் எடுத்துக்கொள்கிறான்.

மகாத்மா புத்தர் உன்னை எழுப்ப வந்தார். அறியாமைத் துயில் நிலையிலேயே நீ புத்தரின் அறிவுரைகள் கேட்டாய். துயிலில் மற்ற கனவுகளோடு புத்தரின் உரையையும் கலக்கிக் கெடுத்தாய். அவரது உபதேசங்களுக்கு நீ தான்தோன்றித்தனமாக அர்த்தம் எடுத்துக் கொண்டாய். அதில் உன்னுடைய உணர்ச்சிகளையும் கலந்து குழப்பினாய். புத்தர் சொன்னதை அப்படியே நீ காதால் கேட்கவில்லை. புத்தர் சொன்னதாக எதை நீ கேட்க விரும்பினாயோ அதைத்தான் கேட்டாய். பிறகு புரண்டு படுத்து உறங்கி விடுகிறாய். உன்னை எழுப்பி ஞானிகள் அளித்த மெய்ஞானத்தை நீ மீண்டும் தூங்கி மூழ்கடித்து விடுகிறாய்.

உலகக் கனவுகள் எவ்வளவு கவர்ச்சியாகத் தெரிந்தாலும், அதில் நீ மயங்கினாலும் உன் கவலை என்னவோ நீங்கவில்லை. விட்டு-விட்டு முள் குத்துகிறது; நெஞ்சைக் கீறுகிறது; துன்பம் திரண்டு அடர்த்தி யாகிறது.

மக்களின் முகத்தை உற்றுப்பார். ஆழ்மனத்தில் காயங்களே இருப்பது. அகத்தின் அழுகல், முகத்தில் தெரிகிறதல்லவா? உன் முகத்திலும் அதே பிரதிபலிப்புதானே தெரிகிறது. அதை மறைக்க நிறையக் களிம்பு தடவினாய்; இறுக்கமாகக் கட்டு போட்டாய். காயத்தின்மேல் ஒரு பூவை வைத்து மறைக்க முயலுவதுபோல் போலி மகிழ்ச்சி வெளிப்படுத்தினாய். ஆனால் காயங்கள் மறையவில்லை;

கவலைகள் நீங்கவில்லை. எல்லா உபாயமும் செய்துபார்த்துத் தோல்வி கண்டாய். உன்னால் முடிந்த அளவு முயன்றும் தோல்வியே கண்டாய். ஆனால் இது நிறைவேறாத ஆசை என்று தெரிந்து கைவிடவும் முடியவில்லை.

அறிமுகமற்ற ஒன்று அறிமுகமற்றதாகவே நீடிக்கும். அறிமுகம் தேவையானால் நீ உன்னையே அறிமுகம் செய்துகொள். பிறரை நீ என்றைக்கும் முழுமையாகத் தெரிந்துகொள்ள முடியாது. உன்னை அறிமுகம் செய்துகொள்வது மட்டுமே உனக்கு சாத்தியப்படும். உன் உள்ளத்தினுள்ளேயே நீ இன்னும் ஆழமாகப் போய்ப் பார்த்ததில் லையே. பிறகு எப்படி நீ பிறரது மனத்தில் பிரவேசிப்பாய்? உன் உள்ளத்தினுள் இறங்கும் கலையை நீ இன்னும் கற்கவில்லை. உனது ஆழ்மனத்தில் கீழ்நோக்கி இறங்கும் படிகளில் கால் வைத்ததில்லை. உன் மனக் கிணற்றினுள் எட்டிப் பார்த்ததில்லை. ஆழ்மன ஆற்றுப்பெருக்கில் அமிழ்ந்து நீராடியதில்லை. நீ இருத்தலின் மையப்புள்ளியைத் தேடிப் பார்த்ததில்லை. நீ உன்னுள்ளே பார்வையைச் செலுத்தி எந்த அளவிற்கு உன்னைப் பார்த்துக் கொள்ள முடியுமோ அந்த அளவிற்கே பிறரை நீ பார்ப்பதும் சாத்தியமாகும்.

நீ உன்னை ஓர் உடல் மட்டுமே என்று கருதினால் மற்றவர்களும் உனக்கு உடல்களாக மட்டுமே தெரிவார்கள். நீ மேற்கொண்டு உன்னை மனம் என்றும் கருதினால் மற்றவர்களும் உனக்கு உடலுடன்கூடிய மனங்களாகவே தோன்றுவர். நீ ஆத்ம சொரூபமானவன் என்பதை எப்பொழுதாவது உணர்ந்தாயானால் மற்றவர்களிடமிருந்தும் ஆத்மாவின் கிரணங்கள் வெளிப்படுவதை நீ உணர்வாய். உன் அகப் பார்வையின் எல்லை எதுவோ அதே அளவு எல்லைவரை நீ பிறர் உள்ளத்தையும் பார்க்க முடியும். நீ உன் உள்மனத்தை ஒரு புத்தகமாகக் கருதி எந்த அளவிற்குப் படிக்க இயலுகிறதோ, அந்த அளவிற்குப் பிறர் மனத்தையும் புத்தகம்போல் படித்து மதிப்பிட முடியும்.

குறைந்தபட்சம் மனத்தின் நெடுங்கணக்கை (எழுத்துத் தொகுதியை, எழுத்துகளையாவது) படித்துப்பாரேன். பிறகு படிப்படியாக மனத்தை ஒரு சாஸ்திரம்போல் பயிலு. இப்பயிற்சி பிறரைப் புரிந்துகொள்ள உனக்கு உதவும்.

வேடிக்கை என்னவென்றால், தன்னை அறிந்தவன் மேற்கொண்டு அறிமுகம் செய்துகொள்ள அன்னியராக வேறு யாரும்

கிடையாது என்னும் முடிவிற்கே வருவான். ஒருவன் தன்னை அறிந்ததும், உண்மையில் தான் மட்டுமே இருப்பதாகவும், தானே வெவ்வேறு உருவங்கள் கொண்ட பிற மனிதர்களாகத் தோன்றியுள்ள தாகவும் தெரிந்து கொள்வான். வட்டங்கள் வெவ்வேறு அளவாயினும் அவற்றின் மையம் ஒன்றுதான் என்பதைப் புரிந்துகொள்வான். நாம் ஒவ்வொருவராக உள்நோக்கிப் பயணிக்கும்போது, ஒரு கட்டத்தில், நாம் எல்லோரும் ஒன்றாக இணைந்து விடுவோம். வெளியேறும் போதோ தனித்தனியாகப் பிரிந்து கலைந்து விடுகிறோம். ஓரிடத்தில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சியில் மக்கள் உள்ளே செல்வதும் வெளியேறுவதும் இதே அடிப்படையில்தான் நடைபெறுகிறது. நுழைகையில் குவிகிறோம்; வெளிவருகையில் சிதறுகிறோம். ஒன்றாதல் என்பது உள்முகப் பயணம். பலவாதல் என்பது புறமுகப் பயணம், பன்முகப் பயணம்.

இன்னொருவரை அறிய முயல்பவன் அவரை அறிமுகம் செய்துகொள்ளவும் விரும்புவான். ஆண் பெண்ணையும், பெண் ஆணையும் அறிமுகம் செய்துகொள்ள ஆசைப்படுகிறார்கள். நாம் நண்பர்கள் ஏற்படுத்திக் கொள்ள விரும்புகிறோம். நமக்கென ஒரு குடும்பம் அமைய வேண்டும் என்றும் தோன்றுகிறது. நாம் தனித்திருந்து வாழக்கூடாதென நினைக்கிறோம். தனிமை நமக்கு அச்சமூட்டுகிறது. தனித்திருக்கும் நேரங்கள் கடினமானதாகத் தோன்றுகின்றன. அப்போது ஒவ்வொரு நிமிடம் கழிவதற்கு ஒரு வருஷம் ஆவதுபோல் அல்லவா தோன்றுகிறது. கால நீட்டிப்பு உணர்வு கழிவிரக்க உணர்வைப் பன்மடங்காக்குகிறது.

இந்தத் தனிமையை ஒழிப்பதற்குத்தான் நாம் பிறரை அறிமுகமாக்கிக் கொள்ள விரும்புகிறோம். அவர்களில் சிலரை குடும்பத்தினராக்கிக் கொள்கிறோம். அவர்களுடன் சேர்ந்து வாழும் இடத்தை 'என் வீடு' என்கிறோம். எப்படியாவது தனிமைப்பட் டிருப்பது அழிந்தால், ஒழிந்தால் சரிதான் என நினைக்கிறோம்.

உலகத்தில் இவ்வாறு தனக்கென்று தனிப்பட்டதொரு வீட்டை ஏற்படுத்திக் கொள்பவனை நான் சம்சாரி (உலக வாழ்க்கை நடத்துபவன்) என்கிறேன். கிருஹஸ்தன் (வீட்டில் வசிப்பவன்/ இருப்பவள்) என்பதும் இதே அர்த்தம் தருகிறது. ஆனால் இது மேலோட்டமான அர்த்தம். வீட்டில் வசிப்பவன் சம்சாரி; காட்டில்

வசிப்பவன் சந்நியாசி என்று பிரித்துக் கூற முடியாது. சந்நியாசி வசிப்பதும் வீட்டில்தான். அவருக்கும் மேற்கூரை தேவைப்படுகிறது. அப்படி அவர் தான் தங்கும் இடத்தை ஆசிரமம், சந்நிதி, சமணர்களின் ஸ்தானக், பள்ளிவாசல் என்று ஏதாவது ஒரு பெயரால் அழைக்கலாம். பெயர் எதுவாயினும் அந்த இடம் பொதுவாக வீடுதான். பயன்பாட்டின் அளவில் வீடு என்பதற்கும் மேற்சொன்ன இடங்களுக்கும் வித்தியாசம் கிடையாது. சம்சாரி-சந்நியாசி வேறுபாடு வசிக்குமிடத்தைப் பொறுத்ததன்று. அந்த வித்தியாசம் வேறு வகையானது. ஆழத்தில் செல்வது.

சம்சாரி என்பவன் இந்த உலகில் வீடு கட்டுகிறான். வீடு கட்டி விட முடியும் என நம்புகிறான். ஏதாவது உபாயம் செய்து இங்கேயே நிரந்தரமாக வசிப்பவனாக ஆகிவிடலாமென நினைக்கிறான்.

துறவியின் கண்ணோட்டம் வேறுவிதமாக இருக்கும். அவர் இவ்வுலகில் நிரந்தரமாக ஓர் இருப்பிடம் அமைத்துக் கொள்ள முடியாது என்பதை அறிந்தவராக இருப்பார். இரண்டும் இரண்டும் சேர்ந்தால் ஐந்தாகாது என்பதுபோல் அவ்வளவு உறுதியாக மனிதனுக்கு வீடு இங்கு அமையாது என்ற கருத்து கொண்டிருப்பார். இங்கே எத்தனை வீடுகள் கட்டினாலும் ஒவ்வொன்றாக விழுந்துவிடும். சீட்டுக்கட்டிலுள்ள சீட்டுக்களால் அடுக்கப்பட்ட கோபுரம்போல் அந்த வீடுகளும் விழுந்துவிடும். நீர் நிலைகளின் கரையில் குழந்தைகள் கட்டும் வீடுகள் போல்தான் இவையும் சரிந்துவிடும். பலத்த காற்ற வீசினாலும், ஓர் அலை வந்து தாக்கினாலும் இந்த மணல்வீடுகள் காணாமல் போய்விடும். நமது மரணத்துடன் நாம் கட்டிய வீடும் நம் வசமிராது. ஒருபுறம், மனிதன் நிரந்தரமாக வாழ்வது இல்லை. மறுபுறம், எந்த வீடும் நிரந்தரமாக இருக்கப் போவதுமில்லை.

இந்த உலகின் நியதிப்படி இங்கு நிரந்தரமாக வீடு அமைய வாய்ப்பே இல்லை என்பதை நீ என்றைக்குப் புரிந்து கொள்கிறாயோ அன்றைய தினம் உன் வாழ்க்கையில் சந்நியாசம் பிரவேசித்துவிட்டது எனலாம். அன்றிலிருந்தே நீ கேள்விப்பட்டிருந்த மறுகரை பற்றி அறிய ஆழமான ஆர்வம் உன் வாழ்க்கையில் தோன்றிவிடும். உள்ளேயிருந்து உன்னைச் சுண்டி இழுக்கும் குரல் கேட்கும். இரவும் பகலும் ஏதோ ஒன்று தன்னை நோக்கி உன்னை இழுக்கும். ஒரு சவால்

உன்னைச் சீண்டும். அவ்வளவுதான் நீ ஒரு புதிய திசையில், புதிய லட்சியம் நோக்கி, புதுப்பயணம் மேற்கொள்ளுவாய்.

நீ உலகை அறிமுகம் செய்துகொள்வதற்காக முயலும் எண்ணத்தைக் கைவிடுவாயானால், அப்போதுதான் பரமாத்மாவுடன் அறிமுகம் செய்து கொள்வதற்கான உபாயம் உனக்குத் தெரிய ஆரம்பிக்கிறது. வெளியார்களுடன் அறிமுகம் ஏற்பட்டால் அவர்கள் நம்மவர் ஆகிவிடுவார்கள் என்ற எதிர்பார்ப்பைக் கைவிடு. அப்போதுதான் நீ உனக்குள் இறங்கும் உணர்வைப் பெறுவாய். உனக்கு வெளியே வீடுகட்ட இடம் எதுவுமில்லை என்பதைத் தெரிந்து கொள்வாய். காலி மனை உள்ளேதான் இருக்கிறது.

அஷ்டாவக்ரரின் இந்த சுலோகங்கள் மேற்கூறிய உள்முகப் பயணத்தில் ஆங்காங்கே உள்ள முக்கிய முகாம்களாகத் திகழ்கின்றன. ஒவ்வொரு சூத்திரமும் கவனமாகப் படிப்பதற்கு உரியது. இந்த சூத்திரங்கள் மேலோட்டமாகப் படித்து, காற்றில் ஊதிவிடுவதற்கு உரியவை அல்ல. நீ பின்பற்றுவதாக இருந்தால்தான் இவை உனக்குள் இறங்கும். இவை காதால் கேட்பதற்காக மட்டும் கூறப்படவில்லை. இவை ஆழ்ந்து தியானிப்பதற்காகக் கூறியவை. அப்போதுதான் இவை உனக்குள் இறங்கும். எனவே எல்லா ஓசை-ஒலிகளைத் தவிர்த்து மௌனமாக இந்த சுலோகங்களில் கருத்தைச் செலுத்த வேண்டும்.

ஆம், இந்த சுலோகங்களில் வேடிக்கை-விளையாட்டு கிடையாதுதான். இவை பொழுதுபோவதற்காக எழுதப்படவில்லை. விளையாட்டாகப் பொழுதை வீணாக்குவது முட்டாள்தனம் என்று நினைப்பவர்கள் படிப்பதற்காகவே இவை தோன்றின. பக்குவமடைந்தவர்கள் படிக்கும் சூத்திரங்கள் இவை. அத்தகையோர் பொம்மைகளை வைத்து விளையாடக் கூடியவர்களாகவோ, மரப்பாச்சி கல்யாணம் செய்வதில் மனத்தைச் செலுத்துபவர்களாகவோ இருக்கமாட்டார்கள். படித்தபின் அடுத்த நடவடிக்கையாக ஏதாவது செய்ய வேண்டும்; தம்மை அறிந்து கொள்வதற்கு அது அடிப்படை நடவடிக்கையாக அமைய வேண்டும் என எதிர்பார்ப்பவர்களாக இருப்பார்கள். தன்னை அறிந்துகொண்டால் எல்லாக் கவலையும் தீர்ந்தது. மறுகரையும் பார்வைக்குத் தெரியத் தொடங்குகிறது. தன்னை அறிந்தவனுக்குப் பிறரை அறிமுகம் செய்துகொள்வதற்கான கதவு சுயமாகத் திறக்கும்.

எவனொருவன் தன் ஆழ்மனத்தின் ஆழத்தில் இறங்க வல்லவனோ அவனுக்கென்று புதியதான, வித்தியாசமான உலகம் உதயமாகிறது. அங்கே அவன் தனது படகைக் கட்டிவைக்கும் வசதியிருக்கிறது. யாரிடமும் அனுமதி பெறவேண்டியதில்லை. அந்தக் கரை உன்னுடையதுதான்.

முதல் சூத்திரத்தில் **(சுலோகம் 99)** அஷ்டாவக்ரர் சொல்கிறார்: 'நமது சுபாவம் காரணமாகவே **பாவ**ம் (உணர்ச்சிகள்), **அபாவ**ம் (உணர்ச்சியற்ற விரக்தி) ஆகியவை தோன்றுகின்றன. இதை உறுதியாக அறிந்தவன் மனத் தடுமாற்றங்களின்றி விளங்குகிறான். அவனுக்கு மனக் கலக்கம் கிடையாது. அவன் சுலபமாகவே உள்ளத்தமைதி பெறுகிறான்.'

**அ**ஷ்டாவக்ரர் சொல்கிறார்: பிறப்பவன் எல்லாம் இறக்கிறான். உண்டாகுபவை எல்லாம் அழிகின்றன. வருவதும் போவதுமாக அமைந்துள்ள இந்த வாழ்க்கைச் சுழற்சியில் மனிதன் வருகிறான் போகிறான்; உணர்கிறான் மரத்துக் கிடக்கிறான். சுகம்-துக்கம், பிறப்பு-இறப்பு, வருதல்-போதல், உண்டாகுதல்-உடைதல் இவை எல்லாம் இயற்கையின் விளையாட்டு ஆனால் உனக்குள் இருக்கும் உலகத்தில் எதுவும் மேலேறுவதும் இல்லை; கீழே விழுவதும் இல்லை. விருப்பும் இல்லை, வெறுப்பும் இல்லை. நீ எப்போதும் ஒரே இயல்புடன் விளங்குகிறாய். உன்னிடம் எந்த மாறுதலும் பிரதிபலிப்பாவதில்லை. மாற்றமெல்லாம் வெளியுலகில்தான். நீ என்றைக்கும் அப்படியே உள்ளாய். அலைகளின் ஆர்ப்பரிப்பு வெளியில்தான். நீ ஆழமானவன். அந்த ஆழத்தில் அலைகள் கிடையாது. மாற்றங்களை நீ சாட்சிபோல் பார்த்தபடி இருக்கிறாய்.

பசி எடுக்கிறது. ஆனால் **உனக்கு** ஒருபொழுதும் பசியெடுப்பதில்லை! பசி எடுக்கிறது என்று உனக்குத் தெரியமட்டும் செய்கிறது. பசி உடலில் தான் எடுக்கிறது. பசி எடுப்பது உடலின் லட்சணம். உடலுக்கு உணவு தேவைப்படுகிறது. உடல் பலகீனமானது. பிச்சை போடுவதுபோல் அதற்கு அடிக்கடி உணவு தேவை. உடம்பு தானாகவே உணவு தேடி உண்டு வாழ வகையற்றது. நாம் உணவு தேடித் தந்தால் உடல் அதைக் கடனாகப் பெற்றுக் கொள்கிறது. அதற்கு உணவு கொடுக்காவிட்டால் அது செத்துப்போகும். சுவாசிக்கக் காற்று

கிடைக்காவிடிலும் உடலின் கதை முடிந்துவிடும். அதற்கு தினந்தோறும் சாப்பாடு போட்டுக் கொண்டே இருந்தால் இழுத்துப் பிடித்துக்கொண்டு ஆயுளை நீட்டிச் செல்லும். உணவை உண்பவன் நீயானாலும் திருப்தி என்னவோ உடலில்தான் உணரப்படுகிறது. பசியெடுத்தல், உணவுண்டு பசி நீங்குதல் இரண்டுமே உடலில்தான் உணரப்படுகின்றன. நீ இதை அறிந்து கொள்கிறாய். சாட்சியாக மட்டும் இருந்து பார்க்கிறாய். பசி உனக்கு எடுக்கவில்லை! பசி நீங்கிய திருப்தி உனக்கு ஏற்பட்டதல்ல.

சுபாவம் (இயற்கை குணம்) காரணமாகவே உணர்ச்சிகள் எழுகின்றன என்பதைக் காதால் கேட்டறிவது மட்டும் போதாது. இந்த விஷயத்தை சாஸ்திர நூல்களில் படித்தறிவது மட்டும் போதாது. இவையெல்லாம் மற்றவர் கூறுவது. நீ உணர்ச்சிகள் பற்றிய சரியான அறிவை நீயே அனுபவித்த பிறகுதான் உறுதியாகப் பெறமுடியும்.

அஷ்டாவக்ரர் கூறியது போலவே நானும் உனக்குச் சொல்கிறேன்: 'பசி உடலுக்குத்தான் எடுக்கிறதே தவிர உனக்கு அல்ல.' இதை பற்றி உன் அறிவைக் கொண்டு சிறிதளவு சிந்தித்தாலும் இந்தக் கருத்து சரியானதுதான் என்பதைப் புரிந்துகொள்வாய். முள் குத்துவது நம்மையல்ல; உடலில் குத்துகிறது. அதனால் வலி ஏற்படுவது நமக்கல்ல; உடலுக்கு. இந்த விஷயத்தை நாம் அறிந்து கொள்கிறோம் என்பது உடலுடன் சேர்ந்ததல்ல. சுற்றிலும் சம்பவங்கள் நிகழ்ந்தபடி உள்ளன. நாம் சாட்சி (பார்வையாளர்) மட்டுமே ஆவோம். இதையும் அறிவின் மூலம் சரியென உணரலாம். ஆனால் சீக்கிரமே இதை மறந்து போவோம். மறுபடியும் பசியெடுத்ததும் நாம் அஷ்டாவக்ரரை மறந்து விடுவோம்; 'எனக்குப் பசி எடுக்கிறது', என்போம்! பசி வேளையில் பசிக்கும் உடலுக்கும் நெருக்கமான தொடர்பு உண்டாகி விடுகிறது. 'எனக்குப் பசி' என்று சொன்ன நீ, உணவுண்ட பின், 'எனக்கு திருப்தியாகிவிட்டது' என்பாய். உடலுக்கும் உனக்குமுள்ள வேறுபாட்டை தர்க்க அறிவின் மூலம் நீ ஏற்றுக் கொண்டாலும், நடைமுறையில் உன்னால் உடலும் நீயும் வேறெனப் பிரித்துப் பார்க்க முடிவதில்லை. உடலும் நீயும் வேறு என்னும் எண்ணத்தை, ஒருமுறை சாப்பிடும் சமயம் மட்டும் நினைக்காமல், அடிக்கடி நெட்டுரு செய்வதுபோல் கூறிப் பழக வேண்டும். இதனால், கிணற்றுமேடையில்

தாம்புக்கயிறு ஏராளமான முறை உரசுவதால் எற்படும் கோடுபோல், மனத்தில் இலேசான பாதிப்பு உண்டாகும்.

ஆனால் இந்தச் சிறு பாதிப்பையே பெரிய வெற்றியாக நினைத்துவிட வேண்டாம். அம்மாதிரியான பிரமையில் இந்நாட்டிலுள்ள ஏராள்மான துறவிகள் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் தங்கள் ஆசிரமங்களில் அமர்ந்தபடி 'நான் உடலில்லை; நான் பிரம்மம் (கடவுள்)' என்று ஜபம்போல் செய்கிறார்கள். ஆனால் ஏன் கிளிப் பிள்ளைபோல் ஒன்றையே சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்? நீ பிரம்மம் என்று நினைத்தால் அதை வாயால் ஏன் சொல்ல வேண்டும்? நீ பலமுறை சொல்வதால் நீ பிரம்மம் என்பது பற்றி உனக்கு சந்தேகமுள்ளது என்று பொருள். இந்த 'நான் பிரம்மம்' என்ற ஜபத்தை நாலு நாள் செய்யாதிருக்கும்படி அவர்களிடம் கூறிப் பாருங்கள். அவர்கள் பதறுவார்கள். ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இந்த ஜபத்தை நடுவில் நிறுத்தினால் தங்கள் மனவுறுதி பலகீனப்படும் என்பார்கள். நாலு நாள் இடைவெளி விட்டு, பிறகு பழைய நிலைக்குப் போவது கடினமென அவர்கள் நினைப்பதால், 'நான் பிரம்மம்' என்பது ஒரு பிரமையாகத் தோன்றுகிறது. அவர்களுக்கு அதில் பிடிப்பில்லை எனத் தெரிகிறது.

சர்வாதிகாரி அடால்ஃப் ஹிட்லர் தனது சுயசரிதையில்* எழுதுகிறார்: 'உண்மைக்கும் பொய்க்கும் இடையே அதிக வித்தியாசம் கிடையாது. ஒரு பொய்யைப் பலமுறை திருப்பிச் சொன்னால் (சொன்னவருக்கும்கூட) அது உண்மையென்றே தோன்றத் தொடங்கும்.' இந்த விஷயம் அவரைவிட வேறு யாருக்கு நன்றாகத் தெரிந்திருக்க முடியும்? ஏனெனில் அவர் வாழ்க்கை முழுவதும் பொய்களே உதிர்த்தவர்! பொய்களையே மீண்டும்-மீண்டும் கூறி அவை உண்மையென மக்களை நம்பச் செய்தவர். முதலில் நகைத்த அவருடைய நண்பர்களும் நம்பத் தொடங்கினர். தனக்குள்ளும் சரி, வெளியிலும் சரி; தனிமையில் இருக்கும்போதும் சரி, கூட்டத்தில் இருந்தாலும் சரி, பொய்களைத் தொடர்ந்து விளம்பரப்படுத்து. நீ உன்னைச் சுற்றிலும் புகைமண்டலம் ஒன்றை எழுப்பிவிடுவாய். அதை ஊடுருவிப் பார்த்து நீ சொல்வது உண்மையா, பொய்யா என்று பிறரால் கண்டறிய முடியாது.

---

* Title: Mein Kampf

*அனைத்து அடிக்குறிப்புகளும் மொழிபெயர்ப்பாளருடையவை.*

உண்மை எது என்பதை அனுபவம் மூலம் அறிய வேண்டும் என அஷ்டாவக்ரர் வற்புறுத்துகிறார். அதை அறிந்தபின் அதைத் திரும்ப-திரும்பச் சொல்ல வேண்டியதில்லை. மந்திரங்களைத் தான் தினமும் ஜபிப்பார்கள். மந்திரங்கள் கேட்பவர்களை பிரமிக்கவைத்து ஏமாற்றும் வேலையே அன்றி வேறில்லை. அவை ஒரு புகை மண்டலத்தை உருவாக்கி, பார்வையை மங்க வைக்கின்றன. மந்திரச் சொற்கள் உன்னைச் சுற்றி-சுற்றி வருமேயொழிய அவை அனுபவம் எதையும் நிர்மாணிப்பதில்லை.

அனுபவம் என்பது வாழ்க்கையில் ஒன்றை பிரயோகித்துப் பார்த்த பிறகுதான் கிடைக்கிறது. பசி விஷயத்தை எடுத்துக் கொள்வோம். பசித்ததும் 'நான் உடம்பு இல்லை' என்று விடாமல் சொல்லிக் கொண்டிராதே. பசி உணர்வைக் கவனி, கண் விழி, யோசிக்கும் ஆற்றலைத் திரட்டு. பசி எங்கே எடுத்தது என்று உன்னையே கேள். 'உடம்பில் எடுத்தது' என்பாய். இதைச் சொல்ல நானோ, ஓர் அஷ்டாவக்ரரோ, வேறு யாருமோ உனக்குத் தேவை யில்லை. அடுத்து, பசி எங்கே எடுக்கிறது என்று நுணுக்கமாக யோசி. 'பசி வயிற்றில் எடுக்கிறது' என்று அனுபவத்தின் அடிப்படையில் சொல்வாய். இன்னம் நுணுக்கமாகப் போவோம். 'வயிற்றில் பசி எடுக்கிறது' என்று கூறுகிறானே அவனுக்கா பசியெடுக்கிறது? வயிற்றுக்குத்தான் பசியே தவிர, வயிற்றின் சொந்தக்காரன் பசியற்றவன் என்பது சட்டென உனக்குப் புரிந்துவிடும். பசியின் நிழல்கூட அவன்மீது படிந்திருக்காது.

நீ கண்ணாடியின் முன் நிற்கும்போது அதில் உன் பிரதிபிம்பம் தெரிகிறது. கண்ணாடி அப்படியேதான் உள்ளது. நீ எதிரே போய் நின்றாலும், நிற்காவிடிலும் கண்ணாடியில் ஒரு மாற்றமும் இல்லை. பிரதிபிம்பம் அதில் ஒட்டுவதில்லை, பதிவாவதில்லை. நீ நகர்ந்தால் அதுவும் அகன்றுவிடும். அதுவரையில் கண்ணாடியில் நீ தெரிவதாக ஓர் உணர்வு ஏற்படுகிறது. தனது பரப்பில் உன் பிரதிபிம்பம் தெரிவதைக்கூட கண்ணாடி உணர்வதில்லை.

உனது ஆன்ம உணர்வு (மெய்யுணர்வு அல்லது சைதன்யம்) கண்ணாடி போன்றதேயாகும். அதன் எதிரில் சம்பவங்கள் நிகழ்கின்றன. அவற்றின் பிரதிபிம்பம் ஆத்மக் கண்ணாடியில் விழுகிறது. சம்பவம் நடைபெற்று முடிந்ததும் அதன் பிரதிபிம்பமும்

மறைந்துவிடுகிறது. ஆத்மா மீண்டும் தனது எல்லையற்ற வெறுமைக்கு (ஒன்றும் இல்லா நிலைக்கு) மீள்கிறது. அந்த வெற்றுத் தன்மைதான் அதை பரிசுத்தமாக வைத்திருக்கிறது.

இந்த நிலையில் என்ன விளையும். 'கத க்லேஷ:' என்கிறார் அஷ்டாவக்ரர். எல்லா நிகழ்ச்சிகளும் இயற்கையின் ஏற்பாட்டின்படி நடக்கின்றன என்பதை உணர்பவன் வாழ்க்கையில் வெறும் பார்வையாளனாக மட்டும் இருப்பான். அவனுடைய கிலேசங்கள் (துன்பங்கள்) அவனைப் பாதிக்காமல் கடந்து போய்விடும். மனம் சூன்யமாக விளங்கும். மனக்கோணல்கள் இருக்காது. பசி எடுத்தால் அது உடலுக்குத்தான் எடுக்கிறது என்று அவன் அறிந்திருக்கிறான். உடலுக்கு உணவு அளிக்க வேண்டிய தேவை எழுந்துள்ளதையும் அவன் அறிவான். பசியை நீக்க அவன் உபாயம் செய்யாமலிருப்பதும் இல்லை. ஆனால் அவன் இதற்காகக் கவலையில் ஆழ்வதில்லை. அவன் பாதிக்கப்பட்டதுபோல் கண்ணாடியில் பிரதிபிம்பம் விழுவதில்லை.

காலில் முள் தைக்கிறது-ஞானியின் காலிலும்தான். நாம் முள்ளை அகற்றுகிறோம். இதில் ஞானி வித்தியாசப்படுவதில்லை. அவரும் முள்ளை உருவுகிறார். கடும் வெயில். ஞானி-அஞ்ஞானி இருவருமே நிழல் தேடி அமர்கின்றனர். வெளிப் பார்வைக்கு ஞானி நம்மைப் போல்தான் உள்ளார், செயல்படுகிறார். வித்தியாசம் உள்ளே இருக்கிறது. ஒரு சம்பவத்தை நாம் அனுபவிக்கும் விதமும், அவர் எடுத்துக் கொள்ளும் விதமும் மாறுபடுகின்றன. முள் விஷயத்தில் ஞானி அந்த முள் உடலில் தைத்தது, உடலுக்கு வலித்தது, அவ்வளவே என்பார். முள்ளை எடுத்தபின், வலி நீங்கியபின் 'அப்பாடா' என்று தோன்றுவதும் உடலுக்கே எனக் கருதுவார். முள் குத்தும்போது வலியுடனான ஒரு பிரதிபிம்பம்; முள்ளை எடுத்தபின் திருப்தியுடனான ஒரு பிரதிபிம்பம் என்று தோன்றினாலும் கண்ணாடி எப்படியோ அப்படியே உள்ளது. அதாவது, ஞானியின் ஆத்மாவுக்கும் உடலுக்கும் நடுவில் நீண்ட இடைவெளி உள்ளது.

ஞானம் வளர-வளர மனிதன் உடலிலிருந்து விலகிக்கொண்டே செல்கிறான். முழுஞானம் பெற்றபின் அவன் உடலில் இருப்பதே இல்லை! ஆனால் உடலில் வலிப்பது, உடலுக்குப் பசிப்பது அவனுக்கு

முன்பைவிடத் தெளிவாகத் தெரிகிறது. ஏனெனில் ஞானத்தின் காரணமாக அவன் தன்னையும் உடலையும் தனித்தனியாகப் பிரித்தறிய முடிகிறது.

புத்தரின் காலில் முள் குத்தினால் ஞானியான அவருக்கு வலிக்காதென நீ நினைக்கலாம். ஆனால் அவர் உடலைத் தெளிவாக தனியாக உணர்ந்திருப்பதால் அவருக்கு நம்மைவிடக் கூடுதலாக வலிக்கும்! அதை அவர் பெரிதுபடுத்த மாட்டார் என்பது வேறு விஷயம்.

சுபாவமாகவே கருணை உள்ளம் படைத்தவர் புத்தர். உடலை அவர் பிரித்துக் கண்டபோதிலும் 'பாவம், இந்த உடல் இப்படி கஷ்டப் படுகிறதே' என்று நினைப்பார். ஆனால் அவர் கிலேசப்படமாட்டார். 'கிலேசம்' என்பதை நீ முதலில் சரியாகப் புரிந்துகொள். ஆத்மாவை யும் உடலையும் ஒன்றென்று நினைப்பது அல்லது அவை ஒன்றாகப் பிணைந்துள்ளவை என்று நினைப்பதுவே துன்பத்தின் காரணம். நீ உன்னை உடலுடன் சம்பந்தப்படுத்திக் கொண்டு வயிற்றுப் பசியை 'எனக்குப் பசிக்கிறது' என்று அறிவித்தால், அப்போது கிலேசம் உன்னைப் பிடித்துக் கொள்கிறது. துன்பம் என்பது உடலிலோ, ஆத்மாவிலோ இல்லை. ஆத்மாவையும் உடலையும் இணைக்கும். போதுதான் பிரச்சினை உருவாகிறது. இந்த இரண்டு அம்சங்களும் தாங்கள் ஒன்றானோம் என்னும் பிரமைவசப்பட்டால் துன்பம் தோன்றுகிறது. திருமண சமயம் மணமகனும் மணமகளும் தங்கள் வஸ்திரத்தின் நுனியை இணைத்து முடிக்கப் போட்டு அக்னியை வலம் வருவதுபோல், ஆத்மாவையும் உடலையும் முடிச்சுப் போட்டுச் சேர்த்தால் துன்பம்தான் அதன் பலனாகக் கிடைக்கிறது.

அஷ்டாவக்ரர் சொல்கிறார்: 'நான் தனிப்பட்டவன்; எப்போதுமே தனியானவன்; வலி, சுகம்-துக்கம், பிறப்பு-இறப்பு ஆகியவற்றுடன் சம்பந்தப்படாதவன் என்று நீ முடிவு கட்டியதுமே ஆத்மாவையும் உடலையும் பிணைத்த முடிச்சு அவிழ்ந்துவிடும்.' இரண்டிற்குமான திருமணம் விவாகரத்தில் முடிந்தால், உடலிலிருந்து நீ நீண்ட தொலைவு விலகினால், உண்மையான சுகத்தை நீ எளிதில் உணர்வாய்.

இத்தகைய மனப்பக்குவம் பெற தவம் ஏதும் செய்ய வேண்டிய அவசியமில்லை. தலைகீழாக நிற்க வேண்டியதில்லை. யாகம் செய்ய

வேண்டாம். உடம்பில் சாம்பல் (பஸ்பம்) பூசத் தேவையில்லை. உடலை உருக்க வேண்டாம். இந்த முயற்சியெல்லாம் வீண்.

மனப்பக்குவம் ஏற்பட்டுவிட்டால், சுகமாக, அமைதியாக, சிரமம் இன்றி ஆத்மாவும் உடலும் வெவ்வேறு என்ற—இரண்டையும் பிணைக்கும் முடிச்சு அவிழ்கின்ற—வாழ்க்கையின் மகத்தான சம்பவம் நிகழ்ந்துவிடும்.

இதைத்தான் ஜென்[1] துறவிகள் 'முயற்சியெடுக்காத முயற்சி'[2] என்கின்றனர். அஷ்டாவக்ரரின் சூத்திரத்தின் அர்த்தமும் இதுவே. மனப்பக்குவம் சிரமப்படாமலே வாய்க்கும்; முயற்சி செய்யாமலே கிடைக்கும் என்பது அஷ்டாவக்ரர் கூறுவதன் சாரம். உணர்ந்து கொள்வதன் மூலம்தான் ஞானம் கிடைக்கும். அதை உழைத்துப் பெற முடியாது. செயலேதும் நாம் புரிய வேண்டியதில்லை. எது எப்படி உள்ளதோ அதை அப்படியே உள்வாங்கினால் போதும். ஞானம் பெற எதுவும் செய்யப் போவதாகச் சொல்வது, செயல்கள் மூலம் ஞானம் பெறலாம் என நினைப்பது வீண் பேச்சு.

**தேடுவோரே! நீங்கள் ஒத்துக் கொள்ளமாட்டீர்கள்**
**ஆனால் ஞானிகள் உரைப்பது உண்மைதான்**
**நாம் சுற்றி-சுற்றி வருகின்ற**
**வீட்டிலிருந்து வெளியேவர**
**வழி எதுவும் இல்லையே**
**சுவர்களும் வெற்றிடமும் ஒன்றாய் உள்ளன**
**உருவமுள்ளதும் அருவமும் ஒன்றே**
**தேடுவது ஓய்ந்து நின்ற பின்னரே**
**'தேடுவது என்பது பெறுவதற்கல்ல**
**தன்னையும் சேர்த்து இழப்பதற்கே'**
**என்பதை நீங்கள் புரிந்துகொள்வீர்**
**அத்துடன் புரியும் இன்னொன்று**
**உண்மையில் நீங்கள் எப்படியோ**
**அப்படியே மீண்டும் ஆவதற்கே**
**இந்தத் தேடல் என்றறிவீர்**

1 ஜென் புத்த மதம் சீனாவில் தோன்றி ஜப்பானில் வளர்ந்தது.

2 effortless effort

சத்தியம் என்பது இப்படித்தான் இருக்கும். அதை நீ தேட வேண்டியதில்லை. அது உன்னிடம் ஏற்கெனவே இருக்கத்தான் செய்கிறது. அதை வெளியுலகில் தேடி அலைய வேண்டாம். அது உன்னுடன் சேர்ந்தே பிறந்துள்ளது.

சத்தியத்தின் மீது உனக்கு இயற்கையாகவே உரிமை உள்ளது: நீ விரும்பினாலும் அதைக் கைவிட முடியாது. அதை இழக்க விரும்பினாலும் இழந்துபோகாது. ஏனெனில் நீயேதான் அந்த சத்தியம். உன்னை நீயே எப்படித் தொலைத்துவிட முடியும்? அதிலிருந்து பிரிந்து நீ எங்கே போவாய்? நீ போகுமிடம் எல்லாம் சத்தியமும் உன்னுடன் சேர்ந்தே வரும். அப்படிப் பிரிப்பதுகூட சரியன்று. நீயே சத்தியம், நீயே அது—தத்வமஸி. நீ அதனிடமிருந்து எப்படித் தப்பித்து ஓடுவாய்? எந்த உலகத்திற்கு நீ ஓடினாலும், நரகத்திற்கே போனாலும், அடர்த்தியான இருட்டில் உன்னை மறைத்துக் கொண்டாலும் நீ, நீயாகத்தான் இருப்பாய். நீ எங்கெல்லாம் அலைந்தாலும், உன்னையே நீ முற்றிலும் மறந்து விட்டாலும், அதனால் பாதிப்புக் கிடையாது. நீ, நீயாகவே இருப்பாய்.

இந்தப் புரட்சி எந்தச் சேதமுமின்றி சுகமாக நடைபெறுகிறது. சலனமே கிடையாது. அச்சமயம் ஓர் இலைகூட அசைவதில்லை. மாற்றி சுவாசிக்க வேண்டியதில்லை. காலைத் தூக்கிக்கூட கீழே வைக்க வேண்டாம். நீ எங்கும் போகாமலேயே முகாம் உன்னை அடைந்து விட்டது. ஏனெனில் முகாமை உனக்குள்ளே தாங்கித்தான் நீ வாழ்கிறாய். உன் வீடு உனக்குள்ளேயே அமைந்திருக்கிறது.

மறுகரை என்று ஆரம்பத்தில் சொன்னது உனக்குள்ளே இருக்கிறது. உனக்கு வெளியே ஒரு கரையும் உள்ளே ஒரு கரையும் உள்ளது. இந்த இரு கரைகளுக்குமிடையே பரமாத்மா என்னும் பிரவாகம் பெருக்கெடுத்துப் பாய்கிறது. நீ வெளிப்புறமாகப் பார்க்கும்போது நீ பிணைப்பிற்குள்ளாகிறாய். உன் வசத்தில் ஒரு கரைதான் இருக்கிறது. அப்போது மற்ற எல்லோரும் உனக்கு அன்னியராகத் தெரிகிறார்கள்; வித்தியாசமாகத் தெரிகிறார்கள். ஆனால் நீ மறுகரையையும் உணர்ந்துவிட்டால் எல்லோரும் நம்மவர்; யாரும் வித்தியாசமானவரில்லை என்ற உணர்வு தலைதூக்கும்.

'அனைவரையும் படைப்பவன் ஆண்டவன். அவரைத் தவிர வேறு யாரும் இங்கு கிடையாது. இதை உறுதியாக அறிந்துள்ள

மனிதன் சாந்தமாக விளங்குகிறான். அவனுடைய உலக ஆசைகள் அனைத்தும் வேரோடு அழிந்துவிடுகின்றன. அவன் எதிலும் பற்றுக்கொண்டு ஒட்டிக் கொள்வதில்லை.' **(சுலோகம் 100)**

**க**டவுள் எல்லோரையும் எல்லாவற்றையும் அறிந்தவர். நீ கடவுளை அறிந்து கொள்ளப் புறப்பட்டால் ஒரு தவறு செய்துவிடாதே. அதாவது, கடவுள் என்பவர் கண்ணுக்குத் தென்படும் ஒரு காட்சிபோல் இருப்பார் என்று நினைத்து விடாதே. அவர்தான் நம்மை உருவங்களாகப் பார்ப்பவர். நாம் அவரைக் காட்சிப் பொருளாகக் காணமுடியாது. ஆகவே அந்த அர்த்தத்தில் தேடிக்கொண்டு போகாதே. அது பிரமையில் முடியும். உனக்கு ஒரு காட்சியும் தெரியாது.

பிறகு கடவுளைத் தேடுவதற்கு எந்த வழியை நாடுவது? சாதாரண ஜனங்கள் ஏதேனும் ஒரு திடப்பொருளைத் தேடுவதுபோல், அல்லது அவரை ஒரு காட்சியாகவோ, மனித உடல் எடுத்தவராகவோ நினைத்துத் தேடுகிறார்கள். இவ்வழியை மேற்கொண்டவர்கள் பல கற்பனைகளில் ஈடுபடுகிறார்கள். 'இப்படித் தேடிக்கொண்டே சென்றால் ஒருநாள் அவரை அடைவோம்; அவரது தரிசனம் பெறுவோம்; ஆனந்தமடைவோம் கடவுளைக் கண்டோம் எனப் பாடுவோம், ஆடுவோம், பரவசப்படுவோம்' என்றெல்லாம் வீண் கற்பனை செய்கிறார்கள்.

என்னிடம் வந்து சிலர் யோசனை கேட்கிறார்கள்: 'கடவுளை எப்படித் தேடி அடைவது? அவர் எங்கே போனால் கிடைப்பார்? இமயமலைக்குச் சென்று தேடட்டுமா? வீடு-உலகைக் கைவிட்டுத் தனிமை வாழ்வுக்குச் சென்றுவிடட்டுமா? கடவுள் பார்ப்பதற்கு எப்படி இருப்பார்? சிறிதளவு அங்க அடையாளம் கூறுங்கள். இதனால் நாங்கள் அவரை அடையாளம் மூலம் கண்டுகொள்ள முடியும்; அந்த அடையாளங்களைக் கொண்டு அவரை நினைவில் வைத்துக் கொள்வது சாத்தியப்படும்.'

நாத்திகர்களுக்கும் ஆத்திகர்களுக்கும் இடையே பெரிய வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை. நாத்திகர்கள் சொல்கிறார்கள், 'கடவுள் எங்கே, காண்பியுங்கள் பார்க்கலாம். அப்போது நாங்கள் அவர் இருக்கிறார் என்பதை ஒப்புக் கொள்வோம்.' ஆத்திகர்கள் சொல்வது, 'கடவுள் இருக்கிறார் என நாங்கள் நம்புகிறோம். அவரைத்

தேடி புறப்பட்டு விட்டோம். ஆனால் அவர் எங்கே இருக்கிறார்? அவரது உருவம் எப்படியிருக்கும்? அவரது பெயர் என்ன? அவரது இருப்பிட முகவரி யாது? என்பதுதான் தெரியவில்லை.' இவ்வாறு ஆத்திகர்களின் புத்தியும் நாத்திகர்களின் புத்தியும் ஒரேமாதிரிதான் செயல்படுகின்றன. இரு தரப்பினரிடையேயும் பெரிய அளவில் வித்தியாசம் எதுவுமில்லை.

நாத்திகர்களும் ஆத்திகர்களும் முன்வைக்கும் வாதங்களில் என்ன வேறுபாடு தெரிகிறது? இருதரப்பினருமே கடவுள் எங்கோ வெளியில் ஒரு விசேஷமான இடத்தில் வசிப்பதாக நினைக்கிறார்கள். நாத்திகர் சொல்கிறார், 'அவரை ஒருமுறை என் கண்ணுக்குக் காட்டுங்கள். பிறகு நான் ஒப்புக் கொள்கிறேன்.' ஆத்திகர் சொல்கிறார், 'நான் கடவுள் உண்டு என்பதை நம்புகிறவன். ஆனால் அவரை நேருக்கு நேர் பார்த்ததில்லை. நான் அவரைக் காண உதவுங்கள்.' நாத்திகர், ஆத்திகரிடயே வித்தியாசமில்லை. இருவருமே 'கடவுளைக் காட்டுங்கள்' என்றே கேட்டுக் கொள்கிறார்கள். இதனால்தான் உலகில் கோடி-கோடி ஆத்திகர்கள் இருந்தும் ஆத்திகம் என்பது அரிதாகவே உள்ளது. நாத்திகர் கூடுதலாகத் துணிச்சல் பெற்றிருக்கிறார். ஆத்திகர் சற்றுக் கோழையாகவும் பலகீனராகவும் தெரிகிறார்.

நாத்திகர், 'கடவுளைக் காட்டினால் நான் நம்பத் தயாராக உள்ளேன்' என்கிறார். இந்தக் கண்ணோட்டத்தில் நியாயம் இருக்கத்தான் செய்கிறது. ஆத்திகர் கடவுள் உண்டென்கிறார். ஆனால் அவர் நிஜமாகவே கடவுளை நம்புகிறாரா? 'எதற்கு வீண் வம்பு? பேசாமல் கடவுளை ஒப்புக் கொண்டு விடுவோம். ஒப்புக் கொள்வதில் தான் வசதி உள்ளது. பாதுகாப்பு உள்ளது. நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் கடவுள் உண்டென்கிறார்கள். இந்நிலையில் சமூகத்தோடு ஒட்டி வாழ்தலே அறிவுடையோர் செயல். சமூகத்துடன் முட்டி மோதி வாழவே முடியாது' என்பதே அவரது வாதமாக இருக்கும். அடுத்த கட்டமாக அவர் கடவுளைக் கண்ணெதிரே காட்டச் சொல்வார். நாத்திகர், ஆத்திகர் என்னும் இரு தரப்பினருமே கடவுளைக் கண்ணால் பார்க்க முடியும் என்றே நினைக்கிறார்கள். கடவுள் என்று உருவம் எடுத்து ஒருவர் தோன்றுவாரெனக் கற்பனை செய்கிறார்கள்.

சரி, கடவுளை அறியும் வழிதான் என்ன? கடவுளை ஓர் உருவமாக, திடப்பொருளாகக் காண முடியாதெனில், பிறகு அவரை

எப்படித்தான் தரிசிப்பது? ஒரு வழி உள்ளது. நீ பார்வையாளனாக மாறி விடுவதுதான் அந்த வழி. ஏனெனில் பார்வையாளராக இருப்பதுதான் கடவுளின் குணம். நீயும் விலகி நின்று பார்வையாளனாக மட்டும் இருக்கத் தொடர்ந்து முயன்றால் நீ கடவுளை நெருங்கத் தொடங்குவாய்.

கடவுளுடன் நாம் சிறிதளவே தொடர்பு கொள்ள முடியும். அதற்கு உலகில் இரண்டே வழிகள் உள்ளன: கவிஞனின் வழி, முனிவனின் வழி. கவிஞனின் பணி புதிதாக ஒன்றைப் படைப்பதாகும். சூனியத்திலிருந்து சொற்களைக் கவர்ந்து வந்து அவன் கவிதை எழுதுகிறான். மற்ற கலைஞர்களும் இதேபோல்தான். ஓவியர், சிற்பி, இசைக் கலைஞர், நடனமாடுபவர் ஆகியோரும் படைப்பாளிகளே. கரடுமுரடான கல்லைக் கலைநயம் மிக்க சிலையாக்குகிறார் சிற்பி. உருவமற்ற ஒன்றிற்கு உருவம் தருகிறார். நேற்றுவரை பாதையில் மக்களின் கால்பட்ட கல். இப்போது சிலையாகி மக்கள் அதன் கால்களில் மலர் சமர்ப்பிக்கிறார்கள். புதிதாகப் படைத்தல் என்பது இதுதானே.

சிற்பி மைக்கேலேஞ்சலோ* சாலை வழியாகப் போய்க் கொண்டிருந்தார். ஓரிடத்தில் கட்டட வேலைகளுக்கும் கருவிகள் செய்யவும் பயன்படும் பலவகைக் கற்கள் விற்கும் கடை, வாசலில் ஒரு குறிப்பிட்ட பாறைக் கல் நீண்ட காலமாக விற்பனையாகாமல் அப்படியே கிடந்தது. அதைப் பற்றி சிற்பி ஒருநாள் கடைக்காரரிடம் விசாரித்தார். எந்தவித ஒழுங்குமுறையும் இல்லாமல், செதுக்கி எதுவும் செய்யவும் இடம் கொடுக்காமல் கோணல்மாணலாக உள்ளதால் அதை யாரும் வாங்க முன்வரவில்லை என்று கடைக்காரர் தெரிவித்தார். சிற்பியின் ஆர்வம் கண்டு அந்தப் பாறையைக் கடைக்காரர் அவருக்கு இலவசமாகத் தந்துவிட்டார்.

சிறிது காலம் கழித்து உள்ளூர் மாதாகோயிலில் இயேசுநாதர் சிலைத் திறப்பிற்குக் கடைக்காரர் சென்றார். மைக்கேலேஞ்சலோவும் வந்திருந்தார். தன் கடையிலிருந்து எடுத்துப்போன உதவாக்கரை கல்லில் வடிக்கப்பட்ட சிலைதான் அது என்று தெரிந்து கடைக்காரர்

---

* **Michelangelo (1475-1564)** இத்தாலிய ஓவியர், சிற்பி, கட்டடக் கலைஞர், கவிஞர்

அசந்துபோனார். "சிற்பியாரே, நீங்கள் பெரிய அதிசயம் நிகழ்த்தி யிருக்கிறீர்கள். மந்திரவித்தைபோல் இது உங்களுக்கு சாத்தியமாகி யுள்ளது." என்று பாராட்டினார்.

அதற்குச் சிற்பி, "நான் விசேஷமாக எதுவும் செய்யவில்லை. உங்கள் கடைப்பக்கமாக வந்து அந்தக் கல்லைப் பார்க்கும் போதெல்லாம் அதன் உள்ளே மறைந்திருந்த இயேசுநாதரின் குரல் கேட்கும். 'என்னை விடுவி. எனக்கு சுதந்திரம் கொடு. உன்னால்தான் என்னை வெளிக்கொணர முடியும். நீண்ட காலமாக இந்தக் கல்லில் அடைபட்டிருக்கிறேன்.' என்று அவர் கூறுவதுபோல் எனக்குத் தோன்றும். நான் செய்ததெல்லாம் கல் உருவில் இயேசுவைச் சூழ்ந்திருந்த தேவையில்லாத பகுதிகளை வெட்டி நீக்கியது மட்டும்தான்." என்று அடக்கமாகப் பதிலளித்தார்.

இப்படி ஒரு சிற்பி கரடுமுரடான கல்லை அழகிய சிலையாகச் செதுக்கித் தரும்போது அவரும் கடவுள்நிலையை அடைந்து விடுவதுபோல் தற்காலிக அனுபவ உணர்வு தோன்றுகிறது. ஏனெனில் அங்கே சிற்பி கடவுளைப்போல் புதிதாக ஒன்றை சிருஷ்டிக்கிறான்.

ஒரு நர்த்தகி புதிதாக ஒரு நடனத்தை தயாரித்து அதை ஆழ்ந்த லயிப்புடன் அரங்கேற்றுகையில், அதில் மெய்ம்மறந்து மூழ்குகையில் அவளிடம் அச்சமயம் தற்காலிகமாகக் கடவுளின் சாயல் தெரிகிறது.

ஒரு கவிஞன் உள்ளத்தின் வெற்றிடத்திலிருந்து ஒரு கவிதையை வெளிக்கொண்டு வருகிறான். இது சிரமமான வேலை. சொற்கள் சரிவரக் கிடைக்காமல் நழுவிச் சிதறுகின்றன. சிலைக்காவது மூலப்பொருளாகக் கல் இருக்கிறது. ஆனால் கவிதையோ சூனியத்திலிருந்தல்லவா உருவாக வேண்டும். எப்படியோ கவிதை முழுமை பெற்று வெளிவரும்போது அந்தக் கவிஞனின் முகத்தில் பரவி நிற்கும் ஆனந்த ஒளி கடவுளை நினைவூட்டுகிறது. கடவுள் படைப்புத் தொழிலைச் செய்த காலத்தில் இதுபோல் அவர் முகத்திலும் ஒளி வீசியிருக்கும்.

கடவுளுக்கு முகம் அமைத்து அதில் ஒளிவீசுவதாக நான் சொல்வது மேற்கொண்ட உதாரணங்களை விளக்கத்தானே தவிர, கடவுளுக்கு உருவம் உண்டெனா நான் நினைக்கவில்லை. கலைஞர்களைப் பற்றிப் பேசுவதால் அவர்களின் மொழியில் விளக்கம்

தருகிறேன். கடவுளை அடைய மனிதனுக்குள்ள வழிகளில் ஒன்று அவன் படைப்பாளி ஆவது. ஏனெனில் கடவுளே ஒரு படைப்பாளிதானே. ஆகவே நீயும் ஏதாவது படைப்பதில் ஈடுபடு.

ஒரு பெண் தாய்மை நிலையை அடையும்போது அவள் முகத்தில் ஆனந்த ஒளி வீசுகிறது. அவ்வொளி படைப்பாற்றலின் பிரதிபலிப்பாகும். குழந்தை புதிதாகப் படைக்கப்படுகிறது.

பெண்கள் வேறு எதையும் புதிதாகப் படைப்பதில்லை என்பதை நீ கவனித்திருக்கலாம். அதற்கான தேவையும் இல்லை. ஏனெனில் புதிய ஓர் உயிரையே, ஒரு வாழ்க்கையையே படைத்தளிக்கும் சக்தி பெற்றுள்ளார்கள். வேறு எதையும் உருவாக்கும் ஆசை அவர்களுக்கு எழுவதில்லை. உயிரோட்டமுள்ள, தினமும் வளர்கின்ற, குழந்தையைப் படைக்கக்கூடிய பெண் என்றைக்கும் ஜடமாக விளங்கும் சிலையை ஏன் செதுக்குவாள்?

ஆகவேதான் பிரபலமான பெண் சிற்பி யாரும் தோன்றிய தில்லை. சூனியத்திலிருந்து கவிதை படைக்கவல்ல கவிதாயினிகளும் மிகக் குறைவு. ஆனால் ஆணால் என்றைக்கும் குழந்தை பெற முடியாது. இதனால்தான் அவன் பெண்களிடம் பொறாமை கொண்டு பிற துறைகளில் தன் படைப்பாற்றலை வெளிப்படுத்தி அவர்களுடன் போட்டியிடுகிறான்: இது நான் சொல்வதல்ல; மனநல வல்லுநர்களின் கண்டுபிடிப்பு.

போட்டி மனப்பான்மை காரணமாக ஆண் எதையாவது படைத்தளிக்கத் துடிக்கிறான். இதற்காக அவன் மதங்களைப் படைத்தான். இந்து மதம், சமண மதம், கிறித்தவம், பௌத்தம் என அடுக்கிக் கொண்டே போகலாம். அஜந்தா, எல்லோரா, கஜுராஹோவில் அதிசயமான சிற்பங்களைச் செதுக்கினான். விண்ணைத் தொடும் கோயில்கள் எழுப்பினான். இதயத்தைத் தொடும் காவியங்கள் இயற்றினான். காளிதாசர், ஷேக்ஸ்பியர், மில்டன் என்று மகாகவிகளாக ஆண்கள் விளங்கினார்கள்.

பெண் குழந்தை பெறும்போது வர்ணிக்க முடியாது, புல்லரிப்பான ஓர் அனுபவத்தைப் பெறுகிறாள். தனக்குள்ளே இருக்கும் சூனியத்திலிருந்து முறையாக வளர்ந்து வெளிவரும் குழந்தை அவளை மெய்ம்மறக்கச் செய்கிறது.

ஆகவே குழந்தை பெறாதவரையிலும் பெண் முழுமை பெறுவதில்லை. முகத்தில் ஏதோ ஒரு குறை பிரதிபலிக்கிறது. குழந்தை பிறந்து தாய் என்னும் நிலையை அடைந்த பிறகே பெண் முழுமையான அழகுடன் விளங்குகிறாள். ஏனெனில் தாய்மை காரணமாக அவள் படைப்பாளி என்னும் உயர்நிலைக்குச் செல்கிறாள். கடவுளுக்கே உரிய படைப்பாற்றல் என்னும் புனித சக்தி அவள்மீது இறங்கி வருகிறது. தாய்மைக் காலத்தில் அவள் மீது இறைவனின் அருள் பன்னீராய்த் தெளிக்கப்படுகிறது.

குழந்தையைப் பிறப்பிப்பதற்கு சமமாக, ஆனால் முற்றிலும் புதிய, தனித்தன்மை வாய்ந்த படைப்பு எதையும் பெண் தோற்றுவிக்க முடியாது. ஆனால் ஆணும் முடிந்த அளவு எதையாவது உருவாக்கித் தரும்போது மகிழ்ச்சி கொள்கிறான். இதற்கு கிரேக்க கணிதமேதை ஆர்க்கிமிடிஸை[1] உதாரணம் கூறலாம். ஒருமுறை அவர் குளியல் தொட்டியில் படுத்து நீராடிய சமயம் கணிதத்தில் புதிய கோட்பாடு ஒன்றைக் கண்டுபிடித்தார். மூளையில் எங்கோ திடீரென ஒரு கதவு திறந்தது போன்ற அனுபவம் அவருக்கு உண்டானது. கிரேக்க சக்கரவர்த்தி புதிய தங்க கிரீடத்தில் கலப்படம் பற்றி எழுப்பிய சந்தேகத்திற்கான விடைதான் ஆர்க்கிமிடிசுக்கு அவர் சொகுசாகத் தொட்டித் தண்ணீரில் கிடந்தபோது கிடைத்திருக்கிறது. முயற்சி செய்து பலநாள் கணக்குப்போட்டுப் பார்த்து விடை கண்டுபிடித்திருந்தால் எல்லைக்குட்பட்ட சந்தோஷமே கிடைத்திருக்கும். ஆனால் இப்போது திடீரென எங்கிருந்தோ மின்னல்போல், தெய்வ சமிக்ஞைபோல், பாய்ந்துவந்து விடைக்கான கோட்பாடு[2] அவரைத் தாக்கியபோது ஆள் தடுமாறி, நிலைகுலைந்து, தன்னிலை மறந்து போய்விட்டார். எனவே குளியல் தொட்டியிலிருந்து தாவி வெளியே வந்து நிர்வாணமாகத் தெருக்களில் ஓடலானார்! வழியில் திரண்டுவிட்ட மக்களைப் பார்த்து கிரேக்க மொழியில் 'யூரீகா'[3] (கண்டுகொண்டேன்) என்று கூவலானார். பரவசம் குறைந்த பிறகுதான் அவர் வெட்கமடைந்து தனது வீட்டிற்கு விரைந்தார். படைக்கும் ஆனந்தத்தின்போது பரமாத்மாவின் அருள் கிரணம் ஒன்று அந்தப் படைப்பாளி மீது இறங்கி வருகிறது எனலாம்.

---

1. Archimedes 287-212 BC
2. The volume of the fluid displaced when an object is immersed in it is equal to the weight of the fluid it displaces.
3. Eureka=I have found it.

இந்த தெய்விக கிரணம் படைப்பாளி யாராயினும் அவனை வருடுகிறது. அவன் விஞ்ஞானியாக, கவியாக, ஓவியனாக, சிற்பியாக எத்துறை சார்ந்தவனாகவும் இருக்கலாம். இது ஒரு வழி, ஒரு மார்க்கம். இதை நான் காவியப்பாதை, கலைவழிப் பாதை என்றெல்லாம் கூற விரும்புகிறேன். கடவுளை நெருங்குவதற்கான வழி இந்த கலைவழிப் பாதை. ஆனால் இது முழுமையான பாதை இல்லை. இதன் மூலம் கிரணம்தான் இறங்கிவர முடியுமே தவிர, முழு சூரியனும் இறங்கி வராது.

இன்னொரு வழியும் உள்ளது. அது முனிவருடைய வழி. சாட்சியாக மனப்பக்குவம் பெற்று முனிவர் கடவுளை அறிகிறார். கவிஞன் படைப்பாளியாக இருந்து கடவுளை அடைகிறான். நாம் எத்தகை பெரிய படைப்பாளியாயினும் நமது படைப்பு சிறியதாக, எல்லைக்குட்பட்டதாக இருக்கும். ஏனெனில் எதையும் படைப்பதற்கு நாம் நமது உடலை உபயோகிக்க வேண்டியிருக்கிறது.

நாம் கைகளால்தானே சிலை வடிக்கிறோம். நம்முடைய கைகளோ சிறியனவாயிற்றே. எத்தகைய அழகிய சிலையை நம் கைகள் உருவாக்கினாலும் அது எல்லைக்குட்பட்டதாகவே இருக்கும். மனத்தில் தோன்றும் கற்பனையின் அடிப்படையில்தானே சிலை செய்கிறோம். நமது மனமோ குறுகியதாயிற்றே. எத்துணை சிறப்பான காவியத்தை நாம் இயற்றினாலும் அது நம் மனத்திலிருந்துதானே வெளிப்பட்டது. இம்மாதிரி எல்லைக்குட்பட்ட படைப்புகளில் பரமாத்மாவின் சில கிரணங்கள் இறங்கி வரக்கூடுமே தவிர, பரமாத்மா முழுமையாக பிரவேசிப்பதில்லை.

பார்வையாளன் என்னும் மனப்பக்குவம் ஏற்பட்டுவிட்டால் பிறகு உடலும் தேவையில்லை, மனமும் தேவைப்படாது. அங்கே எல்லா எல்லைகளும் உடைபடுகின்றன. அப்போது உனக்குள்ளே சுத்த பிரம்மமாக விளங்கும் பரமாத்மாவை நீ தரிசிப்பாய். நீ உன்னைக் கடவுளின் அம்சமாக உணர்வாய்.

கண்ணுக்குப் புலப்படக்கூடிய காட்சிப் பொருளாகக் கருதிக் கடவுளைத் தேடினால் அவர் அகப்படமாட்டார். இம்மாதிரியான தேடல் வீண் அலைச்சலில்தான் முடியும். ஏனெனில் இறைவன் என்பவர் காணப்படுபவரில்லை, காண்பவர்.

'அனைத்தையும் படைப்பவர், அனைத்தையும் அறிந்தவர் ஆண்டவன் மட்டுமே. உலகில் அவர் ஒருவர்தான் உள்ளார். வேறு யாரும் இங்கு கிடையாது. இதை உறுதியாக நம்புகிறவன் சாந்தமாக இருப்பான்.'

இருப்பது ஒன்றெனில் அசாந்திக்கு-அமைதியின்மைக்கு-இடம் இருக்காது. இரண்டல்ல (துவைதமல்ல) என்பதால் இருவரிடையே நிகழும் மோதலும் (துவந்தம்) இருக்காது. இரண்டல்ல என்பதால் இதுவா-அதுவா என்னும் குழப்பமும் எழாது. கலகம் மூள வாய்ப்பில்லை. நீ, நீதான்; நான், நான்தான்; நாம் இருவரும் ஒன்றுதான். ஒரே சுவை. முரண் பாடு கிடையாது. எனவே சுலபமாக சாந்தி நிலைநாட்டப்படுகிறது.

'அத்தகையவனின் எல்லா விருப்பங்களும் வேரோடு நீங்கி விடுகின்றன.'

உலகில் கடவுள் ஒருவர் மட்டுமே உள்ளார் என அறிந்தவன் எப்படி ஒன்றின் மீது விருப்பப்பட முடியும்? எது கிடைத்தாலும்-கிடைக்காவிடிலும் அது நல்லதற்கே என்றே அவன் நினைப்பான். ஒரு விஷயம் இப்படி நடக்க வேண்டுமென நீ விரும்பினால் தற்சமயம் அது உன் விருப்பம்போல் நடக்கவில்லை என்று பொருள்படுகிறது. நீ தற்சமயம் கடவுள் விரும்புவதுபோல் நடக்கும் ஒன்றைக் குறை கூறுகிறாய் என்றும் பொருள்படும். இதனால் உனது பிரார்த்தனை பாதிப்பிற்குள்ளாகும்.

பிரார்த்தனை என்பது கடவுளின் நடவடிக்கையை அப்படியே ஏற்றுக் கொள்வதாகும். எது எப்படி உள்ளதோ அதுவே சுபம்; அதுவே அதற்கு அழகு; அதுவே உண்மையானது-சத்தியம், சிவம், சுந்தரம். எந்த கோரிக்கையையும் வைக்காமலிருப்பது உண்மையான பிரார்த்தனையாகும். ஆத்திகன் என்பவன் எது எப்படி உள்ளதோ அதை முழு இதயத்துடன் ஏற்றுக்கொள்வான். கடவுளுக்கு ஆலோசனை வழங்குவதுபோல் பேசமாட்டான். 'நான் கடவுளை விடவா அறிவாளி?' என்று அடக்கமாக இருப்பான். இதனால் உலகத்தைக் குறித்து அவனுக்கு ஏதேனும் அதிருப்தி இருந்தால் அது நீங்கிவிடுகிறது.

'அத்தகையவன் உள்ளத்திலிருந்து எதிர்பார்ப்பு-ஏமாற்றம், இச்சைகள், பேராசைகள் ஆகியவை உருகி வெளியேறி விடுகின்றன.

எதன் மீதும் பற்று வைக்க வாய்ப்பும் இல்லை. இருப்பதே ஒன்றுதான் என்பதால் எதன் மீது பற்று வைப்பது? பற்று வைப்பவன் என்று யார் தனியாக உள்ளான்? அந்த ஒன்றில் மனமானது ஆகாயத்தில் மறையும் புகைபோல் தன்னை இழந்து விடுகிறது.

**மலரைக் கேட்டது செடியின் வேர்:**
**'வானம் நோக்கியே பூக்கிற உனக்கு**
**அங்கே எதுவும் காட்சி தெரிந்ததா?'**

**வேரைக் கேட்டது அந்த மலர்:**
**'பாதாளம் நோக்கிச் செல்கிற உனக்கு**
**ஆழத்தில் எதுவும் ரகசியம் கிடைத்ததா?'**

ஆனால் பூவும் வேரும் ஒன்றுதான். பூமியின் அடர்ந்து இருண்ட கர்ப்பப்பகுதியில் இறங்கும் வேரும் சரி; திறந்த வெளியில் காற்றில் நறுமணம் பரப்பியபடி, சூரிய கிரணங்களில் அசைந்தபடி, ஆகாயத்தை நோக்கித் தலைதூக்கும் மலரும் சரி—இரண்டல்ல, தனித்தனி அல்ல.

ஒரு நத்தை சகதியில் ஊர்ந்து வளைந்து சென்றுகொண்டிருந்தது. அது தனது வாலை நெருங்கியது. வாலைக் கண்டு மோகித்து அது, “எனக்கு ஒரு ஜோடி பல நாட்களாகத் தேடி வந்தேன். இன்றுதான் நீ கிடைத்தாய்,” என்றது அதற்கு வால், “ஏ முட்டாளே! நான் உன் சொந்த வால்தான். நீ தேடிக் கொண்டிருக்கும் பெண் நத்தை நானில்லை,” என்று சுட்டிக்காட்டியது.

வேர் பூவைக் கேள்வி கேட்கிறது. பதிலுக்குப் பூ வேரைக் கேள்வி கேட்கிறது. இரண்டும் ஒன்றே. யார் யாரிடம் கேள்வி கேட்பது? யார் யாருக்குப் பதில் சொல்வது?

'ஆபத்து விளைவதும் செல்வச் செழிப்பும் கடவுளின் விருப்பப்படி அவற்றிற்குரிய சமயத்தில் நிகழ்கின்றன. இதை உறுதியாக அறிந்தவன் எப்போதும் திருப்தியாக இருப்பான். ஒன்றைப் பெற ஆசைப்படவோ, ஒன்றை இழந்து துக்கப்படவோ மாட்டான். **(சுலோகம் 101)**

**ஒ**வ்வொன்றுக்கும் உரியதான ஒரு காலம் உண்டு. காலப்படியே எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன. பிறப்பு, இறப்பு, வெற்றி,

தோல்வி முதலியவை அவற்றிற்குரிய காலத்தில் நிகழ்கின்றன. உரிய காலத்துக்கு முன் எதுவும் நடைபெறுவதில்லை. ஆபத்து விளைவதும், செல்வச் செழிப்படைவதும் தமக்கென காலம் வகுத்திருக்கின்றன. இதைச் சரியான அமைப்பென ஏற்றுக் கொள்பவன் திருப்தியுடன் விளங்குவான். அவன் அவசரப்பட மாட்டான்; பொறுமை இழக்க மாட்டான். காலத்தில் பயிர் விளையும், அறுவடை செய்வோம். காலை ஆனதும் சூரியன் உதிப்பான்; தரிசிப்போம், வெயில் காய்வோம். இரவு வரும், ஓய்வெடுப்போம். எல்லா வேலைகளையும் நிறுத்திவிட்டு உறக்கத்தில் மூழ்குவோம். எல்லாம் தானாகவே நடக்கிறது; அதற்கதற்குரிய நேரத்தில் நடக்கிறது. உரிய காலத்திற்கு முன் நாம் எதையாவது வேண்டுமென வற்புறுத்தினால்தான், சமயத்திற்கு முன் நிகழுமாறு ஒன்றை அவசரப்படுத்தினால்தான் அமைதி சீர்குலைகிறது.

ஆகவேதான் மேற்கத்திய நாடுகளில் மக்கள் அமைதியிழந்து காணப்படுகிறார்கள். கிழக்கு தேசங்களில் அமைதி ஓரளவு உள்ளது. உண்மையில் கிழக்கில்தான் அதிக அமைதியின்மை காணப்பட வேண்டும். இங்கு தானே அதிகத் துன்பம், பணப் பற்றாக்குறை, பசிக்கொடுமை, பஞ்சம், நூற்றுக்கணக்கான நோய்கள், பலவகையான பிரச்சினைகள் நிலவுகின்றன. மேற்கு நாடுகளில் எல்லா சௌகரியங் களும், சுகங்களும், அறிவியல் முன்னேற்றம், தொழில் நுட்பத்தில் வளர்ச்சி ஆகியவை நிறைந்து காணப்படுகின்றன. ஆனாலும் மேற்குநாட்டு மக்களிடையே அதிருப்தி நிலவுகிறது. கீழ்த்திசை நாட்டு மக்கள் சுகமாக வாழவில்லையெனினும் துக்கத்தால் ஒடிந்துபோகாமல் சமாளிக்கிறார்கள். இது எப்படி சாத்தியமாகிறது?

கிழக்கு நாடுகள் ஒரு விஷயத்தைப் புரிந்து கொண்டுள்ளன. இங்குள்ள மக்கள் ஒவ்வொரு நிகழ்ச்சியும் அதற்குரிய காலத்தில்தான் நடக்கும் என்றும், நாம் அதை மாற்றியமைக்க முடியாது என்றும் நம்புகின்றவர்களாக உள்ளனர். ஆகவே மக்கள் மனத்தில் எதிர்பார்ப்பு உள்ளது. அவர்கள் பொறுமையாகக் காத்திருக்கிறார்கள். இதனால் அவர்களிடையே மன இறுக்கம் (டென்ஷன்) அதிகம் காணப்பட வில்லை.

மேற்கே ஒரு பிறவிதான் உண்டெனெ நம்புகிறார்கள். சுமார் 70-80 வயது வாழ்ந்தபின் நிரந்தரமான தூக்கம்தான் என நினைக்கிறார்கள்.

ஆகவே அத்தனை ஆண்டுகளுக்குள் எல்லாவற்றையும் முடித்துக் கொள்ள வேண்டும் என்று அவசரப்படுகிறார்கள். இதில் பாதி வாழ்க்கை உண்பதில், உறங்குவதில், வேலை பார்ப்பதில், சம்பாதிப்பதில் கழிந்து விடுகிறது. குழந்தைப் பருவம், படிப்பு காலம், வயோதிக காலம் ஆகியவற்றையும் கழித்துவிட்டால் வாழ்க்கையை அனுபவிப்பதற்குச் சொற்பகாலமே கையில் கிடைக்கிறது. ஆகவே அவர்களின் வாழ்க்கையில் ஓடுதலும் துரத்தலும் அதிகமாக இருக் கிறது. எவ்வளவு அவசரப்பட்டாலும் பலனில்லை. அவசரப்படுவதால் தாமதமே விளைகிறது என்றும் தெரியவருகிறது.

அமெரிக்காவில் கார்கள் பற்றிய புள்ளிவிவரம் ஒன்று படித்தேன். நியூயார்க்கில் கார்கள் இல்லாதபோது ஒருவன் தன் அலுவலகத்தை அடைய எவ்வளவு நேரம் பிடித்ததோ அதே அளவு நேரம்தான் 50 ஆண்டுகளுக்குப்பின் கார்கள் பெருகிவிட்ட காலத்திலும் அவன் எடுத்துக் கொண்டான் என்ற ஒப்பீடு என்னை வியப்பிலாழ்த்தியது. கார்களின் அளவு கடந்த எண்ணிக்கையால் போக்குவரத்து பாதிக்கப்பட்டுள்ளது. 'டிராஃபிக் ஜாம்' காரணமாக ஆங்காங்கே ஏராளமான கார்கள் நகர முடியாமல் அப்படியே நின்று விடுகின்றன. இதன் விளைவாக, ஓரிடத்தை அடைய காரில் சென்றாலும் நடந்து போனாலும் ஏறத்தாழ ஒரேயளவு நேரம் பிடிக்கிறது! காலால் நடந்தால் வரவாக ஆரோக்கியம் கிடைத்தது. காரில் போனால் பெட்ரோலுக்குச் செலவழிக்க நேரிடுகிறது. பிறகும் எல்லோரும் ஏன் கார் வாங்கத் துடிக்கிறார்கள்?

சில சமயங்களில் மிகவும் அவசரப்படுவதால் விசித்திரமாகத் தாமதம்தான் ஏற்படுகிறது. ஏனெனில் அவசரப்படுபவன் நிதானத்தை இழக்கிறான். காய்ச்சல் வந்தவன்போல் துடிக்கிறான். அவசரத்தில் முக்கியமான எதையாவது மறந்துவிடுகிறான் அல்லது தொலைக் கிறான். அதைத் தேடுவதில் நேரத்தை வீணாக்குகிறான்.

ஓரிடத்திலிருந்து இன்னோரிடம், அங்கிருந்து மூன்றாமிடம், ஒரு வேலையிலிருந்து வேறொரு வேலை; ஒரு புத்தகம் படிக்க ஆரம்பித்து நடுவில் விட்டு இன்னொரு புத்தகம்; ஒரு குருவிடம் சீடனாகிப் பாதியில் அவரை விட்டு வேறொரு குரு; மனைவியை மாற்று; கணவனை மாற்று; தொழிலை மாற்று—அவன் ஓடிக்கொண்டே

யிருக்கிறான். ஒரு கட்டத்தில் அவன், 'நான் நன்றாக ஓடினேன்தான். ஆனால் எங்கும் போய்ச் சேரவில்லையே' என வியப்படைகிறான். செக்குமாடு எத்தனை முறை சுற்றி வந்தாலும் புதியதோர் இடத்துக்குப் போக முடிவதில்லை என்பது போல்தான் இவன் நிலையும் உள்ளது.

உயர்வும் தாழ்வும் அவை தமக்குரிய நேரத்தில் நமது வாழ்வில் வரத்தான் செய்யும் என்று உறுதியாக அறிந்து அவற்றை எதிர்கொள்ளத் தயாராக இருப்பவன் திருப்தியுடன் விளங்குவான்; மனநலத்துடன் இருப்பான். அவன் இப்படித்தான் நடக்க வேண்டும் என்று ஆசைப் படுவதில்லை. 'இப்படி நடந்துவிட்டதே' என்று துக்கிப்பதுமில்லை.

வாழ்க்கையில் எது வருகிறதோ அது குறித்து அவன் உணர்ச்சிவசப்படாமல் சாட்சியாகப் பார்த்தபடி இருக்கிறான். 'துன்பம் நேர்கிறதா, சரி; இன்பம் மேலிடுகிறதா, சரி; பணம் வந்துள்ளதா, சரி; ஏழையாகி விட்டோமா, சரி எல்லாம் சரி. இதெல்லாம் யாருக்கோ நிகழ் கிறது. நான் பார்க்கமட்டும் செய்கிறேன்' என்பான். எந்நிலையிலும் கொந்தளிப்பின்றி அவன் ஒரே மாதிரியாகக் காட்சி தருவான்.

**இந்த ஏரி நீரைத் தொட்டுவிடாதே**
**இதன் பரப்பில் கற்களை எறியாதே**
**இலை-கிளை திரட்டி வீசாதே**
**பூக்களை நீரில் அமிழ்த்தாதே**
**காகிதப் படகை மிதக்கவிடாதே**
**இந்த விளையாட்டுகளால் உனக்கு**
**இன்பம் மிகுதியாய்க் கிடைக்கலாம்**
**ஆனால் ஏரியின் தண்ணீருக்கோ**
**அலைகள் எழுவது சொல்லொணாத் தொல்லை**

ஆனால் நாம் மனமென்னும் ஏரியில்-மானஸரோவரில்- இச்சைகள், பேராசைகள் முதலிய கற்களைத் தொடர்ந்து எறிகிறோம். இதனால் நீர்ப்பரப்பில் சலனமேற்பட்டு ஏரி நடுக்கமுறுகிறது. நீருக்குத் தொந்தரவாக இருக்கிறது. மனமென்னும் ஏரி குழம்புகிறது.

எனவே பார்ப்பவனாக இரு. செய்பவனாக (கர்த்தா) இராதே. இந்த கர்த்தா உணர்வால்தான் எல்லா பிரச்சினைகளும் தோன்றுகின்றன. கிழக்கு நாடுகளின் வாழ்க்கைத் தத்துவத்தை ஒரே சொல்லில் சொல்வதானால், அதுதான்—'சாட்சியாகி விடு'

**எனது வாழ்க்கை முழுவதுமே**
**அனைத்தின் சாட்சியாய் அமைந்தது**
**பகலும் இரவும் கழிந்தன பலமுறை**
**இருட்டின் பின்னால் ஒளியும் வந்தது**
**படைப்பும் பிரளயமும் முறை வைத்து**
**மாறி-மாறி வந்தன உலகில்**
**வாழ்க்கையில் சிரித்தது எத்தனை முறையோ**
**நான் அழுததும் அதற்குக் குறைவில்லை**
**இப்படி நிகழ்ந்த அத்தனைக்கும்**
**சாட்சியாய் அமைந்தது என் வாழ்க்கை**

கண்காட்சி போல் வாழ்க்கையைப் பார்த்தபடியே செல். எதிலும் அமிழ்ந்துவிடாதே. எங்கும் தங்காதே, தயங்காதே. எதிலும் மாட்டிக் கொள்ளாதே. எது நடந்தாலும் அது சம்பந்தமான உணர்ச்சிகளை உருவாக்கிக் கொள்ளாதே. நல்லது-கெட்டது என்ற ஆராய்ச்சியில் இறங்காதே. காலப்போக்கில் பார்ப்பவன் (சாட்சி) மட்டுமே எஞ்சியுள்ளான் என்பது உனக்குத் தெரியவரும். எல்லா அலைகளும் வீசி ஓய்ந்துவிட்டன. நீர்ப்பரப்பு சாந்தமாகி விட்டது. அந்தப் பேரமைதி வேளையில் உனக்கு சத்ய தரிசனம் வாய்க்கும்.

வாழ்க்கையில் பரம்பொருளின் விருப்பப்படி சம்பவங்கள் நிகழ்கின்றன என்று அனுபவத்தின் அடிப்படையில் அவற்றை ஏற்பவன் எப்பொழுதும் திருப்தியுடன் விளங்குவான். எப்பொழுதும் திருப்தி (நித்யம் த்ருப்த) என்பது கவனிக்க வேண்டிய சொற்றொடர். ஆசைப்படுவதால் அதிருப்தி உண்டாகிறது. அதாவது, ஆசைப்பட்ட படி நிகழாவிடில் அதிருப்தி உண்டாகிறது. ஆசைப்படாதே. அதிருப்தி ஏற்படாது. மூங்கில் இல்லையெனில் புல்லாங்குழலும் கிடையாதே.

விருப்பங்களற்றவன் தன்னில் நிலைபெற்று விளங்குகிறான். அவனுடைய புலன்கள் உள்ளிருந்து ஒரு மைய சக்தியால் இயக்கப்படுகின்றன. ஆனால் சராசரி மனிதனைப் புலன்கள் தம் இஷ்டப்படி ஆட்டிப்படைக்கின்றன. உதாரணமாக சில நிமிடங்கள் முன்னால் வரைகூட நமக்கு பசி உணர்வு ஏற்பட்டிருக்கவில்லை என்று வைத்துக் கொள்வோம். பாதையில் பாட்டுப் பாடியபடியே சென்று கொண்டிருக்கிறோம். ஓர் இனிப்புக்கடையிலிருந்து இனிப்புகளின் நறுமணம் மூக்கைத் துளைக்கிறது. நாம் போகவேண்டிய இடத்தை

மறந்துவிட்டு ஸ்வீட் ஸ்டாலுக்குள் நுழைந்து விடுகிறோம். சட்டெனப் பசி எடுத்துவிட்டது போல் உணர்கிறோம். சில நொடிகளில் இந்த மாயம் எப்படி நிகழ்ந்தது? மூக்கு என்னும் புலன், வாசனை என்னும் ஆயுதத்தைக் கொண்டு நம்மை உணர்ச்சிக்கு அடிமையாக்கிவிட்டது.

நாம் பாதையில் போய்க் கொண்டிருக்கிறோம். நம் மனத்தில் எந்த ஆசையும் சலனமும் இல்லை. எதிரே ஓர் அழகிய பெண் தென்படுகிறாள். மனத்தில் காமம் படர்கிறது. இப்படி ஒரு பெண்ணை நேரில்கூட பார்க்க வேண்டாம். செய்தித்தாள் பார்க்கையில் அதில் கலைந்த ஆடையுடன் பெண்படம் ஒன்று தென்படுகிறது. காகிதத்தில் கறுப்பை மையில் அச்சிட்ட படம்கூட மனத்தில் கொந்தளிப்பைத் தூண்டிவிடுகிறது. கனவிலும் அந்தப் படம் வந்தாலும் ஆச்சரிய மில்லை. இந்நிலையில் நமக்கு வழிகாட்ட வேண்டிய நம் கண்கள் நம்மை குருடாக்கியல்லவா விடுகின்றன!

கண்கள் நம் எஜமானன் ஆனால் அவை நம்மை குருடாக்கு கின்றன. நீ எஜமானனாக இருந்தால் கண்கள் கருவியாக மட்டும் இருந்து பார்க்க உதவுகின்றன. புத்தரும் மகாவீரரும் கண்களைக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டதுபோல் உன்னால் முடியாது. புலன்கள் உன்னை அடிமைப்படுத்தி உனக்கு எஜமானனாக உள்ளன. இந்த அடிமைத்தனத்திலிருந்து விடுபடுவதையே முக்தி அல்லது மோட்சம் என்கிறோம். அப்போது நீ எஜமானனாக் இருப்பாய். புலன்கள் உனக்கு ஊழியம் செய்யும்.

இவ்வாறு விடுதலை பெற்றவன் எந்தக் கவலைக்கும் ஆளாவதில்லை, எதற்கும் ஆசைப்ப்டுவதில்லை. ஏனெனில் அவனைப் பொறுத்தவரையில் எல்லாம் முடிந்துபோன விஷயங்கள். கையிருப்பாக என்ன உள்ளதோ அதில் அவன் திருப்தி பெறுகிறான்.

'சுகம்-துக்கம், பிறப்பு-இறப்பு ஆகியவை. கடவுள் நிச்சயித்தபடியே நடைபெறுகின்றன. இதை உறுதியாக அறிந்துள்ள மனிதன் தனிப்பட்ட முறையில் சாதிக்க வேண்டியது எதுவுமில்லை. அவன் வாழ்க்கைக் கடமைகளில் தொடர்ந்து ஈடுபடுகிறான். ஆனால் அவற்றை சிரமப்படாமல் செய்கிறான்.' **(சுலோகம் 102)**

**ந**மக்கு சுகம்-துக்கம், பிறப்பு-இறப்பு தவறாமல் கிடைத்துள்ளன. யோசி. நீ பிறக்க வேண்டுமென்று முன்கூட்டியே நினைத்ததில்லை.

பிறப்பதற்காக நீ எந்த முயற்சியும் எடுக்கவில்லை. 'நான் பிறக்கட்டுமா?' என்று நீ யாரிடமும் ஆலோசனை கேட்டதில்லை. பிறப்பு விஷயத்தில் உன் விருப்பம் என்று எதுவும் கிடையாது. நீ திடீரென்று ஒருநாள் உயிருடன் வெளிப்பட்டாய். பிறப்பு ஏற்பட்டுவிட்டது. அதற்கென கர்த்தா என்ற முறையில் நீ எதுவும் செய்ய வேண்டியிருக்கவில்லை.

இவ்வாறே சிறிது காலம் கழித்து உனது இறப்பு நிகழும். நீ சாகத் தயாரா என்று உன்னிடம் விருப்பம் கேட்கப்படுவதில்லை. 'நான் இப்போது இறக்க விரும்பவில்லை. சிறிது காலம் போகட்டும்' என்று நீ போராட்டம் நடத்தி வெற்றி காண முடியுமா? சாவு வாசற்கதவைத் தட்டிக்கூட அனுமதி கேட்பதில்லை; எப்பொழுது கிளம்பலாம் என்று நம்முடன் ஆலோசிப்பதில்லை.

பிறப்பு-திடீரென ஒருநாள் நிகழ்வது. மரணம்-திடீரென ஒருநாள் நிகழ்வது. இந்த இரண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் 'நான்தான் எல்லாம் செய்பவன்' (கர்த்தா) என்று நீ எவ்வளவு ஆட்டம் போடுகிறாய்! வாழ்க்கையின் அதிமுக்கியமான சம்பவங்களான பிறப்பு-இறப்பு ஆகிய இரண்டின் மீதும் உனக்கு எந்த அதிகாரமும் இல்லாத நிலையில் மற்ற சம்பவங்களை ஏன் நீ பெரிதுபடுத்தி உனது சாதனையாகப் பேசுகிறாய்? பிறந்ததால்தானே அந்த சம்பவங்கள் நடைபெறத் தொடங்கின? இறப்பினால்தானே அவற்றைத் தொடர முடியாமல் போயிற்று. எனவே பிறப்பு-இறப்புதான் முக்கியம். மற்றவை இரண்டாம் பட்சம்தான். எல்லாம் கடவுளின் விருப்பப்படி நிகழ்கின்றன என்று அஷ்டாவக்ரர் சொல்வதற்கு (தைவாதேவேதி நிஸ்சயீ) ஆரம்பத்தின் மீதும், முடிவின் மீதும் அவற்றை நிச்சயிக்கும் அதிகாரம் நம் கையில் இல்லை என்பதால்தான்.

பிறப்பை ஏற்றுக்கொண்டோம். இறப்பைத் தடுக்க முடியாது என்பதை ஒப்புக் கொண்டோம். ஆகவே இந்த இரண்டிற்கும் நடுவில் நடைபெறும் சம்பவங்களையும் கடவுளால் நிச்சயிக்கப்பட்டவை என நாம் ஏற்றுக்கொண்டால் மனத்தில் போனமதி நிலவும்.

அவ்வாறு ஏற்றுக்கொண்டவன் பிறகு தான் தனியாக சாதிக்க எதுவுமில்லை எனத் தெரிந்து கொள்வான். கடவுள் தன் மூலம் செய்ய விரும்புவதை தான் கருவிபோல் அமைந்து செய்வதாக நினைப்பான்.

நீ தனியாகச் செய்ய எதுவுமில்லை என்பதால் உனக்கு வாழ்க்கையில் என்றும் தோல்வியில்லை. பரமாத்மா உனக்கு வெற்றியளித்தால் நீ வெல்கிறாய். அவர் தோற்கச் செய்தால் நீ தோற்கிறாய். வெற்றியும் அவருடையது. தோல்வியும் அவருடையதேயாகும். பிறகு வாழ்க்கை சிரமமாக இருக்காது; உழைப்பு சுமையாகத் தெரியாது. இனி வாழ்க்கை என்பது ஒரு விளையாட்டு மட்டுமே என அறிவாய்.

வாழ்க்கையெனும் நாடகத்தில் கடவுள்தான் 'பிராம்டர்' (தூண்டி நினைவுபடுத்துபவர்). அவர்தான் நாடக ஆசிரியர். அவர் நமக்காக எழுதிய வசனத்தை நாம் பேசுகிறோம். அவர் தரும் அகத் தூண்டு தலின்படி செய்கைகள் மேற்கொள்ளுகிறோம். அவர் தேர்வு செய்த ஆடைகளையும் வேஷத்தையும் நாம் தரிக்கிறோம். அவர் நமக்கு ராமன் வேஷம் தந்தாலும் அல்லது ராவணன் பாத்திரம் தந்தாலும் ஏற்றுக் கொள்வதைத் தவிர, வேறு உபாயமில்லை. சமூகத்தில் சிலர் ராவணனாக இருப்பதன் காரணம் புரிகிறதல்லவா? அது திரை மறைவிலிருக்கும் நாடக ஆசிரியரின் உபயம். நமக்குப் பிடிக்காத சிலரைப் புரிந்து கொள்ள இக்கண்ணோட்டம் உதவும்.

ஒரு கிராமத்தில் ராமாயணக் கூத்து நடைபெற்றது. சீதையின் சுயம்வரக் காட்சி. ராவணனும் வந்திருக்கிறான். அவனுக்கு நாடகசபை மேனேஜர் மீது கோபம். வில்லை முறித்து சீதையை மணக்கப் போகிறேன் என்று சவால்விட்டான். நாடகச் சுவைக்காக, எல்லோரும் தோற்றபின்தான் ராமனுக்கு வாய்ப்பு தரப்படும். அதற்கு முன்னால் ராவணனுக்கு வாய்ப்பு வரும். மேனேஜருக்குக் குழப்பமேற்பட்டது. யோசித்தபின் ஒரு தந்திரம் செய்தார். ராவணன் வில்லை எடுக்க எழுந்த சமயம் ஒருவன் ஓடிவந்து அவனிடம் 'உன் வீட்டில் தீ பிடித்துவிட்டது' என்று கூவினான். ராவணன் பதறி மேடையைவிட்டு இறங்கியதும் ராமன் சட்டென எழுந்து வில்லை முறித்து விடுகிறான். அதே சமயம் இன்னொருவன் ஓடிவந்து 'அது தவறான செய்தி. ஊரில் எங்கும் தீ பிடிக்கவில்லை' என்று சமாதானப் படுத்துகிறான்.

அடுத்த முறை கூத்து நடந்தபோது ராவணன் பழிவாங்கும் கோபத்தில் இருக்கிறான். அவன் வில்லை எடுக்க எழுந்தபோது சென்ற தடவை போலவே ஒருவன் ஓடிவந்து 'உன் வீட்டில் தீ பிடித்து விட்டது' என்று கூவுகிறான். இம்முறை ராவணன் பதற்றப்படவில்லை. "பொறு, சீதையையும் அழைத்து வருகிறேன்," என்று கூறிச் சட்டென

வில்லை முறித்துவிட்டான்! பார்வையாளர்களும் மேடையிலிருந் தோரும் அதிர்ச்சிக்குள்ளாயினர். நாடக சபை மேனேஜர் ஜனகர் வேடத்திலிருந்தார். நிலைமையைச் சமாளிக்க அவர் சேவகர்களை (பாத்திரங்களைக்) கைதட்டி அழைத்து, "ஏ முட்டாள்களே! வில்லை மாற்றிக் கொண்டு வந்துவிட்டீர்களே. இது அரண்மனையிலுள்ள சிறுவர்கள் வைத்து விளையாடும் பொம்மை வில்லாயிற்றே. உடனே போய் சிவதனுசைக் கொண்டு வாருங்கள்," என்று அதட்டினார். திரை இறக்கப்பட்டது. நடிகர்கள் சேர்ந்து கொண்டு ராவணனை அடித்து விரட்டிவிட்டனர்.

நாமும் இப்படித்தான் வாழ்க்கையில் பல சமயம் முரண்டு பிடிக்கிறோம் கிழக்கத்திய ஞானிகள் வாழ்க்கையை ஒரு நாடகமாக மட்டும் பார்க்கச் சொல்கிறார்கள். வாழ்க்கை என்பது ராம்லீலா போன்ற கூத்து. அதைத் தீவிரமாக எடுத்துக்கொள்ள வேண்டாம் என்கிறார்கள். கடவுள் உன் மூலம் செய்விப்பதைச் செய். அவர் உனக்குக் காண்பிப்பதையெல்லாம் பார். நீ உலகால் தொடப்படாமல் இரு. பிறகு வாழ்க்கையில் உழைப்புச்சுமை இருக்காது; மன இறுக்கம் இருக்காது. கடமையைச் செய்வாய். அது கடுமையாகத் தெரியாது. நீ உன்னை கர்த்தாவாக நினைக்க மாட்டாய். ஆகவே சிரமம் தெரியாது. கர்த்தாவாகத் தன்னைக் கருதுபவன்தான் சிரமப்படுவான், கவலைப்படுவான். கடவுளை உன் வாழ்க்கையின் கர்த்தா ஆக்கிவிடு. பிறகு வெற்றி-தோல்வி அவரைப் போய்ச் சேரும். நீ ஒரு கருவியாக மட்டும் இருப்பாய்; காரணமாக மட்டும் இருப்பாய்.

'இந்த உலகில் கவலையால்தான் துன்பம் உண்டாகிறது. வேறு வகையில் துன்பம் விளைவதில்லை. இதை உறுதியாக அறிந்தவன் சுகமாகவும் சாந்தமாகவும் இருப்பான். அவனுடைய ஆசைகள் உருகிவிடும். அவன் கவலையிலிருந்து விடுபட்டவனாக இருப்பான்.' **(சுலோகம் 103)**

**க**ர்த்தா மனப்பான்மையிலிருந்து கவலை தோன்றுகிறது. செய்பவன் நீ அல்லன் என ஒப்புக்கொண்டால் பிறகு கவலை எப்படிப் பிறக்கும்? கர்த்தா என்னும் உணர்வைத் தொடர்ந்து கவலையும் நிழல்போல் வருகிறது. நீ உன்னைச் செயல்வீரன் என்று நினைத்துப் பெருமைப்படுகிறாய். 'நான் இதைச் செய்தேன்; அதைச் செய்தேன்; சரித்திரம் படைத்தேன்,' என்று கூறிக்கொள்ள விரும்புகிறாய் அதே

சமயம் உனக்கு எந்தக் கவலையும் வரக்கூடாதென்கிறாய். இது எப்படி சாத்தியப்படும்? நீ எந்த அளவிற்கு உன்னைக் கர்த்தாவாகக் கருதுகிறாயோ அதற்கேற்ப உன் கவலைகளின் எல்லையும் விரியும். ஆகவே நீ உன்னை விலக்கிக்கொள். கடவுள் உள்ளேவர இடங்கொடு. உன்னுள் பிரவேசித்து அவர் விரும்புவதைச் செய்யவிடு. உன் கைகள் அவருடைய கைகளாகட்டும். உன் கண்கள் அவருடைய கண்களாகட்டும். உன் உடலில் அவர் எழுந்தருளட்டும். நீ அவர் உறையும் கோயிலாகிவிடு. அப்போது உன் வாழ்க்கையில் இயற்கையானதொரு சௌந்தர்யம் தெரியும். நீ செயலில் தோற்றாலும் கவலையின்றி உறங்குவாய். நீ வென்றாலும் பரபரப்படைய மாட்டாய். கிளர்ச்சியுறாமல் உறங்குவாய். ஏனெனில் நீ வாழ்க்கையை உன் தலையில் தூக்கிவைத்துக் கொள்ளவில்லை.

நீ மாறிவிடுவாய். தன் தந்தையின் கையை நம்பிக்கையுடன் பிடித்துக் கொண்டு செல்லும் சிறுவனைப் போல் ஆகிவிடுவாய். வழியில் அடர்ந்த காடு, மிருகங்கள், தந்தை கவலையுடன் செல்கிறார். சிறுவனோ சந்தோஷமாக உணர்கிறான். காட்டில் தெரியும் ஒவ்வொன்றையும் குறித்துத் தந்தையிடம் ஆர்வமாக வினவுகிறான். பூக்களைக் கண்டு குதூகலிக்கிறான். சிங்கமே எதிர்ப்பட்டாலும் என்ன? அவனுக்கு என்ன கவலை? அப்பாதான் கையைப் பிடித்துக்கொண்டு பக்கத்தில் இருக்கிறாரே.

ஒரு ஜப்பானியக் கதை. அண்மையில் திருமணமான ஒரு போர்வீரன் தன் மனைவியை அழைத்துக்கொண்டு தனது கிராமத்திற்குப் படகில் பயணமானான். திடீரெனப் புயலடித்தது. படகு ஆட்டம் கண்டது. எந்த நிமிடமும் அது மூழ்கிவிடும்போல் தோன்றியது. மனைவி அரண்டு போனாள். கணவனோ சாந்தமாக அமர்ந்திருக்கிறான். புத்தரின் சிலைபோல் சலனமின்றித் தெரிந்தான்.

மனைவி வியப்படைந்து, "படகு கவிழக்கூடிய நிலையிலும் அமைதியாக இருக்கிறீர்களே. சாவு நெருங்கிவிட்டதே. கவலைப்பட வில்லையா?" என்றாள்.

வீரன் சட்டென்று தன் வாளை எடுத்தான். அதை மனைவியின் கழுத்தில் வைத்தான். மனைவி சிரித்துக் கொண்டே, "என்னைக் கொல்லவா போகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"உனக்கு பயமாக இல்லையா? உன் கழுத்தில் நான் வைத்துள்ள கத்தியால் லேசாக அழுத்தினால் போதும். கழுத்து தனியாகத் தண்ணீரில் வீழ்ந்துவிடும்," என்றான்.

அவள் பதற்றப்படவில்லை. "என் கணவராகிய உங்கள் கையில்தானே கத்தி உள்ளது? பிறகு எனக்கு என்ன பயம்?" என்று நகைத்தாள்.

கத்தி அவள் கழுத்தைவிட்டு விலகியது. கணவன் விளக்கினான்: "புயலைக் கண்டு நான் ஏன் அஞ்சவில்லை என்பதற்கும் அதுவேதான் பதில். இந்த புயல், சூறாவளி ஆகியவை கடவுளின் அதிகாரத்தின்கீழ் உள்ளவை. ஆகவே நான் ஏன் கவலைப்பட வேண்டும்? அவர் மூழ்கடித்தால் மூழ்குவோம். அவர் காப்பாற்றினால் உயிர்பிழைப்போம். கணவன் என்ற காரணத்தால் நீ என் வாளுக்கு பயப்படவில்லை. திருமணத்திற்கு முன்னால் பழக்கமற்ற உன் கழுத்தில் வாளை வைத்திருந்தால் நீ அலறிக் கத்தியிருப்பாய். திருமணமாகிவிட்ட சூழ்நிலையில் நீ இப்போது கத்தவில்லை. காரணம், நம்மிடையே அன்பு என்னும் பாலம் கட்டப்பட்டுவிட்டது. இப்படி ஒரு பாலம்தான் எனக்கும் கடவுளுக்கும் இடையேயும் உள்ளது. ஆகவே நான் எதற்கும் பயப்படுவதில்லை. புயல் வருகிறதா? சரி, அந்த அனுபவமும் பெறுவோம். மூழ்க நேருமோ? சந்தோஷமாக மூழ்குவோம். ஏனெனில் எல்லாம் கடவுள் கையில் உள்ளது. நாம் அவருடைய கைப்பிடிக்குள்தான் உள்ளோம். பிறகு கவலை ஏன்? 'செய்பவன் நான்' என்று நினைத்தால்தான் கவலை எல்லாம்."

**கூடு என்றும் ஒரு கணமும்**
**பறவையை எதிர்பார்ப்பதில்லை.**
**வானம் என்றும் எழுதுவதில்லை**
**பறவையின் வேகத்தின் விமரிசனம்.**
**விளக்கு என்றும் நடத்துவதில்லை**
**ஈசலின் அன்புக்கு அக்னி பரீட்சை.**
**புகை என்றும் விரும்பியதில்லை**
**கண்ணை எரிக்கும் மை ஆக**
**உயிர் தானே உருவாகிறது.**
**தனது தாகம் தணிக்கும் பொருட்டு,**
**தத்துவ அறிவு வெளிப்புறமானது**
**தேவை மனத்தின் லயிப்பொன்றே.**

வாழ்க்கையில் இப்படி நடக்க வேண்டும்-அப்படி நடக்கக் கூடாது என்று நீ நினைப்பது பிரமைக்கு, கனவுக்கு சமம். எப்படி நடக்க வேண்டுமோ அப்படித்தான் நடைபெறுகிறது. நீ தலையிட்டு ஒரு மாறுதலும் நிகழாது. ஆனால் நீ தேவையின்றிக் கலக்கமுறுகிறாய். எப்பொழுதாவது நீ மாறுதலாக நடந்துகொள்ள முயன்றுபார். அஷ்டாவக்ரர் சொல்லும் விதமாக ஒரு தடவை வாழ்ந்து பார். வரிசையாக மூன்று மாதங்களுக்கு நீ புதுவிதமாக வாழ்க்கை நடத்து. அந்த காலகட்டத்தில்:

1) எது நடக்கிறதோ அதுவே சரியானது என்று கருது.

2) இப்படி-அப்படி நடைபெற வேண்டும் என்று எந்த எதிர்பார்ப்பும் கொண்டிராதே.

நீ எதிர்த்தால் தற்சமயம் நடைபெறுபவை நின்றுபோய் விடும் என்றா நினைக்கிறாய்? நீ கண்ணை மூடிக்கொண்டால் உலகம் இருண்டுவிடுமா?

நான் அனுபவ அடிப்படையில் கூறுகிறேன். நான் இந்த சோதனையைச் செய்து பார்த்திருக்கிறேன். நான் நீண்ட காலம் என் அறையில் தனியாக உட்கார்ந்தபடி, பற்றில்லாமல், குறைந்தபட்சக் கடமைகளை மட்டும் கவனித்துவந்தேன். என் விருப்பம், கருத்து ஆகியவற்றுடன் சம்பந்தப்படாமல் சமூகத்தின் செயற்பாடுகள் அதன் போக்கில் தொடர்ந்து நடந்தன. நீயும் ஒருமுறை சோதனை செய்துபார். உன்னைக் கேட்டு உலகம் நடக்கவில்லை என்பதை அறிந்து நீ அதிர்ச்சியடைவாய். நீ எத்தனையோ செயல்களை நிறைவேற்றியதாக நினைப்பாய். அது தவறான கருத்து. உன்னைக் கருவியாக வைத்து உலகமகாசக்தி சில காரியங்களை நிறைவேற்றிக் கொண்டது. அவ்வளவுதான் விஷயம். 'நான்தான் கர்த்தா' என்று நீயும் குறுக்கிட்டால், ஒரே செயலைச் செய்பவர்களாக இரண்டு பேர்கள் இருந்தால், சிக்கல்தானே ஏற்படும்.

**தான் எனும் ஒருவன்**
**இருப்பதை மறந்து**
**மனிதன் சிந்திக்கிறான்**
**மற்றவர்களை விமரிசித்தே**

**இருட்டில் திரிந்து அலைவதால்
தடுக்கி விழுந்து வலியெடுத்து
தனது பிழையென அறிந்திருந்தும்
கல்லைத் திட்டுகிறான் இடித்ததாக!**

**காதில் விழும் எதிரொலியைத்
தன் குரல் என்று உணராமல்
எதிரியின் சவாலெனக் கோபமுற்று
தாக்க விரல்களை மடக்குகிறான்
பற்களை வலுவாய்க் கடிக்கிறான்.**

**சிந்திக்கும் ஆற்றலைச் சேதமாக்குகிறான்
அதனைச் சிறகாய்ப் பயன்படுத்தி
மேகங்கள் தடுக்காமல் பறக்க வசதியாய்
வானமிருப்பதைப் பார்க்க மறுக்கிறான்**

நீ போடும் கூச்சலெல்லாம், விடுக்கும் சவாலெல்லாம், வீண் என்பதற்கு ஒரு கதை சொல்லுகிறேன்.

**ஒ**ரு நாய் தாகத்தால் பரிதவித்து ஒரு குளத்தருகே வந்தது. தண்ணீரில் தெரிந்த தனது நிழலை அது இன்னொரு நாயென நினைத்துவிட்டது. அது பயங்கரமான நாய்போலும், எந்த நிமிடமும் பாயத் தயாராக இருப்பதாகவும் தோன்றியது. சுபாவப்படி நாய் அந்த நிழலைப் பார்த்துக் குரைத்தது. அந்த நிழல் நாயும் குரைப்பது தெரிந்தது. தாகத்துடன் கோபமும் சேர்ந்து கொண்டது. தண்ணீரிலுள்ள நாயை விரட்டினால்தான் சௌகரியமாகத் தாகத்தைத் தீர்த்துக்கொள்ள முடியும் என்று தோன்றியது. நிஜ நாய் உடனே தண்ணீரில் குதித்தது. சட்டென்று பிரதிபிம்பம் கலைந்துவிட்டது. அதுபோல் மற்றவர்கள் உனது பிரதிபிம்பம் ஆவர். நீ யாரைப் பார்த்து பயப்படுகிறாயோ, யார் உனக்குக் கவலை மூட்டுகிறாரோ, யாருடன் நீ சண்டை போடுகிறாயோ அவர்கள் எல்லோருமே உன் நிழல்கள்தாம்.

உனது நிழல்தான் உனக்கு அன்னியர்போல் தோன்றுகிறது. அதனுடன்தான் நீ மோதுகிறாய். இந்தப் போராட்டத்தில் உனக்கு வெற்றி கிடைக்காது. சூனியத்தில், கற்பனையில், கை-காலை வீசுவதுபோல்தான் இப்போர் அமையும். இந்த நிழல் யுத்தத்தில் (shadow-boxing) வெற்றி-தோல்விக்கு இடமேது?

'நான் உடல் அல்லன். உடல் என்னுடையது அன்று. இந்த ஞானமாகிய தீபம் எவர் உள்ளத்தில் ஒளிவிடுகிறதோ, உறுதியாக எரிகிறதோ, அவன் படிப்படியாக கைவல்யம்* என்னும் உச்சநிலையை (வீடுபேறு) அடைகிறான்.' **(சுலோகம் 104)**

**எ**வன் தான் உடல் அல்லன் என அறிகிறானோ அவன் 'நான் பிரம்மமாக இருக்கிறேன்' என்று அறிந்துகொள்ளக்கூடிய நிலையிலிருந்து தொலைவில் இல்லை எனலாம். இது முதல் கட்டம். அடுத்த கட்டமாக, 'நான் மனமல்ல' என்று நினைக்க வேண்டும். அதன் பிறகு கைவல்ய (ஒன்றென்ற) நிலையை நோக்கிக் காலடி எடுத்துவைக்க வேண்டும். சிறிது காலத்திற்குப் பிறகு அவனது உள்மனத்திலிருந்து 'நான் பிரம்மம்' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்று ஒலி எழத் தொடங்கும். அத்தகையவன் தான் செய்ததற்கும் வருந்தமாட்டான், செய்யாததற்கும் வருந்தமாட்டான்.

சராசரி மனிதன் தன் செய்கைகளுக்குக் கணக்கு வைத்திருக் கிறான். தன்னால செய்ய முடியாமல் விட்டுப் போனவற்றிற்கும் கணக்குப் பார்க்கிறான். இது முட்டாள்தனம்தானே. நேற்று நீ ஒருவரை ஏசிப்பேச விரும்பியும் முடியாமல் போய்விட்டது. அதைப் பற்றியும் உனக்குக் கவலை எழுகிறது. திட்டியிருந்தால், அவ்வாறு செய்தோமே என்று கவலை எழுவதைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் திட்டவில்லை என்றல்லவா உனக்குக் கவலை! வாய்ப்பு நழுவிவிட்டதே. மீண்டும் வாய்ப்புக் கிடைக்குமோ-கிடைக்காதோ, நல்ல சமயத்தை நழுவவிட்டோமே என்றெல்லாம் உனக்குக் கவலை. நீ செய்தவை உன்னைத் துரத்துவது போல் நீ செய்யாதவையும் உன்னைத் துரத்துகின்றன.

**மு**ல்லா நஸ்ருத்தீன் மரணப்படுக்கையில் இருந்தார். கண்கள் மூடியிருந்தன. மௌலவி வந்தார். "மரணம் நெருங்கிவிட்டது. இது வரை செய்த பாவங்களுக்கு வருத்தம் தெரிவித்து ஆண்டவனுக்குப் பிரார்த்தனை செய்," என்றார்.

---

* கேவலம் என்றால் சமஸ்கிருதத்தில் 'ஒன்றே ஒன்றுதான்' என்று பொருள். அந்த ஒன்றுதான் உள்ளது, அந்த ஒன்றுதான் நிலையானது என்று பொருள். உலகிலுள்ள பொருள்கள் நிலையுள்ளவை அல்ல. பரம்பொருள் ஒன்றே நிலையுள்ளது என்ற கருத்தைச் சொல்வதால் கைவல்யம் எனப்பட்டது.

முல்லா கண்களைத் திறந்தார். மௌலவியைப் பார்த்து, "நான் வருத்தம் தெரிவித்துக் கொண்டுதான் இருக்கிறேன். நீங்கள் குறுக்கே பேசிக் குழப்பாதீர்கள்," என்றார்.

மௌலவி விடவில்லை. "எதைக் குறித்து நீ வருத்தம் தெரிவித்துக் கொண்டிருக்கிறாய்?" என்று விசாரித்தார்.

முல்லா சொன்னார், "நான் செய்ய முடியாமல் போன பாவச் செயல்களுக்காக வருந்துகிறேன். அவற்றையும் சேர்த்துச் செய்திருந் தால் நன்றாக இருந்திருக்கும். நடுவில் சாவு குறுக்கிட்டுவிட்டது. இனி பிழைப்பது சந்தேகம். ஆனால் ஆண்டவர் என்னை மறுபடியும் உலகிற்கு அனுப்பினால் எதற்கும் சுணங்கமாட்டேன். நான் இப்பிறவியில் செய்யாமல் விட்டவற்றை நிறைவேற்றுவேன்."

உண்மைதான். மரண சமயம் மக்கள் தாங்கள் செய்யாமல் விட்டவற்றை நினைத்தே வருத்தப்படுகிறார்கள். அப்போது மதகுரு மார்களால் பாவமன்னிப்பு கிடைக்கும் என்ற நிலையில் இன்னும் சில பாவங்களையும் சேர்த்துச் செய்திருக்கலாமென நினைக்கிறார்கள்.

'நான் உடல் அல்லன், நான் மனம் இல்லை' என அறிந்தவன், தனது உள்ளத்தில் வீற்றிருக்கும் தெய்விக அழகை உணர்ந்தவன், தான் வாழ்க்கையில் எச்செயல் செய்ய நேர்ந்திருந்தாலும் அது குறித்து அவன் கவலைப்படுவதில்லை. நடக்க வேண்டியது நடந்தது; நடக்க முடியாதது நடைபெறவில்லை என்று அவன் அமைதியாக இருந்துவிடுவான். அவன் கடந்த காலம் என்னும் சுமையைத் தலைமேல் தூக்கி வைத்துக்கொண்டு நடைபோடுவதில்லை. கடந்த காலச் சுமையைக் கீழே போட்டுவிட்டவன் சுதந்திர புருஷனாகிறான். தனக்கு இறக்கைகள் முளைத்து வானத்தில் பறப்பதுபோல் உணர்கிறான். அவனை பூமியின் கவர்ச்சி கீழ்நோக்கி இழுப்பதில்லை. அவன் வானத்தில் மிதக்கிறான்.

உன் தலைமேல் கடந்த காலத்தின் சுமை இருந்தால் உனக்கு எதிர்காலம் குறித்து ஆசைகள் எழும். கடந்த காலத்தில் செய்யாமல் விட்டதை எதிர்காலத்தில் செய்ய வேண்டும் என்கிற துடிப்பு தோன்றுகிறது. கடந்த காலத்தில் செய்ததைக் கூடுதலாக, நன்றாக, செய்திருக்கலாம் என்றும் தோன்றுகிறது. அதை எதிர்காலத்தில்தான் செய்ய வேண்டும்.

எதிர்காலம் என்பது என்ன? உனது கடந்த காலத்தின் செம்மைப்படுத்தப்பட்ட, அழகாக அமைக்கப்பட்ட, ஒழுங்காகச் சீராக்கப்பட்ட உருவம்தான் அது. போன முறை சரியாகச் செய்யாததை அடுத்த வாய்ப்பு எதிர்காலத்தில் கிடைக்கும்போது நன்றாகச் செய்துவிட முடியும் என்று உனக்கு நம்பிக்கை எழுகிறது. கடந்த காலத்தின் சுமையைத் தாங்கியுள்ளவன்தான் எதிர்காலத்தைத் துரத்தியபடி ஓடுவான். கடந்த காலச் சுமையைக் கீழே உதறித் தள்ளியவனுக்கு எதிர்காலம் என்பது இல்லாமல் போய்விடுகிறது. அவன் பரிசுத்தமான நிகழ்காலத்தில் வாழ்பவனாக இருக்கிறான். நிகழ்காலத்தில் வாழ்வது என்பது பரமாத்மாவில் நிலைபெறுவதற்கு சமமாகும்.

'பிரம்மத்திலிருந்து தொடங்கி புல்வரை எல்லாமும் நான்' என்று உறுதியாக அறிந்துள்ளவன் இதுவா-அதுவா என்று குழம்பமாட்டான். அவன் பரிசுத்தமானவனாக, சாந்தமானவனாக, லாபநஷ்டத்திற்கு அப்பாற்பட்டவனாக இருப்பான்.

அனைத்துப் படைப்புகளுக்கும் வாழ்க்கைப் பிரவாகம் ஒன்றேதான் என்றும், வாழ்க்கை முழுதும் மொத்தமாக ஒரு விளையாட்டு என்றும், ஒரே கடலில் எழும் அலைகள் என்றும் அடையாளம் கண்டுகொண்டவன் யாரிடமும் அஞ்சுவதில்லை. எதற்கும் ஆசைப்படுவதில்லை. ஆகவே அமைதி இழப்பதில்லை.

'எத்தனை-எத்தனையோ ஆச்சரியங்கள் நிறைந்த இவ்வுலகம் அடிப்படையில் ஒன்றுமேயில்லை. அதாவது, இது பொய்த் தோற்றம். இவ்வாறு உறுதியாக அறிந்தவன் ஆசைகளற்றவனாக, ஞானியாக இருப்பான். எதுவுமே பிரச்சினைகள் இல்லையென்பதுபோல் சாந்தமாகத் தெரிவான்.' **(சுலோகம் 106)**

**இ**ந்த விதம் விதமான அதிசயங்களால் நிறைந்துள்ள உலகம் சாந்தமான மனிதனுக்கு ஆச்சரியங்கள் நிறைந்த ஒரு கனவாக மட்டுமே தெரியும். ஆசைகள் நிறைந்த உன் மனத்திற்கு வேண்டுமானால் உலகம் மெய்யானது என்று தெரியலாம். மனிதர்களின் ஆசைகள் உலகிற்கு உயிர் கொடுக்கின்றன. ஆசைகள் அகன்றதும் உலகத்தின் உயிர் நீங்கி அது தன் கவர்ச்சியை இழக்கிறது. கனவில் வரும் சம்பவங்களுக்காக நாம் விழித்தபின் கவலைப்படுவதில்லை.

அதுபோல் உலகம் ஒரு மாயக் கனவு என்பதை அறிந்தவன் உலக நிகழ்ச்சிகளால் அமைதியிழப்பதில்லை.

இரவில் தூங்குகையில் மலையிலிருந்து உருண்டு விழுந்து விட்டதாக நீ கனவு காண்கிறாய். அல்லது கனவில் ஓர் அரக்கன் (அமுக்குவான்) நெஞ்சின்மேல் உட்கார்ந்து அழுத்துகிறான். அப்போது உன்னை அறியாமல் கத்துகிறாய். இதனால் உன் தூக்கம் கலைந்துபோனது. முகத்தில் வியர்வை, நெஞ்சில் படபடப்பு. உடலில் நடுக்கம். ஆனால் அடுத்த கணமே நீ சிரிக்கிறாய். உன் குழப்பம் நீங்கிவிட்டது. இப்போது மலையோ, அரக்கனோ இல்லை. யாரும் உன் நெஞ்சில் ஏறி உட்கார்ந்திருக்கவில்லை. தலையணையைத் தூக்கத்தில் உன் நெஞ்சின்மேல் போட்டுக் கொண்டாய் என்று தெரிகிறது. இதுவரை நிகழ்ந்ததெல்லாம் பொய்யாக (கனவாக) இருந்தபோது மெய்யாகத் தோன்றியது. பொய்யிலிருந்து மீண்டதும் பயமும் போய்விட்டது.

ஞானம் பெற்றவன், புத்தநிலையை அடைந்தவன், நானும் தெய்வாம்சம் என்று உணர்ந்தவன் உலகத்தில்தான் வாழ்கிறான். ஆனால் உலகம் என்று ஒன்று இல்லாததுபோல் வாழ்வான்.

**நூலில் மணிகள்**
**கோத்துள்ளனவா,**
**மணிகளின் வழியே**
**நூல் செல்கிறதா,**
**ஞானி சப்தத்தில் உறங்கினார்**
**அட்சரத்தில் விழித்துக் கொண்டார்**

சப்தம் (சொல்) என்பது அட்சரங்களின் (எழுத்துகளின்) சேர்க்கையே. ஆனால் அட்சரம் சிறப்பான பொருளும் கொண்டது. அ+க்ஷரம் என்றால் அழியாதது என்று பொருள். என்றும் அழியாதது பரமாத்மா மட்டுமே. அது நம் உள்ளத்தின் உள்ளே உள்ளது.

ஒவ்வோர் எழுத்தும் தனியாக நிற்கிறது. ஆகவே அவை ஒன்றே ஒன்றாகிய கடவுளின் அடையாளங்கள். எழுத்துகளின் தொகுப்பாகிய 'அக்ஷரமாலா' விசேஷப் பொருள் உடையது. ஆங்கில எழுத்துகளின் தொகுப்பாகிய alphabet என்பதில் விசேஷ அர்த்தம் கிடையாது. அது கிரேக்க மொழியின் முதலிரண்டு எழுத்துக்களாகிய alpha, betaவைச் சுட்டுகிறது.

இரண்டு என்றால்தான் பிளவுபடும். ஒவ்வோர் எழுத்தும் தனியானது என்பதால் இரண்டாகப் பிரிய வாய்ப்பில்லை. உதாரணமாக, 'ஓம்'. ஆனால் இதை ஒரே எழுத்தாகத்தான் எழுதுவது வழக்கம் (ௐ). ஏனெனில் இது பரம சத்தியத்தைச் சுட்டிக்காட்டும் அடையாளமாக உள்ளது. அ-உ-ம சேர்ந்தது ஓம். அப்படி மூன்றாக்கினால் ஓரெழுத்து மந்திரம் உருவாக முடியாது அ-உ-ம அல்லது ஓ-ம் என்று எழுதினால் 3-2 எனப் பிரிந்துவிடும். பிரியக்கூடியது (சொல் என்பது) சத்தியம் ஆகாது. சத்தியம் ஒன்றே. பரமாத்மா ஒன்றுதான். அ-உ-ம எனப் பிரித்தால் திரிமூர்த்திகள் உண்டாகிவிடுவர். அவர்கள் பரமாத்மா இல்லை.

**கண்ணாடியில் பிரதிபலிக்கும்**
**பிம்பத்துடன் மோதாதே**
**ரத்தக்களறியாகிவிடும்**
**ஆகவே மூடு புறக் கண்களை**
**அகலத் திற அகக் கண்களை**

கண்ணைத் திறந்து நீ கண்டது உலகத்தை, கண்ணை மூடினால் தெரிவது எல்லாமான பரமாத்மா. அவரே சத்தியம். புறத்தே கண்களை மூடினால் அகத்தின் காட்சிகள் தெரியும். ஒரே சமயம் உள்ளேயும் வெளியேயும் பார்க்க முடியாது. எதைத் திறப்பது?

முடிவு உன் கையில்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! தாங்கள் எனக்கு சந்நியாசம் அருளினீர்கள். ஆனால் தீட்சை மந்திரம் அளிக்கவில்லையே. நான் மற்ற சம்பிரதாயத் துறவிகளைச் சந்திக்க நேர்ந்தால் 'உன் குரு மந்திரம் என்ன?' என்று விசாரிக்கிறார்களே. என்ன பதில் சொல்வது?**

மந்திரம் என்பது மனத்தின் விளையாட்டே தவிர வேறில்லை. மந்திரம்-மனத்தின் தந்திரம்-மனம் வீசும் வலை என்று பொருள்படுகிறது. வலை விரிவதுபோல் மனம் விரிவதைக் காட்டுகிறது. மந்திரம் என்பது மனத்தின் சூழ்ச்சி வலை!

ஆம், வேண்டுமென்றேதான் நான் உனக்கு மந்திரம் எதுவும் உபதேசிக்கவில்லை. அதனிடமிருந்து நீ தப்பிவிட வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். உன்னிடம் ஏற்கெனவே உள்ள மந்திரங்களையும் பிடுங்கி வெளியேற்றிக் கொண்டிருக்கிறேன். உன்னிடம் மந்திரங்கள் நிறைய உள்ளன. மந்திரத் திரட்டே உள்ளது. அதில்தான் உன் (சமூகத்தின்) கடந்த காலம் முழுவதுமே அடங்கியுள்ளது. நீ நிறைய மந்திரம் கற்றாய்; நிறையச் சேகரித்தாய். மக்கள் ஹிந்து, முஸ்லிம், ஜைனர், கிறிஸ்தவர் என்று பிரிந்துள்ளனர். அதன்படி அவர்களின் மத நூல்களிலுள்ள மந்திரங்களும் வெவ்வேறாக உள்ளன. உனக்கு உன் மதத்தின் மந்திரங்கள் சில விசேஷ நம்பிக்கைகளை ஏற்படுத்தித் தந்திருக்கின்றன. என் முயற்சியெல்லாம் உனக்கு அவற்றின் பிடியிலிருந்து விடுதலை பெற்றுத் தருவதே ஆகும். நீ எம்மதத்தினனாகவும் இருக்க வேண்டாம். எந்த ட்ந்நூலுக்கும் வசப்பட வேண்டாம். உன் கைகள் காலி ஆகட்டும் அப்பொழுதுதான் கைகளில் எதையாவது நிரப்ப முடியும். ஏன், பரமாத்மாவைக்கூ' -

நிரப்பலாம். மனம் வெற்றிடமானால் பிறகு கதவு திறக்கும்போது பரமாத்மா பிரவேசிக்க முடியும்.

நீ ஓர் ஆலயம். உன்னை காலியாக வைத்திரு. கடவுள் உனக்குள் எழுந்தருளட்டும். அவருக்கு இடம் கொடு. தனியாக இடம் ஒதுக்கிவை. தற்சமயம் உன் வீடு கல்-மண்ணாலும், குப்பை கூளங்களாலும் அடைந்து கிடக்கிறது. இது தெரிந்தும் நீ மேன்மேலும் குப்பை திணிக்கிறாய். கடவுள் உனக்குள் நுழைய விரும்பினாலும் காலி இடம் எங்கே இருக்கிறது? கிரணம் இறங்க விரும்பினாலும் துளை எங்கே இருக்கிறது?

நீ குப்பையால் நிரம்பியுள்ளாய். நிரம்பியிருப்பதுதான் துக்கத்தின் காரணமாக ஆகிறது. 'வெறுமையாகி விடு'—இதுதான் நான் தரும் மகாமந்திரம். எதையும் மனத்தில் நிரப்பக்கூடாது என்பதால்தான் நான் உனக்கு வழக்கமான மந்திரங்கள் தரவில்லை. மனத்தினிடமிருந்தும் நீ விடுதலை பெற வேண்டும். நீ மந்திரம் என்ற சொல்லில் மயங்குபவனாயின், மந்திரம் இல்லாமல் நீ சங்கடமாக உணர்ந்தால் நான் புது மந்திரம் சொல்கிறேன்-'மனமே சூன்யமாகி விடு, சாட்சியாகி விடு' இந்த மந்திரத்தை ஜெபி!

பாராயணம் செய்வதால் ஆன்மிகப் பலன் கிடையாது! ராம்-ராம் என்று ஜெபித்தபடி இருப்பதால் எந்த மாறுதலும் விளையாது. நூற்றாண்டுகளாக மக்கள் இதை ஓதுகிறார்கள். என்ன நன்மை கிடைத்தது? ஓதுவது யார்? மனம்தானே? உரக்க ஜெபி அல்லது முணுமுணுத்தபடி இரு. ஒவ்வொரு முறை ஓதும்போது மேலும் வலுப்படுவது உன் மனந்தானே தவிர, ஆன்மிக உணர்வு இல்லை. ஏனெனில் எதை—உடலின் எப்பகுதியை—நீ உபயோகிக்கிறாயோ அதன் பலம்தான் கூடும்.

நீ சாட்சியாகிவிடு. மனத்தில் எழும் சிந்தனை அலைகளுக்கு நீ சாட்சியாகிவிடு; பார்வையாளனாகி விடு. நடப்பதை சும்மா பார்த்தபடி இரு. மனத்தின் செயற்பாடுகளில் எதையும் நீ தேர்ந்தெடுக்காதே.

ஒருவன் சினிமா பாட்டு பாடுகிறான். அதை அதர்மம் என்கிறாய். ஒருவன் பஜனைப் பாட்டு பாடுகிறான். அதை தர்மச்செயல் என்கிறாய். பாட்டு கிளம்புவது மனத்திலிருந்துதானே. எனவே

இரண்டுமே அதர்மம் என்கிறேன் நான்! இதற்கு நான் மாற்று ஒன்று சொல்கிறேன். காதில் விழுவது சினிமா பாட்டோ, ராமாயண சுலோகமோ அதை வகைப்படுத்தாமல் கேட்டபடி இரு. அதனுடன் நீ ஒன்றிவிடாதே. நீ மனத்துடன் மோதாதே. இடைவெளிவிட்டு நீ மனத்திலிருந்து விலகிநில். பாதை ஓரத்தில் நின்றுகொண்டு தெருக்காட்சிகளைப் பார்ப்பதுபோல் -வீதியில் போகின்ற மக்களையும் வாகன வகைகளையும் பார்ப்பதுபோல்-உணர்ச்சிவசப்படாமல் பார். இதுதான்-சாட்சியாவதுதான்-அஷ்டாவக்ரரின் உபதேசத்தின் சாரமெல்லாம்.

மந்திரத்தை நீ சொல்ல ஆரம்பித்ததுமே கர்த்தாவாகி விடுகிறாய். இது நுணுக்கமான மாறுதல். மந்திரம்-பிரார்த்தனை-பூஜை என்று படிப்படியாக உன் கர்த்தா தன்மை வலுவடைகிறது.

சாட்சி மனப்பான்மையை ஒரு துளி பிரயோகித்துப் பார். அதன் ருசி உனக்குப் பிடித்துப் போய்விடும். ஏற்கெனவே நடைபெற்று வருபவையே போதுமானது. புதிதாக மந்திரம் என்னும் சுமையை நீ ஏற்றிவைத்துக் கொள்ள வேண்டாம். நடப்பதைப் பார். அதனுடன் உறவு வேண்டாம். உனக்கும் உலகிற்கும் இடையே சிறிய இடைவெளி, சிறிய விலகல், சிறிதளவு தூரம் இருக்கட்டும். விலகி நின்று பார்த்தால்தான் எதுவும் முழுமையாகத் தெரியும். இடைவெளி அதிகமானால் நம்மீது மனத்தின் பாதிப்பு குறைந்துவிடும். நீ மனத்தைப் பயன்படுத்துவதை நிறுத்தினால் மனத்திற்கு சக்தி அல்லது போஷாக்கு கிடைக்காது. நீ மனத்துடன் ஒத்துழைக்காவிடில் உனது சக்தி மனத்தைச் சென்றடைவதில்லை. இதனால் மனம் சுருங்கத் தொடங்குகிறது.

நீ தந்த போஷாக்கால்தான் உன் மனம் இதுவரை மலர்ந்தது, விரிந்தது. நீதான் பின்னணியில் இருந்து கொண்டு இதன் வளர்ச்சிக்கு உதவினாய். இப்படி ஒருபுறம் மனத்தைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, இன்னொருபுறம் 'ஐயோ, மனக்கஷ்டத்திலிருந்து எப்படி விடுபடுவேன்?'' என்று கேட்கிறாய். நான் வழிசொல்கிறேன்-'இனி நீ மனத்துக்கு ஆதரவு தராதே. சாட்சியாகி விடு.'

மனத்தை ஆதரிக்காமல் ஓடவிட்டுப் பார். அதிக தூரம் செல் லாது. பெடல் போட்டு சைக்கிள் செலுத்துவது போல்தான் இதுவும்.

சைக்கிள் தானாக அசையாது. அதன்மேல் உட்கார்ந்துள்ளவன்தான் அதைச் செல்ல வைக்கிறான். பெடலை அழுத்த-அழுத்த ஸைக்கிள் வேகம் பிடிக்கிறது. நீ பெடல் போடுவதை நிறுத்து. பிறகு ஸைக்கிள் எவ்வளவு தொலைவுவரை போகிறது என்று கவனி. பத்து-இருபது அடி முன்னால் போகும். அந்த முன்னேற்றமும் முன்பு கொடுத்த அழுத்த சக்தியின் காரணமாகவே ஏற்பட்டது. அதிக நேரம், அதிக தூரம், வண்டி ஓடாது. மனத்தின் இயக்கமும் இதுபோன்றதுதான்.

மந்திரம் ஜெபித்தபடி இருப்பது மேற்கண்டபடி பெடல் போடுவதற்கு சமமானது. முதலில் சினிமா பாட்டு அல்லது துதிப்பாடலை முணுமுணுத்தபடி இருந்தாய். பிறகு யாரோ ஒருவர் உனக்கு மந்திர தீட்சை கொடுத்து எப்பொழுதும் அந்த மந்திரத்தை ஜெபித்தபடி இரு என்று உபதேசிக்கிறார். ஓம் என்று லட்சம் முறை, ராம் என்று கோடி முறை ஜெபி என்கிறார். இதனால் உறுதியான பலனில்லை. பெடல் செய், வண்டி ஓடும். பெடல் செய்வதை நிறுத்து, வண்டி நின்று கீழே விழுந்துவிடும். ஜெபம் செய்வதை நிறுத்தினால் மனம் பழைய நிலைக்கே வந்துவிடும். ஜெபத்தின் துணையின்றிக் கிடைப்பதுதான் உண்மையான, நிரந்தரமான பலம். அதற்குத் தேவையான மகாமந்திரம் - 'மனத்தைக் கட, சாட்சியாகு' என்பதே.

'உன் குரு மந்திரம் என்ன?' என்று கேட்கும் சந்நியாசிகள் பழைமையான கண்ணோட்டமுள்ளவர்கள். சுய சிந்தனை செய்யாத வர்கள். அவர்களிடம் எச்சரிக்கையாக இரு. பழைய முறை சந்நியாசம் காலத்தின் பாதிப்பால் அழுகிவிட்டது. அது ஏமாற்று வேலை ஆகிவிட்டது. அதுவும் சரண்டலின் ஒரு வகையாகிப் போனது.

**இப்பக்கம் சேட்ஜி ஒருவர்**
**அப்பக்கம் ஒரு சாமியார்**
**சாமியார் சொல்லை சேட்ஜி ஏற்க**
**இருவரும் கெட்டிக்காரர் ஆகிவிட்டனர்**
**அவரவர் சுயலாபத்திற்காக**
**உபாயம் கண்டுகொண்டனர்**
**இப்போதெல்லாம் இருவரும் சேர்ந்தே**
**'ஜெய்சீதாராம்!' என முழங்குகின்றனர்**

பழைய முறையிலான சந்நியாசம் வெறும் ஓடிப்போதல் மட்டுமே. அது வாழ்க்கையின் போராட்டங்களுக்கு அஞ்சிப் புறமுதுகு

காட்டுவதாகும். ஆனால் அந்தப் போராட்டங்களின் மூலம்தான் வாழ்க்கையில் வளர்ச்சி சாத்தியப்படுகிறது. போராட்டம் என்பது சவாலைக் குறிக்கிறது. சவாலான சூழ்நிலை நமக்கு விழிப்பு தருகிறது. போராட்டத்தைத் தவிர்த்தால் சோம்பேறியாய்த் தூங்கிக் கிடக்க வேண்டியதுதான்.

பழைய சம்பிரதாய வழியில் துறவறம் மேற்கொண்ட எவரையும் கவனி. அவரிடம் மேதைமை ஒளிவிடாது. கண்களில் பரம சாந்தம் தெரியாது. அவரது உடலின் இயக்கத்தில் இசையின் துள்ளல் இருக்காது. நடனம்போல் நேர்த்தியான நடவடிக்கைகள் இருக்காது. ஓடி மறையும் சுபாவமுள்ளவனிடமிருந்து ஒளி வீசாது. பழைய சந்நியாசி பலகீனமானவர். கோழைத்தனம் மிகுந்தவர். போராட இயலாதவர். விரும்பியது கிடைக்காததால் உலகை ஏசுபவர். 'சீச்சீ, இந்த பழம் புளிக்கும்' என்று திராட்சையைக் குறை கூறுபவர்.

குடும்பத்தை விட்டு ஓடினாலும் இவர்கள் சமூகத்தில் சிலருக்குப் பயன்படுகிறார்கள் பணபலம், பதவிபலம், அரசியல் பலம் உள்ளவர்களுக்கு இந்தச் சாமியார்கள் கூட்டாளிகளாக இருக்கிறார்கள். ஏனெனில் இவர்கள் சமூகத்தில் ஒருவிதமான போதையைப் பரப்புகிறார்கள், மற்றும் பலரைத் தங்களைப்போல் வீட்டைவிட்டு ஓடச்செய்கிறார்கள். சமூகத்தில் ஒருவகையான மயக்கத்தை, உறக்கத்தைத் தூண்டுகிறார்கள். 'எல்லாம் மாயை, ஓடிவிடுங்கள்' என்கிறார்கள். எல்லாம் மாயை என்றால் எங்கே ஓடுவது?

ஒருவன் உன்னை நோக்கி ஓடிவருகிறான். "அந்தப் பக்கம் போகாதீங்க. பாதையில் ஒரு கயிறு கிடக்கிறது. பார்ப்பதற்குப் பாம்புபோல் தெரிகிறது. அதனால்தான் நான் தப்பித்து ஓடிவருகிறேன்," என்கிறான். மாற்றிச் சொல்கிறானா?

அவனுக்கு அங்கு கிடப்பது கயிறில்லை, பாம்புதான் என்று நன்றாகத் தெரியும். கயிற்றைப் பாம்பாக நினைப்பது பரம்பரையான சாஸ்திரக் கண்ணோட்டம். ஆகவே அவன் அப்படிச் சொல்கிறான். உண்மையிலேயே கயிறுதான் என்றால் பிறகு ஏன் ஓடி வரவேண்டும்? மாயையிடமிருந்து தப்பி எங்கே ஓடிவிட முடியும்? அப்படியில்லை, மாயைக்கும் கொஞ்சம் பலம் உண்டது. அதிலும் ஏதோ உண்மை மறைந்து நிற்கிறது. வாழ்க்கையின் ஏதோ யதார்த்த அம்சமும்

அதிலுள்ளது. மாயையிடம் பயந்துபோய் ஒருவன் சந்நியாசியாகி ஓடுகிறான்.

நான் துறவறத்திற்குப் புதிய விளக்கம் தந்துள்ளேன். 'ஓடாதே, விழித்துக் கொள்' என்பதுதான் அது. நீ எங்கே இருக்கிறாயோ, எப்படி இருக்கிறாயோ, அங்கேயே உறுதியாகக் காலூன்றி அப்படியே நில். உண்மையான சவால் வெளிப்பொருள்களிலிருந்தோ, மனைவி-பிள்ளைகளிடமிருந்தோ, வீடு-வியாபாரத்திலிருந்தோ எழுவதில்லை. உனக்குள் உன் மனத்தைக் கட்டிப்போட்டிருக்கும். தளைகள்தாம் உன்னை எதிர்நோக்கும் பெரிய சவாலாகும். அந்தக் கட்டுகளை அறுத்தெறி. நீ எங்கே உள்ளாயோ அந்த நிலையிலேயே இரு. உனக்கு அருமையான முக்திநிலை வாய்க்கும். எந்தக் கட்டும் உன்னைப் பிணிக்காது.

அந்த சுதந்திர நிலைக்கு என்ன பெயர் வேண்டுமானாலும் கொடு. விழிப்புநிலை, தியானநிலை, சாட்சிநிலை என்று உனக்குப் பிடித்த பெயரைச் சூட்டு. ஆனால் ஓடிப்போவது மட்டும் வேண்டாம். ஓடிப்போனால் நீ வாழ்க்கையைச் சமாளிக்க முடியாத அளவிற்கு பயந்துவிட்டாய் என்று பொருள்படும்.

கோழைக்குக் கடவுள் வசப்படமாட்டார். அவர்தான் உனக்கு இந்த வாழ்க்கையை அளித்து இதை வாழ்ந்து முடித்துக்கொள் என்று உன்னை அனுப்பியுள்ளார். கடவுளின் செயல்களுக்கெல்லாம் காரணம் இருக்கும். அவர் உலகில் உன்னை அனுப்பியதற்கு பிரதிபலனாக நீ ஏதோ சாதிக்க வேண்டும் என்றுதான் எதிர்பார்ப்பார். அப்படியிருக்க, மகாத்மாக்கள் சிலர் 'வாழ்க்கையை விட்டு ஓடு' என்று போதிப்பது தவறான செயல். அல்லவா? கடவுள் 'வாழு' என்று அனுப்பினால், இவர்கள் அதற்கு முரணாக 'ஓடு' என்று அதட்டுகிறார்களே!

உதாரணமாக, பெற்றோர் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக் கூடத்தில் கல்வி கற்க அனுப்புகிறார்கள். வழியில் ஒருவர் பிள்ளைகளை தடுத்து, ''பள்ளிப் படிப்பால் ஒரு லாபமும் கிடையாது. எழுத-படிக்கக் கற்றுக் கொள்வதால் என்ன பிரயோஜனம்? ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது, வீட்டுக்குத் திரும்பிப் போங்கள்'' என்று சொன்னால் எப்படியிருக்கும்?

உலகம் ஒரு கல்விச்சாலை. பரமாத்மா இங்கே பயில நம்மை அனுப்பியுள்ளார். இங்கே கற்றுக் கொள்வதற்கு ஏராளமான விஷயங்கள் உள்ளன. உண்மை-பொய்க்குமுள்ள வித்தியாசம், சாரமுள்ளது-சாரமற்றதன் வேறுபாடு, எல்லைக்குட்பட்டவை-எல்லையற்றவை எவை. ஜடப்பொருள்-மன இயக்கமுடைய, உயிரோட்டமுள்ள பொருளின் தன்மைகள்—இந்த விஷயங்களை யெல்லாம் உலகமாகிய கல்விச்சாலையில் பயிலலாம். சமூகத்தைவிட்டு ஓடுவதால் இந்த அறிவையெல்லாம் பெற முடியாது. இங்கேயே தங்கி இவற்றை விழிப்புடன் கற்க வேண்டும்.

'ஞான விழிப்புப் பெறுவேன்' என்று கூறி இமயமலைக்கு ஓடி குகையில் வசிப்பதால் பிரயோஜனம் இல்லை. கூட்டம் நிறைந்த பக்கா கடைத்தெருவில்தான் (பஜாரில்தான்) சுலபமாக விழிப்புப் பெற முடியும். கடைத்தெருவின் ஆரவாரம் உன்னைத் தூங்கக்கூட விடுவதில்லையே. நாலா புறமும் இடித்தலும் தள்ளலுமாக இருக்கிறது. இமயமலை குகையில் உட்கார்ந்தால், இதமான இயற்கைச் சூழலில் உடனே தூங்கிவிடுவாயே! சாதாரண விழிப்பே சிரமமாகி விடுமே. ஞான விழிப்புக்கு வாய்ப்பேது? இமயமலை குகையில் தூங்காமல் வேறென்ன செய்வது? கடைத்தெருபோல் வாழ்க்கையின் ஓசைகளின் நடுவில், காட்சிகளின் நட்டநடுவில் இருந்து கொண்டுதான் யதார்த்தமான அனுபவம் பெறமுடியும். அதுதான் உன் ஆளுமைக்கு மெருகேற்றும். நேரடியான அனுபவமே 'நீ யார்?' என்று உனக்குத் தெளிவாக்கும். இவ்வாறு தன்னையறிதலே ஞான விழிப்பு.

ஒரு பெண்மணி. அழகே இல்லாதவள். அவள் முகம் பார்க்கும் கண்ணாடி பக்கம் போகவே மாட்டாள். காரணம் கேட்டால் அவள், "கண்ணாடிகள் என் எதிரிகள். அவை எனக்குக் கொடுமை இழைக்கின்றன. நான் வாஸ்தவத்தில் அழகாக உள்ளேன். ஆனால் கண்ணாடிகள் என்னை குரூபியாகக் காட்டுகின்றன," என்று புலம்பினாள். யாராவது அவளிடம் கண்ணாடி கொண்டு வந்தால் அதை அவள் பிடுங்கி எறிந்துவிடுவாள்.

மரபுவழி சந்நியாசிகளும் கண்ணாடியை உடைப்பவர்கள்தாம். தம் குறைக்குப் பிறரை காரணமாக்கித்தான் அவர்கள் சாமியார் ஆனார்கள் மனைவியிடமிருந்து பிரிந்து ஓடுவாய். அவளுடன் இருந்தால் தகராறு மூளுகிறது என்பாய். ஆனால் கலகத்தின் விதை

உனக்குள்தான் இருக்கிறது. மனைவி ஒரு கண்ணாடி போன்றவள் மட்டுமே. அதில் தெரிவது உனது முகம்தான். கண்ணாடி முகத்தைப் படைப்பதில்லை. உன் முகம்தான் மாறவேண்டுமேயொழிய கண்ணாடியைவிட்டு ஓடுவதால் நிலைமை மாறப்போவதில்லை. உன்னைப் பிறருக்கு அனுகூலமாக மாற்றிக் கொண்டால் வேண்டாதவர் என்று யாரும் இருக்க மாட்டார்கள். யாரைவிட்டும், எதைவிட்டும் நீ ஓடிப்போக வேண்டிய தேவை இராது.

சூகராத்தின் (ஸாக்ரடீசின்) மனைவி கொடுமைக்காரி. இப்படி மனைவி அமைகிற துர்ப்பாக்கியம் சிலருக்கு ஏற்படுகிறது. நல்ல மனைவி கிடைப்பது வரம் என்றாலும் இவள் மோசத்திலும் மோசமான மனைவியாக இருந்தாள். நாள் முழுதும் கணவரை அடக்குமுறை செய்வாள். ஒருமுறை அவள் கொதிக்கும் தேநீரைக் கணவரின் தலைமேல் கொட்டிவிட்டாள்! இதனால் அவரது பாதி முகம் நிரந்தரமாகக் கறுப்பாகிவிட்டது. ஆனால் ஸாக்ரடீஸ் வீட்டைத் துறந்து ஓடிவிடவில்லை.

ஒருநாள் ஓர் இளைஞன் அவரிடம் வந்து, "நான் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன். தங்கள் ஆலோசனை என்ன?" என்று கேட்டான். "நீ மறந்தும் திருமணம் செய்து கொள்ளாதே" என்று அவர் தடுப்பாரென அவன் நினைத்தான். ஏனெனில் ஒவ்வொரு நாளும் அவர் மனைவி எந்தவிதமாக அவரைக் கொடுமைப்படுத்தினாள் என்ற செய்தி ஏதென்ஸ் நகரத்தில் பரவியிருந்தது. உண்மையில் அந்த இளைஞன் திருமணம் செய்து கொள்ள இஷ்டப்படவில்லை. ஸாக்ரடீஸ் திருமணம் வேண்டாம் என்று சொல்வாராதலால் அதையே ஒரு சாக்காகப் பெற்றோரிடம் கூறி, தன் திருமணத்தைத் தவிர்க்கலாம் என்பது அந்த இளைஞனின் திட்டம்.

ஆனால் அவன் எதிர்பார்த்ததற்கு எதிராக ஸாக்ரடீஸ் சொன்னார்: "நீ கட்டாயம் கல்யாணம் செய்துகொள். நல்ல மனைவி கிடைத்தால், சராசரிக் கணவனாக வாழ்வாய். எனக்கு அமைந்ததுபோல் மோசமான மனைவி கிடைத்தால், நீ என்னைப்போல் ஞானியாகப் புகழ் பெறுவாய்."

இளைஞன் திகைத்துப் போனதைக் கண்டு ஸாக்ரடீஸ் விளக்கினார்: "என் மனைவியைப் பற்றி எல்லோருக்கும் தெரியும்.

அவளது கொடுமை காரணமாகத்தான் நான் பொறுமைசாலியாக முடிந்தது. இவளது முன்னிலையில் என் வாழ்க்கை ஒவ்வொரு நிமிடமும் ஒரு பரீட்சைபோல் உள்ளது. ஒவ்வொரு நிமிடமும் எனது தரம் உரைத்துப் பார்க்கப்படுகிறது. ஆகவே நான் பக்குவமடைவதற்கு இவளே காரணம். நான் இவளுக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். இவளை ஒரு கண்ணாடியாகக் கருதினால் அதில் என் முகத்தைப் பார்த்து என் ஆளுமையை நான் சிறிது-சிறிதாகச் சீராக்கிக் கொண்டேன். ஆரம்பத்தில், வீட்டை ஓடிவிடலாம் என்றுதான் நான் பலமுறை நினைத்தேன். அது சுலபமானது. அவ்வாறு ஓடிப்போகாமல் இருந்தது நல்லதாகப் போயிற்று.''

ஆகவேதான் சந்நியாசி ஆவதை நான் சுலபமான வேலை என்கிறேன். எந்த விதத்திலாவது மனக்குறை-உடற்குறை உடைய வர்கள், பலகீனமானவர்கள் பரிதாபகரமான நிலையில் இருப்பவர்கள், சுய அறிவு குறைந்தவர்கள், இவ்வாறு தாழ்ந்த ரகத்தினவர்கள் சந்நியாசியானால் பிரச்சினையை எதிர்கொள்ள வேண்டியதில்லை என்று வீட்டைவிட்டு ஓடுகிறார்கள்.

இதனால் எச்சரிக்கையடைந்த புத்தர் தன்னிடம் வந்து துறவறம் கேட்பவர்களின் எண்ணிக்கையைக் குறைக்க இரண்டு நிபந்தனைகள் விதித்தார்.

1) சொத்து திவாலானவனுக்கு சந்நியாசம் தரமுடியாது. ஏனெனில் வறுமையிலிருந்து தப்பிக்கவே சிலர் சாமியாராகின்றனர்.

2) மனைவியை இழந்தவனுக்கு அடுத்த ஓராண்டிற்கு சந்நியாசம் தரமுடியாது. ஏனெனில் சோகத்தின் தீவிரத்தால் சிலர் சாமியாரா கின்றனர்.

அப்படியானால் அவர்களது வாழ்க்கை உறுதியாக வேரூன்றி இருக்கவில்லையா? அல்லது இதுவரை வேரே இறங்காமல்தான் வாழ்ந்தார்களா? காற்று சற்று வேகமாக வீசினாலும் சாய்ந்து விடக்கூடிய அளவு பலகீனர்களா? வாழ்க்கையில் வீசும் புயல்கள் அழிவின் சின்னங்கள் இல்லை. உன்னை உருவாக்கும் சின்னங்கள். வாழ்க்கையில் ஏற்படும் அதிர்ச்சிகள் உனது ஆளுமையைப் பக்குவப்படுத்த உதவும் வாய்ப்புகள்.

ஒரு குயவர் பானைகள் செய்து கொண்டிருந்தார். களிமண் உலர்ந்ததும் பானைகளை நெருப்பில் வைத்துச் சூடேற்றிக் கொண்டிருந்தார். ஒரு பானை கத்தியது: 'என்னை நெருப்பில் தள்ளாதே. ஏன் அப்படிக் கொடுமைப்படுத்துகிறாய்?' பாவம், அந்தப் பானைக்கு நெருப்பிலிடுவதால்தான் தான் பக்குவப்படுகிறோம் என்று தெரியவில்லை. களிமண் பானையாக இருக்கும்வரை அதை உபயோகிக்க முடியாது. குயவர் அதன்மீது இரக்கம் கொண்டு நெருப்பில் காய வைக்காவிடில் அச்செயல் கருணையாகிவிடாது. அது பானைக்குச் செய்யும் துரோகமாகும். பானை அழுதாலும் அலறினாலும் குயவர் அதை நெருப்பில் வாட்டத்தான் போகிறார். ஏனெனில் தனக்கு எது நன்மை என்பதை ஈரப்பானை அறிந்திருக்க வில்லை.

நெருப்பில் வாட்டாமல் பானை கெட்டிப்பட முடியுமா? உலராத பானையில் தண்ணீர் நிரப்பிவைக்க முடியுமா? அந்தத் தண்ணீர் உலர்ந்த, சூடேற்றப்பட்ட பானையில் வைக்கப்படும் தண்ணீர் போல் குளிர்ச்சியாக இருக்குமா? கச்சா நிலையில் உள்ள பானையில் தண்ணீர் ஊற்றினால் மொத்தப் பானையும் கரைந்துவிடும்.

இதேபோல் மரபுவழி சந்நியாசிகள் பதப்படாத பானை போன்றவர்கள். வாழ்க்கையைவிட்டு ஓடியவர்கள். பிரச்சினைகளை எதிர்த்து நின்றவர்களில்லை. என் கண்ணோட்டத்தில், உலக வாழ்க்கை என்னும் நெருப்பில் சோதிக்கப்பட்டுதான் உண்மையான சந்நியாசி தோன்றுகிறார்.

என்னிடம் வந்து சிலர் கேட்கிறார்கள்: "நீங்க சிலரை சந்நியாசி என்று குறிப்பிடுகிறீர்கள். அநியாயமாக இருக்கிறதே! அவர்கள் இன்னமும் தங்கள் வீட்டிலேதானே வசிக்கிறார்கள். மனைவி-பிள்ளை களுடன் வாழ்கிறார்கள். கடைவைத்து வியாபாரம் செய்கிறார்கள் அல்லது பலவிதமான தொழில்களில் ஈடுபட்டுள்ளார்கள். இதுவா சந்நியாசம்?"

நியாயமான கேள்விதான். நூற்றாண்டுகளாக மக்கள் குறிப்பிட்ட வகையான வாழ்க்கை முறையைத்தான் சந்நியாசம் என்று நினைக்கிறார்கள். இந்த பரம்பரைக் கண்ணோட்டம் வேரூன்றிவிட்டது. இந்த அடிப்படையில் லட்சக்கணக்கானவர்கள் சந்நியாசி

ஆகியிருக்கின்றனர். ஆனால் இதனால் தர்மம் (அறம்) என்னும் மலர் பூத்துக் குலுங்கவில்லையே.

நான் சந்நியாசம் அளிப்பது எல்லாவற்றையும் விட்டு ஓடுவதற்காக அல்ல. எல்லாவற்றையும் பற்றிய விழிப்புப் பெறுவதற்காக. ஆகவே எந்தச் சூழ்நிலை கடினமாகத் தோன்றுகிறதோ அங்கே நீ காலை அழுத்தமாக ஊன்றி நில், ஓடிவிடாதே. இந்த உலகம் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றது. உன்னை அழகாகக் காட்டும்வரை அப்படியே நில். பிறகு சந்நியாசி ஆகு. நெருப்பிலிருந்து (சூளையிலிருந்து) விலகி நில்லாதே. 'நீ பக்குவமடைந்து விட்டாய்' என்று அறிவிக்கும்வரை பொறுமையாக நெருப்பில் இரு. பிரச்சினைகளின் நெருப்பில் நீ அடிபட்டுப் பக்குவப்பட்டபின் சந்நியாசம் பெறலாம். அதுகூடத் தேவையில்லை. உனக்கு அந்த சமயம் துறவு மனப்பான்மை தானாகவே உண்டாகியிருக்கும்.

மரபுவழி சந்நியாசம் வாழ்க்கைக்கு எதிரானது, விரோதமானது, வாழ்க்கையுடன் முரண்படுவது. அது எதிர்மறையானது. அதில் ஏமாற்ற உணர்வும் சோர்வும் நிறைந்திருக்கிறது. நான் தரும் மந்திரம் வாழ்க்கையை சௌபாக்கியம் (பெரும்பேறு) என்று உன்னை நினைக்க வைக்கும். அது வாழ்க்கையை இறைவன் அளித்த பிரசாதம் என்று உணரவைக்கும். சந்நியாசி பாடக்கூடாது என்று யார் சொன்னது? நீ பாடு-உரத்த குரலில்!

**துன்பம் குரலை உடைக்கிறது**
**ராகம்-தாளம் பொருந்தவில்லை**
**பொறுமை இழக்க நேர்கிறது**
**ஆயினும் பாடுக தொடர்ந்து!**

**இன்பம் குரலை மறிக்கிறது**
**உடலில் ரோமம் சிலிர்க்கிறது**
**மனம் மெய்ம்மறந்து லயிக்கிறது**
**ஆயினும் பாடுக தொடர்ந்து!**

**மரணம் ஒருநாள் வந்துவிடும்**
**பிறகு நடப்பது யார் அறிவார்?**
**அதற்கா நீ அஞ்சுகிறாய்?**
**ஆயினும் பாடுக தொடர்ந்து!**

**சுற்றிலும் செழிப்பான சூழ்நிலையில்**
**வாழ்க்கை நடத்திவரும் நீ**
**எங்கும் வெறுமையாய் உள்ளதாக**
**நினைப்பினும் பாடுக தொடர்ந்து!**

பொய் கம்பீரம் தேவையில்லை, வாய்விட்டுச் சிரி. உரக்கப் பாடு, சுதந்திரமாக ஆடு. எல்லாம் கடவுளின் தயவென்று ஏற்றுக்கொள்.

மரபுவழி சந்நியாசம் கடவுளுக்கு எதிரானது. 'கடவுள் படைத்த உலகை ஏற்கமாட்டோம். புறக்கணித்து ஓடுவோம்' என்கிறார் முற்கால சந்நியாசி. மேலும் அவர், 'கடவுளே, நீ தரும் உலகு குறையுடையது. அந்த மாயை என்னும் வலையில் என்னைச் சிக்கிக்கொள்ளச் செய்தாய்' என்று புகார் தொடுக்கிறார். அவரிடம் சுயசிந்தனை இல்லை கடவுள் உலகத்தில் மாயையின் ஆதிக்கத்தைப் புகுத்தியுள்ளார் எனில், அதற்கு நியாயமான காரணமிருக்கும்; அதற்கான தேவை இருக்கும். நீ உன்னைக் கடவுளைவிட அதிக புத்திசாலி என்று முடிவுகட்டாதே. அவரது படைப்பை நீ பேரதிர்ஷ்டமாகக் கருதி ஏற்றுக் கொள். பாடியபடி அதற்கு, வரவேற்புக் கொடு. துன்பம் நேரிட்டுள்ளதா? சோகமான பாட்டைப் பாடு. மகிழ்ச்சியான சூழ்நிலையா? சந்தோஷமான பாட்டைப் பாடு. எந்நிலையிலும் பாடுவதன் மூலம் உணர்ச்சியை நெறிப்படுத்திப் பக்குவம் பெற முடியும். பாடுவது ஒரு பிரார்த்தனையாக மாறும். கடவுளின் கோயிலை நோக்கி குதூகலமாய் துள்ளிக்குதித்துச் செல்; ஆடியபடி செல். சோகமாகவும், கவலையுடன் முகத்தைத் தொங்கப் போட்டபடியும் நீ கோயிலுக்கு வருவதைக் கடவுள் விரும்பமாட்டார்.

நீ சாமியார்கள் இருக்குமிடம் சென்று பார். உலக மக்களின் அறியாமைக்காக அவர்கள் மீது பரிதாபப்படுவதுபோல் சாமியார்கள் சோகமான பார்வையுடன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். அதை மக்கள் கருணைப் பார்வை என்று தவறாக நினைக்கிறார்கள். எனவே தான் இந்த சாமியார்களின் பக்கத்தில் நீண்ட நேரம் உட்கார முடிவதில்லை. மக்கள் அவர்களை அவசரமாக வணங்கிவிட்டு ஓடிவிடுகிறார்கள். சாமியாரைத் தரிசிப்பதைப் பெரிய புண்ணியமாக வர்ணிப்பவர்கள் அவருடைய காலைத் தொட்டு வணங்கியதும் கம்பி நீட்டி விடுகிறார்கள்! ஏதாவது கட்டாயம் காரணமாக நீ ஒரு சாதுவின் பக்கத்திலேயே இருபத்து

நான்கு மணி நேரம் இருக்க நேர்ந்தால், அந்த அழுத்தம் தாங்காமல் நீ அவர் கழுத்தை நெரித்து விடுவாய் அல்லது உன் கழுத்தை நெரித்துக் கொண்டு தற்கொலை செய்து கொள்வாய்!

கடுமையான விரத வாழ்க்கை நடத்துவதாக இந்த சாமியார்கள் சொல்வதால் இவர்கள் வசிக்குமிடம் பாலை நிலத்தையோ, மயானத்தையோ நினைவூட்டுவதாக இருக்கிறது. புழுக்கமான காற்று. அங்கே பூக்கள் மலர்வதில்லை, பாட்டு பிறப்பதில்லை, வாழ்க்கையின் ஆரோக்கியமான உல்லாசம் இல்லை. அத்தகைய சாமியார் வாழ்வின் உண்மையைத் தேடுபவரில்லை, அதை அழிப்பவர்.

நீ அவர்களைப் புறக்கணி. பாடு. ஆடு. நன்றி உணர்வால் நிரம்பிவழி. 'வாழ்க்கையில் எனக்கு நிறையச் சோதனைகளாகிய பரீட்சைகள் வைத்தாய். அவற்றை ஏற்றுக்கொள்வேன், கடப்பேன். பக்குவப்பட்ட பிறகுதான் உன் வாசலுக்கு வருவேன். நீ என்னை அனுப்பி சோதனைகளுக்கு உள்ளாக்கியமைக்கு ஏதேனும் காரணம் இருக்கும். ஆகவே அவற்றை பூர்த்தி செய்யாமல் நடுவிலே ஓடிப்போவதற்கு என்ன உரிமை இருக்கிறது?' என்று கூறி உன்னை உறுதி செய்துகொள்.

கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசித்தது 'ஓடாதே, நில்!' என்பதுதான். மக்கள் பகவத்கீதை ஓதுகிறார்கள். இதுதான் அதன் மையக் கருத்து என்று அறியாதவர்களாய் இருக்கிறார்கள். பரமாத்மா இந்த பாரதப் போர் மூளச் செய்தார் அது சரியான காரணத்திற்காகவே இருக்கும். இதை நம்பு. அவரது நோக்கத்திற்கு உன்னை சமர்ப்பித்து விடு. போர்க்களத்தில் இறங்கு. எதிரியுடன் மோது. முடிவு எதுவாயினும் கடவுள் கொடுத்ததாக ஏற்றுக்கொள். நீ அவர் கையில் ஒரு கருவி மட்டுமே. தனிப்பட்ட முறையில் குறுக்கிடாதே. 'நான் போரிடாமல் ஓடிப்போய் சாமியார் ஆவேன்' என்று அறிவித்துக் கடவுளின் நோக்கத்தைச் சேதப்படுத்தாதே.

அர்ஜுனன் சாமியாராக விழைகிறான்: 'போரில் வென்று அரச வாழ்க்கை நடத்துவதில் என்ன சாரம் இருக்கிறது? என் உறவினர்களையும் நண்பர்களையுமா நான் கொல்ல வேண்டும்? நான் போர் மைதானத்தைவிட்டு வெளியேறிக் காட்டுக்குப் போகிறேன். மரத்தடியில் அமர்ந்து தியானம் செய்வேன். சமாதிநிலையை அடைவேன்' என்று புலம்புகிறான்.

கிருஷ்ணன் அவனை உள்ளே இழுக்கிறார். 'காட்டுக்குப் போகவேண்டாம். போர் செய்ய ஆரம்பி. கடவுள் உன்னைக் கொண்டு எதை நிறைவேற்றிக் கொள்ள விரும்புகிறாரோ அதைச் செய்யவிடு. செய்பவன் நீ என்ற மனப்பான்மையை வளர்க்காதே. உன் வாழ்க்கைக்கு நீ சாட்சியாகிவிடு. நீ நடுவில் குறுக்கிடாதே' என்று சமாதானம் செய்கிறார்.

ஒரு கிராமத்தில் ராமாயண (ராம்லீலா) கூத்து. போர்க்களத்தில் லட்சுமணன் மயக்கமாய்க் கிடக்கிறார். மூர்ச்சை தெளிவிக்க ஒரு குறிப்பிட்ட மூலிகை வேண்டும். அதைக் கொண்டுவர ஹனுமார் அனுப்பப்படுகிறார். அவரால் குன்றில் சரியாகக் கண்டுபிடிக்க முடியவில்லை. குன்றையே (அட்டையாலான மலை) பெயர்த்து எடுத்து வருகிறார். அவரை மேலேயிருந்து ஒரு கப்பி (உருளை) மூலம் மேடைக்கு இறக்குவதற்காக ஓர் ஆள் ஏற்பாடு. பாதி இறங்குகையில் கப்பியில் கோளாறு. எதிலோ சிக்கிக்கொண்டது. ஹனுமார் பாதியில் தொங்குகிறார். ராமாயணக் கூத்தும் பாதியில் நிற்கிறது! கூத்து பார்க்க வந்தவர்கள் ஹனுமாரைப் பார்த்து இறங்குமாறு கத்தினார்கள். கிராமக் கூத்தானதால் திரைச்சீலை கிடையாது. திரையிருந்தாலாவது அதை மூடி ஹனுமாரை மற்ற பாத்திரங்கள் இறக்கி விடலாம்.

கடைசியில், வேறு வழியின்றி, கப்பி இயக்குபவன் ஹனுமார் தொங்கிக் கொண்டிருந்த கயிற்றை அறுத்துவிட்டான். பலத்த ஓசையுடன் அட்டை மலையுடன் ஹனுமார் மேடையில் விழுந்தார். ராமன் பாத்திரக்காரர் வசனத்தில் உள்ளபடி, "ஹனுமான், மூலிகையைக் கொண்டு வந்துவிட்டாயல்லவா?" என்று கேட்கிறார். பணிவுடன் கைகூப்பி 'ஆம் பிரபு' என்று சொல்லாமல் "போய்யா, பெரிய மூலிகை பற்றி விசாரிக்க வந்துட்டாரு. போயி வைத்தியரைக் கூட்டிட்டு வாங்க. என் கால் எலும்பு முறிஞ்சிடுச்சு போல இருக்கு," என்று ஹனுமார் காட்டமாகப் பதிலளிக்கிறார்.

ஹனுமார் பாத்திரக்காரர் அதற்குரிய வசனத்தைப் பேசாமல் தன்னை முன்னிலைப்படுத்தியதால் அன்றைய ராமாயணக் கூத்து கேலிக்கூத்தாகி விட்டது.

கடவுள் உனக்கு எம்மாதிரியான வாழ்வை அளித்திருக்கிறாரோ அதை அப்படியே ஏற்றுக்கொள். நீ உன்னை நடுவில் இழுக்காதே. இந்த அங்கீகரிப்பைத்தான் நான் ஆத்திகம் என்று கூறுகிறேன்.

இவ்வாறு உன்னைக் கடவுளின் விருப்பத்திற்கேற்ப சமர்ப்பித்துக் கொண்டே போனால் ஒரு கட்டத்தில் உனக்கும் கடவுளுக்கும் நடுவில் எந்த இடைவெளியும் இருக்காது. ஏனென்றால் அவர் உன்னை எப்படி ஆட்டுவிக்கிறாரோ அதன்படித்தான் நீ இயங்குகிறாய். இந்நிலையில் உனக்கென்னு தனியாக நீ எதுவும் கேட்பதில்லை. அவ்வாறு கேட்காததால் ஏதாவது கிடைக்கவில்லை என்ற புகாருக்கு இடமில்லை. கடவுளை நினைத்து, 'நீங்கள் என்னைத் தப்பாகச் செயல்பட வைத்து விட்டீர்கள். எதிர்காலத்தில் திருத்தம் செய்யுங்கள்' என்று நீ சொல்ல வேண்டியிராது.. கடவுளின் விருப்பத்தை நீ பரிபூரணமாக ஏற்றுக் கொண்டுள்ளாய். இந்த சுபவேளையில் நீ கடவுளுடன் இணைந்து விடுகிறாய். அப்போது உன் தனித்தன்மை அழிந்து நீ பரமாத்மாவின் அம்சமாகிப் போகிறாய். கடவுளுடன் இணைவதை மகிழ்ச்சியுடன் பாட்டுப் பாடியபடி மேற்கொள்ள வேண்டும். பரம்பரை சந்நியாசிபோல் சோகமாகக் கடவுளை நோக்கிச் செல்லாதே.

கடவுளை அறிய முடிந்தவர்கள் அவ்வாறு அறிவதற்கு முன்னால் வாழ்க்கையில் நடைபெற்ற அனைத்தையும் அவசியமான நிகழ்ச்சிகள் என்றே கூறுவார்கள். அவை நடைபெறாமல் கடவுளை அணுகியிருக்க முடியாது என்பது அவர்களுக்குத் தெரியும். அந்த இணைப்பு நேரிடுவதற்கு முன்னால் வாழ்க்கையில் பட்ட கஷ்டங்களும் சரி, சுகமும் சரி, எல்லாமும் கட்டாயம் நிகழவேண்டும் என்னும் நிபந்தனை உள்ளது. நண்பர்கள் மட்டுமல்ல, எதிரிகள் ஏற்படுவதும் வாழ்க்கைக்கு அவசியமானதாகும். காரணமின்றி எதுவும் ஒருபொழுதும் வாழ்க்கையில் நிகழ்வதில்லை. இந்த புனிதமான அங்கீகரிப்பை நான் சந்நியாசம் என்கிறேன் இதையே மந்திரோப தேசமாகக் கொள்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! வாழ்க்கையின் ஆழத்தை உறுதியாக அறிந்தவர்களில் சிலர் தெய்வமே சக்தி வாய்ந்தது என்றும், வேறு சிலர் கடினமான உழைப்பும் இடைவிடாத முயற்சியுமே சக்தி வாய்ந்தது என்றும், மற்றும் சிலர் இரண்டுமே பலம் வாய்ந்தவைதாம் என்கின்றனர். ஏன் அப்படி? இவ்விஷயத்தில் ஏன் கருத்தொற்றுமையில்லை?**

**வா**ழ்க்கையின் ஆழத்தை அறிந்தவர்கள் அதை வெளிப் படுத்துவதில்லை. ஏனெனில் வாழ்க்கையின் ஆழத்தில் அறியப்படுவதைக் கரைக்கு மேலே கொண்டுவந்து சொற்களால் அறிமுகப்படுத்த முடியாது. நாம் அறிந்ததை எல்லாம் வெளியே சொல்ல முடிவதில்லை. சொற்கள் குறுகலான எல்லைக்குட்பட்டவை. எனினும் வாழ்க்கையின் ரகசியத்தை அறிந்தவர்கள் சொற்களைப் பயன்படுத்துகிறார்கள். ஆனால் முழு சத்தியத்தையும் அவர்கள் கூறிவிட்டதாக நினைக்காதே. நீ எந்த அளவிற்குப் பக்குவப் பட்டிருக்கிறாயோ அதைக் கருத்தில் கொண்டுதான் தாங்கள் அறிந்ததில் ஒரு பகுதியை அவர்கள் உனக்குச் சொல்கிறார்கள்.

மகாவீரர், புத்தர், அஷ்டாவக்ரர் ஆகியோர் பரம சத்தியத்தை முழுமையாக அறிந்தவர்கள். ஆனால் அவர்கள் உபதேசிக்கும்போது அந்த சத்தியத்திற்கு முதலிடம் கொடுக்காமல் உபதேசம் கேட்கின்ற உன்னைக் கருத்தில் கொள்கிறார்கள். உனக்குப் புரியாதபடி பேசினால் அந்தப் பேச்சினால் பயன் ஏதுமில்லை. உனக்குப் புரியக்கூடிய அளவு மட்டுமே உபதேசிக்கிறார்கள். அஷ்டாவக்ரரின் உபதேசம் கிடைக்கப்பெற்ற ஜனக மகாராஜா, கிருஷ்ணரிடம் கீதை கேட்ட அர்ஜுனனிடமிருந்து வித்தியாசமானவர். கேட்பவர் ஜனகராயிருந்தால் கிருஷ்ணன் சுலபமான கீதைக்குப் பதிலாக அஷ்டாவக்ர கீதையை உபதேசித்திருப்பார். கேட்பவர் அர்ஜுனனாயிருந்தால் அஷ்டாவக்ரர் தனது கடினமான கீதையை உபதேசிக்காமல் பகவத்கீதையைத்தான் உபதேசித்திருப்பார். ஞானிகள் தமக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லித் தருவதில்லை. கேட்பவரின் கிரகிக்கும் ஆற்றலின்படிதான் எதையும் சொல்லுவார்கள்.

உனக்கு காய்ச்சல். மருத்துவரிடம் செல்கிறாய். அவர் தான் படித்த வைத்திய சாஸ்திரத்தில் உள்ளதை எல்லாம் உன் எதிரே ஒப்பிக்க மாட்டார். உன் நோய் அளவிற்கு மட்டும்தான் ஆலோசனை வழங்குவார். அவர் தரும் மருந்துச்சீட்டு (பிரிஸ்கிரிப்ஷன்) உன் நோயுடன் மட்டும்தான் சம்பந்தப்பட்டதாக இருக்கும். மருந்து விவரமெல்லாம் மருத்துவர் இத்தனை ஆண்டுகள் பெற்ற மொத்த அனுபவத்தின் அடிப்படையில்தான் அமைந்த போதிலும் அவை உன் உடல்நலத்துடன் மட்டுமே சம்பந்தப்பட்டவை. அவர் அதே மருந்துகளைத்தான் காய்ச்சல் வந்த எல்லோருக்கும் கொடுப்பார் என்று

நீ எண்ணாதே. உன் வீட்டிலும் யாருக்கும் காய்ச்சல் வந்தால் அதே மருந்துச் சீட்டை உபயோகிக்கலாம் என்றும், மருத்துவரிடம் போக வேண்டாமென்றும் முடிவு கட்டாதே. அந்தச் சீட்டு உன்னை மையமாக வைத்து, உனக்கென்றே தனியாக எழுதப்பட்டது. தற்செயலாக அதே மருந்துகள் ஒன்றிரண்டு பேரை குணப்படுத்தலாம். ஆனால் பெரும்பாலான மருந்துகள் சம்பந்தப்பட்டவரைத் தவிர மற்றவர்களின் உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும்.

ஒருவன் ஒரு ஞானியிடம் உபதேசம் கேட்க வந்திருக்கிறான் என்று வைத்துக்கொள். அவன் திமிர்பிடித்தவன் (அகங்காரி) என்றும் வைத்துக்கொள். அவனுக்கு ஞானி 'ஏற்கெனவே நிச்சயித்த தலைவிதியின்படிதான் எல்லாம் நடக்கிறது. அதை மனித முயற்சியால் மாற்ற முடியாது' என்று பொருள் படும்படியான உபதேசம் செய்வார். அகங்காரி அதிர்ச்சியடைவான், யோசிப்பான். 'நான்தான் கர்த்தா, நான்தான் எல்லாம் செய்பவன் என்று நினைத்தேனே. என் மூலம் தலைவிதிதான் செயல்படுகிறதா?' என்ற அடக்கம் ஏற்பட்டு அவனது அகங்காரம் குறையும்.

சரி, உபதேசம் கேட்பவன் சோம்பேறி என்று வைத்துக் கொள்வோம். மந்தமானவன் கை-கால் அசைக்க விரும்பாதவன். 'நடப்பது நடந்தே தீரும். நான் தலையிட்டு என்ன செய்ய முடியும்?' என்று சொல்லி, சும்மா உட்கார்ந்திருப்பவன். ஞானி அவனுக்குச் செய்யும் உபதேசம் இப்படியிருக்கும்-'எழுந்திரு. உழைக்காமல் எதையும் பெற முடியாது. ஏதாவது செய். இப்படி உட்கார்ந்தபடியே வாழ்க்கையை வீணடித்துக் கொள்ளாதே. வாழ்க்கையில் கொஞ்சமாவது சுறுசுறுப்புக் காட்டு. உனக்குள்ளேயிருக்கும் சக்தியை விழிப்புறச்செய். உட்கார்ந்தபடியே இருந்தால் கடவுள் வசப்படமாட்டார். எழுந்து தேடு. யாத்திரை மேற்கொள்.'

'ஆமாம், தலைவிதிப்படிதான் எல்லாம் நடக்கும்' என்று அவனுக்கு உபதேசித்தால், 'நான் நினைத்ததும் அதுதான்' என்று கூறி அவன் முன்பைவிடச் சோம்பேறியாகி விடுவான். 'நான் ஏற்கெனவே இந்த ஞானம் பெற்றவன்தான். குடும்பத்தினர்தான் முட்டாள்தனமாக என்னைச் சீண்டிக்கொண்டே உள்ளனர். வேலைக்குப் போ என்று விரட்டுகிறார்கள். தொழிலில் ஈடுபடுமாறு தொந்தரவு செய்கிறார்கள். நான் அசைந்து கொடுக்கவில்லை' என்று பெருமைப்படுவான்.

ஜப்பானிய சக்கரவர்த்தி ஒருவர் மகாசோம்பேறி. ஒருநாள் படுத்தபடியே அவர் யோசிக்கலானார்: 'நானோ அரசன். எவ்வளவு சோம்பேறியாக நான் இருந்தாலும் என்னை எவரும் குறைகூற முடியாது. பாவம், மற்ற சோம்பேறிகள் என்ன செய்வார்கள்? ஒவ்வொருவரும் தங்களைப் போன்றவர்களுக்கே உதவி செய்வது வழக்கம். சோம்பேறியான நான் மற்ற சோம்பேறிகளுக்கு ஏதாவது வகையில் உதவ வேண்டியது என் கடமை.'

இவ்வாறு நினைத்த சக்கரவர்த்தி தண்டோரா போட்டு அறிவித்தார்: 'இந்த நாட்டிலே எத்தனை சோம்பேறிகள் உள்ளனரோ அவர்கள் அனைவரும் அரண்மனைக்கு வந்துவிடுங்கள். அரசாங்கத்தின் சார்பில் எல்லோருக்கும் உணவும், தங்க இடமும் தரப்படும்.'

மந்திரிகள் திடுக்கிட்டார்கள். "அரசே! இந்த அறிவிப்பு ஆபத்தானது. நாடு முழுவதிலுமிருந்து ஏராளமானவர்கள் இலவச உணவு, இலவச இருப்பிடம் பெறுவதற்காகத் தங்களைச் சோம்பேறிகள் என்று கூறிக்கொண்டு இங்கே குவிந்து விடுவார்கள். அவர்களில் உண்மையான சோம்பேறி யார் என்பதைக் கண்டுபிடிப்பது கடினம்," என்று எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

"யார்-யார் சோம்பேறி என்பதைக் கண்டுபிடிக்கும் வேலையை நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். சோம்பேறிகளுக்கு என் அரசாங்கம் அடைக்கலம் கொடுக்கும். அவர்களிடம் என்ன தப்பு? கடவுள்தானே அவர்களை அப்படிப் படைத்துவிட்டார். தங்கள் தேவைகளை பூர்த்தி செய்ய முடியாத அளவிற்கு சோம்பேறியாக உள்ளனர். ஆகவே அவர்களைக் கவனித்துக் கொள்ளவும் யாராவது வேண்டுமல்லவா? அந்தப் பொறுப்பை நான் எடுத்துக் கொள்கிறேன்," என்று சக்கரவர்த்தி உறுதியாகக் கூறிவிட்டார்.

அமைச்சர்கள் பயந்தபடியே ஆயிற்று. நூற்றுக்கணக்கானவர்கள் தங்களைச் சோம்பேறிகள் என்று கூறிக் கொண்டு அரண்மனை வாசலை வந்தடைந்தார்கள். இவர்களில் பெரும்பான்மையானவர்களை ஏதாவது உபாயம் செய்து விரட்டிவிட வேண்டும் என்று அமைச்சர்கள் முடிவு செய்தனர். அரசனது பிடிவாதத்தை நேர்வழியில் மாற்ற முடியாதென்று அவர்களுக்குத் தெரியும்.

வந்தவர்களெல்லாம் நகருக்கு வெளியே புதிதாக அமைக்கப் பட்ட குடிசைகளில் தங்கவைக்கப்பட்டனர். நள்ளிரவில் அமைச்சர்கள் அந்தக் குடிசைகளுக்குத் தீ வைத்துவிட்டனர். வந்தவர்களில் நாலு பேரைத்தவிர மற்றவர்கள் தங்கள் கிராமங்களுக்கு ஓடிவிட்டனர். அந்த நால்வரும் கம்பளம் போர்த்திக் கொண்டு சுகமான தூக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். மற்றவர்கள் 'நெருப்புப் பிடித்து விட்டதைச் சொல்லி எழுப்பியும் அவர்கள் 'தூக்கத்தைக் கெடுக்காதீர்கள்' என்று கோபித்துப் புரண்டு படுத்தனர். அமைச்சர்கள் அவர்களை அதட்டி எழுப்பி அரசரிடம் அழைத்துச் சென்றனர். உயிர் போவதற்கே பயப்படாதிருந்த அந்தச் சோம்பேறிகளுக்கு ஆயுள் முழுதும் உணவு, உடை, இருப்பிடம் இலவசமாகத் தரப்பட்டது.

ஒவ்வொரு தனி நபருக்கும் அவரது சுபாவத்துக்கு ஏற்ற உபதேசத்தை ஞானி வழங்குகிறார். ஆகவே அவருடைய சொற்கள் தனி நபருக்கான மருந்துகள் போன்றவை. இதனால்தான் புத்தர் தன்னை ஞானி என்று கூறாமல் வைத்தியர் என்றே பலமுறை கூறியுள்ளார். குருநானக்கும் தன்னைப் பற்றி அவ்வாறே அறிவித் துள்ளார். 'நான் சிந்தனையாளன் இல்லை. உனக்கு வந்துள்ள நோய்க்கு நான் சிகிச்சையாவேன்' என்கிறார்.

அர்ஜுனன் தப்பித்து ஓட விரும்பினான். எதுவும் செய்யா மலிருக்க விரும்பினான். கிருஷ்ணன் அவனை விடவில்லை. போருக்குள் இழுத்தார். கடமை இருக்கும்போது ஓடிவிடக் கூடாது என்று கண்டித்தார்.

ஜனகரோ விதேக நாட்டின் சக்கரவர்த்தி. அவர் எதுவும் செய்ய வேண்டுமென்றோ, செய்யாமலிருக்க வேண்டுமென்றோ யாரும் கட்டாயப்படுத்த முடியாது. சக்கரவர்த்தியாக உள்ளவரின் மனத்தில் இயல்பாகவே அகங்காரம் இருக்கும். சட்டென்று வெளியில் தெரியாமல் சூட்சுமமாக இருக்கும். அவர் ஒன்றும் செய்யாவிடினும் அவரது திட்டப்படியே அரசாங்கம் இயங்குகிறது என்பதை அவர் அறிவார். 'நான் இல்லாமல் போனால் இந்த நாடு என்ன ஆகும்? சூரியன் அஸ்தமிப்பதுபோல் எங்கும் இருண்டுவிடாதா?' என்று அவர் நினைப்பார். ஒரு பிச்சைக்காரன் தனக்குப் பின்னால் என்ன ஆகும் என்று நினைக்க மாட்டான். பதவியோ, வேறு பலமோ பெற்றிருப்பவர்

தனக்குப் பின் தனது இடத்தில் யார் வருவார் என்று யோசிப்பார். அதைப் பற்றி பின்னால் வருபவர் கவலைப்பட்டுக் கொள்ளட்டும் என்று விட்டு விடுவதில்லை. தான் உலகைவிட்டுச் செல்லும்முன் பிற்காலத்திற்கு நான்தான் ஏதாவது ஏற்பாடு செய்துவிட்டுப் போகவேண்டும் என்று அந்த பிரமுகர் நினைப்பார். உயில் எழுதிவைக்க முடிவு செய்கிறார். ஏழை உயில் எழுதமாட்டான். பிறருக்கு விட்டுச்செல்ல அவனிடம் எதுவுமில்லை.

ஜனகரிடம் நுணுக்கமான முறையில் அகங்காரம் இருந்திருக்கும். உள்ளத்தின் ஆழத்தில் புதைந்து போயிருக்கும். ஆனால் மருத்துவரின் கண்களை ஏமாற்ற முடியாது. அவருடைய கண்கள் எக்ஸ்-கதிர்கள்போல் உள்ளே ஊடுருவிப் பார்த்துவிடும். குருவின் பார்வையும் அவ்வளவு கூர்மையானது. அது உன் ஆழ்மனதுவரை பிரவேசிக்கும். உள்ளத்தைப் பிளந்து பார்க்கும்.

அஷ்டாவக்ரர் தமது கீதையில் ஜனகருக்குத் தனிப்பட்ட முறையில் உபதேசிக்கிறார். அவரவர் நோய்க்குரிய மருந்தும் சிகிச்சையும் இதில் உண்டு. ஆனால் தவறான அர்த்தம் எடுத்துக் கொண்டால் விபரீதமான விளைவுகள் உண்டாகும். அகங்காரத்தைக் குறைப்பதற்காக 'எல்லாம் விதிப்படியே நடக்கும், செய்பவர் நாமல்ல' என்ற உபதேசத்தைச் சோம்பேறி தனக்குப் பொருத்தமானதென்று எடுத்துக் கொள்ளக் கூடாது. 'நானும் அப்படித்தான் நினைத்தேன்' என்று கூறினால் அவனது வாழ்க்கையில் நரக இருள்தான் படரும்.

இந்தியாவில் இந்த நிலைமைதான் பரவியது. தலைவிதிக் கோட்பாடு ஓர் அபூர்வமான கண்ணோட்டம் ஆகும். ஆனால் அது இந்தியாவை பலகீனப்படுத்தி ஏழை தேசமாக்கிவிட்டது. மக்கள் சோம்பேறியானார்கள். 'கடவுளின் இஷ்டப்படி எல்லாம் நடக்கட்டும். அடிமை தேசமாக வைக்க விரும்புகிறாரா; பிறர் நம் செல்வத்தைக் கொள்ளை கொண்டுபோக அனுமதிக்கிறாரா; பலர் பட்டினி கிடக்கட்டுமா; பஞ்சம் தோன்றட்டுமா எதுவானாலும் சரிதான். நாம் தலையிட்டு என்ன ஆகப்போகிறது?' என்ற கண்ணோட்டம் நம்மிடையே வேரூன்றிவிட்டது.

அஷ்டாவக்ரருடைய சூத்திரங்கள் உன்னைச் சோம்பேறி யாக்குவதற்காக மொழியப்படவில்லை. உன்னை கர்த்தா (செய்பவன்)

என்ற மனப்பான்மையிலிருந்து விடுவிப்பதற்காகவே கூறப்பட்டவை. 'செய்யாதே' என்று அவர் தடுக்கவில்லை. 'செய், நிறையச் செய், ஆனால் செய்பவன் நானல்லன்' என்று நினைக்கச் சொல்கிறார். கர்த்தா மனப்பான்மையைக் கைவிட்டவனும் நிறைய வேலைகள் செய்கிறான். 'அவை கடவுள் இட்ட பணி, நான் கருவி மட்டுமே' என்று கூறியபடி அவன் முடித்துவிட்ட வேலைகளைக் கடவுளுக்கு சமர்ப்பிக்கிறான். தான் செய்துமுடித்த கடமைகளுக்காகப் பெருமையடித்துக் கொள்வதில்லை. 'கடவுளே, என்னைக் கொண்டு நீர் செய்விக்க விரும்பியதைத்தான் நான் செய்தேன்' என்பான்.

நான் சொல்வதைக் கவனி. தலைவிதிக் கோட்பாடு உன்னைச் செயலற்றவனாக, சோம்பேறியாக ஆக்கினால், நீ அதைப் புரிந்து கொள்ளத் தவறிவிட்டாய் என்று அர்த்தம். தலைவிதிக் கோட்பாடு கடமைகளுக்கு முதலிடம் தந்து, கர்த்தா மனப்பான்மையை விரட்டி விட்டால், எல்லாப் பணிகளும் கடவுளுடையவை என்று அவருக்கே சமர்ப்பித்து விட்டால் நீ தலைவிதிக் கோட்பாட்டைச் சரியாகப் புரிந்து கொண்டாய் என்று அர்த்தம். ஆம், அம்பு இலக்கைத் தாக்கிவிட்டது.

வாழ்க்கையின் சாரத்தை உறுதியாக அறிவதற்குக் கடின உழைப்பு, இடைவிடா முயற்சி, தெய்வ சக்தி முதலியவற்றில் எது வலுவானது என்று கேட்டாயல்லவா? அதற்கான பதில் நாம் யாருக்கு ஆலோசனை கூறுகிறோம் என்பதைப் பொறுத்து அமையும்.

கடின உழைப்பையும் விடாமுயற்சியையும் இணைத்து ஆண்மை எனலாம். ஆண்மை என்பது மனத்தைச் சலனமின்றி ஆக்குவது. ஆண்மை எதையாவது யோசித்தபடி இருக்கும் பழக்கத்தை நிறுத்தும். ஆண்மை என்பது மனத்தைச் சுருட்டி எடுத்து அதன் மூலப்புள்ளியில் (தொடங்கும் இடத்தில்) கொண்டுபோய்ச் சேர்ப்பது. மனம் என்னும் மாளிகையிலிருந்து எல்லா நிகழ்ச்சிகளின் நினைவுகளையும் பெருக்கி மெழுகி வெளியேற்றிவிட வேண்டும். மனம் தெளிவானால் நீ உன்னையே தரிசிப்பாய். இந்த முயற்சிகளால் நீ இறந்துவிட மாட்டாய் என்று உறுதியாகக் கூறுகிறேன்.

'ஆண்மை'யிலுள்ள ஆண் என்பது உனக்குள்ளே இருக்கும் ஆன்ம உணர்வைக் குறிப்பிடுகிறது. உன் உடலை ஒரு நகரமாகக் கருதினால் அதன் ஆழத்தில் மறைந்தொளிரும் தீபம் இந்த ஆன்ம

உணர்வு. உன்னை ஒரு குடியிருப்பு (காலனி) என்றும் கூறலாம். நம் உடலில் சுமார் ஏழு கோடி உயிரணுக்கள் உள்ளதாகக் கூறுகின்றனர். அதாவது, மும்பையைவிட பெரிய குடியிருப்பு. ஆகவே உனது உடலின் ஆற்றல் அளவு கடந்தது. அத்தனை கோடி உயிரணுக்களின் நடுவில் மறைந்துதான் ஆன்ம தீபம் ஒளிர்கிறது.

புருஷார்த்தம் அல்லது ஆன்ம உணர்வு என்பது தன்னையே அறிதலாகும். தன்னை அறியவிடாமல் தடுக்கும் அகங்கார உணர்வைச் சாய்த்து வீழ்த்துதல் கட்டாயத் தேவையாகும். தன்னைச் சரியாக அறியாமலேயே தன்னை அறிந்து கொண்டதாய் நினைப்பதுதான் அகங்காரம். நீ உன்னைப் பற்றி மிகையான அல்லது தவறான எண்ணத்தை ஏற்படுத்திக் கொள்வதுதான் அகங்காரம். நான் இத்தகையன், அத்தகையவன், நான் ஹிந்து, நான் பிராமணன், நான் பணக்காரன், சிவப்பு நிறத்தவன், இளமையானவன் என்றெல்லாம் உன்னைப் பற்றி சில மதிப்பீடுகளை ஏற்படுத்திக் கொண்டு விட்டாய். ஆனால் நீ எவனுமே இல்லை! இளமை வந்து நீங்குகிறது. முதுமை வந்து, கழிந்து, உன் வாழ்வும் முடிந்து விடுகிறது. ஆனால் நீ, அதாவது, உன் ஆத்மா, அப்படியே நீடிக்கிறாய். நீ கறுப்புமில்லை, சிவப்புமில்லை. தோலின் நிறம் எதுவானாலும் அது ஆத்மாவிற்கு வெளிப்புறம் அமைந்துள்ளது. தோலின் நிறம் பாதிப்பு ஏற்படுத்த முடியாத அளவு ஆழத்தில் ஆத்மா உள்ளது.

தோல் இயல் அறிஞர்கள் சிவப்பு அல்லது வெண்மைக்கும் கறுப்பிற்குமிடையே சிறிதளவே வித்தியாசம் உள்ளது என்கின்றனர். உடல் நிறத்தை மாற்றிக்கொள்ள ஊசிமருந்து விரைவில் கண்டுபிடிக்கப்பட்டு விடும். இதன் மூலம் நீக்ரோக்களும் வெள்ளையர் ஆகிவிடுவார்கள்!

தோலின் நிறம் உடலின் உள்ளே ஊடுருவிச் செல்வதில்லை. உள்ளே இருக்கும் ஆத்மா எதனாலும் பாதிக்கப்படாமல் ஒரே நிலையில் இருக்கிறது. உடலுக்கு ஏற்படும் நோயோ, உடல் பெறும் ஆரோக்கியமோ ஆத்மாவைத் தொடுவதில்லை. வெளியிலிருந்து வரும் எவ்வித அலையும் ஆத்மாவை ஈரமாக்குவதில்லை. கடலின் மேற்பரப்பில்தான் அலைகள் எழுகின்றன. ஆழத்தில் அலைகள் கிடையாது. ஆத்மா இருக்குமிடம் ஆழத்திலும் ஆழமான பகுதி.

பசிபிக் மாகடலின் ஆழத்தைவிட* ஆழத்தில் உன் ஆத்மா (புருஷ்) ஒளிந்திருக்கிறது.

தலைவிதியையும் நான் முன்பு குறிப்பிட்டதற்குக் காரணம் அதன்மூலம் அளவுகடந்த மன இறுக்கத்தைக் குறைத்துக் கொள்ளலாம். பயணம் செய், தேடு, ஆனால் படபடப்பாக இராதே. அதிகமாக அலட்டிக்கொண்டு எதற்கும் முயற்சி செய்யாதே. உழை, ஆனால் அப்போது கவலையுடன் இருக்காதே.

உதாரணமாக, ஓவியர் படம் வரையும்போது நீ அருகில் அமர்ந்து பார். குழந்தை விளையாடுவதுபோல் அவரும் சிரமமின்றி வரைகிறார். எந்த இறுக்கமும் கிடையாது. எப்போது ஓவியம் முழுமை பெறும்; முழுமை பெறுமா பெறாதா; விற்குமா-விற்காதா; யார் வாங்க முன்வருவார்கள் ஆகிய எதைப் பற்றியும் ஓவியர் கவலை கொள்வதில்லை. அந்த அளவிற்கு அவர் வரையும் செயலில் லயித்துவிடுகிறார். வரைவதேகூட ஒரு பூரணமான பணியாகி விடுகிறது. முயற்சியே லட்சிய நிலைக்கு உயர்ந்து விடுகிறது. அப்போது ஓவியரே காணாமல் போய்விடுகிறார்!

இதனால்தான் தலைசிறந்த ஓவியர்கள் தங்கள் பணியைப் பற்றிக் குறிப்பிடுகையில் தங்கள் கையில் தூரிகையைப் பிடித்துவைத்து யாரோ அல்லது ஏதோ சக்தி தங்கள் கையை இயக்குவதுபோல் உணர்வதாகக் கூறுகிறார்கள். இதேபோல் மகாகவிகளும் தங்கள் இதயத்தில் அமர்ந்து யாரோ பாடுவது போலவும் அதைத்தான் அவர்கள் கவிதையாக வெளியிடுவதாகவும், தாங்கள் அதை வெளியில் கொண்டுவரும் வாகனம் மட்டுமே என்று சொல்கிறார்கள். தங்களைச் செய்தி கொண்டுவரும் தூதர்கள் மட்டுமே என்கிறார்கள். பேனா எழுதுகிறது. ஆனால் அது தானாக எழுதுவதில்லை. அதைக் கையில் பிடித்து நீதான் எழுதுகிறாய். அவர்கள் ஓவியம் தீட்டும்போது, மாகாவியம் எழுதும்போது களைப்போ, மன இறுக்கமோ உணர்வதில்லை. தூரிகை அல்லது பேனா இறுக்க உணர்வு (டென்ஷன்) அடைவதில்லை அல்லவா? அதேபோல் பரமாத்மாவிடமிருந்து அகத்தூண்டுதல் பெற்று, கலைப்படைப்புகளை உருவாக்குபவர்களும் இறுக்கம் உணர்வதில்லை.

---

* பசிபிக் மாகடலின் ஆழம் 14,040 அடி (4280 மீ)

**ஆ**ங்கில மகாகவிஞர்களில் ஒருவரான கூல்ரிஜ் இறந்தபோது நூற்றுக்கணக்கான கவிதைகளை முடிக்காமல் விட்டுச் சென்றார்.[1] இறப்பதற்கு முன் அவரைச் சந்திக்க வந்த ஒருவர் அத்தனை அரை குறை கவிதைகளையும் எழுதி முடித்திருக்கலாமே என்றார். சில கவி தைகள் முழுமை பெற ஒரு வரிதான் பாக்கி என்பதைச் சுட்டிக்காட்டினார்.

கூல்ரிஜ் தன் இயலாமையை வெளிப்படுத்தினார். "நான் எப்படி இவற்றை பூர்த்தி செய்ய முடியும்? அவர் (கடவுள்)தான் என் கையைப் பிடித்து எழுதி வைத்தார். நடுவில் அவர் நிறுத்திவிட்டால். அவர் எப்போது தொடர்வார் என்று காத்துக் கொண்டிருக்கிறேன். இளைஞனாக இருந்தபோது கவிதை பாதியாக இருந்தால் நானே சொந்தச் சரக்காகச் சேர்த்து வந்தேன் மூன்று வரி கடவுள் எழுத வைத்தால் நான்காவது வரியை சுயமாகச் சேர்த்தேன். காலப்போக்கில், ஒப்பிட்டுப் பார்த்தபோது, நான் எழுதிய வரி மற்ற மூன்று வரிகளுக்குப் பொருத்தம் இல்லை என்பதைக் கவனித்தேன். அந்த மூன்று வரிகள் அபூர்வமானவையாக இருந்தன. என் சொந்த வரியை அவற்றுடன் சேர்த்தால் தங்கப்பொடியில் மண் கலந்ததுபோல், நறுமணத்தில் கெட்ட நாற்றம் கலந்ததுபோல் தோன்றியது. அதன் பின் என் மனத்தில் (கடவுள் மூலம்) உதித்த கவிதை வரிகளுடன் என் வரி எதையும் சேர்ப்பதில்லை. முழுக் கவிதையோ, அரைகுறைக் கவிதையோ எது வந்தாலும் சரி என்று அதன் போக்கில் விட்டுவிட்டேன். சில சமயம் கவிதையில் ஒரு பாதி இப்போது வரும். மறு பாதி வந்துசேர ஆறு மாதம்கூட ஆகியிருக்கிறது! ஆகவே மீதிக் கவிதை எப்போது முடியும் என்பதை எனக்குள் இருந்து எழுதியவனையே கேள்." என்று ஆற்றுப்படுத்தினார்.

**ஆ**ங்கிலத்தில் இன்னொரு மகாகவி இலியட்.[2] அவருடைய கவிதைகள் தெளிவின்மை காரணமாகப் பல்பொருளுடையவை. ஒருவர் அவரிடம் வந்து, "நான் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர். ஒரு குறிப்பிட்ட கவிதையை மாணவர்களுக்கு விளக்குவதற்குத் திணறிப் போகிறேன். அந்த சமயம் எனக்கு உடல் உதறுகிறது நீங்கள் அந்த கவிதையின் அர்த்தத்தை எனக்குத் தெரிவித்தால் நான் வகுப்பில் மாணவர்களைச் சமாளிக்க வசதியாக இருக்கும்." என்று கெஞ்சினார்.

1. Samuel Taylor Coleridge (1772-1834), Author of 'Rime of the Ancient Mariner'. Left 'Christabel' and 'Kubla Khan' incomplete.
2. T.S.Eliot (1888-1965). Author of 'The Waste Land.' Won Nobel Prize.

இலியட் அவரை சமாதானப்படுத்தினார். "இந்த கவிதைக்கான அர்த்தம் முதலில் இரண்டு பேருக்குத் தெரிந்திருந்தது. இப்போது அந்த இருவரில் ஒருவருக்குத்தான் அர்த்தம் தெரியும்," என்று நிறுத்தினார்.

வந்திருந்த பேராசிரியர் நிம்மதிப் பெருமூச்சுவிட்டார். 'நல்லவேளை உங்களுக்காவது அர்த்தம் தெரிந்திருக்கிறதே,' என்றார்.

இலியட் இடைமறித்தார். "நான் அப்படி எங்கே சொன்னேன்? முதலில் அர்த்தம் தெரிந்திருந்த இரண்டு பேர் கடவுளும் நானும்தான். ஆனால் இப்போது நான் அதன் அர்த்தத்தை மறந்துபோய்விட்டேன். ஆகவே அதன் அர்த்தம் கடவுளுக்குத்தான் வெளிச்சம். கடவுள்தான் இக்கவிதையை என் காதுகளில் ஓதினார். அப்போது இதன் அர்த்தம் காதுகளில் வெள்ளம் போல் நிரம்பியது. என் ஒவ்வொரு ரோமமும் அர்த்தத்தை அறிந்திருந்தது. என் ஒவ்வொரு மூச்சுக்கும் அர்த்தம் அறிமுகமாகியிருந்தது. பல வருஷங்களாகிவிட்டன. இக்காலகட்டத்தில் நான் அங்குமிங்குமாக மிதந்தேன், மாறிப்போனேன். ஆகவே அந்தப் பாட்டின் பொருள் கடவுளுக்கு மட்டுமே தெரியும். நீங்கள் மனபூர்வமாக அவரிடம் பிரார்த்தனை செய்து அர்த்தம் விசாரியுங்கள். பிரார்த்தனையில் லயித்திருக்கும்போது கடவுள் உங்களுக்கு அர்த்தத்தை வெளிப்படுத்தக்கூடும்," என்று நம்பிக்கையூட்டி அனுப்பிவைத்தார்.

மகாகாவியம் (பெருங்காப்பியம்) என்பது எங்கிருந்தோ மாமழைபோல் இறங்கிவருவது. மகாகவி சிரமப்பட்டு, கட்டாயப்படுத்தி கவிதையைத் தனது வாழ்க்கையில் இழுத்துக்கொண்டு வருபவனல்லன். இறுக்கம் இல்லாததால்தான் ரவீந்திரநாத் டாகுரின் முகத்தில் அருள் தெரிகிறது. அவரது கருத்து வெளிப்பாட்டில் உபநிடதங்களின் தாக்கம் உள்ளதால் அவர் முகத்தில் சாந்தம் பிரதிபலிக்கிறது. அவரைக் கவிஞர் என்பதைவிட முனிவர் (ரிஷி) என்று கூறுவது அதிகம் பொருந்தும். அவரிடமிருந்து வெளிவந்தவை அவருடையவை அல்ல; வேறு யாரோ உள்ளேயிருந்து பாடியவையே அவை. வேறு யாரோ வீணையின் தந்திகளை மீட்டியிருக்கிறார்கள். ரவீந்திரநாதர் அதிகபட்சம் ஒரு சாதனமாகவே இருந்திருக்கிறார். வீணையை மீட்டிய விரல்களும் அவருடையவை அல்ல. அறிய

முடியாத யாரோ ரவீந்திரநாதர் என்கிற வீணை ஒலிக்கச் செய்திருக்கிறார்.

உடல் படபடப்பும் மன இறுக்கமும் இல்லாத உழைப்பு என்பது குறிப்பிட்ட பலனை வற்புறுத்தாததாக இருக்கும். இக்கணம் உன் கையிலிருக்கும் பணியை முழுமையான லயிப்புடன் செய்கிறாய் என்று அர்த்தம். அப்பணி முழுமை பெற வேண்டுமென்று கடவுள் விரும்பினால் அவ்வண்ணமே அது நிறைவு பெறும். அது பாதியிலேயே நின்றுவிட வேண்டுமெனக் கடவுள் விரும்பினால் இப்படியே நடக்கும். பலன் கிடைத்தால் சரி, பலன் கிடைக்காவிடிலும் சரி. அது பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை.

பலனைப் பற்றி அலட்டிக் கொள்ளாமல் செயல் புரிகையில் மனத்தில் இறுக்கம் இராது. மன இறுக்கம் நீங்கினால் கர்த்தா மனப்பான் மையும் போய் 'நின் செயல் செய்து நிறைவு பெறுவோம்' என்று எண்ணுவோம். கர்த்தா நீங்கினால் அகங்காரம் சரிந்துவிடும்.

தலைவிதிக் கோட்பாட்டின் சாரம்: எல்லாம் கடவுள் செய்கிறார்-செய்விக்கிறார் என்பதுதான். இதை மூன்றுவிதமான உரைகல் கொண்டு மதிப்பிடலாம்.

1. செயல் புரிகிறாய், செய்பவன் நீ என்றும் நினைக்கிறாய்—நீ அகங்காரம் பிடித்த மனிதன்.

2. செயல் புரிவதில்லை. ஆனால் செய்யக்கூடியவன் என்ற அகம்பாவம் உள்ளது—நீ அஷ்டாவக்ரரை ஓரளவே புரிந்து கொண்டுள்ளாய்.

3. தொடர்ந்து செயல் புரிகிறாய். ஆனால் செய்பவன் நீ அல்லன் என்று நினைக்கிறாய்—நீ அஷ்டாவக்ரரைச் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறாய்.

என்னிடம் சிலர் வந்து, 'அவர் (கடவுள்)தான் எல்லாம் செய்கிறார் என்றால் நாம் ஏன் எதுவும் செய்ய வேண்டும்?' என்று கேட்கிறார்கள். இந்தக் கேள்வியிலிருந்தே அவர்கள் தங்களை கர்த்தாவாகத்தான் நினைப்பது புலனாகிறது. முதலில் நீ செய்தாய். இப்பொழுது நீ செய்வதில்லை. ஆனால் நீ ஒரு கர்த்தா என்னும்

எண்ணம் உனக்குள் உறுதியாக இருக்கிறது. ஆனால் விஷயம் புரிந்தவன், 'செய்வதும் செய்யாமலிருப்பதும் நம் கையில் இல்லை. நடப்பது நடந்தே தீரும். அதில் நாம் முட்டுக்கட்டை போடமாட்டோம். நடப்பவற்றுடன் ஒத்துழைப்போம், சேர்ந்து நீந்துவோம்,' என்பார்கள்.

சில சமயம் எவனாவது ஒருவன் நடுநிலைமையில் இருக்கக்கூடும். அவன் உழைத்து முயலுவதையும் நம்புவான், தலைவிதியையும் ஒப்புக் கொள்வான். சமநிலையில் உள்ள அவன் சத்குருவிடம் சென்றால், அவர் இரண்டுமே இருப்பதும் சரிதான் என்பார். ஏதாவது ஒன்றை வைத்துக்கொள் என்றால் சமநிலை குலைந்து அவன் தடுமாறுவான்.

**பு**த்தரிடம் ஒருவன் வந்து 'கடவுள் உண்டல்லவா?' என்று கேட்டான். 'கடவுள் இல்லை' என்று புத்தர் பதிலளித்தார். மதியம் இன்னொருவன் வந்து புத்தரிடம் 'கடவுள் என்று ஒருவர் இருக்க முடியுமா?' என்று கேட்க, அவர் கடவுள் உண்டு என்று கூறிவிட்டார். மாலையில் இன்னொருவன் வந்து 'கடவுள் உண்டா, கிடையாதா?' என்று கேட்க, புத்தர் மௌனமாக இருந்துவிட்டார்.

புத்தருடன் எப்பொழுதும் இருக்கும் முதன்மைச் சீடரான ஆனந்தன் இதையெல்லாம் பார்த்துக் குழம்பினார். இரவு புத்தர் தனியாக இருக்கையில் ஆனந்தன் கேட்டார்: "என்னைக் குழப்பிப் பைத்தியமாக்க வேண்டும் என்று முடிவு செய்து விட்டீர்களா?" உங்களிடமிருந்து விளக்கம் பெறாமல் என்னால் இன்றிரவு தூங்க முடியாது. காலையில், 'கடவுள் இல்லை' என்றீர்கள். தெளிவாகச் சொல்லி விட்டீர்கள் என்று சந்தோஷப்பட்டேன். மதியம், 'கடவுள் உண்டு' என்றீர்கள். எதை நம்புவது என்று திகைத்தேன். மாலையில் இதே கேள்வி எழுந்தபோது, நீங்கள் முடிவாக என்ன சொல்கிறீர்கள் என்றறிய ஆவலாக இருந்தேன். நீங்களோ மௌனம் சாதித்து விட்டீர்களே."

புத்தர் சமாதானம் சொன்னார்: "ஆனந்தா, அவற்றில் எந்த பதிலும் உன்னை மனத்தில் கொண்டு கூறப்படவில்லையே. என்னிடம் வந்து கேட்டவர்கள் மனத்தில் ஏற்கெனவே என்ன நினைக்கிறார்கள் என்று ஊகித்து அவர்களது நம்பிக்கையைச் சோதிப்பதுபோல் பதில் சொன்னேன். அது அவனது ஆர்வத்தைத் தூண்டிவிடும்."

"முதலில் வந்தவன் 'கடவுள் உண்டல்லவா?' என்று கேட்டதால் அவன் ஏற்கெனவே கடவுள் உண்டென்ற முடிவிற்கு வந்திருக்கிறான். ஆனால் அவன் தேடாமல், கண்டு பிடிக்காமல், முயலாமல், தியானம் முதலியவை செய்யாமல், உழைக்காமல், கடவுள் உண்டென்று முடிவு செய்திருக்கிறான். அவனது நம்பிக்கை போலியானது, கடன் வாங்கப்பட்டது. அவனது ஆத்திகம் மேலோட்டமானதால் அதை உலுக்குவதுபோல் 'கடவுள் இல்லை' என்றேன்.

"இரண்டாமவன் 'கடவுள் என்று ஒருவர் இருக்கமுடியுமா?' என்று கேட்டதால் அவன் நாத்திகன் என்பது தெளிவு. ஆனால் அவனது ஆன்மிக முயற்சிகள், ஆன்மிகப் பயணம் தடைப்பட்டு விட்டன. யாரோ சொன்னதைக் கேட்டு, கடவுள் இல்லை என்பவனிடம் அதை நிரூபிக்க ஆதாரங்கள் இல்லை. அவனது போலியான நம்பிக் கைக்கு அதிர்ச்சி வைத்தியம் தரவேண்டியது அவசியமாகிவிட்டது. அவனை சுயமுயற்சி, சுயமாகத் தேடி கண்டுபிடித்தல் என்னும் பாதைக்குக் கொண்டு வருவதற்காக அவனிடம் 'கடவுள் உண்டு' என்றேன்.

"மூன்றாமவன் 'கடவுள் உண்டா, இல்லையா?' என்று கேட்டதால் அவனுக்கு எந்தக் கருத்துமோ, நம்பிக்கையோ கிடையாது என்பது தெளிவு. அவன் தேடி அறிய, தேடி அடைய வந்திருக்கிறான். அவனை ஆன்மிகப் பயணம் மேற்கொள்ளத் தூண்டுவது என் கடமை. நான் கடவுள் உண்டென்றாலும், இல்லையென்றாலும் அவன் அப்படியே ஏற்றுக்கொண்டு போய்விடுவான். எந்த விதமான ஆன்மிக முயற்சியும் செய்யமாட்டான். அதைத் தடுக்கவே நான் எந்தப் பதிலும் கூறாமல் மௌனமாக இருந்துவிட்டேன்."

புத்தர் தொடர்ந்து கூறினார்: "சில குதிரைகளை அடித்தாலும் நகராமல் சண்டித்தனம் செய்யும். சில குதிரைகளை அடித்து அதட்டினால் ஓட ஆரம்பிக்கும். வேறு சில தரமான குதிரைகளும் உண்டு. சவுக்கை உயர்த்திக் காட்டினாலே போதும். அடிக்கவோ, அதட்டவோ வேண்டியதில்லை. சவுக்கைக் கூட அவை திரும்பிப் பார்ப்பதில்லை. சவுக்கின் நிழலைப் பார்த்ததுமே கிளம்பிவிடும்."

"வார்த்தை என்னும் சவுக்கு மூன்றாவதாக வந்தவனுக்குத் தேவைப்படவில்லை. மௌனமாக இருந்தால் போதும். அவன்

என்னைப் பார்த்தான். அவனுக்கு விஷயம் புரிந்துவிட்டது. மௌனம் மூலமே நான் நினைத்ததை வெளியிட்டேன். அவ்வாறே அதை அவன் புரிந்தும் கொண்டான். சொற்கள் நடுவில் குறுக்கிடவில்லை. மத சம்பந்தமான விளக்கம் நடுவில் வரவில்லை. மொழியை உபயோகிக்கவே இல்லை. இதயங்கள் இணைந்தன. ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டோம். அவனும் விஷயத்தைப் புரிந்து கொண்டான். அவன் புரிந்து கொண்டதை நானும் உணர்ந்து கொண்டேன். ஆனந்தா, நான் சொன்னவையெல்லாம் அந்த மூவருடன்தான் சம்பந்தப்பட்டவை இவற்றில் எதுவும் உனக்கான பதில் அல்ல."

இதை நீ புரிந்து கொண்டால், மகாபுருஷர்களின் உபதேசங் களில் தெரியும் முரண்பாடுகள் மேலோட்டமானவை என்பதைத் தெரிந்து கொள்வாய். பிறகு மகாவீரர், புத்தர், கிருஷ்ணர், ஜரதுஸ்திரர், இயேசுநாதர் முதலியவர்களின் வசனங்களில் முரண்பாடு தெரியாது. வெவ்வேறு வகையான சீடர்களுக்கு வெவ்வேறுவித உபதேசங்கள் தேவைப்பட்டன. நோயாளிகள் வேறுபட்டால் மருந்துகளும் வேறுபடுமல்லவா?

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஆத்மஞானிகள் சுகம், துக்கம் ஆகிய உணர்ச்சிகளால் பாதிக்கப்பட மாட்டார்கள் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அவர்களும்கூட மற்றவர்களின் சுகத்தால் மகிழ்ச்சியும், துக்கத்தால் வருத்தமும் அடைவார்களல்லவா?**

அப்படியில்லை. எவருடைய சுகம்-துக்கம் என்கிற அனுபவங்கள் நீங்கிவிட்டனவோ அவர் மற்றவர்களின் சுக துக்கங்களால் பாதிக்கப்படுவதில்லை. இதை நீ புரிந்துகொள்வது கடினம்தான். ஞானி பிறருடைய சுக துக்கங்களால் தாமும் அவ்வாறே உணர்வார் என்று நீ இதுவரை நினைத்து வந்திருப்பாய். ஆனால் ஞானியோ சுகம்-துக்கம் என்று எதுவும் கிடையாது என்பார். உன் சுக துக்கங்களைக் கண்டு அவருக்கு உன்மீது கருணை பிறக்கிறது. நீ இன்னும் கனவுலக வாழ்க்கையிலேயே நீடிக்கிறாயே என்று அவர் உன்மீது அனுதாபம் கொள்கிறார்.

ஓர் அறையில் இருவர் தூங்குகின்றனர். இருவரும் நரகம்போல் துன்பம் தரும் கனவுகளில் ஆழ்ந்துள்ளனர். ஒருவன் விழித்துக் கொள்கிறான். அவனுக்குக் கனவில் அனுபவித்த துன்பம் எந்த பாதிப்பையும் உண்டாக்காது. மற்றவன் கனவின் விளைவாக இன்னமும் உளறுகிறான், 'என் நெஞ்சின் மேல் யாரோ ராட்சசன் உட்கார்ந்து அழுத்துகிறான்' என்று கத்துகிறான். இதைப் பார்த்து முதல் ஆள் துக்கப்படுவானா? இரண்டாமவன் மீது இரக்கப்பட்டுச் சிரிப்பான். கனவு கண்டு கத்துகிறான் இந்தக் கிறுக்கு என்று நினைப்பான். எந்த ராட்சசனும் இல்லாத நிலையில் முதலாம் ஆள் என்ன செய்ய முடியும்?

ஒரு வழிதான் உள்ளது. முதலில் விழித்தவன் இரண்டாமவனைத் தட்டி எழுப்புவான். அவனது துன்பத்தை நீக்க அல்ல. அவனது துன்பம் போலியானது என்பதை அவன் உணரச் செய்யவே எழுப்புகிறான். உதாரணமாக, புத்தர் நீ துன்புறுவதைப் பார்த்தால் அவர் உன் துன்பத்தை அங்கீகரிக்க மாட்டார். ஏனெனில் பொதுவாக துக்கம் என்பது கிடையாது என்று அவர் கருதுகிறார். ஒரு நிகழ்ச்சியை துக்கமென்பதை பிரமை என்பார். நீ கயிற்றைப் பாம்பென நினைத்துப் பதறி ஓடுவதைப் பார்த்து அவர் விளக்கு எடுத்து வருகிறார். 'இந்தாப்பா, கொஞ்சம் நில், பாம்பு என்று நீ ஓடிய பொருளை விளக்கு வெளிச்சத்தில் பார்' என்பார். அப்போதுதான் நீ சரியாகக் கவனித்து, கயிறெனத் தெரிந்து, சிரிக்கத் தொடங்குகிறாய்.

ஞானி உன் இன்ப துன்பங்களால் பாதிக்கப்படுவதில்லை. உன் இன்பம் கண்டு சிரிப்பவர், துன்பம் கண்டு வருந்துபவர் உன்னைப் போன்ற சாதாரண மனிதராகத்தான் இருப்பார். ஞானி உன் அறியாமையை நினைத்து உன்னிடம் அனுதாபம் காட்டுவார். அது அவர் உன் மீது காட்டும் உணர்ச்சியே தவிர, நீ இன்பம் துன்பம் என்று வகைப்படுத்துவதை அவர் ஆதரிக்கவில்லை.

விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தை பொம்மையின் கால் உடைந்ததற்காக அழுகிறான். அதைப் பார்க்கும் நீயும் வருத்தப்பட்டுப் பக்கத்தில் உட்கார்ந்து அழுவாயா? நீ சொல்வாய், "குழந்தாய், இது நிஜ மனுஷனில்லே, வெறும் பொம்மைடா. விளையாடச்சே இதன் கால் உடையத்தான் செய்யும். இது நிஜக் காலும் இல்லை. இதுக்கு போய் அழறியே." நீ சொல்வது அவனுக்குப் புரிகிறதோ, இல்லையோ, ஒரு

விஷயம் உனக்குத் தெரியும். அவன் வளருவான். கொஞ்சம் முதிர்ச்சி வரும். பொம்மைகளை மறந்துபோவான். அவற்றை எங்காவது வீசியும் விடுவான். பிறகு திரும்பிப் பார்க்க மாட்டான். இப்பொழுது சின்ன வயது, பாவம், அப்பாவியாக இருக்கிறான். இதேபோல் ஞானியும் நீ கூறும் சுகம்-துக்கம் என்பவை கனவுலக அனுபவங்கள் தாம் என அறிந்திருக்கிறான்.

**நிழலை நிஜமெனத் தொடாதே மனமே!**
**உனது துன்பம் இருமடங்காகும்**
**பொருளும் புகழும் உண்மையல்ல**
**மானம்-கௌரவம் மனத்தின் மாயை**
**எவ்வளவுக்கெல்லாம் அவை பெற அலைந்தாயோ**
**அவ்வளவிற்கு நீ பிரமையில் இருந்தாய்**
**நிஜத்தைப் பின்பற்றுதல் கடினமாயினும்**
**பூஜைபோல் லயித்து ஈடுபடு அதனில்**

உன் எல்லா துக்கமும் வெறும் நிழலே. அவை பொய்யானவை, மாயை. புத்தர் போன்றவர்களுக்கு, சமாதிநிலை வாய்க்கப் பெற்றவர்களுக்கு எது யதார்த்தம் என்று தெரியும். ஆனாலும் அவர்கள் உன்மீது கருணை காட்டுகிறார்கள். நீ அறியாமை உறக்கத்தில் ஆழ்ந்துள்ளாயே என்று வருந்துகிறார்கள். அவர்களும் முன்பொரு காலத்தில் அறியாமை உறக்கத்தில் இருந்தமையால் அதன் பாதிப்பை அவர்கள் அறிவார்கள். அவர்களும் துக்கத்தால் ஒரு காலத்தில் துடித்திருக்கிறார்கள், துவண்டிருக்கிறார்கள், அழுதிருக்கிறார்கள்.

ஞானியும் ஒரு சமயம் பொம்மைகள் வைத்து விளையாடியிருக்கிறான். அவற்றிற்குக் கல்யாணம் செய்து களித்திருக்கிறான். அவை உடைந்தால் அழுதிருக்கிறான். சிரமப்பட்டு சீட்டுக்கட்டுச் சீட்டுகளை கோபுரம்போல் அடுக்கியிருக்கிறான். அவை காற்றில் கலையும்போது கண்ணீர் விட்டிருக்கிறான். வளர்ந்து சிந்தித்து ஞானம் பெற்றதால் அவன் உன்மீது அனுதாபம் காட்டியபோதிலும் உன் குழந்தை மனப்பான்மை நீங்காததைக் கண்டு அவனுக்குச் சிரிப்பு வருகிறது. உன் எதிரே சிரிக்க மாட்டான்தான். ஆறுதலாகத் தட்டிக் கொடுப்பான். 'பாவம்' என்று வருத்தம் தெரிவிப்பான். ஆனால் மனத்துக்குள் புன்னகை செய்வான்.

நீ அழுகின்ற சிறுவனை சமாதானப்படுத்துகிறாய்: "அழாதே, தம்பி! கால்தானே உடைந்தது. மீதிப் பொம்மை அப்படியே உள்ளாதே. அந்த மீதி இனி பிரயோஜனமில்லையா? அது கடவுளின் வீட்டுக்குப் போய்விட்டதாக நினைத்துக்கொள். அதோ பார். சாமியின் மடிமேல் உன் பொம்மை ஜோராக உட்கார்ந்திருக்கிறது; சந்தோஷமாகக் காணப்படுகிறது. உனக்குப் புது பொம்மை கொண்டு வருகிறேன்" இப்போது மனத்துக்குள்ளேயே நீ சிரிக்கிறாய் அல்லவா?

ஞானி உனக்குத் துன்பத்தில் அனுதாபம் காட்டுகிறார். அவருக்கு அது அவருக்கு ஒரு நாடகம் மட்டுமே. உன் வேதனை கொஞ்சம் தணியட்டும் என்பதற்காக மென்மையாகப் பேசுகிறார். அதேசமயம் நீ ஞான விழிப்புப் பெற வேண்டும் என்பதற்காக முயற்சி எடுத்துக் கொள்கிறார். எல்லாத் துன்பங்களும் மாயையே, அவை நிழல் மாத்திரமே என்பதை நீ அறிந்து கொண்ட பின்னர்தான் நீ துன்ப வளையத்திலிருந்து வெளியே வர முடியும்.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! எனக்கு ஞான விழிப்பு அதிகமாகிவரும் இந்த சமயம் என் மென்மை உணர்வும் நான் உணர்ச்சிவசப்படுதலும் அதிகரிக்கிறது. இந்த இரண்டின் இடையே உள்ள ஒருவகை மோதலை என்னால் தாங்க முடியவில்லை.**

**பார்வையற்றவள்போல் பலமுறை நான்**
**பாதையில் தடுக்கி விழுகின்றேன்**
**ஓஷோ வழி காட்டிடுவீர்!**

**ஆ**ம், விழிப்பு நிலையின் வளர்ச்சியுடன் சேர்ந்து உணர்வுகள் கூர்மை பெறுதலும் அதிகரிக்கிறது. பொதுவாக நாம் புகை மண்டலம் சூழ்ந்தது போன்ற நிலையில் இருக்கிறோம். ஒருவிதமான மயக்கத்தில் ஆழ்ந்துள்ளோம். நமது நிலை கள் குடித்துவிட்டுச் சாக்கடையில் கிடப்பவனின் நிலையை ஒத்துள்ளது. அவன் சாக்கடை நாற்றத்தை உணர்வதில்லை. 'பாவம்' என்று நீ அவனைப் பற்றி நினைப்பாய். அவனோ சாக்கடையில் சந்தோஷமாகக் கிடக்கிறான். தான் அரசனாகி மாளிகையில் வசிப்பது போன்ற இனிய கனவுகளில் மூழ்கிக் கிடக்கிறான்.

சகதியில் விழுந்து கிடக்கும் அவனைச் சுற்றிச் சாக்கடைத் தண்ணீர் ஓடுகிறது. அதை உணராமல் அவன் போதையில் உள்ளான். நாற்றத்தை அறியக் கொஞ்சமாவது சுற்றுப்புற உணர்வு வேண்டும். போதை தெளிந்ததும் அவன் தன் நிலை கண்டு பதறி, தன்னை ஓரளவு சரிசெய்து கொண்டு வீட்டுக்கு ஓடுவான். குளித்துவிட்டு, சந்தனம் பூசிக்கொண்டு, பூஜை முதலியவை செய்து முடித்து, வரவேற்பறையில் வந்தமர்வான். நீ அவனிடம், "கொஞ்ச நேரம் அந்த சாக்கடையில் மறுபடியும் படுத்துவிட்டு வா," என்று சொன்னால் ஒத்துக்கொள்ள மாட்டான். ஏனென்றால் இப்போது அவனுடைய புலன்கள் விழிப்புடன் இருக்கின்றன; சூழ்நிலையைத் துல்லியமாக உணர்கின்றன.

வாழ்க்கையில் விழிப்புணர்வு அதிகரித்தால், இதுவரை நீ சுத்தமான நீரோடைகளென நினைத்தவை உண்மையில் நாற்றமடிக்கும் கழிவுநீர் என்பதை அறிந்து கொள்வாய். நீ சுகம் தருபவை என நினைத்த பெரும்பான்மையான இன்பங்கள் உண்மையில் துன்பம் தருபவை என்பது புரியவரும். அவை உன்னை முள்ளாகத் துன்புறுத்தும். ஆகவேதான் விழிப்புணர்வு அதிகமாகும்போது உடல் உணர்வுகளும் மென்மைப்படுகின்றன.

இது பயணத்திலிருக்கும்போது உணரப்படுகின்ற நிலை. விழிப்புணர்வு பூரண நிலையை நெருங்க-நெருங்க, மனிதனின் ஜடத்தன்மை அகன்று விடுகிறது. நுண்ணுணர்வு அதிகரிக்கிறது. அடுத்த தாவலில் விழிப்புணர்வு முழுமையாகிவிடும் என்னும் நிலையில் உன் உடலும் உள்ளமும் பிரிந்து விலகுகின்றன. பிறகு நுண்ணுணர்வுகளால் சிரமமோ, துக்கமோ இருக்காது. முள் குத்தினால் தெரியும். ஆனால் முன்பளவு வலியிருக்காது.

விழிப்பை நெருங்கியதும் இதுவரை தப்பிதமாக வாழ்ந்தமை உன்னை உறுத்தும். உன் மீதே உனக்கு கோபம் வரும் இப்படியா இதுவரை வாழ்ந்தேன் என்று, உன்மீது உனக்கு வெறுப்பு எழும். ஆனால் பயப்படாதே, பின்வாங்காதே.

**இதயம் சுருங்கினால் அங்கே**
**சோகத்தை நிரப்ப முடியாது**
**கதவைத் தட்டாமலே வலி**
**திரும்பிச் சென்றுவிடும்**

**அதிர்ஷ்டம் அதிகம் உள்ளவனே**
**அதிகக் கஷ்டம் அனுபவித்திருப்பான்**
**வேதனை தனது மடியில் அமர்த்தி**
**எல்லோரையும் கொஞ்சுவதில்லை**
**புண்ணியம் நிறையச் செய்தவன்தான்**
**கண்ணீரால் அதிகம் நீராடியிருப்பான்!**

வலி அதிகமாகும்; வேதனை அதிகமாகும்; கூடவே ஞானமும் வளரும். இவை ஒன்றையொன்று தொத்திவரும். ஒரு கட்டத்தில் கடைசித் தாவலும் நிகழ்ந்துவிடும். நூறு டிகிரியில் தண்ணீர் நீராவியாக மாறுவதைப் போல், உன் ஆன்மிகப் பயணத்தில் கடைசித் தாவல் முடிந்ததும், உன்னுடைய உடலும் மனமும் உன்னைவிட்டுப் பின்தங்கிவிட்டதை உணர்வாய். ஏனெனில் உன் சுக துக்கங்களெல்லாம் உன்னுடைய புலன்களில்தான் நிரம்பியிருந்தன. இப்போது நீ அவற்றைத் தாவிக் கடந்துவிட்டாய். அவற்றிலிருந்து விலகிச் சென்றுவிட்டாய். உடலுடனும் மனத்துடனும் உனக்கிருந்த இணைப்பு-பிணைப்பு எல்லாம் நீங்கிவிட்டது. விடியும் சமயம் தென்படும் அதிக இருள்போல, ஞானத்தை நெருங்கும் நேரம் வேதனைகளும் அதிகரிக்கும்.

சமஸ்கிருதத்தில் வேதனா (வேதனை) அர்த்தமுள்ள சொல். வேதம், வேதனை ஒரே வேர்ச்சொல் கொண்டவை. 'வேத்' என்றால் ஞானம், அறிவு. இன்னொரு விதத்தில் அதுவே துன்பம், வலி என்றும் பொருள் தருகிறது. ஆகவேதான் மெய்யறிவு வளர-வளர, துன்பமும் அதிகம் அறியப்படுகிறது. துன்பம் வளர்கிறதே என நீ பயந்தால், அதை நீக்க ஓர் உபாயம் உள்ளது. உன் மெய்யறிவைச் சுருக்கிக்கொள். அப்படித்தானே தினசரி வாழ்க்கையில் செய்கிறோம். தலைவலி வந்தால் ஆஸ்ப்ரோ மாத்திரை எடுத்துக் கொள்கிறோம். ஆஸ்ப்ரோ உண்மையில் வலியைப் போக்குவதில்லை. இது 'வலிக்கிறது' என்னும் உணர்வை மாத்திரமே மட்டுப்படுத்துகிறது. அது நரம்புகளை உணர்விழக்கச் செய்வதால் வலி நீங்கிவிட்டதாக நமக்குத் தோன்றுகிறது. மனைவி இறந்துவிட்டாளா? கள் குடி! சொத்து திவாலாகிவிட்டதா? கள் குடி! அந்த நிகழ்ச்சிகளின் நினைவைக் குறை. வேதனையும் சிறிதுகாலம் தணியும். பிறகு பழைய தீவிரம் வராது.

பெரும்பான்மையான மக்கள் இம்மாதிரியான ஆபத்தான உபாயத்தையே பின்பற்றுகிறார்கள். வாழ்க்கையில் இயற்கையாகவே துன்பம் அதிகம். துன்பம் பற்றிய அறிவை (நினைவை) குறைக்கக் குறுக்கு வழி தேடுகிறார்கள். இதில் இழப்பே அதிகம். ஏனெனில் புத்தி வளர்ச்சியைத் தடுத்தால் உனது புத்தத் தன்மை வளராது; புத்தர்போல் ஆக முடியாது.

பயப்படாதே. உனக்கு உண்டாகின்ற துன்பத்தை அப்படியே ஏற்றுக்கொள். வேதனையை ஏற்பதைத்தான் நான் தவம் என்னும் பெயரால் அழைக்கிறேன். என்னைப் பொறுத்தவரையில் தவம் என்பது பட்டினி கிடப்பதோ, வெயிலில் சுற்றிலும் நெருப்பு மூட்டி நடுவில் நிற்பதோ, குளத்தில் கழுத்துவரை மூழ்கி நிற்பதோ தவமல்ல. இவை அறியாமை காரணமாக மேற்கொள்ளப்படுகின்றன. ஞான வளர்ச்சியும் வேதனையும் ஒரு கட்டம்வரை சேர்ந்து வருகின்றன. இந்த வேதனையை ஏற்றுக்கொண்டு பயணத்தைத் தொடர்ந்தால், திடீரென்று ஞானம் ஒரு தாவலில் வெகுதூரம் சென்றுவிடும். வேதனை பின்தங்கிவிடும். பாம்பு தனது வளர்ச்சிக் கட்டத்தில் இடையே தனது பழைய தோலமைப்பிலிருந்து வெளியேறிவிடும். இதுபோலவே ஒரு காலத்தில் வேதம் (மெய்யறிவு) வேதனையைவிட்டு வெளியேறிவிடும்.

நடுவில், பயணத்தில், பாதையில் வேதனை தவிர்க்க முடியாது. தவிர்க்கவும் வேண்டாம். உனக்கு முழுமையாக ஞான விழிப்பு ஏற்பட உதவுகின்ற ஓர் உபாயமாக அதைக் கருது.

நீ சற்று யோசித்துப் பார். நீ சந்தோஷமாக இருக்கும்போது கடவுளை மறந்துவிடுகிறாய். துன்பம் ஏற்படும்போது கடவுளை நினைக்கிறாய். ஆகவே துன்பமும் நம் வாழ்க்கைக்கு உபயோகமானது தான்.

இஸ்லாமின் சூஃபி பிரிவின் துறவி பாய்ஜீத் என்று ஒருவர் இருந்தார். அவர் பிரார்த்தனை செய்கையில், 'பிரபு, என் வாழ்க்கையைத் தங்கள் விருப்பப்படி எப்படி வேண்டுமானாலும் நடத்துங்கள். ஆனால் துக்கமும் சேர்த்துக் கொடுங்கள். எப்போதும் சுகமான சூழ்நிலை அமைந்தால் நான் உங்களை மறந்துவிடுவேன். சிறிதளவு சுகமே போதும். மீதி துக்கமே கொடுங்கள்' என்று கேட்பது வழக்கம். அவர் சொன்னது சரிதான்.

சுகத்தில் தூக்கம் வந்துவிடும். இதனால்தான் நன்கு தூங்குபவனை 'சுகமாகத் தூங்குகிறான்' என்கிறோம். துன்ப சமயத்தில் தூக்கம் வராது. ஆகவே கடவுளை அதிகமாக நினைக்க வாய்ப்புள்ளது.

துன்பமும் அர்த்தம் நிறைந்தது. அதிலும் சாரம் உண்டு. துன்பம் உனக்கு விழிப்புத் தருவதைக் கவனித்தால் நீ அதனிடம் நன்றியுடன் இருப்பாய். முள்களை அநாவசியமாக நினைக்க மாட்டாய். அவை பூக்களைக் காக்கின்றன ஞானப்பூவும் வேதனை முட்களுடன் சேர்ந்ததேயாகும்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! வாழ்க்கையின் சத்தியம் அத்துவைதம் [இரண்டல்ல] என்கிறீர்கள். ஆனால் எல்லாம் இரண்டாக [துவைதம்], பலவாக ஏன் உள்ளது?**

**ஓர் உலகம் உள்ளது கண்ணெதிரே**
**ஒன்றிற்கு மேற்பட்ட உருவமெடுத்து**
**அதுவே இடைவிடாமல் ஆர்ப்பரிக்கிறது**
**மற்றது தனிமையில் மௌனமாய் உள்ளது**
**ஒன்று தொடர்ந்து உற்சாக நடைபோட**
**மற்றது அலையின்றி அமைதியாய் உள்ளது**
**காவியம் ஒன்றுதான் கையில் எனினும்**
**படிக்கலாமே அதை இருவகையாய்**

சத்தியம் என்பது ஒன்றே ஒன்றுதான். அறியாமை என்னும் தூக்கத்தில் உலகம் உண்மையாகத் தெரிகிறது. ஞான விழிப்பு ஏற்பட்டால் எங்கும் பரமாத்மாதான் உள்ளதை உணர்வாய். உலகம், கடவுள் என்று இரண்டு அம்சங்கள் கிடையாது. மேலே கூறியதற்கு எதிர்மறையான நிலையும் சாத்தியமே. தூக்கத்தில் உள்ளவன் கடவுளை தரிசித்தால் உலகைப் பார்க்கிறான் எனலாம். விழித்துள்ளவன் உலகைப் பார்த்தால் கடவுளைப் பார்க்கிறான். அதாவது, உலகமும் கடவுளும் ஒன்றே, தனித்தனியில்லை. இதுவே அத்துவைத நிலை.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் என்னைப் பின்தங்கிவிட்டவனாக நினைக்கிறேன். நீங்கள் மேலும்–மேலும் ஆழமான சிந்தனையில் இறங்குகிறீர்கள். என்னால் உங்களைப் பின்தொடர்ந்து ஆழமாக இறங்க முடியவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் கைகளைப் பிசைந்தபடி இருக்கிறேன். இது எனக்கு இழப்புதானே?**

இழப்பு, இழப்பின்மை என்பது பேராசைக்காரர்களின் மொழி. கவலையை விடு. நான் நடத்துவது ஒரு கொண்டாட்டம். அதில் நீ உற்சாகத்துடன் கலந்து கொள். பேராசைக்காரன் நினைப்பது என்ன? 'என் கண்ணில் படுவதையெல்லாம் சேகரித்துவிட வேண்டும். உலகிலுள்ள எல்லாம் எனக்குக் கிடைப்பதாக! எல்லாம் எனக்கு வசமாக வேண்டும். எல்லாம் எனது பொக்கிஷத்துக்கு வந்துசேர வேண்டும். தனமும் வேண்டும்; தியானமும் வேண்டும். உலகமும் தேவை; கடவுளும் தேவை' இப்படி நீ அளவுகடந்து பேராசைப் பட்டால் உனக்கு நிச்சயமாக இழப்பு ஏற்படும்.

என்னிடம் வருகின்ற உனக்கும் யாருக்கும் நான் எதுவும் தருவதாக இல்லை. உங்களிடம் இருப்பதைப் பிடுங்கிக் கொள்வதுதான் என் திட்டம்! உனக்கு ஏதேனும் ஞானம் போதிப்பதற்காக நான் இங்கே உட்கார்ந்திருக்கவில்லை. மாறாக, நான் நடத்தும் திருவிழா போன்ற கொண்டாட்டத்தில் நீயும் சிறிது நேரம் கலந்துகொள். என்னோடு சேர்ந்து நீயும் பாடு. என்னோடு சேர்ந்து நீயும் சில அடி தூரம் நட. இவ்வளவு நீ செய்தாலே போதுமானது.

அப்போது நீ பரமாத்மாவின் ருசியை–பரமாத்ம அனுபவத்தை–ஒருமுறை பெறுவாய். பிறகு நீ அதை விடமாட்டாய். நான் உயிரோடு உள்ளேனா, இல்லையா என்பது முக்கியமில்லை.

ஆகவே நீ இழப்பு, நஷ்டம், பின்னடைவு என்றெல்லாம் பேசாதே. இவற்றில் நீ மாட்டிக் கொண்டால் நான் நடத்தும் கொண்டாட்டத்தில் நீ பங்கேற்க முடியாமல் போகும். எதையும்

விரும்புதல் தவறில்லை. அது பேராசையுடன் சேர்ந்து கொண்டால், பேராசையாக மாறினால், தவறாகிப் போகும்.

**பூமியில் தவழ கிரணத்துக்கு ஆசை**
**நறுமணம் வீச மொட்டுக்கு ஆசை**
**பூவால் அலங்கரிக்கப்பட கிளைக்கு ஆசை**
**உயிரின் வீணைக்கு ஒலியெழுப்ப ஆசை**

**இன்னிசை பாட பறவைக்கு ஆசை**
**வசந்தத்தை அறிவிக்கத் துளிருக்கு ஆசை**
**மன்மதன் பெயர் ஓத மாருதத்துக்கு ஆசை**
**உயிரின் வீணைக்கு ஒலியெழுப்ப ஆசை**

இப்படி யாரும் நியாயமான ஆசை கொள்ளலாம். அது பேராசையாக மாறுவதிலிருந்து தப்பித்துவிட வேண்டும்.

இக்கணம் நான் இங்கே இருக்கிறேன். நீயும் என்னுடன் இரு. நீ மனத்தில் எந்தக் கணக்கும் போடாதே. ‘இதைப் பாதுகாப்பேன்; இதைப் பிடித்துக் கொள்வேன்; அதை உதறிவிடுவேன்; இது புரிகிறது; அது புரியவில்லை’ என்றெல்லாம் உன்னைக் குழப்பிக் கொள்ளாதே. நான் நடத்தும் திருவிழாவில் கலந்துகொள். நீ என் அருகில் சும்மா உட்கார்ந்திரு. இப்படி அருகருகே அமைதியாக அமர்வதுதான் சத்சங்கம் (நல்லோர் சங்காத்தம்) என்பது. எப்படி ஒன்றை அடைவது; எப்படி ஒன்றைச் சேர்ப்பது என்றெல்லாம் பேராசைப்படுவதை மறந்துவிடு. என்னருகில் இருந்தபடியே நீ காணாமல் போய்விடு. நீ என்பவனே இல்லாதவனாக சூன்யமாகிவிடு. அப்போது என்னுடனான சத்சங்கத்தின் ருசி உனக்குக் கிடைக்கப் பெறுவாய். அந்தச் சுவை உனக்கு எதிர்காலத்தில் கிடைக்கப்போகும் ஆன்மிக ருசியின் ஆரம்ப அனுபவமாக இருக்கும்.

**பூமி முழுதுக்குமாய் புஜம் விரித்தேன்**
**ஆயினும் வானம் அடங்கவில்லை கையில்**
**அறிமுகமான அனைவரையும் அழைத்தேன்**
**என் குரல் கேட்டும் வரவில்லை எவரும்**
**மைல் கல் அதோ பதிக்கப்பட்டுள்ளது**
**ஆனால் எழுத்து அழிந்துவிட்டதே!**

**யாரிடம் கேட்பது எவ்வளவு தொலைவான**
**தூசியால். ஆசி தரும் புனிதப் பாதங்கள்**
**உறைவது எங்கே என யாரைக் கேட்பேன்?**

நான் இதோ, இங்கே எதிரில் இருக்கிறேன். நீ யாரிடமும் எதுவும் விசாரிக்க வேண்டியதில்லை. என்னிடமும் நீ எதுவும் கேட்க வேண்டியதில்லை என்னோடு இரு. என்னுடன் சேர்ந்து பாடு. என் ஆளுமையுடன் உன் ஆளுமையைச் சிறிது நேரம் சேரவிடு.

**ஹரி ஓம் தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்:

காயக்ருத்யாஸஹ: பூர்வம் ததோ வாக்விஸ்தராஸஹ:|
அத சிந்தாஸஹ ஸ்தஸ்மாதேவமேவாஹமாஸ்தித:|| (107)

ப்ரீத்யபாவேன ஸப்தாதேரத்ருஷ்யத்வேன சாத்மன:|
விக்ஷேபைகாக்ரஹ்ருதய ஏவமேவாஹமாஸ்தித:|| (108)

ஸயாத்யாஸாதி விக்ஷிப்தெள வ்யவஹார: ஸமாதயே|
ஏவம் விலோக்ய நியமேவமேவாஹமாஸ்தித:|| (109)

ஹேயோ பாதேயவிரஹாதேவம் ஹர்ஷவிஷாத்யோ:|
அபாவாதத்ய ஹே ப்ரஹ்மான்னேபமேவாஹமாஸ்தித:|| (110)

ஆச்ரமானாச்ரமம் த்யானம் சித்தஸ்வீக்ருதவர்ஜனம்|
விகல்பம் மம வீக்ஷ்யைதைரவமேவாஹமாஸ்தித:|| (111)

கர்மானுஷ்டானமக்ஞாமாத்யதைவோபரமஸ்ததா|
புத்தவா ஸம்யகிதம் தத்வமேவவோஹமாஸ்தித:|| (112)

அசிந்த்யம் சிந்த்யமானோஅபி சிந்தாரூபம் பஜத்யஸௌ|
த்யக்த்வா தத்பாவனம் தஸ்மாதேவமேவாஹமாஸ்தித:|| (113)

ஏவமேவ க்ருதம் யேன ஸ க்ருதார்தோ பவேதஸௌ|
ஏவமேவ ஸ்வபாவோ ய: ஸ க்ருதார்தோ பவேதஸௌ|| (114)

எங்கும் வாழ்க்கையில் சோகம்தான்
வாழ்க்கை என்பது வறண்ட கதை
தொன்மையான துக்கக் கதை
நீரால் நிறைந்த கடலும்கூட
நிரந்தரத் தாகத்தால் தவிக்கிறது
தனிமையில் காதலன் அழுகின்றான்
இரண்டு இதயங்கள் இணைவது

**உலகில் என்றும் பலித்ததில்லை**
**காதலியின் இதழமுதும்**
**கசக்கும் நாள் தொலைவிலில்லை**
**இந்த யதார்த்தம் தெரிந்தவர்கள்**
**மறைக்காதீர் இதை வீணாக**

**மா**னிட வாழ்க்கையைக் கவனமாக ஆராய்ந்தால் அது பாலைநிலத்திற்கு சமமென்பது தெரியவரும். ஒவ்வொருவரின் இதயத்துக்குள் நாம் எட்டிப் பார்த்தால் அங்கே நிறைந்து கிடப்பது தாகமும் அதிருப்தியும்தான்.

வெளிப்பார்வைக்குத் தெரியும் விதத்தை வைத்து மனிதனை மதிப்பிடாதே. உனக்கு ஏமாற்றமே காத்திருக்கும். வெளியே புன்சிரிப்பு, உல்லாசம், அலங்காரம். உள்ளே சோகமயம். அதை மறைக்கவே வெளியே ஒப்பனை. உள்ளே கண்ணீர். அதை மறைக்கவே வெளியே வெடிச் சிரிப்பு.

ஃப்ரடரிக் நீத்ஸே* சொல்கிறார்– 'நான் சிரித்த முகமாய் இருக்கிறேன். ஆகவே நான் மகிழ்ச்சியுடன் விளங்குவதாக மக்கள் நினைக்கிறார்கள். ஆனால் நான் அழுகை வராமல் தடுக்கவே சிரித்த வண்ணமாய் இருக்கிறேன்.' வாழ்க்கையை அலசி ஆராய்ந்த தத்துவ அறிஞருக்கே இப்படி நிலைமை!

நாம் நம்மை வெளியே ஒருவிதமாகக் காட்டிக் கொள்கிறோம். உள்ளே வேறுவிதமாக இருக்கிறோம். ஆகவே ஒருவர் மற்றவரைப் பார்த்து ஏமாறும் கதையாக இருக்கிறது. ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கைக் கதையை உள்ளபடியே சொன்னால் எல்லோரும் திகைத்துப் போவோம். உலகில் அவ்வளவு துன்பம் பரவியுள்ளது. எங்கும் துன்பமே உள்ளது. சுகம் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பு மட்டுமே உள்ளது. இன்றோ, நாளையோ, இப்பிறவியிலோ, மறுபிறவியிலோ, இவ்வுலகில் இல்லாவிடில் சுவர்க்கத்திலோ சுகம் கிடைக்கும் என்று நம்பிக்கை அளவில் மட்டுமே சுகம் உள்ளது. கையில் இருப்பது நெருப்பில்லை, சாம்பல் மட்டுமே. உயிரிலும் துடிப்பில்லை, அணைந்த நெருப்பாய் உள்ளது. இந்த சத்தியத்தை

---

* Friedrich Nietzsche (1844-1900) ஜெர்மானிய தத்துவ மேதை. கடவுள் இறந்துவிட்டார் என்று அறிவித்தவர்!

அறிந்து விழிப்புப் பெறுபவனின் வாழ்வில்தான் ஆன்மிகப் புரட்சி ஏற்படுகிறது.

நாம் போலி மகிழ்ச்சியை வெளிக்காட்டி மற்றவர்களை ஏமாறச் செய்யும்போது, நம்மையும் நாம் ஏமாற்றிக் கொள்கிறோம். நம் உள்ளத்தில் நிரம்பியுள்ள கண்ணீரை மறைக்க நாம் வெளியே சிரிக்கிறோம். இதனால் ஒவ்வொருவனும் தன்னைத் தவிர மற்றவர்கள் சந்தோஷமாக இருப்பதாக நினைத்து விடுகிறான். இந்த பரஸ்பர மோசடி ஆழமாக வேரூன்றியுள்ளது.

இதை வர்த்தகத் துறையில் காணலாம். முதன்முதலாக அமெரிக்காவில் வங்கித் தொழிலை ஆரம்பித்தவரிடம் ஒருவர் கேட்டார், "நீங்கள் இத்தொழிலில் வெற்றியடைந்துள்ளீர்கள். இதை எப்படித் துணிந்து ஆரம்பித்தீர்கள்?"

பாங்கர் சொன்னார்: "நான் ஐரோப்பாவில் வங்கிகள் செயல்படும் விதம் பற்றிய நூல்களைப் படித்தேன். பிறகு என் வீட்டு வாசலில் 'பாங்க்' என்று எழுதப்பட்ட பலகையைத் தொங்கவிட்டேன். ஒரு மணி நேரம் கழித்து ஒருவர் வந்து 200 டாலர் டெபாசிட் செய்துவிட்டுப் போனார். மாலையில் இன்னொருவர் வந்து 150 டாலர் டெபாசிட் செய்தார். அவர்கள் என்னை நம்புவதைப் பார்த்து எனக்கே என்மீது நம்பிக்கை பிறந்தது. என்னிடம் 20 டாலர்தான் இருந்தது. மறுநாள் அத்தொகையை என்னுடைய வங்கியில் டெபாசிட் செய்துவிட்டேன்!"

நீ உன்னை அழகானவன் என்று நினைக்கிறாய். அதற்குக் காரணம் மற்றவர்கள் அவ்வாறு சொல்வதுதான். மற்றவர்களின் கண்கள் முகம் பார்க்கும் கண்ணாடிபோல் இயங்குகின்றன. நீ சிரிப்பதை உணர்ந்தாலும் அதை நம்ப வேண்டுமானால் கண்ணாடியில் பார்க்க வேண்டும். ஆனால் நீ உண்மையிலேயே சந்தோஷமாக இருக்கிறாயா என்பது கண்ணாடியில் பார்த்தோ, மற்றவர்கள் மூலமாகவோ தெரிவதில்லை. அதற்கு நீ உன்னை உள்ளேதான் பார்க்க வேண்டும்.

நீ யார் என்று பிறரிடம் கேட்டுப்பார். அவர்கள் தரும் பதில் உன்னை அவர்கள் வெளிப்புறத்திலிருந்து அறிந்து கொண்ட தகவலாகவே இருக்கும். அடிப்படையில், உள்ளுக்குள்ளே, நீ யார் என்பதை அவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். உனக்கேகூட

உன்னைப் பற்றி ஆழமாக, முழுமையாகத் தெரியாது. அதனால்தான் 'நானா அப்படி பேசினேன்? நானா அப்படிச் செய்தேன்' என்று அவ்வப்போது உனக்கு ஆச்சரியம் ஏற்படுகிறது.

நாம் நம்மை அறிய நம்மையே கேள்வி கேட்டுக்கொள்ள வேண்டும். கண்களை மூடிக்கொண்டு உள்ளே நோக்க வேண்டும். பலர் கண்களை மூடிக்கொண்டால் தூங்கி விடுகிறார்கள்! அவ்வாறு கண்களை மூடிக்கொண்ட பிறகு தூக்கம் வராவிடில் கவலைப்படு கிறார்கள். கண்களைத் திறந்துவைத்தால் பிறரையும் வெளிக்காட்சி களையும்தான் நீ பார்க்க முடியும். உள்ளே பார்வையைத் திருப்பினால்தான், படிப்படியாக இறங்கினால்தான், உள்ளே குவிந்து கிடக்கும் கல், மண், குப்பை, கூளம் கண்ணில்படும். அப்போது உன்னைப் பற்றி உனக்கு பயமுண்டாகும். ஆகவேதான் மக்கள் தமக்குள் பார்க்கத் தயங்குகிறார்கள்.

கண்களுக்கு நாம் வேறு இரண்டு வேலைகள்தாம் தந்துள்ளோம். திறந்திருந்தால் வெளிக்காட்சிகளைப் பார்க்கவும், மூடினால் தூங்குவதற்குமே பழக்கப்படுத்தி விட்டோம். கண்களை மூடியபடியே விழித்திருத்தல் கடினம். மூடிய நிலையில் விழிப்பு ஏற்பட்டால் நமது நிஜமான ஆளுமை நமக்குப் புலப்படத் தொடங்குகிறது. நமது அந்த உண்மைப் படம் கவர்ச்சிகரமாக இருப்பதில்லை. ஞானிகள் நாம் உள்ளே பார்த்தால் பரமாத்மா தரிசனம் தருவார் என்று எப்படிச் சொல்கிறார்கள் என்று நமக்குத் திகைப்பாக இருக்கும். நாம் உள்ளே பார்த்தால் நரகமாகத் தெரிகிறது. துன்பம், தோல்வி, ஏமாற்றம், வலி, சிதறிய கனவுகள் அதிருப்தி ஆகியவை அடுக்கடுக்காகத் தெரிந்து பயமுறுத்துகின்றன.

உள்ளே ஒளிமயமாகத் தெரியும் என்கிறார் ஞானி. நாம் பார்த்தாலோ கும்மிருட்டாக, நரக இருட்டாக உள்ளது. அமாவாசை இருட்டென்றும் சொல்லலாம். ஆனால் ஞானி சொல்வது உண்மைதான். உள்ளே ஒளிமயமான பரமாத்மா இருப்பது உண்மைதான். அந்த இடத்தை அடைய முதலில் இருண்ட பள்ளத்தாக்கைக் கடக்க வேண்டும். கொட்டிக் கிடக்கும் குப்பை கூளத்தைப் பொறுமையாகக் கடக்க வேண்டும். அப்பால் என்ன இருக்கிறது என்று தெரியாததால் இந்தக் கரையிலேயே நின்றுவிடக்கூடாது. ஞானிகள் சொல்வதை நம்ப

வேண்டும். இல்லாவிடில் சோகமயமான வாழ்க்கை என்ற கரையிலேயே தேங்கிவிடுவோம்.

**காலம் காலமாய் முயன்ற பின்னரும்
ஆத்ம விழிப்பு பெற்றேனில்லை
கடலில் படகு ஓட்ட வேண்டியவன்
மலை மேல் அதைச் செலுத்த முயன்றேன்.**

**புத்தி மழுங்கிப் போனது
பிரமையால் அது சூழப்பட்டது
ஆகாயம் அழுக்காய் உள்ளது
கீழே அலைகளின் தாக்குதல்
உள்ளும் வெளியிலும்
ஆசைகள் தடைப்பட்டு ஏமாற்றம்
ஆயினும் என் மேல் அக்கறையுடன்
ஆதரவாய் யார் குரலோ ஒலிக்கிறது**

**எனவே கவலைப்படாமல்
தொடர்ந்து செலுத்துவேன் என் படகை
யார் கண்டது வாழ்க்கை முடிவில்
ஆத்மவிழிப்பு எனக்கு ஏற்படலாம்**

நம்மில் பெரும்பான்மையோர் கடைசிவரை இந்த விழிப்பைப் பெறுவதில்லை. கடைசி நிமிடத்தில் ஞானம் வந்தாலும்கூட—தனது வாழ்க்கையை பரிசோதித்துப் பார்க்கும் திறமையும் துணிச்சலும் ஏற்பட்டாலும்கூட—நாம் ஆத்ம விழிப்பு-நிலையை அடைந்து விடுவோம்; ஞானியாகி விடுவோம்.

ஆனால் வாழ்நாள் முழுக்கச் சும்மா இருந்துவிட்டு, வாய்ப்புகளைத் தட்டிக் கழித்துவிட்டு, திடீரெனக் கடைசி காலத்தில் ஆத்ம விழிப்புப் பெறுவது கடினமானது. ஏனெனில் இந்த ஞானம் திடீரென ஆகாயத்திலிருந்து இறங்கி வராது. வாழ்க்கை முழுதும் கிடைத்த அனுபவங்களின் சாரம்தான் ஆத்மஞானம்.

ஆத்மஞானப் பாதையை ஆரம்பத்திலிருந்தே பலர் தேர்ந்தெடுப்பதில்லை. 'இப்போது நமக்கு இளமைக் காலம். கிழவனான பிறகு தியானம், தர்மநெறி ஆகியவற்றை மேற்கொள்ள லாம்' என நினைக்கிறார்கள். 'நாளைக்கேவா சாகப்போகிறோம்?'

என்று கேட்பார்கள். என்னிடம் வரும் முதியவர்களும் ஞானத்தேடலில் அவசரம் காட்டுவதில்லை. தங்கள் வாழ்க்கையிலும் குடும்பத்திலும் இன்னும் மிஞ்சி உள்ள பிரச்சினைகளைத் தீர்த்த பிறகு ஆத்ம விஷயங்களைப் பார்த்துக் கொள்ளலாம் என்றும், இன்னும் சில வருஷங்கள் உயிருடன் இருக்கப் போவதாகவும் அவர்கள் நம்புகிறார்கள்.

இளமைக் காலத்தில் உடலில் சக்தியிருக்கும். கங்கையில் அமிழ்ந்து குளிக்கலாம். நீந்தவும் செய்யலாம். அதுவே ஞானத் தேடலுக்கும் உரிய பருவம். ஞானம் பெறுவதைப் பழுத்த முதுமை வரை தள்ளிப் போடுகிறார்கள். சாகின்ற நேரத்தில், மூச்சு திணறுகையில், மற்றவர்கள் அவர்கள் காதில் ராம நாமத்தை ஓதும்போது, கங்கை நீரைத் தொண்டைக்குள் செலுத்த முயலும்போது, அப்போதா ஆத்மஞானத்தைத் தேடப் போகிறார்கள்?

நான் ஒருவர் வீட்டில் விருந்தாளியாகத் தங்கியிருந்தேன். தற்செயலாக குடும்ப உறுப்பினர் ஒருவர் ஏறத்தாழ இறந்துவிட்டார். சுற்றிலும் சில புரோகிதர்கள் மந்திரம் ஓதிக்கொண்டிருந்தனர். மயக்கநிலையில் கடைசி மூச்சு இழுத்தபடி இருந்தவரின் வாயைப் பலவந்தமாகத் திறந்து உறவினர்கள் கங்கைநீரைத் தொண்டையில் செலுத்த முயன்று பார்த்தனர். இறப்பவர் அதை விழுங்கத் திணறினார். இந்த நிலையிலா ஒருவர் ஆத்மஞானம் பெறமுடியும்? இவ்வா றெல்லாம் நீ தள்ளிப் போடாதே. விழிப்புப் பெறுவதானால் இப்பொழுதே முயற்சியை ஆரம்பி. வலுவாக, தெளிவாக இருக்கும்போதே ஆன்மிகப் பயணத்தைத் தொடங்காதவன் பிறகு என்றைக்கும் ஞானப் பாதையில் கால் வைக்க முடியாது. 'நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்' என்பவன் தூங்குமூஞ்சி. அவனுக்கு என்றும் வாய்ப்புக் கிடையாது. நாளை எப்படி இருக்கும் என்று யார் நம்பிக்கையுடன் கூற முடியும்? இன்றைக்கு உள்ள வாழ்க்கைதான் நிச்சயம். நாளைக்கு இறப்பு ஏற்படலாம். இன்றைய வாழ்க்கையிலும் இக்கணமே கையிலுள்ளது. இப்போது இல்லை என்றால் எப்போதும் இல்லை எனலாம்.

வாழ்க்கையை இவ்வளவு ஆழமாக, நெருக்கமாக அறிந்த வனால்தான் ஆன்மிக முயற்சியில் இறங்க முடியும். ஆன்மிகம்

என்பதும் ஒருவகைப் பந்தயம். அதில் நீ இலவசமாகக் கலந்து கொள்ள முடியாது. உனது எனப்படும் எல்லாவற்றையும் பணயம் வைத்தால் ஆன்ம பந்தயத்தில் பிரவேசிக்கலாம். மற்ற பந்தயங்களைப் போல் அல்லாமல் நீ உன்னுடைய எல்லாவற்றையும் இழந்தால்தான் வெற்றி பெற முடியும். ஆன்மிகம் என்பது மலிவானதன்று. அது எல்லாவற்றையும்விட அதிக மதிப்பு வாய்ந்தது. இதனால்தான் சில அதிர்ஷ்டசாலிகளுக்கே அது கிடைக்கிறது. அது இலவசமாகக் கிடைப்பதாயின், துவக்கத்திலேயே கிடைத்துவிடுமே; அனைவருக்கும் கிடைத்துவிடும். சலிக்காத உழைப்பினால், தொடர்ந்த முயற்சியினால்தான் ஆன்மிகம் வசப்படும். அது எல்லோருக்கும் பொதுவான பிரசாதம் போன்றது என்றாலும், முயற்சி செய்பவனே அதன்மீது உரிமை கொண்டாட முடியும்.

ஜனகர் கூறுகின்ற இந்த சூத்திரங்கள் (107-114) புரட்சிகரமானவை. சாட்சி மனப்பான்மையோடு ஆராய்ந்தால்தான் இவை உனக்குப் புரியும். நுனிப்புல் மேய்ந்தால் இவற்றின் உண்மையான அர்த்தத்தைக் காணத் தவறிவிடுவாய். இவ்வளவு சிறந்த சூத்திரங்களை நீ கேள்விப்பட்டிருக்க மாட்டாய்.

ஆகவே அஷ்டாவக்ர கீதைக்கும் மேற்பட்ட நூல் இருக்க வாய்ப்பில்லை என்று நான் கூறுகிறேன். இதற்கப்பால் சொல்வதற்கு எதுவுமில்லை. வேறு விதமாகச் சொல்வதும் சாத்தியமில்லை. சூத்திரங்கள் இயற்றப்பட்டு ஐயாயிரம் ஆண்டுகளாயினும் இதைவிட மதிப்பான உபதேசம் கிடைத்ததில்லை. இதில் நகாசு வேலையோ, ஒட்டு வேலையோ செய்ய முடியாது.

நீ பார்த்திருப்பாயே, சுமாரான தோற்றமுடையவள் நகைகளும் பொருத்தமான உடையும் அணிந்தால் அழகியாகத் தெரிவாள். ஆனால் ஒரு பேரழகி நகைகளை அணிந்து கொண்டால் அசிங்கமாகத் தெரிவாள். ஆகவே அழகு என்பதை நாம் இப்படி வரையறுக்கலாம். நகைகள் தோற்றப் பொலிவை அதிகரிக்காமல் மங்கச்செய்யும் எல்லைக்கோடு அழகின் அதிகபட்ச நிலையாகும். இந்த அடிப்படையில் அழகிய சமூகம் குறைந்தபட்ச ஆடம்பரத்துடன், எல்லைக்குட்பட்ட அலங்காரத்துடன் திகழ்ந்து நம்மை ரசிக்கவைக்கும். அழகற்ற சமூகம் என்பது அளவுமீறிய

பொருள்களுடன், கணக்கற்ற வசதிகளுடன், சமாளிக்க முடியாத ஆடம்பரங்களுடன், கூசவைக்கும் அலங்காரங்களுடன் நிறைந்து நம்மை அருவருக்கவைக்கும். அலங்காரம் அலங்கோலமாகிவிடும்.

இது ஒரு நேரடியான உபதேசம். பொருள் பொதிந்த உபதேசம். இது உன் உள்ளத்தில் பிரவேசித்து இடம் பெறுமானால் நீ அதிர்ஷ்டசாலிதான்.

ஜனகர் கூறுகிறார்-'முதலில் நான் உடலின் கடமைகளுடன் ஒத்துப்போவதை நிறுத்தினேன். பிறகு பேசுவது சம்பந்தமான கடமைகளிலிருந்து என்னைப் பிரித்துக் கொண்டேன். கடைசியில், சிந்தனை செய்வதிலிருந்தும் நான் வெளியேறினேன். எதிலும் பட்டும்படாதவனாக இருப்பதுதான் எனது இப்போதைய நிலைமை.'

வேறுவிதமாகச் சொல்வதானால், 'உடல் இயங்குகிறது தன்னிச்சையாக. மனம் செயல்படுகிறது தான் போகின்ற போக்கின்படி, பேச்சு சுயமாகப் பெருக்கெடுக்கிறது. நீ தேவையில்லாமல் இவற்றுடன் உன்னைப் பிணைத்துக் கொள்கிறாய். இதன் காரணமாக நீ பிரமையில் ஆழ்ந்துள்ளாய்.' **(சுலோகம் 107)**

ஓர் அரசர் தனது குதிரைமேல் அமர்ந்து நாட்டின் பகுதிகளைப் பார்வையிட்டபடி சென்றார். வழியெல்லாம் மக்கள் தலைதாழ்த்தி வணங்கி வரவேற்றார்கள். குதிரை தன்னைத்தான் எல்லோரும் வணங்குவதாக நினைத்துவிட்டது! அதற்குத் திமிர் ஏற்பட்டு ஓரிடத்தில் அப்படியே நின்றுவிட்டது. முற்காலக் கதைகளில் குதிரையும் பேசும்! ஆகவே அரசர் குதிரையை அதட்டினார். "ஏன் நின்றுவிட்டாய்? ஏன் மேலே போக மறுக்கிறாய்? உனக்கு கிறுக்கு பிடித்துவிட்டதா?" என்று கேட்டார்.

குதிரையோ பதிலுக்கு அரசரை மிரட்டியது! "கீழே இறங்குய்யா. நான் எவ்வளவு பெருமைக்குரியவன் என்று இத்தனை காலமாக எனக்குத் தெரியாமல் போய்விட்டது. இத்தனை பேர் வழியெல்லாம் என்னை குனிந்து வணங்கியது உன் கண்ணில் படவில்லையா?" என்று கேட்டது.

இதேபோல் ஒரு பல்லியின் கதை. அது அரண்மனைப் பல்லி. தர்பார் மண்டபத்தின் மேற்பகுதியில் ஓடிக்கொண்டிருக்கும்.

அவ்வூரிலிருந்த சாதாரண பல்லிகள் இந்த அரண்மனைப் பல்லிக்கு மரியாதை கொடுத்துத் தங்கள் சமூக நிகழ்ச்சிகளுக்கு அழைக்கும். ஆனால் இது என்றும் போகாது. ஒருமுறை சில பல்லிகள் அது ஏன் அரண்மனையை விட்டு வெளியே வருவதே கிடையாது என்று கேட்டன. அதற்கு அரண்மனைப் பல்லி, ''மடையர்களே! இது கூடவா தெரியாது? நான்தானே தர்பார் மண்டபத்தின் மேற்பகுதி முழுவதையும் தாங்கிக் கொண்டிருக்கிறேன். நான் வெளியேறினால் மேற்பகுதி விழுந்து மண்டபம் சிதறிப் போகாதா?'' என்று காட்டமாகக் கேட்டது.

மனிதா, பல்லியின் அறியாமையை நினைத்துச் சிரிக்கிறாயா? நீயும் எத்தனையோ பிரமைகளுக்கு அடிமையாக உள்ளாய் என்பது உனக்குத் தெரியுமா?

உன் உடல் சுயமாக இயங்குகிறது. ஆனால் நீ உடலை இயக்குவதாக நினைக்கிறாய். மனம் தன் இஷ்டப்படி யோசிக்கிறது. ஆனால் நீ விரும்பும் விதத்தில் மனம் சிந்திப்பதாக நினைக்கிறாய்.

சூத்திரம் 107 மூலம் தெரியவருவது-உடல் இயங்குவதற்கு நான் ஒரு கட்டாயத் தேவை இல்லை என்பதை அறிந்தேன். உடல் தன்னையே ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது. உடலை நான் நடத்துகிறேன் என்னும் பிரமையைக் கைவிட்டேன்.

உதாரணமாக, இரவோ, பகலோ, நீ தூங்கும் சமயத்திலும் உடலில் தொடர்ந்து வேலைகள் நடக்கின்றன. உணவு தானாக செரிமான மாகிறது. உன் உதவி தேவை இல்லை.

நீ ஆழ்ந்த மயக்கத்தில் ('கோமா') நீண்ட காலம் படுத்திருந் தாலும் ரத்தம் ஓட்டம் தொடர்ந்து நடைபெறுகிறது; இதயம் துடிக்கிறது; மூச்சு விடுதலும் தொடர்கிறது. அப்போது நீ உன் உடலுக்கு ஆதாரமில்லை என்பது தெளிவுபடுகிறது. வேடிக்கை என்னவென்றால், நீ இருந்தால்தான் உன் உடலுக்குத் தொந்தரவு. இதற்காகவே டாக்டர் உனக்கு மாத்திரை கொடுத்துத் தூங்கச் செய்கிறார். நோயாளியால் தூங்க முடியவில்லை என்றால் நோய் குணமாவதில் சிக்கல் ஏற்படுகிறது. உடல் என்னும் இயந்திரம் நீ தலையிடாவிடில் நன்றாக இயங்கும். கோளாறு ஏற்பட்டாலும் உன் குறுக்கீடின்றித் தானாகவே சரிப்படுத்திக் கொள்ளும். தூக்கத்தின்போது நீ காணாமல் போய்விடுகிறாய். உடல்

தனக்கு எது தேவையோ அதை சுதந்திரமாக பூர்த்தி செய்து கொள்கிறது. இதனால் கடைகளில் எண்ணற்ற தூக்க மாத்திரைகள் விற்கப்படுகின்றன.

ஜனகர் சொல்கிறார்-உடல் தானாக இயங்குகிறது. அதை நான் இயக்குவதாக இத்தனை காலமாக பிரமைவசப்பட்டிருந்தேன். அது தவறு.

உனக்கும் இதே எண்ணம் வந்தால், உடல் இருக்கும்போதே நீ உடலிலிருந்து விடுபட்டவனாகிறாய். உடல் உன்னைக் கட்டிப்போட வில்லை. நீ உன் உடலை நடத்துகிறாய் என்னும் பிரமைதான் உன்னைக் கட்டிப் போட்டிருக்கிறது. உடலின் செயற்பாடு இயற்கையானது. அதுபோல்தான் மனமும் பேச்சாற்றலும் சுயமாகச் செயல்படுகின்றன.

புத்தர் தன் சீடர்களுக்கு உபதேசிக்கையில், "எல்லோர் மனத்தையும்போல் உங்கள் மனத்திலும் எண்ணங்களின் ஊர்வலம் நடைபெறுகிறது. ஆனால் நீங்கள் அவற்றை வேறு விதமாகப் பார்க்க வேண்டும். நாம் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தபடி வருவோர். போவோரைப் பார்க்கிறோம். எந்தவித உணர்ச்சியோ, பற்றுதலோ இல்லாமல் பார்க்கிறோம். அதேபோல் நம் எண்ணங்களையும் ஒட்டுத லின்றிப் பார்க்கப் பழக வேண்டும். நீ அவற்றை எண்ணுவதாகவும், விரும்பினால் நீ அவற்றைத் தடுக்க முடியும் என்றும் நினைக்காதே. இது ஒரு பிரமையிலிருந்து இன்னொரு பிரமையை வளர்த்துக் கொள்வது போன்றது" என்று எச்சரிக்கிறார்.

**தி**பெத்திய கதை ஒன்று. ஒருவன் ஞானம் பெற ஒரு குருவிடம் அடைக்கலம் புகுந்தான். பல ஆண்டுகளாக அவருக்கு சேவை செய்தான். அதேசமயம் தனக்கு ஞானம் கிடைக்க, தான் சித்திகளடைய ஏதாவது மகாமந்திரம் சொல்லிக் கொடுங்கள் என்று அவரை விடாமல் நச்சரித்தான். குருவால் அவனது தொந்தரவைத் தாங்க முடியாமல் போனபோது அவனிடம் சொன்னார்:

"அந்த மந்திரத்தைச் சொல்லித்தர முடியும். ஆனால் அதை ஓதுவதில் சிக்கல் உள்ளது. அதை நான் மறைக்கக்கூடாது. அந்த சிக்கலினால்தான் நானே இன்னும் சித்தி பெறவில்லை. நானோ என்

குருவுக்கு முப்பது ஆண்டுகள் சேவை செய்த பிறகே கஷ்டப்பட்டு அந்த மந்திரத்தைப் பெற்றேன். நீ மூன்று ஆண்டுகளாகத்தானே என்னுடன் உள்ளாய். எனினும் நீ அதிர்ஷ்டசாலி. குறுகிய காலத்திலேயே உனக்கு அந்த மந்திரத்தை தருகிறேன். அதை ஓதுவதுதான் சிரமம்.''

சீடன் சொன்னான்: ''அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் எல்லாவற்றையும் சமாளித்து விடுவேன். வாழ்க்கை முழுவதையுமே அதைக் கற்பதில் ஈடுபடுவேன்.''

குரு தொடர்ந்தார்: ''மந்திரம் சிறியதுதான். அதை நீ ஓத வேண்டும். ஐந்து முறை ஓதினாலே போதும். இதற்குப் பெரிய உழைப்பு தேவைப்படாது. ஆனால் இதை ஓதி முடிக்கும்வரை குரங்கு ஞாபகம் வரக்கூடாது.''

சீடன் சிரித்தான். ''நான் இதுவரை என் வாழ்க்கையில் குரங்கைப் பற்றியே நினைத்ததில்லை. இனிமேல் மட்டும் குரங்கு என் ஞாபகத்திற்கு எப்படி வரும்?'' என்று கேட்டான்.

குருவிடம் மந்திரத்தைக் கற்றுக் கொண்டு சீடன் மடத்தின் படிகளில் கால் வைத்து இறங்கினான். ஏனோ திடீரென்று அவன் மனத்தில் குரங்குகளின் ஞாபகம் வந்து அவன் அதிர்ச்சியடைந்தான். இன்னும் மந்திரம் ஒருமுறை ஓதுவதற்கு முன்பே இப்படியா?

அவன் வீடு திரும்பினான். குரங்குகளின் நினைவும் சேர்ந்தே வந்தது! குளித்துவிட்டு மந்திரம் ஓத உட்கார்ந்தான். ஆனால் தன்னைச் சுற்றிலும் குரங்குகள் இருப்பதுபோல் உணர்ந்தான். அவை பல் இளித்தன; நாக்கை நீட்டின; முகத்தைக் கோணலாக்கி அழகு காட்டின. மந்திரத்தை சொல்லிப் பார்க்கத் தொடங்கியபோது ஒவ்வோர் எழுத்தின் ஒலியுடன் ஒரு குரங்கும் தொற்றிக்கொண்டு வருவதாகத் தோன்றியது.

மறுநாள் அவன் வாடிய முகத்துடன் குருவைச் சந்தித்தான். அவர் அவனது வாட்டத்தின் காரணத்தை ஊகித்துவிட்டார். ''உங்கள் மந்திரத்தை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். இதை ஐந்து முறை உங்களாலும் ஓத முடியவில்லை. என்னாலும் முடியவில்லை. யாராலும் முடியாதுபோல் இருக்கிறது. இந்த மந்திரத்தைப் படைத்தவர்கள் அதனுடன் ஏன் ஒரு நிபந்தனையைச் சேர்த்தார்கள்? நேற்று முழுவதும்

எனக்கு உலகிலுள்ள வேறு எந்தப் பிராணியின் நினைவும் எழவில்லை. எங்கும் எப்போதும் குரங்குமயமாக இருந்தது. இரவில் தூங்கும்போது என் கனவில் அழகிய பெண்கள் தோன்றுவார்கள். ஆனால் கனவிலும் குரங்குகளே தென்பட்டன. நீங்கள் மட்டும் குரங்கை பற்றி எதுவும் சொல்லாமலிருந்தால் நான் வெகுசுலபமாக மந்திரம் ஓதியிருப்பேன்.'' என்று வருத்தத்துடன் சீடன் கூறினான்.

“நான் என்னப்பா செய்வேன்? அந்த மந்திரத்தைக் குரங்கு பற்றிய நிபந்தனையோடுதான் சொல்ல வேண்டும் என்பது முன்னோர்களின் கட்டளை. என் குருவும் எனக்கு நிபந்தனையுடன் சேர்த்துத்தான் மந்திரம் கற்பித்தார்,'' என்று குரு சீடனை சமாதானப்படுத்தினார்.

மறுபடியும் சூத்திரத்தைப் பாருங்கள். (எண் 107)- ‘நான் உடலின் இயக்கத்தைக் கவனித்தேன். நான் அதற்கு ஆதாரமானவன் இல்லை என்பதைப் புரிந்து கொண்டேன். உடலுக்கு என் ஒத்துழைப்பு தேவையில்லை என அறிந்தேன். இதுவரை நான்தான் உடலைத் தாங்குவதாக நினைத்து வந்தேன். நான் விரும்பினால் உடலுக்கு ஒத்துழைப்புத் தராமலிருக்க முடியும் என்றும் நினைத்தேன். இரண்டும் பிரமை என்று இப்போது தெரிகிறது. உடலுக்கு என்னிடம் கொடுக்கல்-வாங்கல் எதுவும் கிடையாது. நான் சாட்சிபோல் அதை மேற்பார்வை செய்தால் போதும்.

‘அடுத்து, குரலின் விளைவான சொற்களின் மீதும், அவற்றின் தொகுப்பான பேச்சின் மீதும் எனக்கு அதிகாரமில்லை என்று தெரிந்து கொண்டேன். நான் அதையும் கடந்தவன்.

‘அடுத்து, மனத்தில் தோன்றும் மேலோட்டமான எண்ணங்கள், ஆழமான சிந்தனைகள் ஆகியவையும் என்னுடையவை அல்ல என அறிந்தேன். உடல், மனம், பேச்சு-மூச்சு நானல்லன் என்பது எனக்குப் புரிந்ததும் நான் தனியாக என்னிலேயே வேரூன்றி விட்டேன்.’

இந்த நிலைக்கு வந்துசேர யாரும் விசேஷ நடவடிக்கை எடுக்க வேண்டியதில்லை. ‘செய்பவன் நான் அல்லன்’ (கர்த்தா நானில்லை) என்னும் மனப்பான்மை ஏற்பட்டுவிட்டால் போதுமானது.

நதியைத் தடுத்து அணைகட்டியும்
அது தொடர்ந்து ஓடவே 'செய்கிறது
பாசிப் போர்வையைப் போர்த்திக்கொண்டு
புல்வெளி நகர்வதுபோல் பாய்ந்தபடி
பள்ளத்தை நோக்கி விரைகின்ற
நீரைத் தடுக்க வல்லவருண்டோ?

வீசும் காற்றைத் தடுக்க முயன்று
முட்டுக்கட்டை போட்டாலும்,
கழுத்தை இறுக்கி நெரிப்பதுபோல்
காற்றின் திசையைத் திருப்பினாலும்
காற்று வீசுவது நிற்பதில்லை
நறுமணத்தை அது ஏந்தியபடி
தொடர்ந்து பரவிச் செல்கிறது

புயலடித்தாலும் பூகம்பமாயினும்
காட்டில், வீட்டில், வயலில் எங்கும்
வளர்ந்து நிற்கும் துளசிச் செடி
அசையாது நிற்கும், ஆசிகூறும்

விசிறிகொண்டு பலமாய் வீசியே
அணைத்துவிட முயன்றாலும்
புடைவைத் தலைப்பின் பாதுகாப்பில்
தீபம் தொடர்ந்து ஒளியைத் தரும்

வாழ்க்கை என்னும் பிரவாகமும் நிற்காமல் ஓடியபடி இருக்கிறது. அது ஓடாமலிருக்க நீ தடுக்கவும் வேண்டாம்; அதை ஓடச்செய்யத் தூண்டவும் வேண்டாம். இந்த சிக்கல்களில் நீ மாட்டிக் கொள்ளாதே. போ, கரையில் உட்காரு. நடுநிலை வகிப்பவனாக வாழ்க்கையின் ஓட்டத்தை வேடிக்கை பார். நதி அதன் போக்கில் ஓடட்டும். அதன் மீது பற்றுக் கொள்ளாதே. எப்பக்கமும் சாராதே. பற்று கூடாது என்பதுபோல் வெறுப்பும் கூடாது.

நீ இல்லாத காலம் ஒன்றிருந்தது. அப்போதும் உலக வாழ்க்கை தொடர்ந்து நடந்தது. அப்போதும் பூக்கள் மலர்ந்தன. குயில்கள் பாடின. உலகம் சிந்தனை அலைகளால் நிரம்பியிருந்தது. கடலில் அலைகள் எழும்பின. பலமுறை புயல் வீசியது. எதிர்காலத்தில் ஒருநாள் நீ இல்லாமல் போய்விடுவாய். அப்போதும் எல்லா

நடவடிக்கைகளும் வழக்கப்படி நடைபெறும். எனவே நீ கரையில் உட்கார்ந்துவிடு. நடுநிலை கடைப்பிடி.

விருப்பு-வெறுப்பின்றி, நாட்டம்-புறக்கணிப்பின்றி நீ கரையில் உட்கார்ந்து விடுவது பயணத்தின் முடிவில்லை. இந்த மனப்பான் மையைக் கருவியாக மட்டும் கருது. நீ நதியை நல்லது-கெட்டது என்றெல்லாம் மதிப்பீடு செய்யவில்லை. அது உனது சொத்தில்லையே. இதேபோல் வாழ்க்கை சுபம் நிறைந்ததாக உள்ளதா அல்லது அசுபம் நிறைந்ததா; பாவப்பட்டதா அல்லது புண்ணியமயமானதா என்றெல்லாம் நீ அலசிப் பார்க்கவில்லை. உனக்கு எதற்கு இந்த பிரச்சினையெல்லாம்? நீ சிறிது காலம் முன்புதான் வந்தாய். இன்னும் சிறிது காலத்தில் புறப்பட்டுச் சென்றுவிடுவாய். இந்த உலகம் என்பது நீ சிறிது காலம் தற்காலிகமாகத் தங்குமிடம்தானே. இரவில் சத்திரத்தில் தங்குவதுபோல்தான் உலகில் வாழ்கிறாய். தற்காலிகமாக தங்குமிடத்தில் வசதிகள் எப்படியிருந்தால் என்ன? நாளை கூடாரத்தைக் கலைத்துவிடுவோம். சத்திரத்தின் சொந்தக்காரன் எதைப் பற்றி வேண்டுமானாலும் கவலைப்படட்டும். இப்படி நீ கரையிலேயே தங்கிவிட்டால், நீரில் காலை நனைத்து மகிழ்ச்சி காட்டாமல் இருந்தால் அப்போது ஓர் அதிசயம் நிகழும். நீ உன்னில் நிலைபெற்று விடுவதுதான் அந்த அதிசயம். தன்னில் நிலைபெறுதலைப் பற்றி ஜனகர் அடிக்கடி கூறுகிறார்.

'நான் என்னில் நிலைபெற்று விட்டேன். இப்போதெல்லாம் நான் எனக்குள் எந்தச் சலனமும் உணர்வதில்லை. வெளியே புயலே வீசினாலும் என் மனக்கடலில் ஓர் அலைகூட எழுவதில்லை. வெளியுலகத்துடன் தொடர்பு வைத்திருந்தவரைதான் மனத்திலும் அலைகள் தோன்றின. அந்தத் தொடர்பு ஒத்துழைப்பு-புறக்கணிப்பு, நண்பன்-பகைவன், அன்பு-வெறுப்பு என்று எப்படி அமைந்தாலும் மனத்தில் அமைதியின்மை என்னும் அலைகள் நீடிக்கும்.

ஒருவரை நாம் விரும்பினால் அவருடன் நமக்கு ஒருவிதமான தொடர்பு ஏற்படுகிறது. ஒருவரை வெறுத்தோமானால் அப்பொழுதும் அவருடன் நமக்கு ஒருவிதத் தொடர்பு உண்டாகிறது. நண்பனுடன் நட்பு, எதிரியுடன் பகைமை. ஆனால் நட்பு, பகைமை இரண்டுமே தொடர்பின் வகைகள்தாம். ஒருவரால் கவரப்படுகிறோம், ஒருவரிடமிருந்து முயன்று விலகியிருக்கிறோம். இருவருடனும் நாம்

வெவ்வேறு விதமாகக் கட்டப்பட்டுதான் உள்ளோம் எனலாம். உன் நண்பன் இறந்தால் இழப்பை உணர்கிறாய். உன் எதிரி இறந்தாலும் அது வேறுவகையான இழப்புதான். எதிரி இறந்ததும் நீ தனிமையை உணர்வாய். முழுமையாக இருந்த நீ பாதி மனிதனாகிவிட்டது போல் தோன்றும்.

மகாத்மா காந்திஜி இறந்த பிறகு அவரது அரசியல் எதிரியாகக் கருதப்பட்ட முகம்மது அலி ஜின்னா* சோகமாகவே இருந்தார். அந்த துக்கச் செய்தி கிடைத்த சமயம் அவர் தமது பங்களாவின் முன்புறத்துப் புல்வெளியில் அமர்ந்திருந்தார். அவர் பாகிஸ்தானின் முதல் கவர்னர் ஜெனரலாக இருந்தபோதிலும் தன்னைச் சுற்றிலும் பாதுகாவலர்கள் இருக்கக்கூடாது என்பதில் கண்டிப்புக் காட்டினார். அவர் சொன்னார்:

'இது முஸ்லிம்களின் நாடு. அவர்களுக்காகத்தான் நான் இதுவரை வாழ்ந்து வந்திருக்கிறேன். அவர்களுக்காகவே இத்தனை காலமாக உழைத்திருக்கிறேன். ஆகவே எந்த முஸ்லிமும் என்னைக் கொல்லமாட்டான். அப்படி நான் நினைப்பதேகூட வீண் கற்பனை.'

இந்தக் கண்ணோட்டத்தினால்தான் தலைவர்களும் அதிகாரிகளும் வலியுறுத்தியும் அவர் பாதுகாப்பு வளையம் அமைக்க ஒப்புதல் தரவில்லை. ஜின்னா தமது தோட்டத்தில் தனியாக இருந்தபோதுதான் அவருடைய செயலாளர் அங்கு வந்து காந்திஜி சுடப்பட்ட செய்தியைத் தெரிவித்தார். ஜின்னா உடனே எழுந்து பங்களாவிற்குள் போனார். செயலாளரை அழைத்து "எனது பாதுகாப்புக்கான தகுந்த ஏற்பாடு செய்யுங்கள்," என்று கட்டளையிட்டார். "ஹிந்துவான காந்திஜியை இன்னொரு ஹிந்து சுட்டான் எனில் இனி யாரையும் நம்ப முடியாது. அதேபோல் முஸ்லிமான என்னை இன்னொரு முஸ்லிம் கொல்லக்கூடும்," என்று சோகமாகக் கூறினார். பிறகு (செப்டம்பர் 1948இல் அவர் சாதாரணமாக இறக்கும்வரை) அவர் முகத்தில் மகிழ்ச்சியே காணப்படவில்லை. தன் எதிரியான காந்திஜி இறந்ததிலிருந்தே ஜின்னாவும் பாதி உயிரை இழந்ததுபோலானார்.

இவ்வாறு உன் எதிரியோடும் நீ எவ்விதத்திலோ சம்பந்தப் படுகிறாய். நண்பனை இழக்கும்போது ஏற்படும் உணர்வில் ஓரளவாவது பகைவனை இழக்கும்போதும் ஏற்படும்.

---

* Mohammed Ali Jinnah (1876-1948)

உலகத்தோடு அன்பான தொடர்பும் இருக்கலாம். பகைமை யானாலும் ஒருவகைத் தொடர்புண்டு. ஒருவன் பணப்பைத்தியமாக இருப்பான். இன்னொருவன் பணம் என்றாலே பயந்து ஓடக்கூடும். ஒருவரது மனப் பிரவாகத்தில் வெள்ளிநாணயங்களாக மிதந்து கொண்டிருக்கும். இன்னொருவர் கண்ணெதிரே ரூபாயைக் காட்டினாலே நடுங்குகிறார். சந்நியாசியோ காசு-பணத்தைத் தொடக்கூட மாட்டார்.

ஒருமுறை நான் ஒரு சந்நியாசியின் விருந்தினராகத் தங்கியிருந்தேன். அவர் கையால் பணத்தைத் தொடமாட்டார். அவரிடம் காரணம் கேட்டேன். பணம் வெறும் மண் என்றார். "ஆனால் நீங்கள் மண்ணைத் தொடுவீர்களே. பணம் மண் என்றால் அதையும் தொடலாமே. மண் குறித்து உங்களுக்கு எதுவும் ஆட்சேபணை இருப்பதாகத் தெரியவில்லையே," என்று கூறினேன்.

பாவம், அவர் தடுமாறிப் போனார். அருகே அவருடைய சீடர்களும் உட்கார்ந்திருந்தனர். என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் சந்நியாசி தவித்தார். யாருமே எதற்காவது மண்ணை ஸ்பரிசிக்காமல் இருக்க முடியாதே. நானே அவருக்கு விளக்கம் சொன்னேன்: "துறவியாவதற்கு முன்பு நீங்கள் பணத்தை விரும்பினீர்கள். இப்போது அதைத் தவிர்க்கிறீர்கள். முன்பு பணத்துடன் நட்பெனும் தொடர்பிருந்தது. இப்பொழுதோ பகைமை என்னும் தொடர்பு உள்ளது. ஒருவன் நேராக நிற்கிறான். அவனால் தலைகீழாகவும் நிற்க (சிரசாசனம் செய்யவும்) முடிகிறது. ஆனால் இரண்டு நிலையிலுமுள்ள மனிதன் ஒருவனேதான்."

இன்னொரு முறை நான் வேறு ஒரு சந்நியாசியின் விருந்தாளியாகத் தங்கியிருந்தேன். அவர் உயரமான பீடத்தின் மீது அமர்ந்திருந்தார். அவர் அருகே உயரம் குறைந்த பீடத்தில் இன்னொரு சந்நியாசி காணப்பட்டார். மூத்த சந்நியாசி என்னைப் பார்த்து, "அந்தத் தாழ்வான பீடத்தில் உட்கார்ந்திருப்பவர் யார் என்று தெரியுமா?" என வினவினார்.

"தெரியாது. நீங்கள் அழைத்ததன் பேரில் இப்பொழுதுதான் முதல் முறையாக நான் இங்கு வந்திருக்கிறேன்," என்று பதிலளித்தேன்.

"இவர் பூர்வாசிரமத்தில் அலகாபாத் உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக விளங்கியவர். மிகவும் அடக்கமானவர். எனது பீடத்திற்கு சமமான பீடத்தில் உட்கார விரும்பாமல் தனக்கென உயரம் குறைந்த பீடம் தயாரித்துக் கொண்டார்," என்று மூத்த சந்நியாசி அறிமுகப்படுத்தினார்.

நான் கூறினேன், "அவர் முன்பு என்னவாக இருந்தார் என்று இப்போது பெருமைப்பட்டுக் கொள்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது? பதவி உயர்வு பழகிப்போன அவர், நீங்கள் அகன்றதும், உங்கள் பீடத்தில் அமர்ந்து விடுவார். இதற்கும் அடக்கத்திற்கும் என்ன சம்பந்தம்? இவர் சிறிய பீடத்திலாவது அமர்ந்திருக்கிறார். இங்குள்ள மற்ற சந்நியாசிகள் தரையில் அல்லவா உட்கார்ந்திருக்கின்றனர்? இவர் பணிவுமிக்கவர் எனில் இந்தத் தாழ்வான பீடம்கூட எதற்காக? உட்காருவதில்தான் பணிவு தெரியும் எனில் பள்ளம் தோண்டி அதில் எல்லோரையும்விட கீழாக உட்கார்ந்து அதிகப் பணிவைக் காட்டலாமே."

இம்மாதிரியான வெளிநடவடிக்கையான அடக்கம் அகங்காரத்தின் சூட்சுமமான வெளிப்பாடுதான். இது போலியான, பொய்யான அடக்கம், விருப்பு, வெறுப்பாக மாறியுள்ளதே தவிர பற்று அப்படியே உள்ளது.

நீ கோயில்கள் அல்லது மடங்களில் சந்நியாசிகளின் உபதேசத்தைக் கேட்டுப்பார். உனக்கு வாழ்க்கையில் எவையெல்லாம் பிடித்திருக்கின்றனவோ அவற்றைத்தாம் அவர்கள் கடுமையாக ஏசுகிறார்கள். குறிப்பாக, பணத்தாசை, பெண்ணாசையைக் கடுமையாகத் தாக்குகிறார்கள். நீ அவற்றை விரும்புவது ஒருவகைப் பற்றெனில், அவற்றை அவர்கள் மறக்காமல் வெறுப்பதும் ஒருவகைப் பற்றேயாகும்.

இந்த இரண்டையும் கடந்த நிலையில் பற்று, வெறுப்பு இரண்டுமே நீங்கிவிடும். 'எனக்கு யாருடனும் பகையில்லை; யாருடனும் ஒட்டுதல் இல்லை; நான் தனியானவன், தொடர்பு களற்றவன், தொடப்படாதவன், சுத்தமானவன்' என்னும் முடிவிற்கு நீ வருவாய். இவ்வாறு நீ உன்னில் ஸ்திரப்படுவாய், நிலைபெறுவாய்.

அஷ்டாவக்ரர்-ஜனகரின் இந்த உரையாடல் அற்புதமானது. அஷ்டாவக்ரர் தலைசிறந்த சில உபதேசங்கள் செய்கிறார். ஜனகர் அதே விஷயங்களை எதிரொலிபோல் கூறுகிறார். குரு சொல்வதை ஆமோதிக்கும் அவர் தனது அனுபவமும் அதே மாதிரியே என்கிறார். குரு-சீடர் இருவரும் ஒரே விஷயத்தையே சொல்கின்றனர். அவரவர் பாணியில் சொல்கின்றனர் என்பதுதான் வித்தியாசம். அடிப்படையில் அவர்களிடையே கருத்தொற்றுமை உள்ளதே தவிர, கருத்து மோதல் கிடையாது.

ஆனால் கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்தது விவாதம். அர்ஜுனனின் மனத்தில் புதிய-புதிய சந்தேகங்கள் எழுந்தபடி உள்ளன. "கிருஷ்ணா, நீ சொல்வது புரியவில்லை, குழப்புகிறாய்," என்று சொல்லாமல், அர்ஜுனன் தன் மீதே தவறு உள்ளதுபோல், "என் சந்தேகம் இன்னும் தீரவில்லை," என்கிறான். எத்துணை கண்ணியமான அணுகுமுறை இது! அர்ஜுனன் தொந்தரவு பிடித்தவனாக இருந்தால், "கிருஷ்ணா, நீ சொல்வதெல்லாம் தப்பு," என்று முகத்திலடித்தாற்போல் கூறியிருப்பான்.

ஆனால் அஷ்டாவக்ரர்-ஜனகரிடையே நிகழ்வது விவாத மில்லை. எதிரெதிரே வைக்கப்பட்டுள்ள கண்ணாடிகள் பிரதிபலிப்பது போல் இவர்களுடைய கருத்துகள் பிரதிபலிப்பாகின்றன.

ஒரு பெண்மணி ஜவுளிக்கடைக்குப் போனாள். அவளுக்கு இரண்டு மகன்கள்-இரட்டையர். ஒரு மகனை மட்டும அழைத்துப் போனாள். கிறிஸ்துமஸ் பண்டிகை நெருங்கிக் கொண்டிருந்தது. மகனுக்கு ரெடிமேட் ஆடை அணிவித்துப் பார்த்தபின் அதேபோல் இன்னொரு ஜோடி வாங்கினாள். "இன்னொரு மகனுக்கு" என்று தெரிவித்தாள். கடைக்காரர், "அவனை அழைத்து வந்தால் தானே அளவு பார்த்து உடை தேர்ந்தெடுக்கலாம்," என்றார். "தேவையில்லை. இருவரும் இரட்டையர். ஒருவருக்கொருவர் கண்ணாடி மாதிரி. ஒருவனுக்கு இந்த ஆடைகளை அணிவித்துக் கண்ணாடிமுன் நிறுத்தினால், தெரிகின்ற பிரதிபிம்பம் போலவே இன்னொரு மகனும் இருப்பான்," என்று அவள் விளக்கினாள்.

இப்படித்தான் எதிரெதிர் கண்ணாடிகள்போல் அஷ்டாவக்ரரும் ஜனகரும் எதிரெதிரே நிற்கிறார்கள். ஒருவர் இன்னொருவரின்

பிரதிநிதியாகத் திகழ்கிறார்கள். ஒரே கரு முட்டையிலிருந்து வந்த இரட்டையர்போல் அஷ்டாவக்ரரும் ஜனகரும் ஒரேமாதிரி ஞானம் பெற்றவர்களாயுள்ளனர். அவர்களின் மொழிநடை சற்று வித்தியாசமாக இருக்கக்கூடும். இருவர் பாடும் பாட்டு ஒன்றே. மெட்டும் ராகமும் வித்தியாசப்படலாம். ஆகவேதான் நான் அவர்களது ஞான உரையாடலை 'மகாகீதை' என்றழைக்கிறேன். அவர்கள் ஒருவரை ஒருவர் மறுத்து விவாதம் செய்யவில்லை.

'பகவத்கீதை' வேறு தளத்தில் இயங்குகிறது. கிருஷ்ணன் தன் கருத்துகளைப் பல முறையும் வெவ்வேறு விதமாகவும் சொல்லி அர்ஜுனனுக்குப் புரியவைக்க வேண்டியிருந்தது. சிரமப்பட்டுதான் அவனை ஏற்கவைக்க முடிந்தது. 'அஷ்டாவக்ர கீதை'யில் எந்த விசேஷ முயற்சியும் தென்படவில்லை. அஷ்டாவக்ரர் எதுவும் சொன்னதுமே ஜனகர் 'புரிகிறது, நீங்கள் சொல்வது சரி' என்பதன் அடையாளமாகத் தலையசைக்கிறார். இருவரிடையேயும் ஆழ்ந்த, நெருங்கிய சம்பந்தம் இருந்தது. நெருக்கமான சிநேகிதம் இருந்தது. இங்கே குரு சொல்லி முடிப்பதற்குள் சீடன் புரிந்து கொண்டு விடுகிறான்!

'சொற்கள் (ஒலி) முதலான புலன் நுகர்ச்சிகளில் ஈடுபாடு அற்றதாகவும் கண்ணுக்குத் தெரியாவிடினும் ஆத்மாவில் ஒன்றியும், இதயத்தில் கொந்தளிப்பு இன்றியும் உள்ள மனம் படைத்தவன் தன்னில் நிலைபெற்று விடுகிறான்.' **(சுலோகம் 108)**

**சொ**ற்கள் மீது பிடிப்புக் கொள்வதைத் தவிர்க்க வேண்டும். பேசுவது சுவையானது. சப்த ரசம் என்பார்கள். சொற்கள் இசைமயமானவை. சொற்கள் தனி அழகுடையவை. இதனால்தான் காவியங்கள் பிறக்கின்றன. சுவையான சொற்களைச் சங்கிலிபோல் இணைப்பதால் கிடைப்பதையே கவிதை என்கிறோம்.

சொற்கள் பலவகை-இனியவை, கடுமையானவை, அழகானவை, குரூபமானவை. உன்னை ஒருவன் திட்டுவதும் குறிப்பிட்ட சொற்களைக் கொண்டு தான் நிகழ்கிறது. இதேபோல், காதலை வெளி யிடவும், நன்றியைத் தெரிவிக்கவும் சொற்களே தேவைப்படுகின்றன. ஆனாலும் சில வகைச் சொற்கள் இதயத்தில் அமுத மழை பொழிகின்றன. வேறு சில சொற்கள் உள்ளத்தை முள்ளாகத்

தைக்கின்றன. தீவிரமான சில சொற்கள் மனத்தை ஆழமாகக் காயப்படுத்துகின்றன.

சொற்கள் மனத்தைப் பிடித்துப் போடுகின்றன; இறுக்கமாகக் கட்டிப்போடுகின்றன. நாம் சொற்களைக் கொண்டுதான் வாழ்க்கை நடத்துகிறோம். 'உன்னை நான் நேசிக்கிறேன்' என்று ஒருவர்/ஒருத்தி நம்மிடம் சொன்னால் எவ்வளவு குதூகலிக்கிறோம்! 'நீ எதற்கும் லாயக்கில்லை' என்று ஒருவர் நம்மை இகழ்ந்தால் நாம் எவ்வளவு துவண்டு போகிறோம்!

ஆனால் சொற்கள் வெறும் ஒலி அலைகள் மாத்திரமே. அவற்றிற்கு இவ்வளவு மதிப்பு கொடுக்கலாகாது. நடைமுறையில் இது சாத்தியப்படவில்லை. இருபது ஆண்டுகள் முன் ஒருவன் உன்னைத் திட்டினான். உன் மனம் புண்பட்டது. அச்சொற்களை உன் நெஞ்சம் மறக்கவில்லை. உள்ளே ஆழமாகப் பதிந்துவிட்டது. அவனைப் பழிவாங்க இப்போதும் துடிக்கிறாய்.

உன்னை அறிவாளி என்று ஐம்பது ஆண்டுகள் முன் ஒருவன் புகழ்ந்தான். உன்னைப் புகழ்ந்தவன் சராசரி அறிவுடையவனாக மட்டும் இருந்திருப்பான். ஆனால் அவன் கொடுத்த சர்டிபிகேட்டை நீ விடாப்பிடியாக நினைவில் கொண்டுள்ளாய். நாம் வாழ்க்கையில் பணமும் பொருள்களும் மட்டுமல்ல, சொற்களையும் சேகரிக்கிறோம். நல்ல, கெட்ட, ஏச்சு, பாராட்டு என்று எல்லா வகையான சொற்களையும் சேர்த்து வைக்கிறோம்.

ஜனகர் சொல்கிறார்- "சொற்களின் மீது எனக்கு முன்பிருந்த பிடிப்பு நீங்கிவிட்டது. ஏனென்றால் 'நான்' சொற்களுக்கு அப்பாற்பட்டவன் என்று புரிந்து கொண்டேன். நான் சொற்களின் பின்புறம் தனித்து நிற்கிறேன்." காற்றடித்தால் தண்ணீரில் அலைகள் எழுவதுபோல், மனச்சலனம் காரணமாக சொற்கள் உதிக்கின்றன. அவை அலைகள் மாத்திரமே. அவை அடிப்படையில் நல்லவையோ, கெட்டவையோ அல்ல. இதனால்தான் உன்னை ஒருவன் உனக்குத் தெரியாத மொழியில் திட்டினால் நீ வாளாவிருக்கிறாய். அந்தக் கடுமையான வசவுகள் உன்னைப் பாதிப்பதில்லை.

**க**லீல் ஜிப்ரான்* எழுதிய கதை ஒன்று. ஒருவன் வெளிநாடு சென்றான். ஒரு பெரிய ஹோட்டலின் வாசலில் நின்று கவனித்தான். வேற்று மொழிக்காரன் என்பதால் பெயர்ப்பலகையைப் படிக்க முடியவில்லை. ஹோட்டலின் உள்ளே போவதும் வெளியே வருவதுமாக மக்கள் பரபரப்பாகத் தெரிந்தார்கள். அனைவரும் நேர்த்தியான உடை அணிந்திருந்தார்கள். ஏதோ அரசு விருந்து நடப்பதாக நினைத்து அந்த மனிதனும் உள்ளே சென்றான். அவனையும் சிலர் (உண்மையில் பரிமாறுவோர்) உற்சாகமாக வரவேற்றனர். அவனை வசதியான இருக்கையில் உட்கார வைத்தனர். தட்டும் கிண்ணங்களும் கொண்டுவந்து மேஜைமேல் வைத்து, பலவகையான உணவுகள் பரிமாறினர். அவனும் திருப்தியாகச் சாப்பிட்டான். உட்கார்ந்தபடியே கை கழுவ கிண்ணத்தில் தண்ணீர் வைத்தனர்.

கை கழுவியதும் எழுந்திருக்க முயன்ற அவனை உட்காருமாறு சைகை காட்டிவிட்டு, பரிமாறிய இருவர் அழகிய தட்டில் பழம், பாக்கு, பீடா, சோம்பு வைத்து அவற்றினிடையே பில்லையும் செருகி வைத்திருந்தனர். அவற்றை மென்றபின் பில்லைப் பார்த்தான். அம்மொழியைப் படிக்க முடியவில்லை. அவன் யோசித்தான்:

'இந்த ஊர் அற்புதமானது. இந்த அரண்மனைவாசிகள் முன்பின் அறியா என்னையும் முகமலர்ந்து வரவேற்றனர். இங்கு உணவு பரிமாறுவோர் நான் வரும்போதும் குனிந்து வணங்கினர். தட்டில் எல்லாம் பரிமாறியபின் அவர்கள் குனிந்து வணங்கி என்னைச் சாப்பிடுமாறு வேண்டினர். வாயால் நன்றி தெரிவிப்பதற்குப் பதிலாக, அரண்மனை அதிகாரியிடமிருந்து எழுத்து மூலமாகவும் நன்றிக் கடிதம் கொண்டு வந்துள்ளனர். அதை அழகாகத் தட்டில் வைத்துத் தரும்போது இடுப்பு ஒடிந்து விடும்போல் வளைந்து வணங்கினர். நானும் பதில் மரியாதை காட்ட வேண்டும்.'

இவ்வாறு நினைத்த அவன் எழுந்து பரிமாறுபவர்களை வளைந்து வணங்கினான். சுற்றும் முற்றும் பார்த்து மற்றவர்களையும்

* **Khalil Gibran (1883-1931)** லெபனான் நாட்டுக் கவிஞர், கட்டுரையாளர், ஓவியர். இவரது 'தீர்க்கதரிசி' நூல் (The Prophet) தமிழ் உள்பட பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது.

குனிந்து கும்பிட்டான். அவன் பில்லுக்குப் பணம் வைக்காமலும், அதைக் கையிலும் எடுத்துக்கொண்டு செல்லாததையும் பார்த்துப் பரிமாறுபவர்கள் ஓடிச்சென்று மேனேஜரை அழைத்து வந்தனர்.

அவரது கோட்டையும் டை-சூட்டையும் கண்டு அவர்தான் அரண்மனையின் தலைமை அலுவலர் என்று நினைத்த வெளியூரான் அவரையும் பலமுறை வளைந்து வணங்கினான். உணவின் தரத்தைப் புகழ்ந்து, தனக்கு விருந்தளித்ததற்குப் பாராட்டினான். அவனது மொழியை அங்கு யாரும் அறிந்திருக்கவில்லை. சாப்பிட்டதற்குப் பணம் கொடுக்காமல் தப்பிப்பதற்காக அவன் வாய்க்கு வந்தபடி உளறுவதாக மேனேஜர் நினைத்துக் கோபமடைந்தார். போலீஸை அழைத்து அவர்களிடம் ஒப்படைத்தார்.

நீதிமன்றம் அழைத்துச் செல்லப்பட்டு நீதிபதி அமர்ந்திருந்த தோரணையையும் அவருக்குக் காட்டப்பட்ட மரியாதையையும் கவனித்தான். அவரை அந்நாட்டு அரசரென நினைத்தான். நீதிபதிக்கு அவனை விசாரித்தபோது அவன் பேசிய மொழி அவருக்குப் புரியவில்லை. ஏதோ திட்டுகிறான் என நினைத்த அவர், காவலர்களிடம் அவனைக் கழுதைமேல் அமர்த்தி முக்கியத் தெருக்களின் வழியாக அழைத்துச் சென்று ஊர் எல்லையில் விட்டுவிடுமாறு கட்டளையிட்டார்.

காவலர்கள் ஆயுதங்கள் உயர்த்திப் பிடித்து அணிவகுத்துவர, வழியில் மக்கள் நின்று ஆரவாரம் செய்ய, கழுதையின் பின்னாலும் நிறையப் பேர் வர, அந்த மனிதன், 'எங்கள் ஊரில் நான் எவ்வளவு சாதாரண மனிதன். இங்கோ இவ்வளவு கோலாகலமாக ஊர்வலம் அழைத்துச் செல்கிறார்களே இந்தக் கோலத்தில் எங்கள் ஊர் ஆள் எவனாவது என்னைப் பார்க்க நேர்ந்தால், என் புகழ் ஊரில் பரவி எனக்கு எவ்வளவு கௌரவமாக இருக்கும்' என்று நெகிழ்ந்துபோனான்.

அவன் சுற்றிலுமுள்ள கூட்டத்தை ஆராய்ந்தான். தற்செயலாக, தனது நாட்டு மனிதன் ஒருவன் கண்ணில் பட்டுவிட்டான். அவன் திசை நோக்கி இவன், "இந்தாப்பா, என்னைப் பார். எவ்வளவு கௌரவப்படுத்தியுள்ளார்கள்!" என்று கத்தினான். அந்த மனிதனோ இந்த நாட்டில் பல ஆண்டுகள் வசித்தவன். இந்த நாட்டு மொழி அறிந்தவன். மக்கள் பேசுவதைக் கேட்டு நடந்ததைத் தெரிந்து

கொண்டான். நட்சத்திர ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டுப் பணம் கொடுக்காகமல் வெளியேறியவன் தனது ஊர்க்காரன் என்று தெரிந்து அவன் அவமானமாக உணர்ந்தான். அது அங்கிருந்த மற்றவர் களுக்குத் தெரியக்கூடாது என்பதற்காகத் தலையைக் கவிழ்ந்துக் கொண்டு ரகசியமாகக் கூட்டத்தைவிட்டு நழுவி வெளியேறி விட்டான். கழுதைமேல் உட்கார்ந்திருந்தவனோ 'அந்த நம் ஊர் ஆள் மிகவும் பொறாமைக்காரன் போலிருக்கிறது. என் ஊர்வலத்தைக் காணப் பொறாமைப்படுகிறான். பொறாமைக்கும் ஒரு எல்லை கிடையாதா?' என்று மனத்திற்குள் திட்டினான்.

ஒரு மொழி நமக்குப் புரியாவிட்டால் அதன் ஒலிகளுக்கு நாம் எடுத்துக்கொள்ளும் அர்த்தம் முழுதும் தப்புக்கணக்காகிவிடும். மொழி புரிந்தால், நல்ல வார்த்தை, கெட்ட வார்த்தை என்றெல்லாம் பிரித்தறியலாம். மொழி தெரியாதென்றால் அதன் எல்லாச் சொற்களும் சமம்தான். அவை வெற்றொலிகள். அர்த்தம் இல்லாதவை.

தெரிந்த மொழியிலும் சொற்களுக்கு உண்மையிலேயே, அடிப்படையிலேயே பொருள் கிடையாது. அவை ஒலிகளின் இணைப்புதானே. அவற்றிற்குத் தனி அர்த்தம் கிடையாது. இதை அறிந்தால் அப்போது ஓர் அபூர்வ நிகழ்ச்சி நடக்கும். நீ சொற்களிலிருந்து விடுதலை பெறுவாய். இதன் பலனாக, சொற்களை ஆதாரமாகக் கொண்டுள்ள சமூகத்திலிருந்தும் உனக்கு விடுதலை கிடைக்கும். ஏனென்றால் சொற்கள் இல்லாமல் சமூக அமைப்பு இருக்க முடியாது. ஆகவேதான் விலங்குகள் குடும்ப வாழ்க்கை நடத்து கின்றனவே தவிர, அனைத்தும் இணைந்து சமூக வாழ்க்கை நடத்துவதில்லை. மொழியின் காரணமாக மனித சமூகம் அமைய முடிந்தது. இரண்டே பேர் உள்ளனர் என்றாலும் அவர்கள் நெருங்கிவர மொழி தேவைப்படுகிறது. சமூகத்தின் ஆதாரமாக மொழி விளங்குகிறது.

ஒருவன் உண்மையிலேயே சந்நியாசியாக விரும்பினால் அவன் சமூகத்திலிருந்து ஓடிப்போக வேண்டிய அவசியமில்லை. மொழிக்கு உயர்ந்த இடம் கொடுக்காமலிருந்தால் போதும். மொழி, சொற்களிலிருந்தும், அவை ஒலிகளிலிருந்தும் உருவாகின்றன. மேலும், ஒலிகள் அர்த்தமற்றவை என்று தெரிந்தால் போதும். பிறகு உன்னை யாரும் திட்டினாலும் எரிச்சலடைய மாட்டாய்;

முகஸ்துதியாய்ப் புகழ்ந்தாலும் மயங்கிவிட மாட்டாய். அவையெல்லாம் வெறும் ஒலிகளே என்று பாதிப்படையாமல் அமைதியாக இருப்பாய். மக்கள் உன்னைக் கஷ்டப்படுத்தினாலும், அல்லது உனக்கு மகிழ்ச்சியூட்டினாலும் நீ அவற்றின் பாதிப்புக்குள்ளாகவில்லை என்றால் நீ ஆன்மிகத்தில் தேர்ச்சி பெற்றுவிட்டதாக அர்த்தம்.

இந்த சுலோகத்தில் அடுத்தபடியாக ஆத்மா கண்ணுக்குத் தெரியாதது என்கிறார். ஆத்மா என்பது நிச்சயமாக உள்ளது. ஆத்மாவும் கண்ணுக்குத் தெரியுமானால் பார்ப்பவன் யார்? ஆத்மாதானே உண்மையில் எல்லாவற்றையும் பார்க்கிறது. நீ ஆத்மா மூலம் அனைத்தையும் பார்க்கிறாய். ஆனால் ஆத்மாவைப் பார்க்க முடியாது. ஆகவேதான் மக்கள்ஆத்மா உள்ளதையே மறந்து விட்டார்கள். கண்ணால் எல்லாவற்றையும் பார்க்கிறோம். ஆனால் கண்ணைப் பார்க்க முடியாது. கண்ணாடியில் தெரிவது பிரதிபிம்பம் மட்டுமே, அசல் கண்ணல்ல. ஒரு கையால் எல்லாவற்றையும் பிடிக்கிறாய். அக்கையால் அதே கையைப் பிடிக்க முடியாது.

ஆத்மாதான் உண்மையில் பார்க்கிறது. வெளியே தெரிகின்ற இந்தப் பச்சை மரங்களைப் பார். ஆங்காங்கே உட்கார்ந்திருக்கும் மக்களைப் பார். உன் உடலையே வேண்டுமானாலும் பார். கண்களை மூடிக்கொண்டு உன் மனத்தில் ஓடும் சிந்தனைகளைப் பார். இன்னும் ஆழமாக இறங்கு. உணர்ச்சிகளின் நுணுக்கமான அலைகளைக் காண். எந்த சூழ்நிலையிலும் நீ எப்பொழுதும் பார்ப்பவனாக மட்டுமே இருப்பாய். ஒருபோதும் பார்க்கப்படும் காட்சியாக ஆகமுடியாது.

ஆத்மா புலப்படுவதில்லை. அது என்றும் பார்க்கப்படும் விஷயமாக ஆகாது. அது எல்லாவற்றையும் பின் தள்ளிவிட்டு இருக்கிறது. நீ எதையெல்லாம் பார்க்கிறாயோ—அது உன் உடலே ஆயினும்—அது நீ இல்லை.

இப்போதெல்லாம் 'ஆத்ம தரிசனம்' என்னும் சொற்றொடர் பரவி வருகிறது. ஆனால் இந்த இரு சொற்களும் ஒன்றுக்கொன்று முரணானவை! ஆத்மாவின் தரிசனம் கிடைக்கவே கிடைக்காது. யாரும் அதைப் பார்க்க முடியாதே! 'ஆத்ம தரிசனம்' எனும் சொல் புழக்கத்தில் வந்துவிட்டதே தவிர, அது ஆழ்ந்த அர்த்தம் கொண்டதல்ல.

ஆத்மா அனுபவமாக (அனுபூதியாக) மட்டுமே கிடைக்க வாய்ப்புள்ளது. பார்க்கின்ற எல்லாக் காட்சிகளும் மறைந்துபோய், பார்ப்பதற்கு ஒன்றுமே இல்லாமல்போய், பார்ப்பவன் மட்டுமே மிஞ்சியிருந்தாலும் அப்போதும் அவன் ஆத்மாவைப் பார்ப்பதாக அர்த்தமாகாது. பாதி ஆத்மா மீதிப் பாதி ஆத்மாவைப் பார்ப்பதாகவும் ஆகாது. எதை நாம் என்றும் பார்க்க முடியாதோ, எதைக் காட்சிப் பொருளாக்க எந்த உபாயமும் இல்லையோ, அதுவே ஆத்மா.

இந்த நிலையில் சந்நியாசி வகையினர் 'ஜபம் செய், தவம் செய், தியானம் செய்' என்று உபாயங்கள் கூறுகின்றனர். அனைத்தும் வீண். ஆத்மாவைப் பார்ப்பதற்கு எந்தக் கருவியும் கிடையாது.

இந்த உண்மையை அறிபவன் அமைதியாக விளங்குவான். அவனிடம் மன இறுக்கம் இருக்காது. அவன் வெளியே ஞானம் தேடவேண்டியதில்லை. ஆத்மாவைக்கூட தேட வேண்டியதில்லை. ஆத்மாவை அறிந்துகொள்ள வேண்டும் என்னும் ஆசையும் மிஞ்சியிருக்காது. ஏனெனில் எதையும் அறிவதற்கே ஆத்மாதான் ஆதாரம். அவன் தன்னிலேயே நிலைத்துவிடுவான், தன்மயமாகி விடுவான்.

உலகம் தன் போக்கில் செல்கிறது. மனத்தின் ஓட்டமும் சுதந்திரமாக நடைபெறுகிறது. ஆகவே 'நீ உன்னைத் தேடு' என்று சந்நியாசிகள் சிலர் கூறுவர். ஜனகரோ அந்தத் தேவைகூட இல்லை என்கிறார். யாரை, எதைத் தேடுவது? நானே என்னை எப்படித் தேடுவேன்? நானே என்னில் ஒன்றிவிட்டேனே.

**இருட்டில் பிறந்தது இவ்வுலகம்-அதில்**
**இரவு பரவியுள்ளது பகலிலும்கூட**
**உடல் மண்ணில் வாழ்ந்த போதிலும்**
**ஆத்மா சஞ்சரிப்பது விண்ணில்தான்**

ஆம், ஆத்மாவும் ஆகாயத்தைப் போலவே எல்லைகளற்றது.

**விஷமனிதர்களின் அருகிலேயே**
**வாழ்க்கை முழுதும் கழியினும்**
**நல்லோர் மீது படியாதென்றும்**
**தீயோர் சகவாசத்தின் சாயம்**

**சந்தன மரத்தின் நறுமணத்தால்**
**ஈர்க்கப்பட்ட பாம்புகள்**
**அதனைத் தழுவிப் படர்ந்தபோதிலும்**
**மரத்தில் விஷம் ஏறுவதில்லை.**

ஆத்மா என்னும் சந்தன மரத்தை உடல் என்னும் பாம்பு தழுவியுள்ளது. ஆனால் உடலின் குறைகள், உடல்வழித் தீமைகள், உடல்வழி இன்ப-துன்பங்கள் ஆத்மாவை களங்கப்படுத்த முடியாது, கறைப்படுத்த முடியாது. ஆத்மா களங்கப்படுவதே இல்லை. உடலால் பாவங்கள் நிகழ்ந்தாலும் உள்ளத்தின் ஆழத்தில் ஆத்மா எப்பொழுதும் பரிசுத்தமாகவே விளங்கும்.

ஒரு கொலையாளியை முகம் பார்க்கும் கண்ணாடி முன் கொண்டுவந்து நிறுத்தினால் அவனது பிரதிபிம்பம் காரணமாகக் கண்ணாடியும் கொலையாளியாகக் கருதப்படுவதில்லை. கண்ணாடி எதிரில் கொலை நிகழ்ந்தாலும் கண்ணாடி கொலையாளியாகி விடாது. நடக்கின்ற சம்பவங்களுக்கெல்லாம் காரணம் உடலும் மனமும்தான். இவற்றைக் கடந்துதான் நிஜமான நீ இருக்கிறாய். காட்சிகளில் சிக்கிக்கொண்டால் காண்பவனை மறந்துவிடுவோம்!

**மு**ல்லா நஸ்ருத்தீன் செருப்பு வாங்க ஒருநாள் இரவு கடைக்குப் போனார். ஏற்கெனவே அங்கு ஒருவர் காத்திருந்தார். அவருக்குப் பலவகையான செருப்புகள் காட்டப்பட்டன. சரியான ஜோடியைத் தேர்ந்தெடுத்து அவர் போனார். பிறகு இரண்டு-மூன்று பேர் அவ்வாறே வந்து பல ஜோடிகளை மாட்டிப் பார்த்துப் பொருத்தமானதை வாங்கிப் போனார்கள். முல்லா இருபதுக்கு மேற்பட்ட ஜோடிகளை முயன்று பார்த்தார். எதுவும் அளவு சரியாக இருப்பதாக அவர் ஒப்புக் கொள்ளவில்லை. கடைக்காரர் களைத்துப் போய்விட்டார். கடையடைக்கும் நேரமும் வந்துவிட்டது. திடீரென விளக்கு அணைந்துவிட்டது. அதே சமயம் முல்லா, ‘சரியான அளவு செருப்பு கிடைத்துவிட்டது’ என்று கத்தினார். ‘அப்பாடா, இவரும் செருப்பு வாங்கிடுவார். கடையை மூடலாம்’ எனக் கடைக்காரர் நினைத்தபோது மின்சாரம் வந்துவிட்டது. கடைக்காரர் முல்லாவைப் பார்த்துத் திகைத்துப் போனார். ஏனெனில் முல்லா ஒரு காலை செருப்பு வைக்கும் பெட்டியில் நுழைத்து வைத்திருந்தார்!

வெளிச்சம் வந்துவிட்டால், ஒளி பிறந்துவிட்டால், நீ எங்கே காலை வைத்து உட்கார்ந்திருக்கிறாய் என்பது தெரிந்துவிடும். பார்வையில் அகப்படாத ஒன்று பார்வைக்குத் தெரியும் உடலுடன் இணைந்துள்ளதைப் புரிந்து கொள்வாய். அலைகளற்ற ஒன்று அலைகளுடன் சேர்ந்திருக்கிறது என்னும் விழிப்புப் பெறுவாய்.

அந்த வெளிச்சம் எப்படி வரும்? அடுத்த சுலோகம் அதைத் தெரிவிக்கிறது.

'மன இறுக்கம் போன்ற தொல்லைகளிலிருந்து விடுபட சமாதிநிலை மேற்கொள்ளப்படுகிறது. இப்படிப்பட்ட தொடர்பைக் கவனித்தே நான் சமாதி மேற்கொள்ளாமலே என்னில் நிலை பெற்றேன்' **(சுலோகம் 109)**

**இ**து புரட்சிகரமான சூத்திரம்.

'சமாதி இல்லாமல் நான் என்னில் ஆழ்ந்துள்ளேன்' என்கிறார் ஜனகர்.

ஜனகரின் பார்வையில், நோய்க்கு ஏற்றபடியான மருந்து தரவேண்டும் என்னும் அடிப்படையில், மனத்தில் கொந்தளிப்பு இருந்தால், தியானம் செய்வது அவசியமாகிறது.

ஆங்கிலத்தில் தியானத்தை மெடிடேஷன் என்கிறார்கள். அதுவும் மெடிசின் (மருத்துவம்) என்பதும் ஒரே வேர்ச்சொல்லிருந்து தோன்றியவை அந்த வேர்ச்சொல்லின் பொருள் மருந்து என்பதாகும். இவ்வாறு மெடிசின் உடலுக்கான மருந்தாகவும், மெடிடேஷன் ஆத்மாவிற்கான மருந்தாகவும் கூறப்படுகின்றன.

ஆனால் ஆத்மா ஒருபோதும் நோயால் பாதிக்கப்பட்டதில்லை என்றும், அதற்கு மருந்து எதுவும் தேவைப்படுவதில்லை என்றும் ஜனகர் கூறுகிறார். மனம்வரை மருந்து பயனளிக்க முடியும். ஆனால் நீ உன்னை மனத்துடன் தொடர்புடையவனாகக் கருதினால், அந்த பிரமையாகிய நோயை நீக்க மருந்து தேவைப்படும். இதற்கு மாறாக, நீ உன்னை மனத்திலிருந்து தனிப்பட்டவனாகவும், என்றுமே இதனுடன் சேர்ந்தவனில்லை எனவும் கருதினால் பிறகு மருந்து தேவைப்படாது.

ஆத்மாவை தியானிப்பதாலும்கூட நீ இன்னும் சிறிதளவாவது கட்டப்பட்டிருக்கிறாய். ஏனெனில் உன் நடவடிக்கைகள் தொடர்கின்றன. 'நான் தியானம் செய்கிறேன்' என்று சொல்லும்போது அதை நீ ஒரு செயலாகக் கருதுவது தெரிகிறது. தியானம் என்பதோ எதையும் முனைந்து செய்யாமலிருப்பதை அல்லவா குறிக்கிறது. 'நான் சமாதியில் ஆழ்ந்திருந்தேன்' என்று நீ கூறினால், அதற்கு ஜனகர், "நீ சமாதிநிலையில் இல்லாதிருந்ததும் உண்டா?" என்று திருப்பிக் கேட்பார். ஆகவே நீ வெளியுலகத்திலிருந்து பெறும் சமாதி, அந்த சமாதி நிலையை மேற்கொள்ள நீ செய்யும் ஏற்பாடுகள் உன் மனம் வரைதான் தாக்கம் ஏற்படுத்தும். அவை உன் மனத்தைக் கடந்து செல்லா.

பல தருணங்களில் உன் மனம் அமைதியாக விளங்கியிருக்கும். காற்றடிப்பது நின்றுவிட்டது. நீரில் அலைகள் எழவில்லை. நீ சமாதி அடைந்துவிட்டதாக நினைக்கிறாய். பரமானந்தமாக உணர்கிறாய். சற்று நேரம் கழித்துக் காற்று வீசுகிறது. அலைகள் தலைதூக்குகின்றன. காற்று உன் வசத்தில் இல்லையே. காற்றடித்து, அலை எழும்பி, உன் மௌனம் பங்கப்படுகிறது.

சமாதி நிலையைக் கடந்தபிற்குதான் வாஸ்தவமான சமாதி ஏற்படுகிறது என்கிறார் ஜனகர்! பிறகு உலகில் உன்னை எந்த நிகழ்ச்சியும், எந்தச் செய்தியும் தடுமாற வைக்காது.

சமாதி என்பதை ஒரு செயலாகக் கருதும் போதுதான் மனத்தில் சந்தேகங்கள், குழப்பங்கள் தோன்றுகின்றன. அப்போது அவற்றைத் தணிக்கவாவது சமாதியை மேற்கொள்ள வேண்டியுள்ளது.

இந்த சூத்திரம் கூறும் நடவடிக்கை ஞானத்தின் எல்லையாகும். இதில் செயல் அல்லது கர்மத்திற்குத் துளிக்கூட இடமில்லை. இது யோகத்துடன் தொடர்பு கொண்டதில்லை. செயலின்மை என்பதே இதன் அடிப்படை. நீ யார், எத்தகையவன் என்பதை விழித்துப் பார்த்து அறிந்துகொள். நீ முயன்று செய்யவேண்டியது எதுவுமில்லை.

'உபயோகமானது-பயனற்றது என்று பிரித்தல், இன்பம்-துன்பம் என்று வகைப்படுத்தல் ஆகியவற்றைக் கடந்துவிட்டேன். என் நிஜ சொரூபத்தில் நான் ஆழ்ந்துவிட்டேன்.' ஜனகர் கூறும் இச்சொற்களைக்

கவனித்துக் கேளுங்கள்; மனத்திற்குள் சொல்லிப் பாருங்கள். இவை உங்கள் உள்ளத்தினுள்ளே விதைகளாகப் பதியட்டும்.

என் உபதேசங்களின் சாரமும் இதுவே: நீ எப்படி இருக்கிறாயோ அவ்வாறே பரமாத்மா உன்னை சுவீகரிக்கிறார். தேவையில்லாமல் படபடப்பாக அங்குமிங்கும் ஓடாதே. முதலில் நீ புண்யாத்மா, பிறகு மகாத்மாவாக ஆனால்தான் கடவுள் உன்னை ஏற்பார் என்று சொல்லிக் கொண்டிராதே. நீ உண்மையில் எப்படியோ அப்படியே இருந்துவிடு. இதை மெச்சி உன்னைக் கடவுள் ஏற்றுக்கொண்டார் என்றே நீ கருதலாம்.

உனது மனம் எப்பொழுதும் எதன் பின்னாலாவது ஓடியபடியே இருக்கிறது. முதலில் பணத்துக்குப் பின்னால் ஓடுகிறது. செல்வத்தை அனுபவிப்பது சலித்துப் போனால் தியானத்தின் பின்னால் ஓடுகிறது. ஓடுவது தொடர்கிறது. ஓடியபடியே இருக்கும்வரை நீ உன்னைப் பிடிக்க முடியாது. ஏனெனில் ஓடுவது வெளியே. 'நீ' இருப்பது உள்ளே. ஆகவே ஓடாதே. நின்றுவிடு. உனக்குள் நிலைத்துவிடு.

உலகத்தைப் பொறுத்தவரையில், இங்கே ஓடாமல் எதையும் பெற முடியாது; சம்பாதிக்க முடியாது. கடவுளுடன் சம்பந்தப்பட்ட உலகில் நீ ஓடினால் கைவசம் உள்ளதையும் இழந்துபோவாய். ஆன்ம உலகில் நீ ஓடாமல் ஸ்திரமாக இருந்தால்தான் பயன் விளையும். ஏனெனில் உலகக் கணக்கும் கடவுளின் கணக்கும் வெவ்வேறு விதம். வெளியுலகில் வெறிபிடித்தவன்போல் நீ ஓடுவதால்தான் உள்ளே என்ன இருக்கிறது என்று உனக்குத் தெரியாமல் போய்விட்டது.

'இறைவன் போன்ற குருதேவரே! எது சரி-எது தவறு என்ற இரண்டும் என்னைவிட்டு நீங்கிவிட்டன. என்ன செய்யலாம்-என்ன செய்யக் கூடாது என்பதும் விலகிவிட்டன. எது சுபம்-எது அசுபம் என்பது பற்றி எனக்கு இப்போது கவலை இல்லை. ஏனென்றால் நான் செய்வதற்கென்று ஒரு கருமமும் இல்லை. நான் கர்த்தா இல்லை. இதனால் நான் இன்பமோ, துன்பமோ உணர்வதில்லை. நான் உண்மையில் எப்படியோ அதிலேயே நிலைத்துவிட்டேன்.' **(சுலோகம் 110)**

**நா**ன் புதியவனாக ஆகிவிடவில்லை. மகாத்மாவாக மாறிவிடவில்லை. நான் எதையும் தேடிப் பெறவில்லை. நான்

உண்மையில் எப்படியோ இந்த சுயவடிவிலேயே நிலைபெற்றுள்ளேன். என் சுபாவப்படியே நான் உள்ளேன். எல்லாம் இயல்பென எண்ணுகிறேன். இயல்பாக எல்லாம் செய்கிறேன்.

இது அபூர்வமான உபதேசம். இதை விட உயரத்தை வேறு எந்த உபதேசமும் தொட்டதில்லை. இறுதி உபதேசம் என்றும் சொல்லலாம். ஏனெனில் இது கடவுள் நம்மை சுவீகரிப்பதைப் பற்றியது. கூடுதலான விழிப்புடன் இந்த உபதேசத்தை உன் அனுபவமாக மாற்று.

நான் பேசுவதைக் கேட்கின்ற இந்த சமயத்தில் நீ சாந்தமான மனநிலையில் இருப்பதாக வைத்துக் கொள்வோம். மேலும், நீ உன்னில் லயித்திருக்கிறாய். உடலாலோ, மனத்தாலோ அங்குமிங்கும் ஓடவில்லை. உன்னிடம் சலனமேதுமில்லை. இந்நிலையில் நீ பெறுவதற்கென்று என்ன உள்ளது? இப்போதுள்ள நிலையில் நீ ஆன்ம அனுபவத்தின் ருசியைத் தெரிந்து கொண்டுள்ளாய். அதற்கப்பால் ஒன்றுமில்லையே.

புத்தருக்கு பூரண ஞானம் வாய்த்தபோது ஒருவர், "உங்களுக்கு இதன்மூலம் என்ன கிடைத்தது?" என்று கேட்டார். புத்தர் அதற்கு, "புதிதாக எதுவும் கிடைக்கவில்லை. நான் தேடியதை ஏற்கெனவே நான் பெற்றிருந்தேன் என்பதை இப்போது நான் அறிந்து கொண்டேன். என் வீட்டிலேயே (ஞானச்) செல்வம் இருந்தும் இதுவரை எங்கெங்கோ தேடியலைந்தேன்," என்று பதிலளித்தார்.

**யூ**தர்களின் கதை ஒன்று. ஒரு கிராமத்தில் வாழ்ந்த யூதன் ஒருவன் ஒரு விசித்திரக் கனவு கண்டான். தலைநகரில் ஒரு மாளிகைக்கு எதிரில் புதையல் புதைக்கப்பட்டிருப்பதாகக் கனவு. அவன் அதைக் கனவுதானே என்று அலட்சியப்படுத்தி விட்டான். இரண்டாம் நாளும்அதே கனவு, கூடுதலான தகவலுடன்! மாளிகை எதிரில் ஒரு பாலத்தின் இடது கரையில் செல்வம் புதைக்கப்பட்டிருப்பதும், பாலத்தின்மேல் ஒரு சிப்பாய் நடந்தபடி காவல் காப்பதும் கனவில் தெரிந்தது. மூன்றாம் நாளும் அதே கனவு. கூடுதலாக, யாரோ பேசுவது கேட்டது. "ஏன் இப்படிப் படுக்கையிலேயே கிடக்கிறாய்? போய்த் தேடு. மீண்டும் இதுபோன்ற வாய்ப்பு கிடைக்காது. இந்தப் புதையலைக் கொண்டு அடுத்த தலைமுறையினரும் வசதியாக வாழலாம்," என்று குரல் கேட்டது.

இதற்குமேல் அந்த யூதனால் பொறுக்க முடியவில்லை. நீண்ட காலத்திற்குப் பிறகு தலைநகருக்குப் புறப்படுகிறான். அவனுக்கு நம்பிக்கையில்லை. கனவை நம்பிப் போவது சரியா என்று பலமுறை அவனுக்கு சந்தேகம் எழுந்தது. தான் ஒரு முட்டாளோ என்றுகூட நினைத்தான். குறிப்பிட்ட விதமான மாளிகையும் பாலமும் உண்மையிலேயே இருக்க முடியுமா என்றும் ஐயம். சரி, எல்லாம் பொய்யென்றாலும் தலைநகரையாவது சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பலாம் என்று புறப்பட்டான்.

ஆம், அந்த மாளிகை உண்மைதான். எதிரே பாலமும் தெரிந்தது. அதன்மேல் சிப்பாய் ஒருவன். அவனது தோற்றம் கனவில் வந்தவனது தோற்றத்தை ஒத்திருந்தது. எல்லாம் சரி, அந்த சிப்பாய்க்குத் தெரியாமல் எப்படிப் பாலத்தின் கீழே தோண்டி புதையலை எடுப்பது?

அந்த சிப்பாய் அந்தப் பாலத்திலிருந்து யாராவது குதித்துத் தற்செயலை செய்து கொண்டு விடாதபடி தடுப்பதற்காக நியமிக்கப் பட்டிருந்தான். அவனும் அந்த யூதனைக் கவனித்து விட்டான். அவன் பாலத்தின் கீழேயும், மேலே நடக்கும் தன்னையும் ஏன் மாறி-மாறி பார்க்கிறான் என்று சிப்பாய்க்கு சந்தேகம் வந்தது. தான் ஒரு திசையில் நடக்கும்போது யூதன் எதிர்திசை சென்று எதையோ ஆராய்கிறான் என்பதையும் கண்டான்.

சில மணி நேரம் இப்படியே சென்றபின் சிப்பாயால் அமைதியாக இருக்க முடியவில்லை. அவன் யூதனைக் கூப்பிட்டு, "இந்தாப்பா, நீ இந்தப் பக்கமாகவே ரொம்ப நேரமா இப்படியும் அப்படியுமா போய்க்கிட்டு இருக்கே? யாரையாவது எதிர்பார்க்கிறியா? எதையாவது தொலைச்சிட்டு அதை தேடிக்கிட்டிருக்கியா? ஏதாவது துக்கமா! ஏதாவது வலி-வேதனையா? என்ன பிரச்சினை? அதுக்காக நான் பார்க்காத போது பாலத்திலேயிருந்து குதிச்சு சாகிறதா திட்டமா?" என்று அதட்டினான்.

யூதன் வேறு வழியின்றிக் கூறினான்: "உங்களிடமிருந்து உண்மையை ஏன் மறைக்க வேண்டும்? ஒரு விசித்திரமான கனவு மூன்றுநாள் சேர்ந்தாற்போல் வந்தது. நீங்கள் நிற்கும் இந்த இடத்தின் நேர்கீழே ஒரு புதையல் மூடிவைக்கப்பட்டிருக்கிறது."

சிப்பாய் பலமாகச் சிரித்தான். "நம்ப முடியாத அதிசயமாக இருக்கிறதே. நானும் ஒரு கனவு கண்டேன். ஒரு குறிப்பிட்ட பெயருடைய கிராமத்தில், ஒரு குறிப்பிட்ட யூதன் வசிக்கிறான். அவன் தூங்குவதற்காகக் கட்டில் விரித்திருக்கும் இடத்தின்கீழ் புதையல் மறைந்திருக்கிறது. போய் எடுத்துக் கொள்ளும்படி கனவில் குரலும் கேட்டது. எனக்கென்ன பைத்தியமா இந்தக் கனவை நம்புவதற்கு? அப்படி ஒரு கிராமம் உள்ளதா, அங்கே அந்த குறிப்பிட்ட யூதன் உள்ளானா என்றெல்லாம் யார், போய்த் தேடுவது? இதெல்லாம் உண்மையானாலும் எப்படி அவனது வீட்டுக்குள் நுழைந்து, அவனுக்குத் தெரியாமல் தரையைத் தோண்ட முடியும்? அது போல்தான் உன் கனவும். இந்தப் பாலத்தின் கீழே தோண்டும் வேலை நடந்தபடிதான் உள்ளது. புதையல் எதுவும் வெளிப்பட்டதில்லை. முட்டாளே, ஊருக்குத் திரும்பிப்போ," என்று யூதனை சிப்பாய் விரட்டினான்.

சிப்பாய் குறிப்பிட்ட கிராமம் தனது கிராமம்தான் என்றும், சிப்பாய் சொன்ன ஆளின் பெயர் தன் பெயர்தான் என்பதும் யூதன் புரிந்துகொண்டான். உடனே அவன் எச்சரிக்கையானான். சிப்பாயிடம், "எனக்கு நல்ல புத்திமதி சொன்னதற்கு நன்றி" என்று கூறிவிட்டு அவசரமாக கிராமத்துக்குத் திரும்பினான். கட்டிலின் கீழே தரையைத் தோண்டினான். தங்கக் காசுகள் நிறைந்த குடம் கிடைத்தது!

இப்படித்தான் ஆன்மிக உலகிலும், நாம் எதைத் தேடி வெளியில் அலைகிறோமோ, வெளி உபாயங்களை நாடுகிறோமோ, அது நமக்குள்ளேயே இருக்கிறது. நாம் இந்த உலகிற்கு வருகையிலேயே அதை எடுத்துக்கொண்டுதான் வந்தோம். அது நமது இயற்கையிலேயே கலந்திருக்கிறது. இது தெரிந்தால் நீ எப்படி உள்ளாயோ அப்படியே, இக்கணமே, முழுமையான வீடுபேற்று நிலையை (நிர்வாண நிலையை, அடைந்துவிடுவாய். இதற்காக ஏதாவது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றால்தான் காலதாமதமாகும். மகாத்மா ஆக நீண்ட காலமும் முயற்சியும் தேவை. பரமாத்மா ஆவதற்குத் தாமதமேயாகாது. நீ உன்னை யாரென ஆராய்ந்தால் நீ ஏற்கெனவே பரமாத்மாவாக இருப்பது தெரியவரும்.

மகாத்மாவாக ஒருவன் ஆவதற்குப் பல பிறவிகள்கூட தேவைப்படலாம். ஏனெனில் இந்த பரிணாம வளர்ச்சி நடைபெற,

தீயதை வெட்டி எறிய வேண்டும். நல்லதைப் பாதுகாப்பாகச் சேமிக்க வேண்டும். தீங்கிழைக்கக் கூடாது. நாளும் நல்லதே செய்யவேண்டும். எதை-எதைக் கைவிட வேண்டும், எவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதற்கான விதிமுறைகள் உள்ளன. இந்த நடவடிக்கைகள் எல்லாம் முழுமைபெற நீண்ட காலம் ஆகும். அதன் பிறகும் மகாத்மா ஆகிவிடுவது நிச்சயமில்லை. உள்ளே இருக்கும் பரமாத்மாவை உணராமல் யாரும் மகாத்மா ஆகிவிட முடியாது. அதுவரை மகாத்மா என்று குறிப்பிடுவது போலியான பட்டமாக, மேலோட்டமான அழைப்பாக மட்டுமே இருக்கும்.

ஒருவன் மகாத்மா என்னும் நிலைவரை வந்துசேர்வதை முழுமையான புரட்சி என்று கூறிவிட முடியாது. 'நான் கடவுள்' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்று ஒருவன் தைரியமாக, மனபூர்வமாக அறிவிக்கக்கூடிய நிலையை அடைவதுதான் உண்மையிலேயே புரட்சியாகும். நீ உடல் அல்ல; நீ மனம் அல்ல; நீ பார்ப்பவன் (சாட்சி) மட்டுமே. இந்த மூன்று மட்டும் உன் நினைவில் ஆழமாகப் பதிந்திருந்தால் போதும்.

அவ்வப்பொழுது உட்கார்ந்தபடி சாந்தமான மனநிலையில், 'நான் அடிப்படையில் எப்படி உள்ளேனோ அந்த நிலையிலேயே, கடவுளிடத்திலேயே நிலைத்துள்ளேன்' என நினை. என்றாவது நள்ளிரவில் எழுந்து உட்கார். எந்த விளக்கும் போடாமல் கும்மிருட்டில் 'நான் எப்படி உள்ளேனோ அந்த நிலையிலேயே லயித்திருக்கிறேன்' என்பது பற்றி ஆழமாக யோசி. இது கர்த்தா நிலை. அடுத்து உன்னைப் பற்றி உனக்குள்ளே சொல்லிக்கொள், 'நீ இங்கே, இப்பொழுது எப்படி இருக்கிறாயோ அதிலேயே நிலைத்துள்ளாய்.' இது சாட்சி நிலை. இது ஒரே காரில் 'கியர்' மாற்றுவது போல்தான்.

'கியர்' மாற்றுவதைக் கற்றுக்கொள்ளப் பல பயிற்சிகள் தேவைப்படலாம். அதன் பிறகு கியர் மாற்றுவது தன்னிச்சையாகவே நிகழ்வதால் தனிக் கவனம் தேவைப்படுவதில்லை. தியானம் ஆன்மிகத்தில் உபயோகமானது. ஆனால் அது ஒரு கருவி மட்டுமே. ஆகவே தியானி (தியானிப்பவன்) என்னும் நிலையுடன் நின்றுவிடாதே. ஆன்மிகத்தில் சந்நியாசத்தால் நல்ல முன்னேற்றமுண்டு. ஆனால் அதுவே போய்ச்சேருமிடமில்லை. அது வழிகாட்டி மட்டுமே. ஆகவே சந்நியாசி ஆவதுடன் நின்றுவிடாதே. பூஜை செய்,

பிரார்த்தனை செய். இவையும் ஆன்மிகத்தில் உதவும் ஆனால் பூஜாரி ஆவதுடன் நின்றுவிடாதே. ஏனெனில் நீ ஏற்கெனவே கடவுள்தான். வேறு எவராகவும் நீ இருக்க வாய்ப்பில்லை.

நான் இவ்வாறு சொல்லும்போது நீ காதுகொடுத்துக் கேட்பது சந்தேகமே. நான் சொல்வதை நம்பாவிடிலும் தற்சமயம் அதை கேட்க மட்டுமாவது செய். நீ ஏன் கேட்க விரும்புவதில்லை என்றால், நீ இன்னமும் கர்த்தாவாக இருப்பதில் சுவை காண்கிறாய். இதுபற்றி கேட்டால் நீ 'அதிலென்ன சந்தேகம்? நான்தான் கர்த்தா என்ற முறையில் குடும்பத்தைப் பராமரிக்கிறேன்' என்கிறாய். மனைவியின் முன்னால் "என் காலைத் தொட்டு வணங்கு," என்று திமிராகப் பேசுகிறாய். பாவம் அவளும், "நாதா, ஆம், நான் உங்கள் அடியாள்," என்கிறாள். மகனிடம் சொல்கிறாய், "நான்தான் உன்னை வளர்த்து, படிக்கவைத்து, பெரியவனாக்குகிறேன். இதை மறக்காதே," என்கிறாய். நீ பணம் சம்பாதித்து வரும்போது ஒவ்வொருவரும் உன்னை தைரியசாலி, போராடி வென்றவன் என்று பாராட்ட வேண்டுமென எதிர்பார்க்கிறாய். நீ தேர்தலில் ஜெயித்து, அமைச்சர் பதவி பெற்றால் இதையெல்லாம் சாட்சி மனப்பான்மையோடு பார்ப்பதில் என்ன சந்தோஷம் இருக்கப் போகிறது என்று நீ கேட்பாய். 'போட்டியிட்டேன், வீழ்த்தினேன், தோற்கடித்தேன், வெற்றி பெற்றேன்' என்றெல்லாம் உன்னை முன்னிலைப்படுத்திச் சொல்வதல்லவா சுவையானது' என்று நீ வாதம் செய்வாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீனும் அவர் தம்பியும் வெவ்வேறு ஊரில் வசித்தனர். போனில் பேசிக் கொள்வார்கள். ஒருமுறை போனில் நலம் விசாரித்தபின் தம்பி முல்லாவிடம், "அம்மா உங்களை ஐந்நூறு ரூபாய் அனுப்பச் சொல்கிறார்கள்," என்றான்.

"தம்பி, என்ன சொல்கிறாய்? நீ பேசுவது காதில் சரியாக விழவில்லை," என்று பாசாங்கு செய்தார் முல்லா.

இதுவரை தம்பி பேசியதெல்லாம் முல்லாவிற்குத் தெளிவாகக் கேட்டது. பணம் பற்றி குறிப்பிட்டதும் பேச்சு காதில் விழவில்லையாம்!

விடாக்கண்டனான தம்பி உரத்த குரலில், "அண்ணாச்சி, அம்மா உங்களை ஐந்நூறு ரூபாய் அனுப்பச் சொல்லிக் கேட்கிறார்கள்," என்றான்.

முல்லாவும் பிடிகொடுக்காமல், "நீ பேசறது ஒரு எழவும் புரியவில்லை," என்றார்.

மூன்றாம் முறை தம்பி கூடுதலாகச் சத்தம் போட்டுப் பணம் கேட்டபோதும் முல்லா தனக்குக் காதில் சரியாக விழவில்லை என்றே பிடிவாதம் செய்தார்.

தம்பி கத்திப் பேசியதும், அண்ணன் பதிலும் டெலிபோன் ஆபரேட்டர் காதில் விழுந்தது. அவர் இடையில் குறுக்கிட்டு முல்லாவிடம் பேசினார். "இந்தாங்க. லைன் தெளிவா இருக்கே. உங்களுக்குச் செய்தி எப்படிப் புரியாமப் போகும்? உங்கள் அம்மா உங்களை ஐந்நூறு ரூபாய் அனுப்பச் சொல்வதாக உங்கள் தம்பி கேட்பது காதில் விழவில்லையா?"

முல்லா கேட்டார், "ஏன் காதில் செய்தி கேட்கவில்லை. ஐந்நூறு ரூபாய் அனுப்பச் சொல்லியா உங்கள் காதில் விழுந்தது?"

"ஆமாம். பணம் கேட்டது என் காதுக்குத் தெளிவாகப் புரிந்தது."

"அப்படியானால் நீங்களே என் அம்மாவுக்கு ஐந்நூறு ரூபாய் அனுப்பிவிடுங்களேன்," என்றார் முல்லா நிதானமாக!

ஒருவருக்கு ஒருவர் பேசுவது கேட்கத்தான் செய்கிறது. ஆனால் பணம் கேட்டுவிட்டால் காதில் எதுவும் விழுவதில்லை!

**ஒ**ரு கிராமத்தில் ஒரு கருமி. அவர் லட்சாதிபதியாக இருந்தபோதிலும் தானம் கொடுப்பது அரிது. யாராவது தானம் கேட்டால், "காதில் சரியாக விழவில்லை," என்று சாக்குச் சொல்லுவார். காலப்போக்கில் உண்மையிலேயே அவரது கேட்கும் சக்தி குறைந்து போனது. ஆனாலும் தானம் கேட்டு வந்த ஒருவன் விடாக்கண்டனாக பலமாகக் கத்திப் பேசினான். அவனை எதனாலோ தவிர்க்க முடியாத நிலை.

"இந்தாப்பா, இடது காது பக்கமாக வந்து பேசு. எனக்கு வலக்காது சரியாக் கேட்காது," என்றான் கருமி.

வந்தவன் கருமியின் இடக்காதின் அருகில் வந்து, "நன்கொடையாக நூறு ரூபாய் கொடுங்கள்," என்று கத்தினான். உடனே

கருமி, "என் இடக்காதும் சரியாகக் கேட்கவில்லை. வலக்காது பக்கமாக வந்து பேசு," என்றான். வந்தவன் யோசித்தான் இரண்டு காதும் கேட்காதவனிடம் எவ்வளவு பணம் கேட்டால் என்ன என்று நினைத்தான். கருமியின் வலக்காது பக்கம் வந்து, "இருநூறு ரூபாய் நன்கொடை கொடுங்கள்," என்று கத்தினான். அவனைத் தவிர்க்க முடியாது என்பதால் கருமி, "நீ இடக்காதில் சொன்னதுதான் வலக்காதில் சொன்னதைவிடப் புரிகிறது," என்று கூறினான்.

எல்லாம் கேட்கத்தான் செய்கிறது. ஆனால் காது கேளாதவன் போல் உட்கார்ந்திருக்கிறாய். காதில் விழுவதைக் கேட்டால் உன் வாழ்க்கையில் புரட்சி தோன்றிவிடும். அதற்கு நீ ஏதோ செய்ய வேண்டும் என்று ஆலோசனை கூறினால் சரி என்பாய். ஒன்றைச் செய்வதற்கு அவகாசம் தேவை என்பதால் உடனே ஆன்மிகப் புரட்சி நிகழ்ந்துவிடாது. 'ஒன்றும் அவசரமில்லை. ஆயுள்தான் இருக்கிறதே. நாளை பார்க்கலாம். இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம்' என்று தள்ளிப்போடுவாய்.

ஜனகர் கூறுவதைக் கேட்க உனக்கு தைரியமிருக்காது. ஏனென்றால் அவர் இப்போதே, உடனடியாகவே புரட்சி நடந்திட முடியும் என்கிறார். நீ நழுவப் பார்க்க அவர் துளிக்கூட அவகாசம் தருவதில்லை. நீ தப்பித்து ஓட உபாயம் எதுவும் அவர் தருவதில்லை. நீ முடிவெடுப்பதைத் தள்ளிப்போட அவர் வாய்ப்பு அளிப்பதில்லை.

இதனால்தான் அஷ்டாவக்ர கீதையின் தாக்கம் பரவலாகவோ, ஆழமாகவோ அமையவில்லை. அதனுடன் ஒப்பிடுகையில் கிருஷ்ணனின் பகவத்கீதையோ உலகெங்கும் பரவி புகழுடன் விளங்குகிறது. அஷ்டாவக்ர கீதை பின்தங்கிவிட்டமைக்குக் காரணம் அது ஆன்மிகப் புரட்சி நம் ஆளுமையில் உடனே நிகழ முடியும் என்கிறது. இத்தகைய உத்தரவாதம் தருவதற்கு அளவற்றதான, அரியதான துணிச்சல் தேவை. மக்கள் இம்மாதிரி அறிவிப்பைப் படிப்பதில்லை; காதாலும் கேட்பதில்லை. ஏனெனில் ஆன்மிக விஷயத்தில் அவர்கள் அவசரப்பட விரும்புவதில்லை. வசதிப் படும்போது மெதுவாகப் பார்த்துக் கொள்ளலாம் என்பதுபோல் அமைந்த உபதேசங்களையே கேட்கிறார்கள், படிக்கிறார்கள்.

'ஆசிரமம் உண்டு; ஆசிரமம் கிடையாது. தியானம் உண்டு-இல்லை. உள்ளம் ஏற்கிறது-தடுக்கிறது. இவை எல்லாவற்றிலிருந்தும் தோன்றுகின்ற மாற்றுகளைப் பார்த்து, இம்மூன்றிலிருந்தும் விடுதலை பெற்று என்னுள் வேரூன்றியுள்ளேன்.' **(சுலோகம் 111)**

**ஹி**ந்துக்கள் வாழ்க்கையை நான்கு ஆசிரமங்களாகவும் (கட்டங்கள் அல்லது நிலைகளாகவும்) சமூகத்தை நான்கு வருணங்களாகவும் பிரித்துள்ளனர். ஜனகர் இப்பிரிவுகளை ஏற்கவில்லை. இவையும் நம்மைக் கட்டிப்போடும் வலை போன்றவை என அவர் நினைக்கிறார். எதையும் பிரிப்பதே உபத்திரவம்தான். பிரிவுகளை வைத்துக்கொண்டு பிரியாத ஒன்றை, பிரிக்க முடியாது ஒன்றை எப்படித் தேடி அடைய முடியும்? பிராமணன், சூத்திரன் என்பதெல்லாம் ஏமாற்று வேலை. மக்களைச் சுரண்டுவதற்காக அரசியல்வாதிகள் செய்த ஏற்பாடு இவை. பரமாத்மா பிராமணரோ, சூத்திரரோ இல்லை.

ஆசிரமப் பிரிவும் சரியில்லை. வாழ்க்கையில் நாலாவது கட்டத்தில்தான் ஆன்மிகத்தில் இறங்குவது என்பது தள்ளிப்போடுவதைக் காட்டுகிறது. ஆன்மிக ஞானம் எந்த வயதிலும் கிடைக்கக்கூடியது.

**ஆ**தி சங்கராச்சாரியாரின் வாழ்க்கையில் ஒரு சம்பவம். பெரிய ஞானிகளும் சிறிய விஷயங்களில் சறுக்கி விழுவார்கள் என்பதைக் காட்டுகிறது. அவர் குளித்துவிட்டு வருகையில் எதிரில் வந்தார் சூத்திரர் ஒருவர். குறுகிய பாதையாதலால் அவர் தன்மேல் பட்டுவிட்டால் தீட்டாகிவிடும் என்று சங்கரர் அலறினார். 'விலகிப் போ' என அதட்டினார்.

அந்த சூத்திரர் படிக்காத ஞானி. அவர் சொன்னார், "சாமி, நீங்க அத்வைதம்னு என்னவோ பிரச்சாரம் செய்யறீங்க. நாம எல்லாரும் ஆத்மா-வகையில் ஒண்ணுன்னும் சொல்றீங்க. பிறகு பிராமணன், சூத்திரன்கிற பிரிவுகள் எங்கேயிருந்து வந்தன? நான் உங்கள் மேல் பட முடியும் என்பது உண்மைதான். யாரை, யாரிடமிருந்து தூரப் போகச் சொல்கிறீர்கள்? என் ஆத்மாவை விலகச் சொல்கிறீர்களா அல்லது என் உடலையா?"*

---

* Whom are you asking to move aside, sir? Are you demanding the self to do so or the body to do so?

மாபெரும் அறிஞர்களையும் வாதத்தில் வெற்றி கண்ட சங்கராச்சாரியார் தடுமாறி, தலைகுனிந்தார். "மன்னிக்கவும். இதற்குமுன் நான் இப்படி யோசித்ததில்லை. நீங்கள் எனக்கு ஞானம் கொடுத்தீர்கள்," என்று அவர் பெருந்தன்மையுடன் தன் தவற்றை ஒப்புக்கொண்டார்.

ஜனகர் கூறுகிறார்: 'நான் பிரம்மசரியம் முதலிய ஆசிரமங்களில், பிராமணர் முதலிய வர்ணப் பிரிவுகளில் சிக்கிக்கொள்ள தயாரில்லை. "இதையெல்லாம் கைவிடு, அதையெல்லாம் பிடித்துக்கொள்" என்கிற மனப்பான்மையையும் துறந்துவிட்டேன். ஏனெனில் இப்போது நான் என்னிலேயே நிலைத்துப் போனேன்.'

**ஆசை என்னும் தீராப் பசியால்**
**அற்பப் பொருள்கள் சேகரித்தேன்**
**கண்டதை விடமுடியாத பலகீனத்தால்**
**எதனுடனான தொடர்பை விடுவேன்?**

**எதைக் காணினும் மோகமுறும் நான்**
**எதை எடுப்பேன், எதை விடுவேன்?**
**எல்லாம் எனக்கு வேண்டும் என்றால்**
**எதனை வீசி எறிவேன் கீழே?**

**போகி வெறுத்தான் குடிசை வாழ்வை**
**தியாகி தவிர்த்தான் மாளிகை வாசம்**
**போகியாவதா நான் தியாகியாவதா?**

**அற்பத் துரும்பும் சேர்ந்து வராது**
**காணும் கடைவழிக்கே**
**என்றே அறிந்தும் எந்தன் தலைமேல்**
**எத்தனை மூட்டைகள்; எத்தனை பாரம்!**

**புறத்தே திரும்பும் என் விழியை**
**அகத்தே திருப்ப அறியேன் நான்**
**எனதெனக் கூறிக் கைக்கு வந்ததை**
**எப்படிக் காப்பேன் நிரந்தரமாக?**

**எங்கும் காணும் எல்லாப் பொருளும்**
**எவன் ஒருவனுக்கே சொந்தமானதோ**
**அவனுடனேயே இனி வைப்பேன் உறவு**

எதை விடுவது-எதை வைத்துக் கொள்வது என்ற பிரச்சினை பெரும்பாலோருக்கு உள்ளது: இந்தச் சிக்கல் தீர ஜனகர் ஓர் உபாயம் சொல்கிறார்-எதையும் பிடித்துக் கொள்ளாதே; எதையும் கைவிடாதே. ஏனெனில் இவ்விரண்டு செயல்களும் பிடிப்புடன் (பற்று வைத்தலுடன்) சம்பந்தப்பட்டவை. ஒன்றைக் கைவிடும்போது இன்னொன்றைப் பிடிக்கும் முயற்சியாக அது அமையலாம். 'பணத்தாசையைக் கைவிடு, சுவர்க்கம் கிடைக்கும்' என்று ஞானி சொல்கிறார். ஒருபுறம் விடுதல், மறுபுறம் பிடித்தல் என்றால் பேராசை அப்படியே உள்ளது என்றுதான் அர்த்தம். பழைய கணக்கேதான் நீடிக்கிறது.

விடுவது-பிடிப்பது என்பதற்குப் பதிலாக ஜனகர் சொல்லும் மாற்று 'விழிப்பது'. இதையே ஜே.கிருஷ்ணமூர்த்தியும்[1] மாற்றுகளில்லா விழிப்புநிலை[2] என்கிறார். இவையிரண்டிலிருந்தும் விலகியபின் தன்னையறிதல் நிகழ்கிறது.

**மு**ல்லா தினமும் ஒரு குறிப்பிட்ட கடைக்கு வந்து மது அருந்துவார். ஒரு விசித்திரப் பழக்கம் என்னவென்றால் இரண்டு கண்ணாடி டம்ளர்கள் தரச் சொல்லுவார். இரண்டிலும் மதுபானம் நிரப்பி, இருகைகளிலும் ஏந்தி, அவற்றை உரசி 'சியர்ஸ்' என்று சொல்லி, துளித்துளியாகப் பருகுவார்.

ஒருநாள் மது ஊற்றுபவர் முல்லாவிடம், "எப்போதும் இரண்டு டம்ளர் கேட்கிறீர்களே. என்ன விஷயம்?" என்று விசாரித்தார்.

"ஒரு டம்ளர் நான் பருகுவது இன்னொரு டம்ளர் மது என் நண்பன் சார்பில் குடிக்கிறேன். அவன் வருவதில்லை. எனினும் அவனை நினைத்துக் குடிக்கிறேன்," என்றார் முல்லா.

திடீரென ஒருநாள் அவர் இனி ஒரு டம்ளர் போதும் என்று கூறிவிட்டார். மது ஊற்றுபவர், "ஏன் இந்த மாறுதல்? உங்கள் நண்பனை மறந்துவிட்டீர்களா என்ன?" என்று காரணம் கேட்டார்.

---

1. **Jiddu Krishnamurti (1895-1986)** இந்திய ஆன்மிகத் தலைவர்களில் ஒருவர். 'தன்னை மெய்யாக அறிவதன் மூலம் ஆன்ம விடுதலை பெறலாம்' என்பது இவரது உபதேசாரம்.
2. Choiceless awareness

முல்லா சொன்னார்: "மறப்பதா? ஒருநாளும் மறக்க மாட்டேன். என் நண்பனை நான் எப்படி மறக்க முடியும்? நான் இன்றிலிருந்து எனக்காகக் குடிக்கும் பழக்கத்தைக் கைவிட்டுவிட்டேன். நண்பன் நினைவாக மட்டும் அவன் சார்பில் ஒரு டம்ளர் மது மட்டுமே இனிமேல் குடிப்பேன்."

மனிதன் பெரிய மோசடிப் பேர்வழி. நீ சொல்லுவாய், 'பணத்தாசையைக் கைவிட்டேன்' என்று. இதனால் பல மடங்கு செல்வம் கிடைக்கும் என நம்புகிறாய். பதவியை (பதம்) உதறித் தள்ளுகிறேன். பரமபதம் (பெரும் பதவி) கிடைக்குமா என்று கேட்கிறாய். 'உலகைக் கைவிடுகிறேன். பதிலுக்கு மோட்சம் கிடைக்குமா?' என வினவுகிறாய்.

ஏதோ வேண்டும் என்று நீ எதிர்பார்ப்பது கவனிக்கத் தக்கது. இது வியாபார வகைதான். நீ எதையும் இலவசமாகக் கைவிடவில்லை. நீ சினிமா பார்க்கச் செல்கிறாய். ஐம்பது ரூபாய்க்கான டிக்கட் வாங்குகிறாய். ஆனால் இதை தியாகம் என்று நீ சொல்வதில்லை. ஏனெனில் அந்தப் பணத்திற்கு நீ பொழுதுபோதல், அனுபவித்தல், மகிழ்ச்சி முதலியவற்றை அறுவடை செய்துவிட்டாய்.

நீ உலகத்தைத் துறந்துவிட்டாய். ஆனால் சுவர்க்கத்திற்கு ஆசைப்படுகிறாய். எனில் அது மேலே சொன்ன சினிமா அனுபவம் போன்றதுதான். நீ உலகைத் துறந்ததும் தியாகத்தின் கீழ் வராது. நீ பிடிப்பது-விடுவது இரண்டையும் கைவிட்டு உனக்குள் நிலை பெறுதல்தான் உண்மையான தியாகம்.

நீ மனத்தில் பின்வருமாறு சொல்லிக்கொள்ள வேண்டும்-நான் நானேதான். நான் வேறு யாருமோ, எதுவுமோ இல்லை. நான் எதையும் பிடித்து வைத்துக்கொள்ள மாட்டேன். ஆகவே நான் கைவிடுவதற்கும் எதுவுமில்லை. எது நடைபெறுகிறதோ அது அப்படியே நடக்கும்படி விட்டுவிடுவேன். இதனால் சூழ்நிலையால் பாதிக்கப்படாமல் மகிழ்ச்சியாக, ஆனந்தமாக இருக்கிறேன். நான் தண்ணீரில் காலை நனைக்காமல்-எதிலும் கலந்துவிடாமல்-கரையிலேயே இருக்கிறேன்.

'கர்மத்தைக் கடுமையாகப் பின்பற்றுதல் ஒரு வகையான அறியாமை என்றால், தியாகத்தில் தீவிரம் காட்டுவதும் அறியாமையின்

காரணத்தினால்தான். இந்தப் பேருண்மையை நான் நன்கு புரிந்து கொண்டேன். கர்மம்-அகர்மம் (செய்கை-செய்கையின்மை) இரண்டிலிருந்தும் விடுபட்டு விட்டேன் நான் என்னிலேயே நிலைபெற்று விட்டேன்.'' **(சுலோகம் 112)**

**நா**ன் எதுவும் செய்யவில்லை. நான் எதையும் விடவில்லை. கடவுள் என் மூலம் செய்ய விரும்புவதைச் செய்து கொள்ளட்டும். நான் பார்ப்பவன் மட்டுமே. சாட்சி மட்டுமே ஆவேன்.

என்னால்தான் எல்லாம் நடக்கிறது என்று நினைத்துச் செயல்புரிவது அறியாமையின் விளைவாகும். அதுபோலவே எல்லாவற்றையும் துறந்து தான் பெரிய தியாகியாகி விட்டேன் என்று நினைப்பதும் அறியாமையின் இன்னொரு முகப்பு ஆகும். தான் ஏதோ செய்வதாக நினைப்பதே அறியாமைதான். அதை கர்த்தாவாகிய நான் செய்கிறேன் என்று நினைப்பதோ இரண்டு மடங்கு அறியாமை. இந்த அடிப்படையை நான் பூரணமாக உணர்ந்து கொண்ட பிறகு 'கர்த்தா' என்பது மறைந்து நான் என்னிலேயே நிலைபெற்றவன் ஆனேன். இனி நான் செய்யவேண்டியதோ, செய்யாமலிருக்க வேண்டியதோ எதுவுமில்லை. நான் செய்வதற்குக் கடமை ஏதேனும் உண்டு, எக்கடமையும் இல்லை என்ற நிலைகளையும் நான் கடந்துவிட்டேன்.

இத்தகைய மனப்பக்குவத்தை நீ பெற வேண்டும். இல்லாவிடில் அனுபவிப்பதிலும், பிடித்து வைத்துக் கொள்வதிலும், உலக இன்பங்களிலும் உனக்கு இருக்கின்ற பற்று காரணமாகப் புதிய உருவங்களில், புதிய முறைகளில் புதிய விலங்குகளை நீ பூட்டிக் கொள்வாய்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் பிடிவாதக்காரர். ஏதாவது ஒரு நோயின் பெயரைச் சொல்லிக் கொண்டு மருத்துவமனைக்கு அடிக்கடிப் போவார். டாக்டர்களுக்கும் இவரால் சங்கடம். ஒருமுறை அவர் தனக்கு நெஞ்சுவலி என்று கூறிக்கொண்டு மருத்துவமனைக்கு வந்தார். டாக்டர்கள் பரிசோதித்து ஒரு பிரச்சினையும் இல்லை என்றனர். தலைமை மருத்துவர் இரண்டு நாள் ஓய்வில் இருந்தால் போதுமென்றார். முல்லா சமாதானமாகவில்லை. ஈசீஜியும் எக்ஸ்-ரேயும் எடுத்துப் பார்க்க வேண்டும் என்று பிடிவாதம் செய்தார். இரத்த பரிசோதனையும் செய்து பார்க்கும்படி வற்புறுத்தினார். இந்த

பரிசோதனைகளும் நடைபெற்றன. தலைமை மருத்துவர் முல்லாவிடம், "உங்களுக்கு உடம்பில் எந்தக் கோளாறும் இல்லை. எல்லா பரிசோதனைகளும் முடிந்துவிட்டன. மேற்கொண்டு என்ன நினைக்கிறீர்கள்? நாங்கள் இதற்குமேல் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார்.

"ஒரு பரிசோதனை செய்யாமல் விட்டுவிட்டீர்களே. அதையும் செய்து பார்த்தாலென்ன?" என்று முல்லா எதிர்க்கேள்வி போட்டார்.

டாக்டர்கள் திகைத்தனர். "இன்னும் என்ன பரிசோதனை பாக்கி, முல்லா?" என்று கேட்டனர்.

"எனக்கு என்ன வியாதி என்று சொல்லாமல் நழுவப் பார்க்கிறீர்களா? போஸ்ட்-மார்ட்டம் என்றொரு பரிசோதனை உள்ளதாமே. அதையும் செய்து பார்த்துவிட்டாலென்ன?" என்று அப்பாவியாகக் கேட்டார் முல்லா!

ஒரு மனிதனிடம் அறியாமை இருந்தால் அது எல்லா இடத்திலும் வெளிப்படும்; எல்லா விதமாகவும் வெளிப்படும். அது தியாகத்திலும் காணப்படும். அதுபோல் ஒருவனிடம் ஞானம் இருந்தால் அது அவனது உலக வாழ்க்கையிலும் பிரதிபலிக்கும்.

ஆகவே நீ 'எல்லாவற்றையும் துறந்துவிட்டு ஓடிவிடலாம்' என்றெல்லாம் நினைக்காதே. நீ எங்கு, எந்த நிலையில் உள்ளாயோ அப்படியே இருந்தபடி 'கர்த்தா' மனப்பான்மையை மட்டும் துறந்தாயானால் போதும். 'செய்பவன் நானல்லன்' என்னும் உணர்வைச் சிறிது-சிறிதாக உனக்குள் நிரப்பிவா. அவ்வுணர்வுடனேயே உன் கடமைகளைச் செய். நேற்றுவரை கர்த்தா எனக் கருதி என்ன செய்தாயோ அதை இன்றும் செய். ஆனால் இன்று முதல், செய்பவன் நீ இல்லை என நினைத்துக் கொள். நேற்றும் கடைக்குப் போனாய். இன்றைக்கும் போகவேண்டும் நேற்றும் வாடிக்கையாளர்களுக்குப் பொருள்கள் விற்றாய். இன்றும் விற்பனை தொடர வேண்டும். வித்தியாசம் என்ன என்றால் இன்றிலிருந்து நீ கர்த்தா இல்லை. நேற்றுவரை முதலாளி என்ற முறையில் கடைக்குச் சென்றாய். இன்றிலிருந்து கடவுள்தான் அந்தக் கடையின் சொந்தக்காரர். நீ அந்தக் கடையில் எடுபிடி ஆள் மட்டுமே. உடனே வித்தியாசம் தெரியவரும்.

கடையைப் பற்றிய உன் கவலையெல்லாம் நீங்கி விடுகிறது. வாடிக்கையாளர் பொருள் வாங்கினாலும் வாங்காவிடிலும் நீ பதற்றமடையமாட்டாய். முதலாளி அல்லது கர்த்தா மனப்பான்மை நீங்கியதுமே வியாபார வெறியும் தணிந்து விடுகிறது. வர்த்தகத்தில் யாருடனும் போட்டி இல்லை.

நீ எங்கே, எப்படி உள்ளாயோ அப்படியே இருந்துவிட்டால் கடவுள் உனக்குள் மெல்ல-மெல்ல பிரவேசிப்பார். அவரது ஒளி உனக்குள் இறங்கிவிடும்.

'சிந்திக்க முடியாத ஒன்றை, சிந்தனை கடந்த ஒன்றை ஒருவன் சிந்தித்தாலும் அவன் கவலையைத்தான் தழுவுகிறான். ஆகவே அவ்வாறு சிந்திப்பதை நான் கைவிட்டேன். இதனால் உணர்ச்சிமய மாதலிலிருந்து விடுதலை பெற்றுவிட்டேன். **(சுலோகம் 113)**

**ஜ**னகர் கூறுகிறார்-உலகில் ஆச்சரியமான செயல்கள் பல நிகழ்கின்றன. சிந்தனை செய்ய முடியாத ஒன்றைப் பற்றியும் சிந்தனை செய்வதாக மக்கள் கூறுகிறார்கள். ஞானிகளைக் கேட்டுப்பார். இறைவன் நம் சிந்தனைக்கு வசப்படாதவன் என்கின்றனர். அதே சமயம் இறைவனை நினை, தியானம் செய் என்றும் உபதேசிக்கின்றனர். வேடிக்கை என்னவென்றால் நீ எல்லா வகையான சிந்தனையையும் கைவிடு. சிந்தனை செய்வதைப் பிடித்துக் கொண்டிராதே. அப்போது சிந்தனை கடந்த அவர் உனக்கு வசப்படுவார்!

ஆகவே கடவுளைப் பற்றிச் சிந்திப்பது தேவையற்ற வேலை. நீ சிந்திக்க ஆரம்பித்தால் புதிய கவலை ஒன்று தோன்றிவிடும். ஏற்கெனவே வாழ்க்கையிலுள்ள கவலைகள் போதாதா? கடவுள் பற்றிய கவலையால் நீ மேலும் நசுங்குவாய். உனது ஒட்டகம் கவலைச் சுமையால் கீழே விழுகின்ற நிலையில் உள்ளது. போதாதென்று நீ கடவுளையும் ஏற்றிவைக்க முயலுகிறாய். கூடுதலாக ஒரு துரும்பை ஏற்றினாலும் ஒட்டகம் விழுந்துவிடுமே. உன் வாழ்க்கை சிதறிவிடும்.

மதநம்பிக்கை இல்லாதவனுக்கும் கவலை உண்டு. மதநம்பிக்கை உள்ளவனோ மிகவும் மோசமான அளவிற்குக் கவலைப்படுகிறான். மதநம்பிக்கை இல்லாதவன் இவ்வுலக வாழ்க்கை பற்றி மட்டும் கவலைப்படுகிறான். மதநம்பிக்கை உள்ளவனுக்கு மறு உலகம்

பற்றியும் கவலை. ஒருவன் இங்கே பொருட்செல்வத்திற்கு ஆசைப்படுகிறான். அவ்வுலகிற்கோ புண்ணியம் என்னும் செல்வமும் தேடவேண்டும். இல்லாவிடில் பூமியில் செய்த நற்செயல்களுக்காக அளிக்கப்பட்ட விண்ணுலக வாழ்க்கைக் காலம் முடிந்ததும் மறுபடியும் மண்ணிற்கு வரவேண்டும். இங்கு உனக்கு 'பாங்க் பாலன்ஸ்' உள்ளதுபோல் அவ்வுலகிலும் உன் புண்ணியம் கணக்கிடப்படுகிறது. அதன் மூலம் குறிப்பிட்ட காலம்வரை உனக்கு சுவர்க்க வாழ்க்கை அமைகிறது. சுவர்க்க வாழ்க்கை கிடைப்பதற்காக இங்கே எடுக்கும் முயற்சிகளாலும் கவலை. அங்கே போனபின் அங்கு வசிப்பதற்கான காலத்தை நீட்டிப்பதற்கான முயற்சிகளால் கவலை. மதநம்பிக்கை உடையவனுக்கு நாத்திகனைவிடப் பல மடங்கு கவலை அதிகம்!

ஜனகர் கூறுகிறார்- 'சிந்தனை செய்ய முடியாத ஒன்றை மக்கள் சிந்தித்து வருவதாகக் கூறுகிறார்கள். அவர்களின் அறியாமை எல்லை மீறிவிட்டது. நானோ எல்லாவற்றையும் கைவிட்டு வெறுமையாக நிற்கிறேன். நான் இப்போதெல்லாம் கடவுளைப் பற்றிக்கூட சிந்திப்பதில்லை. கடவுளைப் பற்றி மனிதனால் சிந்திக்க முடியுமா? ஆகவேதான் நான் எல்லாவற்றையும் கைவிட்டு எனக்குள்ளேயே உட்கார்ந்து விட்டேன்.'

இந்த சூத்திரத்தின் சாரம்—செயல்கள் புரிந்தாலும் செயல்கள் அற்றவனாகத் தன்னை ஆக்கிக்கொள்வதை சாதனங்களின்மூலம் செய்து முடிப்பவன் பாராட்டுக்குரியவன்தான். இங்கே சாதனங்கள் (உபாயங்கள்) என்று கூறப்படுபவை ஜெபம், தவம், தியானம், சிந்தனை ஒருமுகப்படுத்தல் போன்றவையாகும். ஆனால் இப்படி எதுவும் செய்யாமல் என் சுபாவமும் கடவுளின் சுபாவமும் ஒன்றே என்று முடிவெடுத்து அமைதியாகிவிட்டவனைப் பாராட்டுவதற்கு வார்த்தைகள் கிடைக்காது.

'முயற்சி செய்து கடவுளை அடைந்தவனின் சாதனை பெரியதாயினும் அதிசயமில்லை. முயற்சி ஒன்றும் செய்யாமல், உடலை வருத்தாமல், ஞானத்தின் மூலம் உண்மையை உணர்ந்து கடவுளின் அனுபவம் பெற்றவனின் சாதனையை, அந்த அதிசயமான நேரடியான தொடர்பை விளக்க 'முடியாது. அவனை எப்படிப் புகழ்வது?'

(சுலோகம் 114)

ஜனகர் சொல்கிறார்-நான் எதுவும் செய்யாமலே இறை அனுபவம் பெற்றுவிட்டேன். நான் எங்கும் அலையவில்லை. இருந்த இடத்திலிருந்தே எனக்கு அந்த அனுபவம் கிடைத்துவிட்டது.

மாடு அசைபோடுவதுபோல் இந்த சுலோகங்களின் பொருளை ஆராய்ந்துபார். அப்பொருளை அமுதரசம்போல் நினைத்து அதில் திளைத்திரு. இவற்றின் பொருளைச் சிறுகதை படிப்பதுபோல் ஒரே வாசிப்பில் புரிந்துகொள்ள முடியாது. ஒரே முறை படித்து, ஏதோ அர்த்தம் எடுத்துக்கொண்டு, அவ்வளவுதான் விஷயமென நினைத்து, குப்பையில் எறிந்துவிட முடியாது. இவை என்றைக்கும் மீண்டும்-மீண்டும் படிக்க வேண்டியவை. ஒவ்வொரு முறையும் அர்த்தத்தின் ஒரு முகப்பு புரியவரும். பிறகு ஒரு மங்களமான நேரத்தில், சாந்தமான சூழ்நிலையில், பரமானந்தமான மனநிலையில் இந்த சுலோகங்களின் மைய அர்த்தம், முழு அர்த்தம் மின்னலெனப் பளிச்சிடும். இவற்றை தினமும் ஒரு மணி நேரம் செலவிட்டுப் படித்துச் சிந்திக்க வேண்டும். இதைத்தான் பாடம் செய்தல் என்கிறோம். படித்தல் என்பது வேறு. அது ஒரு முறையுடன் முடிந்து போகிறது.

இப்படி பாடம் செய்தல், பாடம் கேட்டல் ஆகியவை மேற்கத்திய நாடுகளில் கிடையாது. ஒரு சாஸ்திர நூலை வாழ்க்கை முழுதும் தினமும் ஏன் படிக்க வேண்டும் என்று அவர்கள் குழம்புகிறார்கள். ஒரு நூலை ஒரு தடவை படித்தால் போதுமே என்றும், அப்போது நமக்குப் புரிகின்ற அர்த்தம் போதும் என்றும் நினைக்கிறார்கள்.

மேற்கத்திய நாடுகளில் தலைசிறந்த நூல்களையும் பேப்பர்பேக் (சாதாகட்டு) முறையில் அச்சிடுகிறார்கள். ஒரு தடவை படித்தபின் மூலையில் போட்டுவிடலாம். விலை மலிவு என்பதால் பாதுகாப்பாக வைக்கவேண்டியதில்லை. மறுபடியும் தேவையானால் வாங்கிக் கொள்ளலாம். ஆகவே சிலர் ரயில் அல்லது பஸ்ஸில் படித்துவிட்டு அங்கேயே விட்டுச் செல்கின்றனர்.

ஆனால் அஷ்டாவக்ர கீதை போன்றவை சாதாரணமான நூல்கள் அல்ல. இவை வாழ்க்கை சாஸ்திரங்கள். சராசரி நூலுக்கும் சாஸ்திர நூலுக்கும் இடையே வேறுபாடு உண்டு. சாதாரண நூல்

ஒருமுறைக்கு மேல் படிக்கப் பயன்படுவதில்லை. சாஸ்திர நூலை எத்தனை முறை படித்தாலும் சலிப்பதில்லை. எனவே நீ அதைப் படித்துக்கொண்டே இரு. ஒரு சுபவேளையில் நீயே ஒரு புதிய சாஸ்திரம் படைக்கும் அளவிற்குப் பக்குவம் பெற்றுவிடுவாய்.

அஷ்டாவக்ர மகாகீதை உள்ளிட்ட ஞான நூல்கள் எந்த வேளையில் முழுமையாகப் புரிந்துபோகும் என்று சொல்ல முடியாது. ஒவ்வோர் ஆன்மிக நூலும் வெவ்வேறு மனநிலையில் தெளிவேற் படுத்தக் கூடும். உன் மனம் எப்பொழுதும் ஒரேமாதிரி உணர்ச்சி கொண்டிருப்பதில்லை. ஒருவேளை சோகம் அப்பிய சூழ்நிலையில் சாஸ்திர உபதேசம் புரிந்து போகலாம். மாறாக, நீ மிகவும் சந்தோஷமாக இருக்கும் சமயத்தில் புரியலாம். அல்லது, நீ சாந்தமாக, சலனமில்லாமல், அசையாமல் உட்கார்ந்து சிந்திக்கும்போது சாஸ்திரத்தில் கூறப்படுபவை உனக்கு வெட்டவெளிச்சமாகலாம். இது குறித்து முன்கூட்டியே கூற முடியாது.

ஆனால் ஒன்று நிச்சயம். அஷ்டாவக்ர சூத்திரங்களால் நீ வாழ்க்கையில் இதுவரை பார்த்திராத கதவுகள் திறக்கின்றன. நீ சிறகு விரித்து எல்லையற்ற ஆன்மிக வானத்தில் உல்லாசமாகப் பறக்க முடியும். அவ்வாறு பறந்து தேடி பரமாத்மா என்னும் கூண்டை அடைந்து நிரந்தரமாக அமைதி பெறலாம். அப்போது நீ பரிபூரணமான திருப்திநிலையை அடைவாய்.

**பறந்து சென்றுவிடு பறவையே**
**இந்தக் குடியிருப்பை விட்டுவிடு**
**துன்பமயமாய் உள்ளது.**
**ஒவ்வோர் இல்லமும் இவ்வுலகில்**

**அடர்ந்து பரந்து அச்சுறுத்துகிறது**
**கோரமான இருட்டு எங்கும்**
**சுகத்தின் விடியல் வேளைக்கு**
**கால அவகாசம் நிறைய உள்ளது**

**இந்தக் குடியிருப்பில் வாழ்ந்திடுவோர்**
**பிரிவுத் துயரால் வருந்துவோர் ஆவர்**
**துன்பக் கடலில் தோய்ந்திருப்பவர்கள்**
**சோக ராமாயணம் இசைப்பவர்கள்**

**அழுதும் புலம்பியும் கழிந்தது வாழ்க்கை**
**பெருமூச்சில் கரைந்தது உறக்கமும் விழிப்பும்**
**உள்ளத்தில் ஆறாப் புண் ஏற்பட்டு**
**உதிரம் கசிகிறது வேதனையால்**

அஷ்டாவக்ரரின் சூத்திரங்கள் உனக்கு இறக்கைகளாக அமைந்து நீ பறக்க உதவும். நீ ஆன்மிக விண்வெளியில் எல்லையற்ற தூரம் கடக்க உதவும். இந்த சூத்திரங்கள் அபூர்வமானவை. விலை மதிக்க முடியாதவை. இவற்றை நீ தொடர்ந்து பயிலுவாயாக. இவை உன் ரத்தத்துடன் கலக்கட்டும்; உடலின் தசைகளில் சேரட்டும்; இதயத் துடிப்புடன் கலந்துவிடட்டும்; உறக்கம், விழிப்பு முதலிய எல்லா நிலைகளிலும் இவை நிழல்போல் உன்னைப் பின்தொடரட்டும். ஒருநாள் உனக்குள் ஆன்மிக மகாபுரட்சி வெடிக்கும். அந்தப் புரட்சி நிகழ்ந்தாலன்றி உனக்கு மனம் சாந்தமடையாது, திருப்தி பெறாது.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒருபுறம், நீங்கள் சாதகர்களை தியானப் பயிற்சி மேற்கொள்ளச் சொல்கிறீர்கள். இன்னொரு புறம், இப்பயிற்சிகள் சிக்கலில் மாட்டிவிடுபவை என்றும் எச்சரிக்கிறீர்கள். இதனால் சாதகர் தர்மசங்கடமான நிலைக்கு ஆளாகிறார். அவர் தனக்கு எந்தப் பயிற்சி எந்த அளவிற்குப் பொருத்தமானது என்று எப்படி முடிசெய்வது?**

இதுவா, அதுவா என்னும் தர்மசங்கடமான நிலை நீடிக்கும் வரையிலும் சிக்கல்களைத் தவிர்க்க முடியாது. சிக்கல் நீடிக்கும்வரை தியானப் பயிற்சியும் நீடிக்கும். ஏனெனில் சிக்கலைத் தீர்க்கத்தான் தியானம் மேற்கொள்ளப்படுகிறது. சிக்கல் என்பது மனம் இரண்டாகப் பிரிந்திருப்பதைத்தான் காட்டுகிறது. அந்த இரண்டு துண்டுகளையும் அருகருகே கொண்டுவந்து அவற்றை இணைப்பதற்கான முறையே தியானம் என்பது. மனம் ஒரே அலகாக ஆகிவிட்டால் அப்போது மனம் என்னும் அமைப்பும் நீங்கிவிடுகிறது.

அஷ்டாவக்ரர் குறித்து நீ ஒரு விஷயம் கவனிக்க வேண்டும். அவர் மற்ற ஞானிகளைப் போல் தியானம், சமாதி, யோகா ஆகிய வற்றின் ஆதரவாளர் அல்லர். அவர் விதிமுறைகளையே எதிர்ப்பவர்.

உலகத்தில் ஆன்மிக மார்க்கங்கள் இரண்டு விதமாக உள்ளன. ஒரு மார்க்கம் கட்டுப்பாடுகள் மற்றும் விதிமுறைகளின் அடிப்படையில் அமைந்துள்ளது. அஷ்டாவக்ரர் விதிகள் சூன்யமாக உள்ள, விதிகளே இல்லாத வழியை நம் முன் வைப்பவர். ஆகவே

அவர் கூறும் வழிமுறையை சட்டென்று எல்லோரும் புரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் வழியே இல்லாத வழிமுறை அல்லவா அது! தர்மசங்கடமான மனநிலையிலிருந்து விடுபட்டவர்கள்தாம் அதைப் புரிந்துகொள்வர். அல்லது தியானப் பயிற்சி தேவைப்படாத அளவிற்கு ஆழ்ந்த அறிவுடையோர் புரிந்துகொள்வர்.

அஷ்டாவக்ரர் வற்புறுத்துவது ஞான விழிப்பை மட்டுமே. அவ்விழிப்பு சாட்சி மனப்பான்மை அமைந்தால்தான் உண்டாகும். இது உன்னால் முடியாதென்றால் அஷ்டாவக்ரர் பக்கம் போகாதே! பதஞ்சலியிடம் போ. யோகம் பயிலு. வேறு மாற்றுவழி வேண்டு மென்றால் புத்தரையோ, மகாவீரரையோ அணுகு.

அஷ்டாவக்ரரைப் பின்பற்றியே ஜே.கிருஷ்ணமூர்த்தியும் பல்லாண்டுகளாக இதைத்தான் சொல்லி வந்தார். அவருடைய சொற்பொழிவுகளை நிறையப் பேர் கேட்டிருந்தும் தங்கள் மனம் இரண்டு விதமாகச் சிந்திப்பதை அவர்களால் தடுக்க முடியவில்லை. ஆனால் அவர் கூறியதில் தியானம் தேவையில்லை என்பதை மட்டும் புரிந்துகொண்டு தியானம் செய்வதையும் கைவிட்டனர். இதனால் இதுவா-அதுவா என்று குழம்பிய அவர்கள் மனம், இதுவும் கிடைக்காமல் அதுவும் கிடைக்காமல் பரிதாபமான நிலைக்குத் தள்ளப்பட்டனர். திரிசங்கு நிலையில் தொங்கினர். இக்கரையிலும் இருக்க முடியவில்லை; அக்கரைக்கும் போய்ச் சேரவில்லை.

இவர்கள் என்னிடம் வந்து, "மனத்தில் அமைதி இல்லை. என்ன செய்யலாம்?" என்று கேட்கிறார்கள். நான் அவர்களிடம் தியானப் பயிற்சி மேற்கொள்ளச் சொன்னால், அவர்கள், "தியானத்தில் அப்படி என்ன இருக்கிறது? கிருஷ்ணமூர்த்தி சார் தியானத்தினால் ஒரு பயனும் விளையாது என்று சொல்லிவிட்டாரே," என்று என்னை மடக்குகிறார்கள். அப்படியானால் அவர்கள் தியானத்தைக் கைவிட்டு அல்லது மேற்கொள்ளாமல் இருந்து கிருஷ்ணமூர்த்தியின் கண்ணோட்டத்தையாவது புரிந்து கொண்டார்களா என்றால் அதுவுமில்லை. தியானமும் இல்லை, கிருஷ்ணமூர்த்தியும் இல்லை என்றால் மனத்தில் அமைதி எப்படி இருக்க முடியும்? அதனால்தான் நான் அவர்களை, "சரி, போய் மீண்டும் தியானத்தைத் தொடருங்கள்," என அனுப்பிவிடுகிறேன்.

அகங்கார குணம் (மமதை) விசித்திரமானது. அகங்காரம் கொண்டவன் தான் அறிவிலியாக இருக்கக்கூடும் என்று ஒருபோதும் ஒப்புக் கொள்வதில்லை. சுயமாக ஞானம் ஏற்படுவதற்கு வழியில்லாதவர்களுக்காகத்தான் தியானம். 'நான் தியானத்தில் ஈடுபட வேண்டிய அளவிற்கு அறிவிலி இல்லை' என்று நீ நினைக்கலாம். அதேசமயம், தியானம் செய்யாமல் ஞானம் பெறக்கூடிய அளவிற்கு நீ அறிவாளியும் இல்லை. எனவே சிக்கல் உண்டாகிறது. தவிப்பு அதிகரிக்கிறது. நீ உடைந்து சிதறிப் போகிறாய்.

அஷ்டாவக்ரர் தியானத்திற்கு உயர்ந்த இடம் தரவில்லை. ஏனெனில் அதை ஓர் உணர்வு என்ற முறையில், அவ்வுணர்வு மேலோங்கும் போதெல்லாம் அதை மேற்கொள்ள வேண்டுமே தவிர, அதை ஒரு செயலாக, கடமையாகச் செய்தால் அது கருமம் ஆகிவிடும். அப்போது 'நான் தியானம் செய்கிறேன்' என்னும் கர்த்தா மனநிலை தோன்றிவிடும்.

உதாரணமாக, சமையல் செய்தல், வீடு பெருக்குதல், கடை திறந்து வியாபாரம் செய்தல் முதலியவைபோல் இன்னொரு செய்தலாக தியானம் வாடிக்கையாகி விடும். அதற்கும் மற்ற வேலைகளுக்கும் இடையில் வித்தியாசம் இருக்காது. ஆனால் செயல் (கருமம்) என்பது உன் நிஜத்தன்மை வரை போய்ச் சேராது.

வீடு பெருக்குகிறாய். ஆனால் உண்மையில் நீ அச்செயலில் இல்லை. வீடு பெருக்கப்படுவதைப் பார்க்கின்றானே ஒருவன், அவன்தான் உண்மையான நீ.

சமையல் செய்கிறாய். ஆனால் உண்மையில் நீ அச்செயலில் இல்லை. நீ சமையல் செய்வதையும், உணவு தயாராவதையும் பார்க்கின்றானே ஒருவன், அவன்தான் உண்மையில் நீ.

இதேபோல்தான் தியானமும். தியானத்தில் நீ இல்லை. அதைச் செய்பவன் நீ இல்லை. இயந்திரம்போல் தியானச் செயல் நடைபெறுகிறது. நீ தியானம் செய்கிறாய் என்பதையும், அதிலிருந்து உனக்கு அமைதி கிடைக்கிறது என்பதையும் கவனிக்கின்றானே ஒருவன், சாட்சியாக விளங்கும் அவன்தான் நிஜமான நீ.

யோகக் கலையில் பதஞ்சலிக்கு அடுத்தபடியாகப் புகழ்பெற்றவர் கோரக்நாதர். அவர் தியானம் சம்பந்தமாக அதிகமான

அளவில் விதிமுறைகளை அறிமுகப்படுத்தினார். தியானத்தில் பல வகை பிரயோகங்களையும் புகுத்தினார். தியானத்தின் மூலம் ஞானத்தை அடைந்தவர்கள் நிச்சயமாகப் பலருண்டு. அறிவின் துணைகொண்டு ஞான நிலையை அடைய முடியாதவர்களுக்காகத்தான் தியானம் உள்ளது. அறிவின் அளவில் உள்ள பற்றாக்குறையை, அந்தப் பள்ளத்தை, தியானம் நிரப்புகிறது. தியானத்தின் மூலம் யாரும் ஆத்மாவை அறிந்துகொள்ள முடியாது. ஆனால் அதன்மூலம் விவரிக்க முடியாத அளவிற்கு உனக்கு சாந்தம் தோன்றும். அந்தப் பேரமைதி நிலையில் நீ சாட்சியாக உருவெடுப்பது எளிதாக இருக்கும். இவ்வாறு நீ கடைசியில் அஷ்டாவக்ரரின் பாதைக்கே வருகிறாய்.

ஒருவனுக்குக் கடுமையான குளிர்காய்ச்சல். ஆனாலும் அவன் நம்மிடம், "சமாதி நிலை எப்படிக் கிடைக்கும்?" என்று கேட்கிறான். நாம் சமாதி நிலையை அடைவதற்கான வழிமுறைகளையா சொல்லுவோம்? மாறாக, நாம் அவனிடம்,"முதலில் உனக்குக் காய்ச்சல் நீங்கட்டும், பிறகு சமாதி பற்றிச் சொல்கிறோம்," என்போம். அப்படியும் அவன் விடாமல், "காய்ச்சல் நீங்கினால் சமாதி நிலையை அடைய முடியுமா?" என்கிறான். "ஆம், காய்ச்சல் நீங்கினால் சமாதி நிலைக்கு முயலலாம்," என்று நம்பிக்கையூட்டுவோம்.

காய்ச்சல் எதுவும் இல்லாத நிலையிலும்கூட ஒருவன் சமாதி நிலையை அடைய முடியும் என்பது நிச்சயமில்லை. அப்படியிருக்க, நோயாளி எப்படி சமாதிநிலை வாய்க்கப் பெறுவான்? ஆரோக்கியக் குறைபாடு இல்லாதவர்கள் உலகில் எத்தனையோ பேர் உண்டு. அவர்களில் பெரும்பாலோருக்கு சமாதி நிலை என்ன என்றே தெரியாது.

நாம் செய்ய வேண்டியது இதுதான். முதலில் நாம் மருந்து கொடுத்து அந்த நோயாளியின் காய்ச்சலைப் போக்குவோம். உடலால் அவன் குணமடைந்த பிறகு அவனுக்கு தியானம் சம்பந்தமான விதிமுறைகளைச் சொல்லித்தருவோம். தியானப் பயிற்சி அவனது மனத்தை சாந்தப்படுத்தும். மனம் அமைதியாக, சலனமின்றி இருந்தால்தான் சாட்சி மனப்பான்மை தோன்றும். இவ்வாறு கடைசியில் நீ அஷ்டாவக்ரரின் பாதைக்கே வருகிறாய். உன்னால் ஒரே தாவலில் சாட்சி நிலைக்கு வந்துவிட முடியுமா? முடியுமானால் சுபம்தான். முடியாவிடில் தியானம் பயிலுவதைத் தொடங்க வேண்டியதுதான்.

தியானம் செய் என்று சாதகர்களிடம் சொல்லிவிட்டு, தியான முறைகள் எல்லாம் சிக்கல் நிறைந்தவை என்றும் நான் எச்சரித்தது உண்மைதான். இந்த தர்மசங்கடமான சூழ்நிலையில் எது தனக்கு உசிதமானது என்று எப்படி முடிவு செய்வது என்னும் கேள்வி உனக்குள் எழத்தான் செய்யும். இதுவா-அதுவா என்ற நிலையில் தியானத்தைத் தொடங்கிவிடுவதே உசிதமானது. சங்கடமான மனநிலை நீங்கியதும் ஞான ஒளி உள்ளத்தில் வந்துசேரும். உனக்குள் ஓர் ஆன்மிகப் புரட்சி நிகழும். பிறகு நீ எந்தக் கேள்வியும் கேட்கமாட்டாய். கேட்பதற்கு எதுவும் விஷயமும் இருக்காது. புரட்சி நிகழ்ந்து விட்டது. சமாதிநிலை கிட்டிவிட்டது. இதன் பிறகு நீ 'தியானம் செய்வதா வேண்டாமா?' என்ற கேள்வியை எழுப்ப மாட்டாய். ஆனால் கேள்வி எழும்பும் காலம் வரை நீ தியானம் செய்துவா.

இப்போது நீ நிற்கும் இடத்திலிருந்து ஒரு தாவலில் உன் லட்சியத்தை அடைய முடியாது. தியானத்தைத் தொடர்ந்து செய். மனம் சாந்தமாகட்டும். காய்ச்சல் குறையட்டும். பிறகு நீ தாவலாம். ஆம், நீ தாவித்தான் கர்த்தா மனநிலையிலிருந்து சாட்சி என்ற நிலைக்குப் போக முடியும்.

தொடக்கப் பள்ளியில் சிறுவன் எழுத்துகளைக் கற்கிறான். அ என்றால் அம்மா என்பதுபோல் படத்தைப் பார்த்துக் 'க' என்றால் கழுதை என்று கற்கிறான். உண்மையில் 'க' என்னும் எழுத்துக்கும் கழுதைக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. ஆனால் எதிர்வரும் காலத்தில்தான், அவன் சற்று வளர்ந்த பிறகுதான் 'க'வுடன் கழுதையை சம்பந்தப்படுத்த மாட்டான்.

நமக்குள் வீற்றிருக்கும் நுட்பமான பொருளைப் புரிந்து கொள்ள முடியாத நிலையிலுள்ளவர்களுக்குத்தான் தியானப் பயிற்சி தேவை. இதுவே ஞானத்தேடலில் முதல் கட்டம். இந்த தியானம் என்பதையே புரிந்து கொள்ள முடியாத நிலையில் ஏராளமானவர்கள் உள்ளனர். வேறுவிதமாகச் சொல்வதானால் அவர்கள் தொடக்கப் பள்ளியில் சேரக்கூட லாயக்கற்றவர்கள். கிண்டர்கார்டனுக்கு அனுப்பத்தான் பொருத்தமானவர்கள். தியானம் என்பதை அறியாதவர்கள் அதற்குத் தேவையான தயாரிப்புகளைப் பயில வேண்டும். அந்தத் தொடக்க காலப் பயிற்சிகளுக்குப்பின் தியானம் செய்வதைக் கற்க வேண்டும்.

அதன் பின்னரே தாவலை மேற்கொள்ள வேண்டும். கருமத்தால் ஆவது ஒன்றுமில்லை. எனவே கர்த்தா என்ற குன்றிலிருந்து எழும்பி சாட்சி என்ற மலையில் வந்து குதிக்க வேண்டும்.

எவன் எடுத்த எடுப்பிலேயே அஷ்டாவக்ரரைப் புரிந்து கொள்கிறானோ, அவன் எந்தக் கேள்வியையும், எந்த சந்தேகத்தையும் எழுப்பமாட்டான். ஆனால் கேள்வி மிஞ்சியிருப்பவன் அஷ்டாவக்ரரை ஒத்திப்போடுவது நல்லது. தற்சமயம் அவருடன் உனக்கு நட்பு உருவாக வாய்ப்பில்லை. ஆகவே தியானத்தைத் தொடர அல்லது தொடங்க வேண்டியதுதான் நீ பின்பற்ற வேண்டிய வழி.

நான் இங்கே குழுமியுள்ள எல்லோருக்காகவும்தான் பொதுவில் உரையாற்றுகிறேன். இங்கே ஆன்மிக அறிவின் அடிப்படையில் பல நிலைகளில் உள்ள சீடர்கள் அமர்ந்துள்ளனர். சிலர் ஆன்மிகத்தில் கிண்டர் கார்டன், சிலர் தொடக்கப்பள்ளி, நடுநிலைப்பள்ளி, வேறு சிலர் கல்லூரிப் படிப்பு நிலையில் உள்ளனர். கல்லூரி நிலையில் உள்ளவர்கள் இவ்விடத்தைவிட்டுக் கிளம்பும் தறுவாயில் இருக்கின்றனர். ஆகவே என் பேச்சுக்கு வெவ்வேறு விதமான அர்த்தம் எடுத்துக் கொள்ளப்படும் என்பதை நானறிவேன். எனினும் நான் பேசித்தான் ஆகவேண்டும். இன்று கிண்டர்கார்டன் நிலையில் உள்ளவர்களும் ஒருநாள் கல்லூரித் தரத்திற்கு ஆன்மிகப் படிப்புப் படித்து, கல்லூரியிலிருந்து வெளியேறும் நிலைக்கு வந்துதான் ஆகவேண்டும்.

நான் சொல்வதையெல்லாம் இன்றே புரிந்துகொள்ள முடியுமானால் மிகவும் நல்லது. முடியாவிடில் புறக்கணிக்காதே. கவலைப்படாதே. பத்திரப்படுத்திவை. முடிச்சுப் போட்டுவை. நான் சொன்னது இன்னொரு நாள் புரியவரும். உன் ஆன்மிக அறிவு மேலும் வளர்ச்சி பெறும்போது புரிந்துகொள்வாய்.

**மலை குலுங்கவில்லை, மரம் ஆடவில்லை**
**பள்ளத்தாக்கிலும் பதற்றமில்லை**
**மலையடிவாரத்துக் குடிசையில் எரியும்**
**அகல்விளக்கின் அழகு நிழல்தான்**
**கீழே ஏரியில் அசைந்தாடுகிறது**

நீ குலுங்கவில்லை. நீயோ மலைபோல் அசைந்து கொடுக்காதவன். உனது மையத்தில் எந்தச் சலனமுமில்லை. நிழல்தான்

அசைந்தாடுகிறது. இது புரியவந்தால் உடனே உனக்குள் புரட்சி நிகழ முடியும். புரியவில்லையாயின் தியானம் சம்பந்தமான வழிமுறைகளில் பயிற்சியைத் தொடங்கு. ஒரு காலத்தில் தியானத்தின் உச்சகட்டத்தில் இந்த வரிகளைப் புரிந்து கொள்வாய்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! முன்பெல்லாம் நீங்கள் ஒவ்வொரு சொற்பொழிவின் முடிவிலும் எங்களைப் பார்த்து, "உங்களின் உள்ளே வீற்றிருக்கும் பரமாத்மாவை வணங்குகிறேன். என் வணக்கத்தை ஏற்றுக்கொள்ளவும்," என்று கூறுவீர்கள். இப்பொழுதெல்லாம் நீங்கள் சொற்பொழிவை அவ்வாறு முடிப்பதில்லையே, ஏன்? ஒருவேளை எங்களின் உள்ளே இருப்பது எதுவோ அது உங்களுக்குப் புலப்படுவதில்லையா? அல்லது மக்கள் உங்களையே 'பகவான்' என்று அழைக்க ஆரம்பித்துவிட்டதுதான் காரணமா?**

இந்தக் கேள்வி எழுதப்பட்டுக் கடிதமாக அனுப்பப்பட்டது. ஆனால் கேட்டவர் பெயர் தரப்படவில்லை. அநாமதேயக் கடிதங்களுக்கு நான் பதில் சொல்வதில்லை. ஏனெனில் அத்தகைய கேள்விகளின் பின்னணியில் விஷமம் இருக்கும். எனினும் இந்தக் கேள்வி முக்கியமானது, கனமானது. பலர் மனத்தில் இதே கேள்வி தோன்றியிருக்கும். கேட்கத் தயங்கியிருப்பார்கள். எனவே பதில் சொல்வது எனது கடமையாகிறது.

நான் முன்பெல்லாம் என்ன சொன்னேன் என்பதை நான் குறித்து வைத்துக் கொள்வதில்லை. கடிதம் எழுதிய நீயும் அவ்வாறு குறித்துக் கொள்ளாதே. இப்பொழுது நான் என்ன சொல்கிறேனோ அதற்குத்தான் பொறுப்பேற்க முடியும். ஒரு மணி நேரம் முன்பு நான் என்ன சொன்னேனோ அதற்குக் கூட நான் பொறுப்பேற்க முடியாது. இதை நீ ஞாபகத்தில் வைக்காவிடில் சிக்கலில் மாட்டிக் கொள்வாய்.

நான் இக்கணத்தில் ஜீவிக்கிறேன். இப்போது நான் கூறுவதுதான். உண்மையான என் பேச்சாகும். கடந்த காலம் கழிந்த காலம்தான்.

போனது போனதுதான். அதற்கெல்லாம் நான் கணக்கு வைத்திருக்கவில்லை. அவற்றையெல்லாம் நீ ஆராயத் தொடங்கினால், என் கருத்துகளிடையே முரண்பாடுகள் காண்பாய். ஒரு கருத்து இன்னொன்றை வெட்டுவதுபோல் தோன்றும். இந்த ஆராய்ச்சி உன்னை ஞானியாக்குவதற்குப் பதிலாகக் குழப்பவாதியாக்கிவிடும்.

நான் இப்போது என்ன சொல்கிறேனோ அதுவே உயிரோட்டமுள்ளது. ஆகவே அதுவே உண்மையானது. நேற்றைய விஷயம் நடந்து முடிந்த கதை. அதைக் கிளறாதே. உதாரணமாக நீ ரோஜாச் செடியைப் பார்த்து 'நேற்று பெரிய பூ கொடுத்தாயே. இன்று ஏன் சின்னதாக இருக்கிறது?' என்று கேட்க முடியுமா? செடி பேசுமானால், 'நேற்று அப்படி, இன்று இப்படி' என்றுதான் சொல்லும். நீ ஆகாயத்தைப் பார்த்து 'நேற்று உன் பரப்பில் சூரியன் தகத்தகவென்று பிரகாசமாகத் தெரிந்ததே. இன்று மேகம் மறைப்பதால் மங்கலாகத் தெரிகிறதே. ஏன் இந்த முரண்பாடு' என்று கேட்க முடியுமா? ஆகாயம் பேச முடியுமானால் 'எனக்கு என்ன தெரியும்? நேற்று அப்படி, இன்று இப்படி' என்றுதான் சொல்லும்.

வின்சென்ட் வான்காக் என்பவர் புகழ்பெற்ற ஓவியர். அவரிடம் ஒருவன், "நீங்கள் தீட்டிய ஓவியங்களில் தலைசிறந்தது எது?" என்று விசாரித்தான். "இதோ இப்போது வரைந்து கொண்டிருக்கும் சித்திரம்தான் முதன்மையானது," என்று ஓவியர் பதில் கூறினார். மறுநாள் அதே மனிதன் அவரைச் சந்தித்து, "நேற்று வரைந்த ஓவியத்தைத் தலைசிறந்தது என்று கூறினீர்களே. அதை விலைக்கு வாங்க வந்திருக்கிறேன்," என்று விருப்பம் தெரிவித்தான். ஓவியர் சொன்னார், "நேற்றைய கதை பழசாகிவிட்டது. இப்போது நான் வரைந்து கொண்டிருக்கிறேனே இதுதான் என் தலைசிறந்த ஓவியமாகும். ஏனென்றால் வரைகின்ற நான் அதில் பிரவேசித்துள்ளேன். இதுவே உயிரோட்டமுள்ளது." ஆம், பாம்பு அந்த இடத்தைவிட்டுப் போய்விட்டது. மணலில் அதன் உடல் தடம்தான் மிஞ்சிக் கோடாகத் தெரிகிறது.

முன்பு கூறியவற்றை நான் சேர்த்து வைக்காமல் பாம்புச் சட்டைபோல் உதறி விடுகிறேன். நீயும் அவற்றைச் சேமிக்காதே. கடந்ததை நினைத்துக் கொண்டிருந்தால், இப்போது நான் கூறுவது காதில் விழாமல் போய்விடும். நாளை நீ என்னிடம் வந்து, "நேற்று

நீங்கள் சொன்னது என்ன?'' என்று கேட்க நேரிடும்; கடிதம் மூலம் கேள்வி கேட்டவனும் 'நான் நிகழ்த்தும் உரை அன்றைய தினத்திற்கு மட்டுமே செல்லுபடியாகும் அதுதான் உயிர்த் துடிப்புடன் உள்ளது. அதில்தான் நானும் உள்ளேன்' என்பதைச் சரிவர அறிந்திருக்க மாட்டான். அவன் கடந்த காலக் கணக்கை மட்டும் அறிந்திருப்பான். அது செத்தவர்களின் எண்ணிக்கையை அறிந்திருப்பது போலாகும்.

நான் இந்த சமயம் கூறுவதுதான் உயிர்த் துடிப்புடன் உடையதாகும். புதிதாக தயாரான சூடான உணவு போன்றது. இதை உனக்குள் ஏற்றுக்கொள். இது குளிர்ந்தும் பழையதாகவும் ஆகிவிட்டால் பிறகு நீ இதை ஜீரணிக்க முடியாது. பழைய உணவை நாம் மறந்தும் சாப்பிடக்கூடாது. அது உடலில் பாரமாகத் தேங்கி ரத்தத்தை அசுத்தப்படுத்தி விடும். அதேபோல் பழைய உபதேசங்கள் மனத்திற்குக் கெடுதலானவை.

நான் இப்போது விடுக்கும் செய்தியில் நானும் கலந்துள்ளேன். அதைக் கூறி முடித்ததும் அச்செய்தி மட்டும் இருக்கும். நான் அதில் இருக்க மாட்டேன். இன்று நான் சொன்னதை நாளையே நான் மறுத்துப் பேசக்கூடும். ஏனெனில் நான் ஒன்றும் பெரிய சிந்தனையாளன் இல்லை. நான் ஏன் கருத்துகளை வகைப்படுத்தி, வரிசைப்படுத்தி, அந்தப் பட்டியலைப் பின்பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தும் வழக்கம் கொண்டிருக்கவில்லை. என் வாழ்க்கை ஓர் ஒழுங்குமுறைக்கு, கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கவில்லை. நான் என்றும் சுதந்திரமானவன். நீ என்னைக் கட்டிப்போட முடியாது. நேற்று நான் வெளியிட்ட கருத்துக்கு எதிரான கருத்தை இன்று ஏன் கூறுகிறேன் என்று கேட்க முடியாது. நேற்று நான் பேசியது எனது நேற்றைய சுதந்திரமான கருத்து. இன்று நான் வெளியிடுவது எனது இன்றைய சுதந்திரமான கருத்து. நேற்று குறிப்பிட்ட பாட்டைப் பாடத் தோன்றியது. இன்றையப் பாட்டு அதிலிருந்து வித்தியாசப்படுவதற்கு நான் காரணமில்லை. தினமும் ஒரே பாட்டைப் பாடுவதோ அல்லது ஒரே விதமாகப் பாடுவதோ உசிதமில்லையே.

நான் பாய்ந்தோடும் நதி போன்றவன். நதியின் ஓட்டத்தைக் கருத்தில் கொண்டுதான் ஹெராக்ளிடஸ்,* 'ஒரே நதியில் நீ இரண்டு

* Heraclitus (BC 540-480) Greek philosopher. Upon those who step into the same river, different waters flow down.

முறை இறங்க முடியாது' என்றார். இன்று நீ என்னை எந்த நிலையில் சந்திக்கிறாயோ அந்த நிலையில் நாளை நான் இருக்கமாட்டேன். என்னோடு வர விரும்புகிறவர்கள் என் ஓட்டத்திற்கு ஈடுகொடுத்துச் சேர்ந்து வரவேண்டும். நான் கடலை நோக்கி, அதனுடன் இணைய, தீவிரமான வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கிறேன். அதே வேகத்தோடு என்னுடன் சேர்ந்துவர முடியாதவர்கள் கடந்த காலத்திலேயே தேங்கி சேற்று நீராகிவிடுவார்கள்.

எனக்கென்று தனி வரலாறு கிடையாது. வரலாற்று இயலில் எனக்கு விசேஷமான ஆர்வம் இல்லை. ஒவ்வொரு கணமும் வாழ்க்கை என்னை என்ன பேச வைக்கிறதோ அதையே சொல்கிறேன். அல்லது கடவுள் என்ன பேச வைக்கிறாரோ அதையே சொல்கிறேன். ஆகவே எனது பொழிவு அருவிபோல் முன்னேறிக் கொண்டே செல்கிறது. இடையில் தங்குவதோ, தேங்குவதோ கிடையாது. தத்துவப் பேராசிரியர் திட்டமிட்டு, ஓர் ஒழுங்குமுறைப்படி பாடம் நடத்துவது போல் என்னிடம் சொற்பொழிவுத் திட்டம் எதுவும் கிடையாது.

தத்துவ அறிஞர் வார்ப்படம்போல் தன் கொள்கைகளை வகுத்துக் கொள்கிறார். பிறகு அதை மீறியோ, எதிர்த்தோ ஒருபோதும் எதுவும் சொல்ல மாட்டார். வாழ்க்கையின் போக்கு வேறுவிதமாக மாறிவிட்டாலும் அவர் அப்பக்கம் பார்க்காமல் கண்களை மூடிக் கொண்டு விடுவார். எல்லாம் மாறினாலும் அவர் பழைய ராகத்தையே தொடர்ந்து பாடுவார். அவர் வீட்டு வாசல் கதவும் ஜன்னல்களும் மூடியிருக்கும். புதிய காற்று, சூரியனின் புதிய கிரணம் உள்ளே நுழைந்து தன் கொள்கைகளை மாற்றிவிடக் கூடாது என்றும் அஞ்சுவார். புதுக்காட்சி எதுவும் தெரியக்கூடாது என்று அவர் விழிகளை மூடிக்கொண்டாலும் ஆச்சரியமில்லை. ஆனால் கண்களைத் திறந்து வைத்திருந்தால் கணந்தோறும் நவநவமாகக் காட்சி தரும் நம் வாழ்க்கை நம்முடைய கருத்துகளிலும் மாற்றத்தை ஏற்படுத்தும். தத்துவ அறிஞர்கள் தங்களுக்கென்று தனித்தனி சம்பிரதாயங்களை நிலைநாட்டி விட்டதால் அதற்குமேல் செல்ல அவர்கள் விரும்புவதில்லை; முயல்வதும் இல்லை.

நான் அடிக்கடி திசை மாற்றிச் செல்லும் வாழ்க்கை ஓட்டத்தோடு சேர்ந்து பயணிக்கிறேன். நிகழ்காலம்தான் எல்லாமும். ஆகவே

முற்காலத்தில் என்னென்ன சொன்னேன் என்பதைப் பற்றிக் கவலைப்படாமல், இன்று நான் என்ன சொல்கிறேன் என்பதையே நீ கவனமாகக் கேள். உன் உள்ளே இருக்கும் கடவுளை வணங்குவதாக முன்பு நான் கூறிவந்தது உண்மைதான். பிறகு அவ்வாறு கூறுவதை நிறுத்திவிட்டதும் உண்மைதான். இரண்டுமே வெவ்வேறு வகையான மனநிலைகளை மட்டுமே குறிப்பிடுகிறது. நீ இதை ஆழமாக ஆராயக்கூடாது. உனக்குப் பிடித்திருந்தால் என் பாட்டைக் கேள். உனக்குப் பிடிக்காமல் போனால் உனக்குத்தான் கால் இருக்கிறதே. மூட்டையைக் கட்டு.

நான் யாருடைய ஆசைகளையும், பிரார்த்தனைகளையும், கேட்கும் வரங்களையும் நிறைவேற்றித் தருவதற்காக இங்கு உட்கார்ந்திருக்கவில்லை. நீ கேட்டதை எடுத்துத்தர நான் உன் அடிமையும் இல்லை. பொதுவாக, நீ யாரை சாது மகாத்மாக்கள் என்கிறாயோ அவர்கள் உனக்கு அடிமை செய்யக்கூடும். நீ எப்படி அவர்கள் சொல்ல வேண்டும் என எதிர்பார்க்கிறாயோ அதற்கேற்ப அவர்கள் பேசுகிறார்கள். மேலோட்டமாகப் பார்க்கையில், நீ மகாத்மாக்களின் பின்னால் செல்வதுபோல் தோன்றுகிறது. உண்மையில் அவர்கள்தான் உன் பின்னால் வருகிறார்கள். நீதான் அவர்களை ஆட்டுவிக்கிறாய். உன் எதிர்பார்ப்பின்படியே அவர்கள் நடந்து கொள்கிறார்கள். அரசியல் தலைவர்களும் இம்மாதிரியான வர்கள்தாம். நானோ மகாத்மாவும் இல்லை, தலைவரும் இல்லை.

கெட்டிக்காரத் தலைவன் தொண்டனுக்கும் தொண்டனாக இருப்பான். தன்னைப் பின்பற்றுபவர்கள் எந்த திசையில் போக விரும்புகிறார்களோ அதே திசையில் செல்லத் தொடங்குவான். சாமர்த்தியசாலியான தலைவன் காற்றின் போக்கை மோப்பம் பிடித்துவிடுவான். தன் தொண்டர்கள் கிழக்கு நோக்கிப் போக விரும்புவதுபோல் தெரிந்தால் அவன் அவர்களுக்கு முன்பே கிழக்கில் போய்க் கொண்டிருப்பான்! தொண்டர்கள் ‘சோஷலிசம்’ என்று முழங்கிய உடனேயே தலைவன் அவர்களின் கண்ணோட்டத்தை ஊகித்து அதற்கேற்ப ‘வாழ்க’ அல்லது ‘வீழ்க’ என முழங்குவான். பிறகு அந்த கோஷத்தையே அவன் முதலில் ஒலிக்க ஆரம்பிப்பான். மக்களின் போக்கு புரியாவிடில் அவன் குழப்பமான அறிக்கை அளிப்பான். மக்களின் போக்கு தெளிவாகும்போது தன் அறிக்கையை

அதற்குச் சாதகமாக விளக்குவான். அரசியல்வாதி மக்கள் எந்தப் பக்கம் போகிறார்கள் என்பது குறித்துக் கவலைப்படுகிறான். அது தெரிந்ததும் அவன் பாய்ந்தோடி அந்த திசையில் போகும் முதல் ஆளாக-முன்னோடியாக-தன்னைக் காட்டிக் கொள்கிறான்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் கடைத்தெருவில் தனது கழுதை மீது அமர்ந்தபடி காணப்பட்டார். "நஸ்ருத்தீன், நீர் எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்?" என்று ஒருவன் விசாரித்தான். "எனக்குத் தெரியாது, என் கழுதையிடம் கேட்டுப்பார்," என்றார். "இதென்ன இப்படிச் சொல்கிறீரே. நீர்தானே கழுதையின் எஜமானன்?" என்று நினைவூட்டினான்.

"முதலில் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் நான் ஒரு திசையில் போக விரும்பினால் கழுதை வேறு திசையில் சென்றது அல்லது ஒரே இடத்திலேயே அசையாமல் நின்றுவிடும். கழுதையை அடக்கத் தெரியவில்லையே என்று மக்கள் கேலி செய்தனர். ஆகவே ஓர் உபாயம் செய்தேன். இப்போதெல்லாம் நான் கழுதைமீது ஏறி உட்காருவதுடன் சரி. அதை அதன் இஷ்டத்திற்குப் போகவிடுகிறேன். ஆகவே அது கடைத்தெருவின் மூலை முடுக்கெல்லாம் போகிறது. அது எங்கும் நிற்காமல் போவதால் மக்கள் நான்தான் எஜமானன் என்றும், நான் விரும்பியபடி கழுதை போவதாகவும் சொல்கிறார்கள். எனக்கு மரியாதை கூடியுள்ளது." -இவ்வாறு முல்லா விளக்கினார்.

முன்னால் செல்லும் தலைவன் மறைமுகமாக உன் பின்னால்தான் வருகிறான். நீ வணங்கும் சாமியார்கள் உன் கோரிக்கைகளை நிறைவேற்றித் தருவதுபோல், உன் பின்னால் வருவதுபோல் தெரிகிறார்கள். இவ்வாறு உன்னை அடிமைப்படுத்தி தங்கள் அருளாட்சியை உறுதிப்படுத்திக் கொள்கிறார்கள்., நான் இத்தகைய சாமியாருமில்லை; அத்தகைய தலைவனும் இல்லை. நான் உன்னிடம் எதையும் எதிர்பார்க்கவில்லை. உன் கோரிக்கைகளை பூர்த்தி செய்து தருவதற்காகவும் நான் இங்கு உட்கார்ந்திருக்கவில்லை. நம் இருவரிடையே உள்ள சம்பந்தம் அவரவர் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் வகையில் உள்ளது. ஆகவே ஏன் இப்படி-ஏன் அப்படி என்று என்னைக் கேள்வி கேட்க நீ உரிமை பெற்றிருக்கவில்லை. நீ கேட்டாலும் உனக்குப் பதில் சொல்ல நான்

கடமைப்பட்டிருக்கவில்லை. முன்பு உன்னிடம் தென்பட்ட கடவுளை வணங்கினேன். உன்னைக் கேட்டு அவ்வாறு செய்யவில்லை. இப்போதெல்லாம் அவ்வாறு வணங்குவதில்லை. அது குறித்து நான் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லை. பிற்காலத்தில் மறுபடியும் உன்னுள் உள்ள கடவுளை நான் வணங்கத் தொடங்கலாம்.

"முன்பு எங்களிடம் கடவுளைக் கண்டீர்கள். இப்பொழுது அவர் தென்படுவதில்லையா?" என்று கடிதத்தில் கேட்டாயல்லவா? கடவுளின் தோற்றம் ஒருமுறை உன் கண்ணில் பட்டுவிட்டால் பிறகு அது முடிவுபெறுவதில்லை. ஏதாவது ஒரு தோற்றம் உன் கண்ணில் தெரிந்து பிறகு அது மீண்டும் தெரியாவிடில் அது கடவுளின் தோற்றமாக இருக்காது. கடவுள் கனவுபோன்றவர் அல்லர். திடீரெனத் தோன்றி நடுவில் மறைபவர் அல்ல. அவர் நிரந்தரமானவர். அவர் ஒருமுறை தெரிந்தால் அப்படியே நீடிப்பார். உன்னை, உன் உடலைப் பார்த்து நான் கடவுள் அனுபவம் பெற்றதாகத் தப்பர்த்தம் எடுத்துக்கொண்டு உன்னைப் பற்றி நீ கர்வப்படக்கூடாது.

என்னுடன் பேசி ஆலோசனை பெறப் பலர் வருகிறார்கள். அதுபோல் வருகின்ற உன்னைப் பார்த்து நான், "உனக்குள் அமர்ந்திருக்கும் பரமாத்மாவுக்கு வணக்கம் செலுத்துகிறேன்," என்று கூறுகிறேன். கேட்டு உனக்கு ஆனந்தமாக இருக்கிறது. ஏன்? அகங்கார உணர்வுக்குத் திருப்தி கிடைத்தால் ஆனந்தம் பிறக்கிறது. ஏனெனில் நீ கடவுள் இல்லை என்று உனக்கு நன்றாகத் தெரியும். நீ கடவுள் என்று உணர்ந்திருந்தால் நீ இங்கே சந்திக்கவே வந்திருக்க மாட்டாயே! நீ கடவுள் என்பதை நான் அறிவேன் நீதான் அவ்வாறு உன்னை அறிந்திருக்கவில்லை. நான் உன்னை வணங்கியது உண்மையானது; உண்மையின் அடிப்படையிலானது. ஆனால் அது உன்னை வந்தடைந்தபோது தவறாக அர்த்தம் செய்து கொண்டு விட்டாய். உன் அகங்காரம் பூரித்து திருப்தியடைந்தது. கடிதத்தில் சந்தேகம் கிளப்பியவனுக்கும் இதேநிலை ஏற்பட்டிருக்கும். அதனால்தான் நான் வணங்குவதை நிறுத்தியதும் அவனது அகங்காரம் சேதப்பட்டு எதையோ இழந்ததுபோல் உணர்ந்திருக்கிறான். அவனைத்தான் நான் வணங்கியதாக அவன் நினைத்ததால்தான் கேள்வி எழுந்தது.

**சௌ**தரி என்பவர் கிராமத்திலிருந்து முதல் முறையாக மும்பைக்கு வந்தார். அங்கே மகன்-மருமகள் ஃப்ளாட்டில் தங்கினார். அவர் வந்து சேர்ந்தபோது இரவாகிவிட்டது. உணவுண்டபின் அவர் ஓர் அறையில் உறங்கினார். பக்கத்து அறையில் மகன்-மருமகள்.

அதிகாலையில் மருமகளின் குரல் கேட்டு சௌதரி விழித்துக் கொண்டார். அவள் மிகவும் உருக்கத்துடன்,

**நான் எங்கிருந்து தண்ணீர் கொண்டுவருவேன்**
**எப்படித் தண்ணீர் கொண்டுவருவேன்**
**எத்தனை முறைதான் கொண்டுவருவேன்**

என்று திருப்பித் திருப்பிக் கெஞ்சுவதுபோல் சௌதரிக்குத் தோன்றியது. அவள் உண்மையில் இசைப் பயிற்சி செய்து கொண்டிருந்தாள். சாஸ்திரீய சங்கீதமாதலால் இந்த வரிகளைப் பலமுறை கூறிக்கொண்டேயிருந்தாள். அரைமணிநேரம் இப்படியே போனது. சௌதரியால் பொறுக்க முடியவில்லை. அவர் பக்கத்து அறைக் கதவைத் தட்டி மகனை எழுப்பினார்.

"ஏலே, பெண்டாட்டியை ஏன் கொடுமைப்படுத்துகிறாய்? இவ்வளவு பெரிய டவுனில் அவள் எங்கே போய் தண்ணீர் பிடிப்பாள் நம்ம கிராமம் மாதிரி குளம்-கிணறு கண்ணில் படலியே. எப்படி குடத்துடன் மாடி ஏறி-இறங்கி வருவாள்? நிறைய குடம் தண்ணீர் தேவைப்படாதா? அரைமணி நேரமா கெஞ்சுகிறாள். குறட்டைவிட்டுக் கொண்டு தூங்கிறியே. நீ போய் குடத்தில் தண்ணீர் பிடித்துக்கொண்டு வா. இல்லாவிடில் வேலைக்காரிக்கு ஏற்பாடு செய்" என்று கூச்சல் போட்டார்.

சௌதரிக்கு சாஸ்திரீய சங்கீதம் என்ன, சாதாரண இசை பற்றிக்கூட தெரியாது. தன் மகன் மருமகளை மிரட்டுகிறான் என்று அவர் நினைத்து விட்டார். கிராமத்தில் தோழிகளுடன் ஆடிப்பாடி ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவரும் பெண் மும்பையில் எங்கேயிருந்து பிடித்து வருவாள் என்று குழப்பமடைந்ததால் சௌதரி கோபப்பட்டார்.

புரிந்துகொள்ளும் ஆற்றல் மனிதருக்கு மனிதர் வித்தியாசப் படும். நான் என் ஆற்றலுக்கு எட்டியவரையில் உபதேசிக்கிறேன். நீ

உன் ஆற்றலின் அளவின்படி அதைப் புரிந்து கொள்கிறாய். ஆனால் பல ஆண்டுகளாக உபதேசித்தும் என் பேச்சால் பயனில்லை எனத் தெரிந்ததும் வணங்கும் பழக்கத்தை நிறுத்திவிட்டேன். என் வணக்கம் உனக்குள் ஊடுருவிச் செல்லவில்லை என்பதை உணர்ந்தேன். நீ இன்னும் பேருறக்கத்தில் ஆழ்ந்திருக்கிறாய். நான் உன்மீது மலர் சொரிந்தேன். ஆனால் அவை உன் தூக்கத்தைப் பாதிக்கவே இல்லை. நீ புரண்டுகூடப் படுக்கவில்லை. நான் உன்மீது மலர் சொரிந்தது (உன்னை வணங்கியது) விபரீத விளைவை ஏற்படுத்திவிட்டது. நீ பூவாசத்தால் மயங்கி மேலும் ஆழ்ந்து உறங்கிவிட்டாய் (நீதான் பரமாத்மா என்ற பிரமையில் மூழ்கிவிட்டாய்). நீ விழிக்கவே இல்லை (ஞான விழிப்பு ஏற்படவில்லை).

நீ ஞானம் பெற்றிருந்தால் வேறுவிதமாக நடந்து கொண்டிருப்பாய். "நான் உனக்குள் இருக்கும் கடவுளை வணங்கு கிறேன்" என்று நான் கூறியது சுளீரென்று உன்னை அடித்ததுபோல் தோன்றியிருக்கும். நீ அழுதிருப்பாய் "சுவாமி, அவ்வாறு என்னை ஏற்றி வைக்காதீர்கள். உண்மையில் நான் மகாபாவி," என்று மறுப்புத் தெரிவித்திருப்பாய். நீ மட்டுமல்ல, இங்கே வந்துள்ளவர்களில் யாருமே தன்னைத் தாழ்த்திக் கொண்டதில்லை. நான் பல ஆண்டுகளாக ஊர்-ஊராகச் சென்று உங்களுக்குள் பரமாத்மா இருக்கிறார் என்றே கூறி வந்துள்ளேன். கேட்டவர்களில் எவருமே, "நான் பரமாத்மா என்று சொல்லாதீர்கள்; நான் பாவி," என்று கூறியதில்லை. தான் புகழப்படுவதற்காகக் கண்ணீர் சிந்தியதில்லை. மாறாக அவர்கள், "சுவாமி, நீங்கள் என்னை இவ்வாறு உயர்த்திப் பேசும்போது பெரு மிதம் அடைகிறேன்; உள்ளம் பூரிக்கிறது," என்றே சொல்கிறார்கள்.

நான் உன்னை சவுக்கால் அடித்தேன். நீயோ உன் முதுகை நான் வருடிக் கொடுப்பதாக எண்ணிக் கொண்டாய். நான் உன்னை அடித்தது உன்னைக் கொஞ்சமாவது விழிப்படையச் செய்வதற்கே. உன்னை எழுப்பி நான் சொல்ல விரும்பியது-'நீ அடிப்படையில் கடவுளாக இருந்தபோதிலும் நீ எவ்வளவு மாறிப் போனாய். நீ அர்த்தமற்ற செயல்களில் ஈடுபட்டு வருகிறாய். வழி தவறி எங்கெல்லாமோ அலைந்தபடி உள்ளாய். உன்னில் கடவுளைக் கண்டதாக நான் சொன்னதற்கு மறுப்புத் தெரிவிக்காமல், மகிழ்ச்சியில் திளைக்கிறாய். உன் அகங்கார உணர்வுக்குத் தீனி கிடைக்கிறது. உனக்குள்

இப்பொழுதும் கடவுளின் தோற்றம் உள்ளது. அதை யாருமே இழந்துவிட வழியில்லை. ஆனால் முன்பு அதை நான் கூறியது மருந்துபோல் பயன்படவே. ஆனால் அது விஷமாக மாறிவிட்டதால் முன்புபோல் அவ்வாறு இப்போது கூறுவதில்லை.

நான் அவ்வாறு கூறிவந்ததை நிறுத்தியதற்கு உண்மையான காரணத்தை ஊகிக்காமல் நீ பிறர் என்னையே 'பகவான்' என்று சொல்கின்ற காரணத்தாலா என்றும் கேட்கிறாய்.

மற்றவர்கள் மீது பழி சுமத்த வேண்டாம். பகவான் என்பது பிறர் எனக்குத் தந்த பட்டமில்லை நானே என்னை 'பகவான்' என்று அறிவித்துக் கொண்டு விட்டேன்! அது எப்படி என்று நீ கேட்பாய். உனக்குள்ளே இருக்கும் பகவானை பார்க்க முடியாத நீ எனக்குள்ளே இருக்கும் பகவானை மட்டும் எப்படிக் கண்டுகொள்ள முடியும்? என்னை 'பகவான்' என்று நான் அறிவித்துக் கொண்டமைக்கு காரணம் எனக்குள் இருக்கும் பகவானை நான் தரிசித்து விட்டேன் என்பதுதான். உனக்கோ உனக்குள்ளும் சரி, யாருக்குள்ளும் சரி, பகவான் தெரியவில்லை.

கிருஷ்ணனும் புத்தரும் தங்களைக் கடவுள் என்றே அறிவித்துக் கொண்டார்கள். உன் ஆமோதிப்பு அவர்களுக்குத் தேவைப்படாது. இம்மாதிரி அவர்கள் அறிவிக்க மற்றவர்களின் முடிவுக்காகக் காத்திருக்கவில்லை. இத்தகைய அறிவிப்பு தனிப்பட்ட முறையில் சம்பந்தப்பட்டவர்களால் முடிவு செய்யப்படுகிறது. இந்த அறிவிப்பு வாக்குச்சீட்டுகளின் மூலமாகவோ, அரசாங்கம் சட்டம் பிறப்பித்தோ செய்யப்படுவதில்லை. இதை நான் சொந்த அனுபவத்தால் உணர்கிறேன்.

தனக்குள் கடவுளை உணர்தல் சுயமாக ஊற்றெடுக்கும் அனுபவ மாகும். அந்த உணர்வு தானாகவே ஆத்மாவில் பிரதிபலிக்கும். அந்த அனுபவம் நிகழும்போது அது உனக்கு மட்டுமே தெரியவரும். பிறர் உன்னைப் பகவான் என்று புகழ்ந்தால் நீ அவ்வாறு ஆகிவிட முடியாது. ஏனெனில் அவ்வாறு கூறுகின்ற அவர்கள் தங்களுக்குள்ளே ஆழத்தில் என்ன இருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்ததில்லை.

**மு**ல்லா நஸ்ருத்தீனுக்கும் அவர் மனைவிக்குமிடையே ஒருநாள் பலத்த சண்டை வந்துவிட்டது. மனைவியின் கோபம் அளவுக்கு மீறிப்போய் அவள் தாக்குவதற்காக அவர் மீது பாய்ந்தாள். முல்லா ஓடிப்போய் கட்டிலின் கீழே நுழைந்து ஒளிந்தார். மனைவி விடவில்லை. "ஏ கோழையே, கட்டிலுக்கு வெளியே வா," என்று கத்தினாள்.

முல்லா அமைதியாகச் சொன்னார், "நான் ஏன் கட்டிலின் கீழேயிருந்து வெளியே வரவேண்டும்? இது என் வீடு. நான் எங்கே வேண்டுமானாலும் இருப்பேன். கட்டிலின் மேலேயோ, கீழேயோ எங்கு வேண்டுமானாலும் இருக்க எனக்கு முழு சுதந்திரம் உண்டு."

இதென்ன சுதந்திரம்! கட்டிலின் கீழே பதுங்கிக்கொண்டு 'நான்தான் இந்த வீட்டு எஜமானன்' என்று சொல்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது?

உனக்கு உன்னிடம் மறைந்துள்ள கடவுள்தன்மையே தெரியவில்லை. நீ எப்படி நான் பகவானா, இல்லையா என்று முடிவு செய்ய முடியும்? நீ உன்னை உள்முகமாக ஆராய்ந்துபார். அதுவே போதும்.

பிறர் சொல்வதால் நான் பகவான் இல்லை, பிறர் சொல்லி நான் அவ்வாறு ஆக முடியாது. இது நானே உள்ளே உணர்ந்து வெளியே செய்த அறிவிப்பாகும். இதை உலகில் யாருமே ஒப்புக்கொள்ளா விட்டாலும் எந்த வித்தியாசமும் இல்லை. எனது அறிவிப்பில் மாற்றம் இருக்காது. உன் ஆதரவை நான் யாசிக்கவில்லை. ஏனெனில் உன் ஆதரவைக் கேட்டுப் பெற்றால் பிறகு உன்னிடம் அஞ்சியபடி இருக்க நேரிடும். நீ ஆதரவை வாபஸ் வாங்கிக் கொண்டால் எனது நிலை என்ன ஆகும் என்ற தடுமாற்றம் உண்டாகும். முடவருக்குக் கவட்டுக்கட்டைபோல் நீ என்னைத் தாங்க வேண்டியதில்லை. நான் சொந்தக் காலிலேயே நிற்கிறேன். இது நான் சொந்தமாக விடுக்கும் அறிவிப்பு. சரியோ, தவறோ, அறிவிப்புச் செய்தவன் நான்தான்.

ஒரு விஷயம் வேடிக்கையாக இருக்கிறது. உங்களுள் உள்ள கடவுளை நான் வணங்குவதாகச் சொன்னேன் அல்லவா? உங்களில் ஒருவர்கூட அப்போது, "சுவாமி, நாங்கள் யாரும் கடவுள் இல்லையே.

எங்களை ஏன் வணங்குகிறீர்கள்?'' என்று ஆட்சேபிக்கவே இல்லை! நான் சொன்னதை ஏற்றுக்கொண்டீர்கள் என்றுதான் அர்த்தமாகிறது. ஆனால் 'நான் கடவுள்' என்று அறிவித்தபோது பலர் நேரில் வந்தும், பலர் கடிதம் மூலமும் நான் அவ்வாறு எப்படிச் சொல்லப்போயிற்று என்று எதிர்ப்புத் தெரிவித்தனர். அவர்களைப் பார்த்து 'உங்களுக்குள் இருக்கும் கடவுளை வணங்குகிறேன்' என்று நான் சொன்னால் அவர்கள் எந்த சந்தேகமும் கிளப்புவதில்லை. என் விஷயத்தில் மட்டும் அவர்களுக்கு சந்தேகம் உண்டாகி விடுகிறது.

'நான் கடவுள்' என்று நான் செய்த அறிவிப்பு உனக்கும் வாய்ப்புத் தரும் வாசலாக அமையும். நீயும் துணிந்து முயலு; நீயும் எழும்பித் தாவலை மேற்கொள் என்று தூண்டும். என்னைப் பின்பற்றத் தோன்றும். எலும்பு-மாமிசம்-சதைகளாலான என்னைப் போன்றவன் கடவுளாக முடியும் என்றால் நீயும் அதுபோல் கடவுளாக முடியும் என்ற நம்பிக்கையை நிலைநாட்டும்.

புத்தர் தோன்றி மறைந்து நீண்ட காலம் ஆகிவிட்டது. அப்படி ஒருவர் இருந்தாரா என்று நம்ப முடியாதபடி அவருக்கும் நமக்கும் இடையே அவ்வளவு நீண்ட இடைவெளி ஏற்பட்டுவிட்டது. இதேபோல் இயேசுநாதர், மகாவீரர் விஷயத்திலும் வரலாறா, கதையா என்று சந்தேகம் எழும் அளவிற்கு நாம் அவர்களிடையேயிருந்து ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு அப்பால் விலகி வாழ்கிறோம். இன்றைய தின ஆன்மிகத் தேவைக்கு உன்னைப்போல், என்னைப்போல் ஒருவன்தான் பொருத்தமாக இருக்க முடியும். நமக்கு எலும்பு-மாமிசம்-சதைகளாலான உடல் கிடைத்திருக்கிறது. இந்த உடல் இளமை-முதுமை கடந்து, நோய்களால் அவதிப்பட்டு, கடைசியில் மரணமடைகிறது. அதேசமயம் நமது உள்ளுலகம் தெய்வீகமாக உள்ளது. ஏதோ ஒரு புனிதப் பேரொளியால் நமது ஆத்மா சூழப்பட்டுள்ளது. ஒரு வகையில் நீ உடல். வேறொரு வகையில் நீ ஆத்மா. இன்னொரு முறையில் நீ கடவுள். நீ தற்காலத்தில் வாழ்வதால் இதை சுயமாக உணரவும் நம்பவும் முடியும். கடவுள் உன்னைப் போலவும், யாரைப் போலவும் இருக்கக்கூடாது என்று நீ நினைப் பாயானால் நீ படித்த சாஸ்திர நூல்கள் எல்லாமும் பொய்.

மகாவீரரின் உடல் வியர்வை நாற்றமடித்ததில்லை என்று சமணர்கள் கூறுகின்றனர். இதை நம்ப முடியாது. அவர் மனித

உடலில்தானே இருந்தார். மற்றவர்களின் உடலின் வியர்வைச் சுரப்பிகள் எப்படி இயங்கியிருக்குமோ அப்படித்தானே மகாவீரரின் உடலிலும் நிகழ்ந்திருக்கும். சமணர்கள் மகாவீரரைப் பாம்பு கடித்தபோது ரத்தத்திற்குப் பதிலாக பால் வெளிவந்தது என்கின்றனர். இதுவும் சாத்தியமில்லை. உடலிலிருந்து தானாகப் பால் சுரப்பதில்லை. நாம் குடிக்கும் பாலும் அப்படியே வெளியேறுவதில்லை. பாலின் சத்து உடலில் சேர்ந்துவிடும்; தண்ணீர் சிறுநீராக வெளியேறும். மகாவீரரின் உடலிலிருந்து கழிவுகள் வெளிப்பட்டதில்லை என்கிறார்கள் சமணர்கள்.

இவ்வாறெல்லாம் சமணர்கள் சொல்லக் காரணம் மகாவீரர் நம்மைப் போன்றவர் அல்லர் என்று நிலைநாட்டுவதற்காகத்தான். நம்மைப்போல் இல்லை என்று காட்டினால்தானே நாம் அவரைக் கடவுளின் அவதாரம் என்று ஏற்றுக் கொள்வோம். நம்மைப் போலவேதான் அவரும் என்றால் அவரைத் தெய்வப்பிறவி என்று காட்டுவதற்கு வழியில்லாமல் போய்விடும்.

என் முயற்சிகளெல்லாம் நான் முழுக்க-முழுக்க உன்னைப் போன்றவன்தான் என்பதை உன் மனத்தில் பதியவைப்பதுடன், சில அம்சங்களில் உன்னிடமிருந்து வித்தியாசமானவன் என்பதை தெரிவிக்கவும் மேற்கொள்ளப்படுகின்றன. நான் உன்னைப் போன்றவன் அல்லன் என்றால் என்னால் உனக்கு எந்த லாபமும் இருக்காது. மகாவீரருக்கு பூரண ஞானம் கிடைத்தது. அவர் உடலில் ரத்தத்திற்குப் பதிலாகப் பால் நிறைந்திருந்தது என்கிறார்கள். உன் உடலில் பால் பிரவாகிப்பதில்லையே. மருத்துவமனைக்குச் சென்று, ரத்தத்தை வெளியேற்றி, ஊசி மூலம் நிறையப் பாலை உடலில் ஏற்றினால் சிறிது நேரத்தில் நீ இறந்துவிடுவாய்! உன் உடலில் பால் இல்லாதபோது உனக்கு ஞானம் எப்படிக் கிடைக்கும் என்று நினைக்கத் தோன்றும். அவர் உடலிலிருந்து வெளியேறிய வியர்வை நாற்றமடிக்கவில்லை என்கிறார்கள். உன் உடலில் எவ்வளவு நறுமணம் தெளித்தாலும் வியர்வையின் நாற்றம் மீண்டும் கிளம்புகிறது. அவரைப்போல் நீ இல்லாததால் அவருக்குக் கைவரப்பெற்ற சமாதிநிலை உனக்கு எப்படி சித்திக்கும் என்று நினைக்கத் தோன்றும்.

இது போன்ற சிறப்பம்சங்கள் புத்தர், இயேசுநாதர் வாழ்க்கை யிலும், மற்ற மதங்களை நிறுவியவர்களின் வாழ்க்கையிலும்

வர்ணிக்கப்பட்டுள்ளன. அவர்கள் நம்மைப் போன்றவர்கள் இல்லை என்பதை எடுத்துக்காட்டவே கூறப்பட்டுள்ளன. அப்போதுதானே நாம் அவர்களை தெய்வங்கள் என்று நினைப்போம்.

ஆனால் இவர்களெல்லாம் உன்னைப் போன்ற மனிதர்களே ஆவர். மகாவீரரின் உடலில் கழிவுகள் உண்டானதில்லை என்கிறார்கள். ஆனால் ஆறு மாதம் வயிற்றுப்போக்காக இருந்து அவர் காலமானார். புத்தர் சாப்பிட்ட உணவில் விஷம் கலந்திருந்ததால் அவர் மரணமடைந்தார். கிருஷ்ணன் காலில் ஒரு வேடனின் அம்பு பாய்ந்து இறந்தார். இந்த உண்மை சம்பவங்கள் எல்லாம் மூடி மெழுகி மறைக்கப்படுகின்றன. இவற்றிற்கு ஆன்மிகச் சாயம் ஏற்றப்படுகிறது. இதனால் கடவுளுக்கும் (அவதாரங்கள், இறைத்தூதர்களுக்கும்) மனிதனுக்குமிடையே உறவு ஏற்பட முடிவதில்லை. கடவுள் அல்லது தெய்வ மனிதர் பல விஷயங்களில் நம்மைப் போன்றவர் என்றும், சில விஷயங்களில் நம்மிடமிருந்து வேறுபட்டு உயர்ந்தவர் என்றும் தெரிந்துகொண்டால்தான் இருவரையும் இணைக்கும் பாலம் அமைய முடியும்.

எனது ஒரு கையால் உனது கையை நான் பிடித்துக்கொள்ள முடியும். அந்த கை உனது கையைப் போலவே இருக்கும். எனது இரண்டாவது கையால் உன்னை ஒரு யாத்திரைக்கு அழைத்துச்செல்ல முடியும். அந்தக் கையை நான் கடவுளின் கையில் கொடுத்துவிட்டேன். இவ்வாறு செயல்படுபவரைத்தான் சத்குரு என்கிறோம். அவர் முழுமையாகக் கடவுள் போலவே இருந்தால், அவரை நெருங்குவதும் அவருடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதும் சிரமம். அவர் முழுமையாக மனிதனைப் போலவே இருந்தாலோ, அவரால் எந்த பிரயோஜனமும் இல்லை.

சத்குரு ஒரு பாலம் போன்றவர். அந்தப் பாலம் உன்னிடம் ஆரம்பித்துக் கடவுள்வரை செல்வதாக இருக்க வேண்டும்.

நான் என்னைக் கடவுள் என்று அறிவிப்பது நீ விழிப்புப் பெறுவதற்காகத் தரப்படும் ஒரு வாய்ப்பேயாகும். உனக்குள்ளே இருக்கும் கடவுளை நான் வணங்குவதாகச் சொன்னதும் உன்னை எழுப்புவதற்குத்தான். ஆனால் தவறாகப் புரிந்துகொண்டு நீ உன்னையே கடவுள் என்று நினைத்துவிட்டாய்.

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே, ஆத்ம தரிசனம் கிடைத்த நிலையில், பூரண சமாதியின் உச்சக் கட்டத்தில் 'நான் எனக்கு வணக்கம் செலுத்து கிறேன்' என்னும் உணர்வு தோன்றுமா என்ன?**

அடிப்படையில் அப்படி ஓர் உணர்வு தோன்றாது. ஏனெனில் பூரண சமாதி நிலையில் எல்லா உணர்வுகளும் இழக்கப்படுகின்றன. எல்லாச் சிந்தனைகளம் மறைந்து போகின்றன. ஆனால் சமாதி கலைந்து தன்னுணர்வு இந்த உலக ஞாபகத்திற்குத் திரும்பும்போது நீ சொன்ன மாதிரியான உணர்வு தோன்றுகிறது.

இதைச் சரிவரப் புரிந்துகொள்ள வேண்டும். பரிபூரணமான சமாதிநிலையில் உணர்வே இருப்பதில்லை. ஆகவே எவ்வுணர்வும் தோன்ற வாய்ப்பில்லை. மனம் சூன்யமாக விளங்கும் தருணம் அது. பிறகு அந்த அதிசய உலகிலிருந்து மீண்டு தன்னுணர்வு இவ்வுலகில், உடலிற்கு, மனத்திற்குத் திரும்புகிறது. அப்போது மனம் அந்த சமாதிக் காலத்தில் என்ன நடைபெற்றது, எப்படித் தோன்றியது, என்ன ருசி உணரப்பட்டது என்றெல்லாம் எடுத்துக்கூற முயலுகிறது. அப்பொழுது ஏற்படும் உணர்வுதான் 'அஹோ அஹம் நமோ மஹ்யம்!' என்னும் ஆச்சரிய வாக்கியமாக உதிக்கிறது. அதாவது-என்ன அதிசயம்! எனக்குள்ளேயே அல்லவா கடவுள் வீற்றிருக்கிறார்! நான் என் கால்களை நோக்கி வணங்கத் தோன்றுகிறது. இந்த சமஸ்கிருத மேற்கோள் அற்புதமானது. இது ஜனக மகாராஜா மொழிந்தது.

ராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் ஒரு சம்பவம். அவர் ஒருமுறை சமாதியில் ஆழ்ந்து லயித்திருந்தபோது யாரோ ஒருவர் போட்டோ பிடித்தார். அதைப் பெரிதாக்கி அவர் ராமகிருஷ்ணரிடம் கொண்டுவந்து காண்பித்தார். ராமகிருஷ்ணர் பரவசமடைந்து படத்தில் தெரிந்த தன் கால்களையே குனிந்து தொட்டு வணங்கினார்! சீடர்கள் குருதேவருக்குக் கிறுக்குப் பிடித்துவிட்டதா என்று குழம்பினர். ஆனால் கிறுக்குத்தனத்திற்கும் எல்லை உண்டு அல்லவா?

ஒரு சீடர் துணிந்து அவரை நெருங்கி, "பரமஹம்ச தேவரே, இதென்ன இப்படிச் செய்கிறீர்களே!' உங்கள் படத்தையே நீங்கள் பூஜிக்கிறீர்களே, வணங்குகிறீர்களே," என்று கவலையுடன் கேட்டார்.

அதற்கு ராமகிருஷ்ணர், "நன்றாக நினைவூட்டினாயப்பா. நான் என்னை மறந்தேவிட்டேன். சமாதிநிலையின் படமல்லவா இது? உயர்ந்த உணர்வு நிலையின் படம் இது. நான் அந்த சமாதி நிலையைத்தான் வணங்கினேன். உனதா, எனதா, யாருடைய சமாதிநிலை என்னும் கேள்விக்கு இடமில்லை. யார் சமாதி நிலையில் இருந்தாலும் அந்த நிலையை வணங்கியே தீரவேண்டும்." என்று விளக்கினார்.

சித்தபுருஷர் சமாதி கலைந்து உலக இயல்பிற்குத் திரும்பியபின் தனக்கு நேர்ந்ததை எடுத்துரைப்பார். அந்த உணர்ச்சி வேகத்தில், 'எனக்கா நேர்ந்தது?' என்று அதிசயித்துத் தன்னையே வணங்கிக் கொள்வார். சமாதிநிலையில் இருக்கும்போது இம்மாதிரி உணர்ச்சிகள் தோன்றா. ஆனால் சமாதியில் பெற்றதைப் பிறருக்கும் பிரித்தளிக்க வேண்டும். தனது அனுபவத்தை அப்படி வாயால் சொல்லாவிடில், தன்னையே வணங்குவதுபோன்ற சைகைகளில் வெளிப்படுத்தாவிடில் அந்த சமாதி ஒரு தேகப் பயிற்சியே தவிர, தெய்வநிலையல்ல என்று முடிவு கூறலாம்.

மகாவீரர் மௌன விரதம் மேற்கொண்டு ஊருக்கு வெளியே பன்னிரண்டு ஆண்டுகள் சமாதிநிலையில் இருந்தார். ஒருநாள் சமாதியின் உச்சக்கட்டத்தை-பரிபூரண சமாதிநிலையை-அடைந்தார். அவ்வளவுதான், அவர் தனது ஊரை நோக்கித் திரும்பி ஓடினார். தான் முதுகு காட்டித் துறந்துவந்த அதே மக்கள் கூட்டத்திற்கு முகம் காட்டி, அவர்களை நோக்கி ஓடினார். அதிசயம் நிகழ்ந்துவிட்டது. அதைப் பகிர்ந்தளிக்க வேண்டும். பூக்கள் மலர்ந்துவிட்டன. நறுமணம் பரவுவதுதான் மிஞ்சியுள்ளது.

இந்த வாழ்க்கையில் எதை நீ சேமிப்பாயோ அதை நீ இழந்துவிடுவாய். எதைப் பிரித்தளிக்கிறாயோ அது உன்னிடம் மிஞ்சும்! இது வாழ்க்கையின் விசித்திரங்களில் ஒன்று. எதைக் கொடுக்கிறாயோ அதுவே உன்னுடையதாக இருக்கும். எதைச் சேமித்துப் பாதுகாக்கிறாயோ, மறைக்கிறாயோ, அது அழுகிவிடும். அது என்றும் உன்னுடையதாக இராது.

சமாதி என்பது தியானத்தின் சிகர நிலையாகும். அது பழுத்ததும் பிரித்தளிக்கப்பட வேண்டும். அனுபவத்தை வெளிப்படுத்த, அதாவது,

பிரித்தளிக்க, முடிந்தால்தான் அது உண்மையான சமாதி. பகிரமுடியாதெனில் அது பொய்யாகும். எங்கோ ஏதோ தப்பு நடந்திருக்கும்; குறைபாடு உண்டாகியிருக்கும்; தவறான புரிதல் ஏற்பட்டிருக்கும். மேகம் நீரால் நிறைந்துவிட்டால் அது மாமழையாகப் பொழியத்தான் செய்யும். இதனால் பூமியின் தாகம் தணியும். விளக்கு எரிந்தால் அதன் ஒளி பரவத்தான் செய்யும்.

சமாதியின் பலனும் பகிர்ந்தளிக்கப்படுகிறது. இதன் விளைவாகத் தான் சாஸ்திரங்கள் தோன்றின. இந்த அடிப்படையில்தான் அவை சாதாரண நூல்களிலிருந்து வேறுபடுகின்றன. புத்தகத்தை மனிதன் எழுதுகிறான். அதை எழுத விசேஷ முயற்சி எடுத்துக்கொள்கிறான். சாஸ்திரமோ சமாதிநிலை காரணமாக இயல்பாகப் பிறக்கிறது. அதற்கென விசேஷ பிரயத்தனம் தேவையில்லை. சமாதிநிலையில் தியானத்தின்போது தோன்றியவைதாம் உபநிடதங்கள், வேதங்கள், தம்மபதம் முதலிய புனித நூல்கள்.

சமாதிநிலை அனுபவத்தை முழுமையாக வெளிப்படுத்த முடிவதில்லை. சில பகுதிகள் சொல்லப்படாதிருக்கின்றன. பகிர்ந்து தரப்படாமல் சில பகுதிகள் மிஞ்சி விடுகின்றன. நிசப்தம் (நி+சப்தம்) சொல் இன்மை என்ற சமாதி நிலையில் உணர்வதை சொற்களில் கொண்டு வருவது கடினம். உருவமற்ற நிலையில் கிடைத்த அனுபவத்திற்கு உருவம் தருவது கஷ்டமானது. மௌன நிலையில் தரிசித்த ஒன்றிற்கு வடிவம் அளித்து வர்ணிப்பது மிகவும் சிரமம்.

**கண்ணன் நாடினான் கன்னியர் பலரை**
**ஆனால் அவன் தேடிய பேரழகி**
**என்றுமே அவன் வசப்படவில்லை**
**கண்ணனைக் காதலித்த கோபியரில்**
**அவள் ஒருத்தியாய் அமைந்திருந்து**
**அவன் அடைய முடிந்திருந்தால்**
**மேலும் யாரையும் பின்தொடர**
**தேவைதான் என்ன கண்ணனுக்கு?**

**கவிஞன் பாடினான் கவிதைகள் பல**
**ஒரே கருப்பொருளையே விதம்விதமாய்**
**விரித்தும் விளக்கியும் அப்பொருள் என்றும்**
**முழுமையாய் அவனுக்கு வசப்படவில்லை**

**என்றோ ஒருநாள் ஏதேனும் ஒரு கவிதை அப்பொருளால் நிறைந்து விளங்குமேயானால் அதற்கு மேலும் கவிதைகள் இயற்ற தேவைதான் என்ன கவிஞனுக்கு?**

புத்தர் 40-42 வருஷங்கள் உபதேசம் செய்தார். இரவும் பகலும் ஒவ்வொரு நாளும் உபதேசித்தார். மகாவீரர் அலைந்து-அலைந்து 40 வருஷங்கள் உபதேசித்தார். அவர்கள் இருவரிடமும் மக்களுக்குச் சொல்ல வேண்டிய விஷயம் இருந்தது. முயன்றவரையிலும் சொன்னார்கள்; அயராமல் சொன்னார்கள். ஆனாலும் அவர்களால் முழுமையாகச் சொல்ல முடியவில்லை. சொற்களின் பற்றாக்குறை காரணமாக ஏதோ விட்டுப்போகிறது, பின்தங்கி விடுகிறது.

ரவீந்திரநாத் டாகுர் இறக்கும் தறுவாயில் சொன்னாராம், 'இறைவா! நான் விரும்பிய கால அளவிற்கு முன்பாகவே என்னை எடுத்துச் செல்கிறாயே. நான் இப்போதுதான் வீணையை மடியில் தூக்கி வைத்துக் கொண்டேன். இன்னும் பாடவே ஆரம்பிக்கவில்லையே.' அவர் ஏற்கெனவே 6000 பாடல்கள் இயற்றி முடித்திருந்தார். ஆனாலும் அவர் முழுமை உணர்வு பெறவில்லை. 'நான் இப்போதுதான் வீணையை மடியில் சுமத்தினேன். தபலாவில் சரியான ஒலி அளவுக்கு ஏற்பாடு செய்தேன். வீணையின் தந்திகளை இறுக்கினேன். இந்த சமயம் பார்த்து சட்டென்று தூக்கிச் செல்கிறாயே. நான் பாட வேண்டிய அசலான, உண்மையான பாட்டு இன்னும் பாடப்படாமலிருக்கிறதே' என்று அங்கலாய்க்கிறார்.

**பி**ரிட்டிஷ் வைஸ்ராய் ஒருவர் லக்னோ நவாப்பின் விருந்தினராகச் சென்றிருந்தார். நவாப்புகளின் தர்பாரில் இசைக்கு முதலிடம் என்பதால் வைஸ்ராயை கௌரவிக்கும் வகையில் சிறு கச்சேரிக்கு ஏற்பாடாகியிருந்தது. சாஸ்திரீய சங்கீதம் என்பதால் முதலில் சுருதி சரிபார்க்கலாயினர். தபேலாக்காரர்கள் தபேலாக்களைத் தட்டி-தட்டிப் பார்த்தனர். வீணை வாசிப்போர் தந்திகளைச் சுண்டிச் சரிப்படுத்தியபடி இருந்தனர். ஹார்மோனியம் இலேசாக அசைத்து அசைத்துச் சோதிக்கப்பட்டது.

வைஸ்ராய் கச்சேரி ஆரம்பித்துவிட்டதென நினைத்தார்! அவர் நவாப்பை அழைத்து, "இவர்கள் மாற்றி-மாற்றித் தட்டுவது இனிமையாக உள்ளது. இப்படியே கச்சேரி தொடரட்டும்." என்றார்!

நவாப் அவருக்குத் தெரியாமல் தலையைத் தட்டிக் கொண்டார். சந்திப்புக்கு ஒதுக்கிய ஒரு மணி நேரம் முடிந்ததும் வைஸ்ராய் கிளம்பி விட்டார். சுருதி சேர்க்கும் சப்தத்தையே ஒரு மணி நேரம் நரக வேதனையாக நவாப் அனுபவித்தார். முதல் பாட்டே தொடங்கவில்லை. கச்சேரி முடிந்துவிட்டது!

எந்த மகாகவிஞனும் தான் சொல்ல விரும்பியதை முழுமையாகப் பாடியதில்லை. எந்த ஞானியும் தன் உபதேசத்தை முழுமையாகக் கூற முடிந்ததில்லை. ஏதாவது சொல்லப்படாமலே, சொல்ல முடியாமலே விடப்பட்டிருக்கிறது. ஏனெனில் ஆத்மாவின் உலகத்தில் பெறப்படும் செய்தியை அப்படியே மனத்திற்குக் கொண்டுவருவது கடினம். மனம் மிகவும் சிறியது, குறுகியது, வீட்டு முற்றம் அளவிலானது. ஆத்மாவோ ஆகாயம் அளவிற்கு விசாலமானது. மனத்தில் இறங்கிவந்த முழுமையற்ற செய்தியையும் உடலால் (வாயால்) அல்லவா சொல்ல வேண்டியுள்ளது. இதனால் செய்தி மேலும் சுருங்கி விடுகிறது. மனத்தில் உள்ளதையெல்லாம் சொல்வதற்குக் கைவசமுள்ள சொற்கள் போதாது. வானத்தில் மாமழையாகத் திரண்டது சிறுதூறலாக பூமிக்கு வந்து சேர்கிறது. ஆனாலும் ஓர் ஆறுதல். நம்மீது படும் மழைத்துளி அது உற்பத்தியாகுமிடமாகிய மாகடலை நினைவூட்டுகிறது என்பதுதான். சூரியனின் ஒரு கிரணமே போதும் அந்த மாபெரும் ஒளியை நினைவுபடுத்த.

ஆனந்த அனுபவம் நிகழும் சமயம் எவ்வித எண்ணமும் உணர்வுகளும் தோன்றுவதில்லை. அந்த அனுபவத்தைப் பிறருக்குத் தெரியப்படுத்த விரும்பும் போதுதான். உணர்ச்சி அலைகள் மனத்தில் எழுகின்றன. உணர்ச்சி என்பது அனுபவத்தின் பின்விளைவே தவிர அதுவே அனுபவம் ஆகிவிடாது.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நாங்கள் மிகவும் பழங்காலத்தவர் ஆகிவிட்டோம். ஏதேனும் புதுமை எதிர்ப்பட்டால் எங்கள் உடம்பு பலகீனமடைந்து விடுகிறது. அர்ஜுனனின் கரத்திலிருந்து காண்டீப வில் நழுவியது**

**போல் நலிந்து போகிறோம். அச்சத்தால் நடுங்குகிறோம். புதுமைகள் நிகழ வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்தான். ஆனால் பயமென்னும் இருட்டு எங்களைச் சூழ்ந்து கொள்கிறது. அப்போது என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கிறோம். புதியதை வரவேற்க எங்களுக்கு எத்தகைய மனநிலை அமைய வேண்டும்? நாங்கள் எத்தகைய கண்ணோட்டம் கொண்டிருக்க வேண்டும்?**

**உ**ன் கேள்வி மூலம் ஒரு விஷயம் தெளிவாகிறது. உனக்கு இன்னமும் பழைமை சலிக்கவில்லை; அதில் இன்னமும் உனக்கு ருசி மிஞ்சியிருக்கிறது; அதனுடன் நீ போட்டுக்கொண்ட முடிச்சு நெகிழவில்லை என்றெல்லாம் புரிந்துகொண்டேன்.

முதலில் நீ பழைமையை ஆராய்ந்து கவனி. அப்போதுதான் அதனுடனான உனது தொடர்பை நீக்கிக்கொள்ள முடியும். பழைமையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு புதுமைகளை வரவேற்க விரும்பினால் அது நடைபெற முடியாத காரியம். பழைமை உன்னை பயமுறுத்தத்தான் செய்யும். ஏனெனில் பழைமையில் நீடிப்பதில் சுயநலம் கலந்திருக்கிறது. புதுமை வந்தால் பழைமை தூக்கி எறியப்படும் என்பதுதான் அந்த பயத்தின் அடிப்படை. ஆகவே பழைமை, புதுமையை எதிர்க்கிறது. பழைமையில் உனக்கு இன்னமும் சலிப்பு ஏற்பட்டிருக்கவில்லையானால், பழைமையால் நீ களைத்துப் போகவில்லையானால், பழைமையில் சாரம் மிஞ்சியிருக்கவில்லை என்பதை உன்னால் காணமுடியவில்லை என்றால் புதுமையை ஏற்றுக்கொள்வதைப் பழைமை தடுத்துத்தான் தீரும்.

**எ**ன்னிடம் வருகின்ற சிலர் தாங்கள் தியானம் கற்றுக் கொள்ள விரும்புவதாகச் சொல்கிறார்கள். "ஏற்கெனவே 20 வருஷமாக தியானம் செய்து வருகிறோம். உங்கள் மூலம் நாங்கள் அதில் மேலும் முன்னேற்றம் காண விரும்புகிறோம்," என்கிறார்கள்.

"இத்தனை ஆண்டுகளாகவா தியானம் செய்து வருகிறீர்கள்? இதுவரை என்ன பலன் கிடைத்தது?" என்று நான் விசாரிப்பதுண்டு.

அதற்கு அவர்கள் "தியானத்தின் மூலம் கணிசமான சாந்தியும், கணிசமான சுகமும் கிடைத்துள்ளது." என்பார்கள்.

ஆனால் கவனித்துப் பார்த்தால் அவர்களின் முகத்தில் சாந்தியும் இருக்காது; சுகமும் தெரியாது. உள்ளத்தை ஊடுருவிப் பார்த்தால் அது பாலைநிலமாக இருக்கும். பசுமையோ, குளிர்ச்சியோ தெரியாது. அங்கு இன்னொலி எதுவும் கேட்காது.

இதையெல்லாம் கவனித்து நான், "மறுபடியும் யோசித்துச் சொல்லுங்கள். இப்போது செய்துவரும் தியானத்தாலேயே அமைதியும் ஆனந்தமும் உங்களுக்குக் கிடைத்து வருகிறது என்றால் பிறகு ஏன் என்னிடம் வந்து நிற்கிறீர்கள்? அதையே தொடர்ந்து செய்யுங்களேன். நான் உங்களுக்குக் கிடைத்து வருகின்ற நல்ல பலன்களைத் தடுக்க விரும்பவில்லை. நான் உங்கள் எதிரி அல்லவே," என்கிறேன்.

அவர்கள் தலையைச் சொறிகிறார்கள். "நாங்கள் தியானம் செய்து வருகின்றோமானாலும் எங்களுக்கு விசேஷமான பலன் எதுவும் கிடைக்கவில்லை. அதிகமாக மனக்குழப்பம் (அசாந்தி) இல்லை என்று வேண்டுமானால் சொல்லலாம்," என்று சமாளிக் கிறார்கள்.

முதலில் சாந்தி கிடைத்தது என்று சொன்னவர்கள் இப்போது அதிகம் அசாந்தி இல்லை என்கிறார்கள். நான் அவர்களிடம், "அப்படியானால் தியானம் காரணமாக உங்களுக்குள் ஏதோ மாற்றம் நிகழ்ந்து வருகிறது என்றுதான் அர்த்தமாகிறது. தியானத்தின் முழுப் பலன் கிடைக்க 20 வருஷமென்ன, 20 பிறவிகூட தேவைப்படலாம். நீங்கள் சரியான பாதையில்தான் செல்கிறீர்கள். உங்கள் பயணத்தைத் தொடருங்கள். இங்கே வந்து என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்." என்று விரட்டப் பார்க்கிறேன்.

அவர்கள் யோசிக்கிறார்கள். உண்மையை வெளிப்படையாக ஒப்புக் கொள்ளாவிட்டால் என்னோடு சம்பந்தம் வைத்துக்கொள்ள முடியாது என்று புரிந்துவிடுகிறது. வேறு வழியின்றி அவர்கள், "சுவாமி, நாங்கள் 20 வருஷம் தியானம் செய்தோம். பலன் பூஜ்யம்தான்," என்று மனம் திறந்து பேசுகிறார்கள்.

"பலன் பூஜ்யம்தான் என்று தெரிய 20 ஆண்டுகளா ஆயிற்று? நீங்கள் வாழ்க்கையின் கால் பகுதியை வீணடித்துவிட்டீர்களே," என்று வருத்தத்துடன் கூற மட்டும்தான் என்னால் முடிந்தது.

இருபது ஆண்டுகளாகச் செய்த முயற்சிகளுக்கு பலன் ஏதும் கிடைக்கவில்லை என்பதைக்கூட நமது மனம் ஒப்புக்கொள்ளத் தயங்குகிறது. இதனால் நமது அகங்காரம் அடிபட்டு அவமானப் படுகிறது. 'நான் 20 ஆண்டுகளாக முட்டாளாக, அறிவிலியாகவா இருந்தேன்?' என்று மனம் பதைபதைக்கிறது. 'இல்லை, ஏதோ முன்னேற்றம் ஏற்படத்தான் செய்தது' என்று அகங்காரம் பொய்யான ஆறுதல் கூறுகிறது. அப்படியானால் புதுமையைப் பற்றிக் கவலை ஏன்; சிந்தனை ஏன்; என்னிடம் கேள்வி ஏன்? பழைமையோ, புதுமையோ, சாரம்தான் முக்கியம்.

ஆகவே பழைமையில் சாரம் இருக்கிறதா, அர்த்தம் இருக்கிறதா என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். அப்போது அகங்காரத்தைத் தலையிடவிடக் கூடாது. நீ ஹிந்து, முஸ்லிம், ஜெயின் எதுவானாலும் அதனால் உனக்குப் பலன் ஏதும் விளைந்ததா என்று பார்.

**ஐ**ரோப்பாவிலிருந்து ஒரு பெண்மணி சந்திக்க வந்திருந்தாள். வயதானவள் அவள் சொன்னாள்: "சுவாமி, நான் இயேசுநாதரைப் பின்பற்றுபவள். அவரைத் தவிர வேறு யாரையும் சத்குருவாக என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது."

நான் அவளிடம், "நீங்கள் சொல்வது முற்றிலும் சரியே. தேவைதான் என்ன? ஒரு குரு போதுமே. ஒரு குருவே நற்கதி (மோட்சம்) பெற்றுத் தந்துவிடுவாரே. இரண்டு குரு எதற்காக? நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்? உங்களுக்குத்தான் இயேசு குருவாகக் கிடைத்துவிட்டாரே," என்று சுட்டிக்காட்டினேன்.

வந்தவள் தடுமாறினாள். ஏனெனில் அவள் வந்ததே ஒரு குருவைத் தேடித்தான். என்னிடம் உபதேசம் பெறவும், அவளுக்கு விருப்பம். அதேசமயம் பழையை தொடர்பைக் கைவிடவும் அவள் தயாராக இல்லை. அதற்கு நான், "என் வீட்டுக் கதவு அடைக்கப் பட்டுள்ளது. உனக்கு இயேசு வீட்டுக் கதவு திறந்திருப்பதால் அதுவே போதுமானது. நான் உன்னை எங்கே அழைத்துச் செல்ல முடியுமோ அங்கே இயேசுவாலும் அழைத்துச் செல்ல முடியும். நீ அதே வழியிலேயே போகவும்" என்று அறிவுறுத்தினேன்.

அவள் விடவில்லை. "இயேசுநாதர் மறைந்து 2000 வருடங்களாகிவிட்டன. அவரிடம் சென்று இனி உபதேசமோ, ஆலோசனையோ யார் கேட்க முடியும்?" என்றாள்.

"என்னிடம் எதுவும் கேட்டறிந்து கொள்ள விரும்பினால் நீங்கள் இயேசுவைக் கைவிட வேண்டும். உயிருள்ளவர்களின் நட்பு வேண்டுமாயின் இறந்தவர்களைக் கட்டிப்பிடித்துக் கொண்டிராதே." என்றேன்.

அதற்கு அவள், "அதெப்படி சுவாமி முடியும்? நான் கத்தோலிக்க கிறிஸ்தவத்தைச் சேர்ந்தவள். இயேசுவையே பின்பற்றி வருபவள்," என்று ஆட்சேபித்தார்.

நான் விளக்கமாகச் சொன்னேன்: "இதோ பாரம்மா, நீ கிறிஸ்தவத்தை நம்பு அல்லது நம்பாதிரு. நான் எந்த மதத்திற்கும் எதிரானவன் இல்லை. கிறிஸ்தவத்தால் உனக்கு நல்லது விளைகிறதெனில், அதனால் உன் வாழ்க்கையில் சில பூக்களாவது மலர்கிறதெனில், 'ஆயிரம் பூக்கள் மேலும் பூக்கட்டும்' என்று நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன். நீயாகவேதான் வந்தாய். பூக்கள் நிறைய மலரவில்லை என்கிறாய். கிறிஸ்தவத்தால் முழுமையான பலன் கிடைக்கவில்லை என்பது உன் குற்றச்சாட்டு. கிறிஸ்தவம் முழுமை பெறாத மதம் என்று நான் கூறமாட்டேன். உன்னைப் பொறுத்தவரையில் அம்மதம் மனநிறைவு தரவில்லை என்றுதான் தெரிகிறது. உனக்கும் அதற்கும் எங்கோ பொருந்தவில்லை என்பதுதான் காரணம். இந்த உண்மையைத் தெரிந்துகொள். அதுவரையிலும் உன்னால் புதியது எதையும் ஏற்க முடியாது. முதலில் பழைமையிலிருந்து அல்லது பழக்கமானதிலிருந்து விடுபட்டால்தான் புதியது எதுவும் பிரவேசிக்க வழி கிடைக்கும்."

புதியதை வரவேற்கும் முன் பழையதற்கு விடைகொடுத்து அனுப்பு. பழைய ஆள் வீட்டில் வசித்துவரும் நிலையில் புதிய ஆளை நீ உள்ளே அழைத்துவர முயன்றால், அவனைப் பழைய ஆள் உள்ளே வரவிடமாட்டான். ஏனெனில் அவன் எத்தனையோ வருஷங்களாக வசித்து அங்கு வேரூன்றியுள்ளான். தற்காலிகமாக, வாடகைக்கு வசிப்பவர்கூட, நீண்ட காலம் ஓரிடத்தில் வசித்துவந்தால், அவரை சுலபத்தில் அசைக்க முடியாது. முதலில் அவர் வெளியேறட்டும்.

ஒரு விஷயம் மட்டும் நினைவில் வை. பழைமையினால் உனக்கு ஏதேனும் நன்மை கிடைத்துள்ளதா என்று ஆராய்ந்து பார். ஆம் எனில் புதியதுடன் கைகோத்துப் போகவேண்டிய தேவையில்லை. புதியது-பழையது என்ற விவாதமே கூட அடிப்படையில் வேண்டாம். சத்தியம் (பேருண்மை) என்பது பழையதா, புதியதா? இரண்டுமில்லை; சத்தியம் காலத்திற்கு அப்பாற்பட்டது.

உனக்கு வாழ்க்கையில் சாரம் ஏதும் தென்பட்டதா? அமிர்த அருவி பெருக்கெடுத்ததா? பழைமையின் காரணமாக விளைந்திருந்தாலும் சரி. நீ அதிர்ஷ்டசாலி. அதை நீ திருவிழாவாகக் கொண்டாடு; ஆடு-பாடு! பழைமையில் எதுவும் நிகழவில்லை எனில், துணிச்சலைத் திரட்டு; பழைமைக்கு விடைகொடுத்து அனுப்பு. பழைமையிலிருந்து விடுபடுவதுதான் புதுமையை வரவேற்பதற்கான முதல் கட்டமாக அமைகிறது.

ஆனால் நீயோ தந்திரசாலி. நீ சூழ்ச்சிக் கணக்கு போடுபவன்! நீ பழைமையும் நீடிக்க வேண்டுமென ஆசைப்படுகிறாய். புதுமையில் ஏதேனும் சத்துசாரம் இருந்தால் அதையும் உன் வசமாக்கிக் கொள்ள விரும்புகிறாய். இது சாத்தியமில்லை. இதனால் உனது குழப்பம்தான் அதிகரிக்கும். இரண்டு படகுகளில் ஒரேசமயம் பயணிக்க முயலாதே. நீரில் மூழ்கிப்போவாய். இரண்டு குதிரைகளின்மீது ஒரேசமயம் சவாரி செய்யாதே. விழுந்து காலை உடைத்துக் கொள்வாய். பழையதும் புதியதும் ஒரே கணக்கில் அடங்காது.

பழைமையைக் கவனமாகப் பார். அங்கே சாம்பல்தான் கொட்டிக் கிடக்கிறது. கனவுகள்தான் மிஞ்சியுள்ளன. அவையும் சேதமடைந்திருக்கின்றன. அது ஒரு சிறை. அங்கிருந்து ஆகாயம் தெரியாது. நீ விலங்குகளால் கட்டப்பட்டுள்ளாய். இதை நீ தெளிவாக அறிந்து கொண்டால் புதுமையை வரவேற்பது சாத்தியமாகிறது. இதுவரை நீ சரியான வழி என்று பின்பற்றிய பாதைகள் உன்னை எங்கும் கொண்டு போய்ச் சேர்க்கவில்லை; அலைச்சல்தான் மிச்சம் என்ற முடிவிற்கு வந்ததும் புதுமையை நோக்கி நடைபோடுவது தானாகவே நிகழ்கிறது. ஆனால் பெரும்பாலோர் பாதுகாப்பு என்ற பெயரில் செக்குமாட்டு வாழ்க்கையே நடத்தி வருகின்றனர்.

தர்க்க சாஸ்திர அறிஞர் ஒருவர் எண்ணெய் வாங்க வாணியர் வீட்டுக்கே சென்றார். சிறிய கடைபோல் அமைத்து வாணியர் எண்ணெய் விற்றுக்கொண்டிருந்தார். கடையின் பின்புறம் செக்கை இழுத்துக் கொண்டு ஜோடி மாடுகள் சுற்றி-சுற்றி வந்தபடி இருந்தன. யாரும் விரட்டாமல் அவை ஒரே வேகத்தில் செக்கிழுப்பதைக் கண்டு அறிஞர் அசந்துபோனார்!

அவர் வாணியரிடம், "இதென்ன அதிசயமாக இருக்கிறதே! இந்த மாடுகள் யாரும் அடிக்காமலே முன்னேறி உழைக்கின்றனவே. ராமாயண-மகாபாரதக் கால மாடுகள்போல் சாதுவான இவை உனக்கு எங்கிருந்து கிடைத்தன? யாரும் தார்க்கோலால் அடிக்காமலே, யாரும் கண்காணிக்காமலேகூட இந்த கலிகாலத்தில் இப்படி உழைக்கின்ற மாடுகள் உள்ளனவே," என்று தொடர்ந்து புகழ்ந்தார்.

வாணியர் சிரிப்பை அடக்கியபடி சொன்னார், "ஐயா, அவை உண்மையில் தாமாகச் செல்லவில்லை. அவை அவ்வாறு செல்ல வைக்கப்படுகின்றன. அதன் பின்னால் ஒரு தந்திரம் இருக்கிறது. மனிதன் தனது அறிவைக் கொண்டு என்னதான் சாதிக்க முடியாது?"

அறிஞர் அதற்கு, "நானே அறிவை ஆதாரமாகக் கொண்டுதான் வாழ்பவன். இந்த மாடுகளைப் பற்றிய ரகசியத்தைச் சொல்லுங்கள்," என்று கேட்டுக் கொண்டார்.

வாணியர் விளக்கினார்: "மாடுகளைப் பாருங்கள். கழுத்தில் மணிகள் தொங்குகின்றன அல்லவா? மாடுகள் நடக்கும்போது மணியடித்தபடி இருக்கும். என் காதில் மணி ஓசை விழும். ஓசை நின்றால் நான் போய் தார்க்கோலால் மாடுகளை அடிப்பேன். ஆகவே மாடுகளுக்குத் தங்கள் எஜமானன் சில சமயம் தங்கள் பின்னால் இல்லை என்பது தெரியாது. அவற்றின் கண்ணையும் நான் கட்டி விடுகிறேன். நடப்பது நின்றால், மணியடிப்பதும் நிற்கும். இப்போது எஜமானன் அடிப்பார் என்று மட்டுமே அவை அறிந்துள்ளன."

அறிஞர் சந்தேகம் கிளப்பினார்: "மணி ஓசை நின்றால்தான் அடி விழும் என்று மாடுகள் தெரிந்து கொண்டுவிட்டன. ஆகையால் அவை மேலே செல்லாமல் ஓரிடத்திலேயே நின்று கழுத்தை மட்டும் ஆட்டினால் மணி ஓசை கேட்டபடி இருக்கும் அல்லவா? அடியும் விழாது அல்லவா?"

வாணியர் பதறினார். "ஐயா, ஐயா, இவ்வளவு சத்தம் போட்டுப் பேசாதீர்கள். இந்த மாடுகள் நீங்கள் சொன்னதைப் புரிந்து கொண்டுவிடும். நீங்கள் ஏன்தான் இங்கே வந்தீர்களோ என்று இருக்கிறது. நல்லவேளையாக, நீங்கள் சொன்னதுபோல் இந்த மாடுகள் இதுவரை செய்ததில்லை. மெதுவான குரலில் பேசுங்கள். இன்னொரு முறை நீங்கள் இங்கே வந்தால் இந்த மாதிரி அசட்டுத்தனமாக எதுவும் பேசாதீர்கள்," என்று மன்றாடினார்.

செக்குமாட்டைப் பார்த்து நீ பரிதாபப்படாதே. நீயே அத்தகைய ஒரு மாடுதான். நீ ஹிந்துவோ, கிறிஸ்தவனோ, பௌத்தனோ, எந்த மதத்தைச் சேர்ந்தவனாயினும், உன் மதத்துப் பண்டிதர்களும் புரோகிதர்களும் உன் கழுத்தில் மணிகட்டி, உன் கண்களுக்கும் மறைப்புப் போட்டு, உன்னை மாடாக நடத்திச் செல்கிறார்கள். நீ புதியதை அறிய விடமாட்டார்கள். அவர்கள் முட்டுக்கட்டை போடுவார்கள். சுயமான பார்வையில்லாமலேயே நீ வாழவேண்டுமென அவர்களால் கட்டாயப்படுத்தப்படுகிறாய்.

புதிய சத்தியத்திற்கும் பழைய சத்தியத்திற்கும் இடையே போராட்டம் கிடையாது. சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் இடையேதான் போராட்டமெல்லாம். அவ்வாறு நீ பிரித்தறிய முடிந்தால் பிறகு அந்தப் போராட்டமும் கிடையாது. ஏனென்றால் பிறகு நீ தானாகவே உள்ளக் கதவைத் திறந்துவிட்டு, சத்தியத்தை வரவேற்று அதைக் கட்டித்தழுவிக் கொள்வாய்.

நீ உன் வீட்டைவிட்டுப் புறப்பட்டு பல்லாண்டுகள் ஆகிவிட்டன. மீண்டும் ஒரு நம்பகமான, நிரந்தரமான இருப்பிடம் தேடி அலைந்து திரிந்தாய். எங்காவது சத்தியத்தின் புதிய குரல் கேட்குமா, புதிய வடிவம் தோன்றுமா என்று ஏங்குகிறாய்.

பழைமை என்றுமே கையாள்வதற்கு சுலபமானது. ஏனெனில் அது நமக்குப் பழக்கமானது, நமக்குத் துணையாக ஒரு கூட்டமும் இருக்கும்.

புதியது என்றுமே சங்கடமானது. அது பழக்கமாகும்வரை உரசலாக இருக்கிறது. நம்மைச் சுற்றிலும் பக்கபலமாக நாலுபேர்கூட இருக்க மாட்டார்கள். புத்தர் வாழ்ந்த காலத்தில் அவருடனிருந்த

ஆதரவாளர்கள் வெகுசிலரே. இப்போது உலகில் பௌத்தர்களின் எண்ணிக்கை ஏராளம்.

இதோ, இப்போது நான் இங்கே இருக்கிறேன். என் ஆதரவாளர்களாக இருப்பவர்களை எண்ணிவிடலாம். சில நூற்றாண்டுகள் கழித்து வந்துபார். என்னைப் பின்பற்றுபவர்கள் என்று மாபெரும் கூட்டம் திரண்டிருப்பதைக் காண்பாய். ஆனால் என் மதிப்பீட்டில் என் உபதேசங்கள் சாரமற்றவையாகியிருக்கும். அதன்மீது அடர்த்தியான தூசி படிந்துபோயிருக்கும். என் சம்பிரதாயம் என்று கூறிக்கொண்டு தோன்றிய பண்டிதர்களும் பூசாரிகளும் என் அறிவுரைகளின் அர்த்தத்தைச் சேதப்படுத்தியிருப்பார்கள். கூட்டம் சேரச்சேர சடங்குகளே மிகுந்து மூல அறிவுரைகள் சிதைந்துபோகும்.

சத்தியம் அடிப்படையில் மாறாவிடிலும் காலம்தோறும் புதிய வடிவில் காட்சி தருகிறது. ஏனென்றால் பண்டிதர்களும் பூசாரிகளும் அவ்வப்பொழுது அதன் அர்த்தத்தைக் கெடுத்து விடுகின்றனர். சத்தியம் புது வடிவம் எடுக்கும் போதெல்லாம் சிலர் அதன்மீது உரிமை கொண்டாடத் தொடங்குகிறார்கள். இந்த மனப்பான்மையை மாற்றவே முடியாது.

பழைமையை ஆதரித்துப் பெரிய கூட்டம் உள்ளது. பழைமைக்கெனத் தனி அந்தஸ்துள்ளது. ஆனால் என் அறிவுரைகள் புதியவை என்பதால் அவற்றை வரவேற்பதில் மக்கள் தயக்கம் காட்டுகின்றனர். வேதங்களில் சொல்லப்பட்டுள்ளதை நீ ஒப்புக் கொள்வாய். ஏனென்னால் அவை 5000 ஆண்டுகளக்கு முற்பட்டவை.* வேத பண்டிதர்கள் அவை 90000 ஆண்டுகள் புராதனமானவை என்று சொல்வது வேறு விஷயம். மதத்தலைவர்கள் தங்கள் மதங்கள் மிகுபழைமையானவை என்று நிலைநாட்டுவதற்கு தீவிர முயற்சி செய்கிறார்கள். ஒரு மதம் எவ்வளவு பழைமையானதோ அந்த அளவிற்கு அதன் அந்தஸ்து கூடுகிறது. வியாபாரத்தில் நீண்ட காலமாக உள்ள கடைகளுக்குத் தனி மதிப்பு இருப்பதுபோல்தான் இதுவும். ஒரு கடை நீண்டநாட்கள் நீடிக்க முடிகிறதெனில் சரக்கு தரமானதாக இருக்கும் என்பதுதான் மக்களின் கணிப்பு.

---

* அவை இயற்றப்பட்ட காலம் கி.மு.1500; இப்போதிலிருந்து 3500 ஆண்டுகளுக்குமுன்.

ஆகவே ஒவ்வொரு மதத்தலைவரும் தங்கள் 'கடை'தான் முதலில் தோன்றியது என்று வாதிடுகின்றனர். இந்துமதத்திலிருந்து சமணம் பிரிந்து தோன்றியதாகத்தான் வரலாறு.* ஆனால் ஜைனர்கள் தங்கள் மதம் இந்துமதத்திற்கும் முற்பட்டதென்கின்றனர். ஆதாரமாக அவர்கள் ரிக்வேதத்தில் அவர்களின் முதல் அவதாரமாகிய ஆதிநாதர் அல்லது ரிஷபதேவரின் பெயர் வருகிறது என்கின்றனர். அவர்கள் இப்பெயரை மிகுந்த பக்தியுடன் கூறுகின்றனர். அவர் பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்டவராகக் கருதப்படுவதுதான் காரணம். மூதாதையர்களை வழிபடுவது நம் மக்களுக்குப் பிடித்தமானது.

மூவாயிரம் வருஷங்களுக்குமேல் முற்பட்ட ரிக்வேதத்தில் சமணர்கள் தாங்கள் கொண்டாடுகின்ற ரிஷபதேவர் பெயர் வருகிறது என்று கருதுவதால் அவரது பழைமைக்காக அவரை வழிபடுகின்றனர். உயிருள்ளவருக்கு யாராவது தகுந்த மரியாதை தருகிறார்களா? உயிருடனுள்ளவரிடம் மக்கள் பயப்படுகிறார்கள். அவரைத் தவிர்க்கவே முயலுகிறார்கள். மரியாதை தருவது கிடையாது என்பதுடன் அவரை ஏசுகிறார்கள், எதிர்க்கிறார்கள். ஆனால் 50-60 ஆண்டுகள் கழிந்தபின் அவரை உயர்த்தி பூஜைகூட செய்கின்றனர்!

ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் மதம் மிகவும் தொன்மையானது என்பதை நிலைநாட்ட என்னென்னவோ உபாயம் செய்கின்றனர். குடும்ப வாழ்க்கையில் நாம் காண்பதைப் போலவே, நீண்ட பாரம்பரியத்தைக் கொண்டிருப்பதைத் தங்கள் தனிச்சிறப்பாக, கௌரவமாக மதங்கள் கருதுகின்றன.

அரசியலும் சரி, மதமும் சரி, மக்கள் கும்பலைத் திரட்டுவதிலேயே கவனம் செலுத்துகின்றன. அரசியல்வாதி தற்காலத்தை அடிப்படையாகக் கொண்டு மக்களைத் திரட்டுகிறார். தேர்தலில் வென்றவர் அதிகபட்சக் கும்பல் தன் பின்னால்தான் உள்ளது என்று ஆர்ப்பாட்டம் செய்கிறார். அரசியலில் சமகாலத்திற்குத்தான் முதலிடம்.

மதத்தலைவர் கும்பல் திரட்டுவது வேறு வகையில், அவர் முற்காலத்திலிருந்து கூட்டம் சேர்க்கிறார். 'ஐயாயிரம் ஆண்டுகளாக

* ஒரு தனிமதமாக சமணமதம் (ஜைனம்) கி.மு.6ஆம் நூற்றாண்டில் மகாவீரரால் (கி.மு.599-527) ஸ்தாபிக்கப்பட்டது. ஆனால் அம்மதத்தின் நம்பிக்கைப்படி அவர் கடைசியான, 24ஆவது அவதாரம்தான். ஆகவே சமணம் அவருக்கு 23 தலைமுறை முற்பட்டதென்கின்றனர்.

எங்கள் மதம் நீடித்து வளர்ந்துள்ளது. இத்துணை நீண்ட காலத்தில் எத்தனை-எத்தனை கோடி மக்கள் எங்கள் மதத்தைப் பின்பற்றிய வர்களாக இருப்பார்கள். இத்தனை பேருமா ஏமாளிகள்? இத்தனை பேருமா தவறான வழியில் தொடர்ந்து செல்வார்கள்? ஒருவரை-இருவரை ஏமாற்றலாம்; ஓராண்டு-ஈராண்டு எல்லோரையும் ஏமாற்றலாம். எல்லோரையும் எல்லாக் காலத்திலுமா ஒருமதம் ஏமாற்ற முடியும்?' என்பதே மதத்தலைவர்கள் முன்னெடுத்து வைக்கும் வாதம்.

ஆனால் உண்மை என்ன? ஒருபொழுதும் கும்பலிடம் சத்தியம் (பேருண்மை) இருக்காது. சத்தியம் அதிசயமாக வெகுசிலரிடமே காணப்படுகிறது. கும்பல் எப்பொழுதும் பொய்யை அடிப்படையாகக் கொண்டே ஜீவிக்கிறது. பொய்யைக் கடைப்பிடிப்பதுதான் நன்மையானது என நினைக்கிறது. போலியை அழகென நம்புகிறது. பொய்யானாலும் அதையே நம்பி வாழ்வதால் வாழ்க்கையில் மாற்றங்களைப் பற்றிய அச்சம் ஏற்படாது. ஒரே மாதிரி வாழ்க்கை பாதுகாப்பு உணர்வைத் தருகிறது. நீ தொடர்ந்து இப்படியே இரு என்று தூண்டுகிறது.

ஆனால் சத்தியம் வம்புபிடித்தது. அது யாருக்கும் அடங்காமல் திமிறும் தன்மை உடையது. சத்தியம் ஒரு பெருநெருப்பு. சத்தியம் எரிக்கும், உடைக்கும், வெட்டும், துண்டு துண்டாக்கும். 'நீ தொடர்ந்து இப்படியே மந்தையுடன் சேர்ந்து மந்தமாக இராமல் கிளர்ந்தெழு' என்று தூண்டும். இதெல்லாம் கூட்டத்திற்கு ஒத்துவராது. அதிர்ச்சியை அது தாங்காது. செக்குமாடுபோல் வாழ்க்கை நடத்துவதை மாற்றிக் கொள்ளாது. ஆகவே என்றும் நிரந்தரமான சத்தியம் இன்றும் புதுமையாகத் தென்படுகிறது. ஆனால் புதுமையை மக்கள் வரவேற்பது கிடையாதே. அந்தப் புதுமைத் தன்மை நீங்கி, பழைமையால் பாதிக்கப்படும்போது, அர்த்த மாறுதல்களால் அந்த சத்தியம் அசத்தியமாகிவிடுகிறது. கால ஓட்டத்தின் காரணமாக சத்தியம் துருப்பிடித்துக் கூர்மை மழுங்கிப்போகிறது.

நீ முதலில் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றுள்ளது. நீ ஏன் பழைமையைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறாய் என்று உன்னையே நீ கேட்டுப்பார். அப்போது நீ பழைமையைப் பகுத்து ஆய்வுசெய்ய நேரிடும். இந்த ஆய்வின் விரிவிற்கு ஏற்ப பழைமை கீழே சரியத் தொடங்கும். பிறகு நீ புதுமையை வரவேற்கத் தயாராகிவிடுவாய்.

ஏனெனில் புதுமைதான் துடிப்புள்ள வாழ்க்கை. புதுமைதான் கடவுள். புதுமையாக அமைவதே சத்தியத்தின் வழக்கம். அது என்றுமே புதுப்பொலிவுடன் திகழும்.

பழையவை என்பவை சொற்களின் ஒலிகள் மட்டுமே. அங்கே சத்தியம் இருக்காது. பழையவை சாஸ்திர நூல்களாகி விடுகின்றன. அவை சத்தியத்தை அனுபவபூர்வமாக பிரதிபலிப்பதில்லை. அவற்றைக் கொண்டு சமாதிநிலையை அடைய முடியாது. சத்தியத்துடன் கைகோத்துப் பயணிப்பவனுக்கு அளவற்ற துணிச்சல் தேவைப்படும். ஏனெனில் அவன் மக்கள் கூட்டத்திலிருந்து பிரிந்து தனியாகப் பயணிக்க நேரிடும். ஊருடன் ஒத்துவாழாமல், மந்தையில் ஓர் ஆடாக நீ இல்லாமல், தனிவழி போவதைப் பார்த்து மக்கள் ஏளனமாகச் சிரிப்பார்கள்; உன்னை விமர்சிப்பார்கள்; உன்னைக் கேலி செய்வார்கள். இவ்வாறெல்லாம் செய்து நீ புதிய பாதையில் போவதைத் தடுக்க முயலுகிறார்கள். அவர்கள் உன்னைக் குறைகூறக் காரணம் அவர்களுக்கு ஒரு பயம் உள்ளது. இதேபோல் ஒவ்வொருவராகக் கிளம்பினால் சமூகத்தின் பழைய கட்டமைப்பு சீர்குலையுமே என்று அவர்கள் அஞ்சுகிறார்கள். ஆனால் அந்த பழைய கட்டமைப்பு சத்தியத்தின் அடிப்படையில் அமையாமல் சுயநலத்தை அல்லவா ஆதாரமாகக் கொண்டுள்ளது.

எனது வழிகாட்டுதலின்படி சந்நியாசியாகின்றவன் ஆபத்தை விலைக்கு வாங்குகிறான் எனலாம். தைரியசாலிகள்தான் என்கீழ் சந்நியாசியாக முடியும். ஏனென்றால் அவனுக்கு ஏராளமான எதிர்ப்புகள் கிளம்பும். அவன் எங்கே போனாலும் மக்கள் பிரச்சினை உண்டாக்குவார்கள்.

**எ**ன் நண்பர் ஒருவர் என்னிடமே சந்நியாச தீட்சை பெற்றுக் கொண்டார். அவர் மனைவி என்னைச் சந்திக்க வந்தாள். என்னைப் பார்த்து, "என் கணவருக்கு நீங்கள்தானே தீட்சை அளித்தீர்கள். இவர் சந்நியாசியாகத்தான் ஆகவிரும்பினால் வழக்கமான, எல்லோருக்கும் பழக்கமான, பழைமையான முறையிலான சந்நியாசி ஆகியிருக்கக் கூடாதா? சமூகத்தில் அவருக்கு நல்ல மரியாதையாவது கிடைத் திருக்கும். அவர் வீட்டைத் துறந்து போயிருந்தாலும் பாதகமில்லை தான். நான் குழந்தைகளை வைத்துக்கொண்டு குடும்பத்தைச் சமாளித்து

விடுவேன். ஆனால் நீங்கள் இப்படிச் செய்துவிட்டீர்களே, சுவாமி. உங்கள் சந்நியாச முறை ஆபத்தானது,'' என்று குறை கூறினாள்.

எனது முறையிலான சந்நியாசத்தில் கணவன் வீட்டைத் துறப்பதில்லை. மனைவி-குழந்தைகளிடம் அக்கறை காட்டுவான். தொழில் அல்லது உத்தியோகத்தைத் தொடர்வான். குழந்தைகளைப் படிக்க வைப்பான். ஆனால் என்னைச் சந்தித்த மனைவியோ இதெல்லாம் வேண்டாம் என்கிறாள்! ''கணவர் வழக்கப்படியான சந்நியாசியாக வேண்டுமானால் ஆகட்டும். இமயமலைக்குப் போய் தவம் வேண்டுமானாலும் செய்யட்டும். இதற்கெல்லாம் நானும் குடும்பத்தினரும் சம்மதிக்கிறோம். மக்கள் அவரை உண்மையான சந்நியாசி என்று மதிப்பார்கள். உங்கள் வழிப்படி. சென்றால் அவர் ஒரேசமயம் சந்நியாசியாகவும் குடும்பஸ்தராகவும் அல்லவா இருப்பார். மக்கள் அவரை கபட சந்நியாசி என்று தூற்றுவார்களே'' என்றுதான் அவள் ஆதங்கப்பட்டாள்.

எத்தகைய விசித்திரமான பதிபக்தி! கணவனைக் கைவிட அவள் தயாராக இருக்கிறாள். அவரில்லாமலே குடும்பம் நடத்துவேன் என்கிறாள். அகங்காரம் எப்படியெல்லாம் வேடிக்கை காட்டுகிறது பாருங்கள். மக்கள் என்ன சொல்வார்களோ என்பதுதான் அவளது கவலையெல்லாம். அவள் ஜைன (சமண) மதத்தைச் சேர்ந்தவள். அம்மதத்திலுள்ள வழக்கப்படி கணவர் துறவியானால் மக்கள் பெரிய ஊர்வலமாக வந்து வழியனுப்புவார்கள். சொந்தக்காரர்களெல்லாரும் திரள்வார்கள். பெரிய கொண்டாட்டம் நடைபெற்றிருக்கும். இவ்வாறெல்லாம் அவள் கற்பனை செய்திருப்பாள். ஓஷோவிடம் சந்நியாசம் பெற்றவர்களை சமூகம் பாராட்டாமல் அவர்கள் உண்மை யிலேயே சந்நியாசிகள்தானா என்று சந்தேகக் கண்ணோட்டத்தோடு பார்க்கிறது.

அவள் சந்நியாச முறைகளை ஒப்பிட்டு ஆழமாகப் பேசுவதுபோல் நடந்துகொண்டாள். ஆனால் வெளிப்பட்டது அவளது அகங்காரம்தான். கணவர் வீட்டைத் துறந்தாலும் பிரிவைப் பொறுத்துக் கொள்ளலாம். ஏனெனில் அந்த பழைய பாணி துறவறம் கௌரவம் தேடித்தருகிறது. ஓஷோவின் சந்நியாச முறை உபத்திரவமாகிவிட்டதாக அவள் நினைப்பு.

ஆம், எனது சந்நியாச முறை சிக்கலை ஏற்படுத்தும் என்பது உண்மை. சிக்கலும் சிரமமும் இல்லாத சந்நியாசம் அர்த்தமற்றது. சவால்களை எதிர்கொண்டால்தான் உனது வாழ்க்கையில் வளர்ச்சி ஏற்படும். சவால் என்னும் சாணைக்கல்லில்தான் உன் சந்நியாசத்தின் கூர்மை தீட்டப்படும். மக்கள், 'ஓஹோ, ஓஷோவின் சந்நியாசியா?' என்று உன்னைப் பார்த்து நகைப்பார்கள். உன்னை எதிர்ப்பார்கள்; குறைகூறுவார்கள்; உன்னோடு எதிர்வாதம் செய்வார்கள். ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால் என்றிருக்கும் இதுவா சந்நியாசம் என்று கேட்பார்கள். உன்னை எத்தனையோ விதமாக விமர்சிப்பார்கள். நீ தடுமாறாமல் நின்றால் உன் வாழ்க்கையில் திடத்தன்மை ஏற்படும்.

பழைய முறை சந்நியாசம் இக்காலத்தில் பயனற்றது. இதனால் பழைய முறை சந்நியாசிக்குத் தலைக்கனம்தான் ஏறுகிறது. அவருக்கு சத்தியானுபவம் ஏற்பட வாய்ப்பு இல்லை. ஏனெனில் சத்தியத்தை உணர்வதில் மிகப்பெரும் தடையாக இருப்பது அகங்காரம்தான்.

## கடைசிக்கேள்வி

**ஓஷோ அவர்களே, செயல்களை மேற்கொள்ளும்போது 'செய்பவன் நான்' என்னும் உணர்வு மேலிடக்கூடாது என்று நீங்கள் கூறியுள்ளீர்கள். எது நடைபெறுகிறதோ அதைத் தடுக்காமல் நடைபெற விடுமாறும் சொன்னீர்கள். இந்நிலையில் செய்யத் தகுந்தது எது, செய்யத் தகாதது எது என்று ஒருவன் எப்படி முடிவு எடுப்பது?**

எந்தச் செயல் சகஜமாக, இயல்பாக உள்ளதோ அதுவே நாம் செய்யவேண்டிய கடமை. எந்தச் செயல் விருப்பமின்றிக் கட்டாயம் செய்யப்பட வேண்டியுள்ளதோ அது உன் கடமைகளுள் அடங்காது. இதைக் கேட்டு நீ திகைப்படைவாய். ஏனெனில் எது கடமையென்று நீ வரையறை செய்துள்ளாயோ அது என் கருத்துக்குத் தலைகீழாக உள்ளது. வேறு வழியில்லாம் செய்யவேண்டிய செயலை நீ கடமை என்கிறாய். உதாரணமாக, உன் தந்தைக்கு ஏதோ நோய். நீ அவருக்குக் கால்பிடித்து விடுகிறாய். கேட்டால் கடமையைச் செய்வதாகச் சொல்கிறாய்.

ஆனால் உன் மனத்தைக் கேட்டுப்பார். தந்தையின் காலைப் பிடித்து விடும்போது உன் மனத்தில் சேவை உணர்வா மிகுந்திருந்தது? அப்போது உன் மனத்தில் என்ன எண்ணங்கள் உண்மையில் எழுந்தன? ‘இந்த அப்பாவாலே பெரிய தொல்லையா போச்சே. எல்லாம் என் தலைவிதி. நான் இந்த நேரம் சினிமா பார்க்க நினைத்திருந்தேன். பிறகு கிளப்பில் டான்ஸ் நிகழ்ச்சியும் இருக்கிறது. அடேடே, இன்று ரோட்டரி கிளப் கூட்டம்னு சொல்லியிருந்தாங்களே. கிளம்பற சமயம் பார்த்து அப்பா காலை பிடிச்சுவிடுன்னு சொல்றாரு. ஏன்தான் இவருக்கு மகனா பிறந்தோமோ?’ ஏறத்தாழ இத்தகைய எண்ணங்கள்தானே உன் மனத்தில் ஓடிற்று?

‘கடமை’ என்னும் சொல்லின் உண்மையான அர்த்தம் உனக்குத் தெரியுமா? எதை நீ செய்ய விரும்பவில்லையோ ஆனால் தவிர்க்க முடியாமல் செய்ய நேரிடுகிறதோ அதுதான் கடமை என்பது. உதாரணமாக, நீ ஒரு பெண்ணை நேசிக்கிறாய். அவ்வாறு நேசிப்பதை நீ உன் கடமை என்ற சொல்வதில்லை. காதல் என்று சொல்கிறாய். ஆனால் வேறு வீட்டில் வசிக்கும் உன் அம்மாவைப் பார்க்கப் போவதைக் கடமை என்னும் சொல்லால் குறிப்பிடுகிறாய். காதலியைப் பூங்காவில் சந்திக்கச் செல்வதை நீ கடமை என்ற சொல்வதில்லை. அலுவலகம் அல்லது வெளியிடங்களிலிருந்து மனைவிக்காக வீடு திரும்பி அவளைச் சந்திப்பதைக் கடமை என்கிறாய்.

**மு**ல்லா நஸ்ருத்தின் ஒருநாள் வெளியில் எங்கேயோ சென்றுவிட்டு வீடு திரும்பினார். அப்போது அவர் மனைவியை அவருடைய நண்பன் ஒருவன் முத்தமிட்டுக் கொண்டிருந்தான்! முதலில் திகைத்துப்போன முல்லா பிறகு தலையில் அடித்துக் கொண்டார். அவர் அந்த நண்பனைப் பார்த்து, “எனக்குத்தான் இவளை முத்தமிடுவது ஒரு கடமையாக இருக்கிறது. உனக்கு ஏனப்பா இந்தத் தலைவிதி?” என்று அனுதாபத்துடன் கேட்டார்.

கடமை என்பதன் பொருள்-செய்ய வேண்டாம் என விரும்பியதை செய்தே ஆகவேண்டியிருப்பதுதான். அச்செயலை மனத்தாலோ, இதயத்தாலோ விரும்பிச் செய்யவில்லை. அப்படியெனில் அச்செயலுக்கு என்னதான் மதிப்பு? கடமை என்பது இழிந்த சொல்லாக அல்லவா தோன்றுகிறது! உனக்கு எது இயற்கையோ, சகஜமோ அதையே செய் என்றுதான் நான் கூற விரும்புகிறேன்.

தந்தை உன்னைக் கால்பிடித்து விடச் சொல்கிறார். நீ என்ன சொல்ல வேண்டும்? "அப்பா, நான் உங்களிடம் பொய் சொல்ல விரும்பவில்லை. தற்சமயம் உங்களுக்கு சேவை புரியும் ஆர்வம் என் மனத்தில் எழவில்லை. உங்களை ஏமாற்ற விரும்பவில்லை. உங்களுக்குக் கால்பிடித்துவிட எனக்கு இஷ்டமில்லை. என்னை மன்னித்துவிடுங்கள்," என்று உண்மையை ஒப்புக் கொள்ள வேண்டும்.

ஆனால் தந்தை கேட்ட உடனேயே அவருக்கு சேவை செய்யும் எண்ணம் உனக்கு இயல்பாகவே தோன்றினால், மற்ற வேலைகளை ஒதுக்கிவிட்டு, தந்தைக்குக் கால்பிடித்துவிடு நீ உற்சாகமாக முன்வருவது கண்டு உன் தந்தையும் மகிழ்வார். விருப்பமின்றியே நீ கால்பிடித்து விட்டால் அவருக்கு மகிழ்ச்சி உண்டாகாது. வலுக்கட்டாயமாகச் செய்யும் எதுவும் மகிழ்ச்சி தராது. நீ விருப்பமின்றி அவர் காலைத் தொட்டால் உன் கைகள் தளர்ந்தும் சூடின்றியும் இருப்பதை நீயே உணரமுடியும். உன் கைகளின் அழுத்தத்தையும் அசைவுகளையும் வைத்து உன் தந்தையும் நீ விருப்பமில்லாமல் பிடித்துவிடுவதை ஊகித்துவிடுவார். சேவை நடைபெற்ற போதிலும் நீயும் சந்தோஷமாக இல்லை; அவரும் சந்தோஷப்படவில்லை.

ஆனந்தத்தில் தோன்றாத ஒன்று ஆனந்தத்தைத் தோற்று விக்கவும் முடியாது. ஆனந்தத்தில் ஊற்றெடுக்கும் ஒருவகை இனிமை எங்கும் ஆனந்தத்தைப் பரப்பும். நீ உள்ளேயும் வெளியேயும் ஒரேமாதிரி இரு. வெளிப்படையாக உன் விருப்பமின்மையைச் சொல்லிவிடு. ஆனால் தந்தை என்பதால் பணிவைக் கைவிடாமல் மன்னிப்புக் கேட்டுக்கொள். தந்தை சொல் மந்திரம் என நினைப்பதுபோல் வெளியே காட்டிக்கொண்டு உள்ளே கோபத்தால் குமுறிக்கொண்டிராதே. ஓய்வும் எடுக்க முடியவில்லை, உல்லாசமாக வெளியில் போகவும் முடியவில்லை என்று நொந்து கொள்ளாதே. பிறரைப் புண்படுத்தாமல் நீ உனக்கு உண்மையானவனாக இரு.

**நா**ன் சிறுவனாக இருந்தபோது இம்மாதிரியான அனுபவம் கிடைத்திருக்கிறது. என் தாத்தாவுக்கு அவருடைய கால்களை யாராவது அடிக்கடி அமுக்க வேண்டும். வீட்டில் யார் கண்ணில் பட்டாலும் கால் பிடித்துவிடும்படி கூப்பிடுவார். நானும் சில சமயம் அவரிடம் மாட்டிக் கொள்வேன். ஆனால் எனக்கு 'மூடு' இருந்தால் அவருக்குக் கால்

பிடித்துவிடுவேன். எனக்கு மனமில்லையானால் அவரிடம் வெளிப்படையாக, ஆனால் பணிவுடன், "இந்தாங்க தாத்தா, மன்னித்துவிடுங்கள். விருப்பமில்லாமல் கால் பிடித்தால் உங்களை மனசுக்குள் திட்டியபடி இருப்பேன். நான் கால் பிடித்துத்தான் ஆகவேண்டுமென்றால், சரி, செய்கிறேன். ஆனால் அங்கே அன்பு இருக்காது. கசப்பான கடமை உணர்வு மட்டும்தான் மிஞ்சும். நான் இப்போது வெளியே போய் விளையாட வேண்டும். என் மனம் இப்போது விளையாடுவதைத்தான் எதிர்நோக்கியுள்ளது." என்று விளக்கம் தருவேன்.

முதலில் கோபப்பட்ட அவர் நாளடைவில் என் மறுப்பின் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொண்டார். அவர் ஒருமுறை தன் மகனிடம் (என் அப்பாவிடம்) "இந்தப் பயல் பிடித்துவிடும் போதுதான் ஆனந்தமாக இருக்கிறது. மற்றவர்கள் தொடும்போது எனக்கு அவ்வளவு சந்தோஷம் தோன்றுவதில்லை. இந்தப் பயல் நான் கூப்பிடும் எல்லா சமயமும் வந்துவிடுவதில்லை என்பது உண்மைதான். ஆனால் இவன் ஒப்புக்கொண்டு காலைப் பிடித்தால் அதில் இவனுக்கு சுவை இருப்பதை நம்பமுடிகிறது. நடுவில் 'மூடு' போய்விட்டால் உண்மையை ஒப்புக் கொண்டு, மன்னிப்புக் கேட்டு வெளியேறி விடுகிறான்," என்று பாராட்டினார்.

நான் உண்மையானவனாக விளங்கியதால் என் தாத்தா எங்கள் குடும்பத்தில் என்னைத்தான் அதிகமாக நேசித்தார். என் அப்பாவும் சித்தப்பாக்களும்கூட கால் பிடித்துவிடுவதுண்டு. ஆனால் தாத்தாவுக்கு அவர்களின் பணிவிடையில் திருப்தி விளையவில்லை. நானோ சிறுவன். அதிக நேரம் அவருக்குப் பணிவிடை செய்ய முடியாது. ஆனாலும் அவர் என்னிடம், "பையா, இன்னிக்கு உன் மனசு எப்படி இருக்கு? காலைப் பிடிச்சுவிட வர்றியா?" என்று கேட்க ஆரம்பித்தார். முன்புபோல் அவர் அதட்டலாகக் கட்டளையிடுவதில்லை. அதைவிட வேடிக்கையான விஷயம் என்னவென்றால் பாடல், விளையாட்டு என்று எதுவும் இல்லாவிடில் நானே போய், "தாத்தா, இப்போ எனக்கு வேலை எதுவுமில்லை. கொஞ்ச நேரம் உங்களுக்குக் காலைப் பிடிச்சுவிடுவா?" என்று பரிவுடன் விசாரிக்கத் தொடங்கிவிட்டேன்!

நம்மால் வாழ்க்கையில் எந்த அளவிற்கு முடியுமோ அதுவரையிலாவது சிறு-சிறு வேலைகளிலிருந்து தொடங்கி நம்

பணிகளை சகஜமாகச் செய்ய வேண்டும். சமாதிநிலைகூட தன்னைக் கொடுமைப்படுத்திக் கொள்ளாமல் இயல்பாக வரவேண்டும். ஆகவேதான் அதை 'சகஜ சமாதி' என்கிறோம். நீ ஆனந்தமாக உணர்கின்ற செயல்களையே செய்துவா. நீ கைவிட்ட செயல் களுக்காகக் காலப்போக்கில் நீ வருந்த நேரிடாது. உடனடியாக உனக்கு சங்கடமேற்படலாம். ஆனால் பொய் பொய்தான். சில பொய்களைச் சொல்லுவதால் தற்சமயம் வசதியாகத் தோன்றலாம். பிரச்சினை தவிர்க்கப்பட்டதாக நினைக்கலாம். ஆனால் அந்தச் செயல் எதிர்காலத்தில் உன்னைச் சிக்கலான வலையில் மாட்டிவிடும். நீ உள்ளும் புறமும் சுத்தமாக, ஒரே மாதிரியாக இருப்பதே நன்மை. அது உனக்கு நம்பகத்தன்மையை வழங்கும்.

'எது செய்ய வேண்டிய கடமை-எதைச் செய்ய வேண்டிய தில்லை?' என்று கேட்கிறாய்.

இதில் முடிவு செய்வதற்கு எதுவுமில்லை. எச்செயல் சிரமமாகத் தோன்றாமல் சுகமாக, சௌகரியமாக உள்ளதோ, எது மனத்திற்குப் பிடித்திருக்கிறதோ அதுவே உண்மையில் கடமையாகும். எது கசப்புத் தருகிறதோ அதைச் செய்வது உனது கடமையன்று. ஆனால் உனக்குத் தலைகீழாகக் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே உன் மனத்தில் குழப்பம் சூழ்ந்திருக்கிறது. நீ விரும்புகிறாயோ-இல்லையோ. உனக்கு இயல்பாக உள்ளதோ-இல்லையோ, மற்றவர்கள் விரும்புவதை எதிர்ப்பின்றி அப்படியே செய்வதுதான் கடமை என்று உனக்குப் பயிற்சியளித்திருக்கிறார்கள். உன் இயல்புப்படி செய்தலை எதிர்க்கிறார்கள். பிறரது விருப்பமே உன் கடமையை நிச்சயிக்கிறது என்கிறார்கள். மற்றவர்கள் இஷ்டப்படியே வாழ்வது சரியான வாழ்க்கை முறை ஆகுமா? நீ மற்றவர்களின் விருப்பங்களையே பூர்த்தி செய்வதில் வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கிறாயே, பிறகு உன் வாழ்க்கையில் நறுமணம் எப்பொழுது பரவும்? சங்கீதம் எப்படிப் பிறக்கும்? எப்பொழுது நீ உற்சாகமாக ஆடுவாய்? உனது வாழ்க்கையை எப்பொழுது வாழப்போகிறாய்?

**தா**யார் ஒருத்தி சிறியவனான மகனுக்கு அறிவுரைகள் கூறினாள். நாம் எப்பொழுதும் மற்றவர்களுக்கு சேவை செய்து வரவேண்டும் என்றாள். மகன், "ஏன் நாம் பிறருக்கு சேவை செய்ய

வேண்டும்?'' என்று கேட்டான். "அப்படித்தான் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. பிறருக்கு சேவை செய்ய வேண்டும் என்பதற் காகவே கடவுள் நம்மைப் படைத்துள்ளார்.'' என்று தாயார் விளக்கினாள்.

"அம்மா, அப்படியானால் மற்றவர்கள் எதற்காகப் படைக்கப் பட்டுள்ளனர்? அதற்கும் ஏதாவது அர்த்தம் இருக்க வேண்டுமே. நாம் பிறருக்கு சேவை செய்யப் படைக்கப்பட்டுள்ளோம் எனில் அவர்கள் நமக்கு சேவை செய்யத் தோன்றியுள்ளனர் என்றுதானே அர்த்த மாகிறது? இப்படிக் குழப்பிக் கொள்ளுவதற்குப் பதிலாக ஒவ்வொருவரும் தங்களுக்கே சேவை செய்து கொள்ளட்டுமே,'' என்று மகன் தாயாரை மடக்கினான்.

நீ மற்றவர்களின் தேவையை பூர்த்தி செய்கிறாய். மற்றவர்கள் உன் விருப்பத்தை நிறைவேற்றுகிறார்கள். இதில் உனக்கும் சந்தோஷமில்லை. அவர்களும் சந்தோஷப்படவில்லை. இதனால் உலகமே சோகமயமாகத் திகழ்கிறது.

நான் உனக்களிக்கும் புரட்சிகரமான செய்தி இதுதான்-எதில் உனக்கு ஆனந்தம் கிடைக்கிறதோ அதையே நீ செய்வாயாக. அதற்கு எவ்வளவு விலை கொடுக்க வேண்டுமானாலும் பரவாயில்லை. உனக்கு சந்தோஷம் தராத எதையும் நீ செய்யாதே. அதற்காக என்ன விலை கொடுக்க வேண்டுமானாலும் தயாராக இரு. நடுவில் கவலைப்படாதே. நீதான் வென்றாய் என்று கடைசியில் தெரியவரும்.

ஆம், ஆரம்பத்தில் உன் மறுப்பைக் கண்டு பிறர் திடுக்கிடுவார்கள், சங்கடப்படுவார்கள். ஏனெனில் அவர்கள் அப்படிப் பழகிப் போயிருக்கிறார்கள். அவர்களது விருப்பத்தை நிறைவேற்றுவது உனது கடமை என்று நம்பி வந்திருக்கிறார்கள். நாளடைவில் நீ உள்ளும் புறமும் ஒரேமாதிரியானவன் என்பதைக் கண்டுகொண்டு உன்னை மதிக்கத் தொடங்குவார்கள். நாம் வெளிப்படையாகப் பேசுவதும் இயங்குவதும் முதலில் பிறருக்கு சங்கடம் கொடுக்கும். பிறகு அவர்கள் உன்னை முழுமையாக நம்பலாம் என்னும் முடிவிற்கு வருவார்கள்.

சத்தியம் யாருக்கும் தீங்கிழைப்பதில்லை. குற்றமுள்ள நெஞ்சுள்ளவர்களுக்கு மட்டும் அது உறுத்துவதுபோல் தோன்றலாம்.

ஆனால் நீ அசத்திய வழியில் செல்லாதே. அசத்தியம் உன்னைக் கவர்ந்துவிட்டால் சிறிது காலத்தில் நீ புளுகு மூட்டை ஆகிவிடுவாய். உனது வாழ்க்கை சூடிழந்து சாம்பல் குவியலாகிவிடும். நீ இயல்பாக இருந்தால், உனக்கு உண்மையானவனாக இருந்தால், நீ கடவுளைத் தேடி அடைவதற்கு விசேஷ முயற்சிகள் செய்ய வேண்டியிராது. உனது சகஜ குணம் என்னும் சாளரத்தின் வழியாகக் கடவுள் உனக்குள் பிரவேசிப்பார். ஏனெனில் கடவுள் இயல்பானவர்.

**எனது வீடு-வீடா அது?**
**எளிதில் நெருங்க முடியாதது**
**எதிர்ப்புகள் நிறைந்த**
**இருள் சூழ் கோட்டை**
**எந்த வாசல் வழியாவோ**
**எந்த முறையிலோ தெரியவில்லை**
**பளபளப்பாய் மின்னுகின்ற**
**மெல்லியதோர் ஒளிக்கிரணம்**
**மெல்ல உள்ளே நுழைந்துவிட்டது!**
**உள்ளே இருந்த இருட்டெல்லாம்**
**உடைந்து மறைந்தது மாயமாய்**
**வியந்து பிரமித்த எனது மனம்**
**அளவற்ற இறைச் செல்வத்தால்**
**நிறைந்து போனது நிரந்தரமாய்**

ஆம், நீ எதிர்பாராத ஒரு கணத்தில், எவ்வித முன்னறிவிப்பும் தராமல், திடீரென வரும் விருந்தாளிபோல் கடவுள் உன் உள்ளத்தின் கதவைத் தட்டுவார். இது எப்போது நிகழும் என்று யாருமே சொல்ல முடியாது.

அறம் அல்லது தருமம் என்பதை வலைபோல் சிக்கலாக்க வேண்டியதில்லை. நீ சகஜமாக இருந்தால் போதும். சகஜமாக இருப்பது என்பது உன் சுபாவப்படி இருப்பதாகும். சுபாவப்படி இருத்தல் உனக்குரிய அறமாகும். மகாவீரரின் ஒரு மேற்கோளின்படி, ஒரு வஸ்துவின் சுபாவம்தான் அதன் தருமம் என்பது. உதாரணம்: நெருப்பின் தருமம் எரிப்பது; தண்ணீரின் தருமம் கீழ்நோக்கிப் பாய்வது; தேளின் தருமம் கொட்டுவது. இதேபோல் மனிதனும் தனக்குரிய சுபாவப்படி வாழ்வது நல்லது. விசேஷமாக எதுவும்

மனிதன் செய்ய வேண்டாம். இயல்பாய் இருந்தால் அனைத்தையும் பெற்றதுபோல்தான்.*

**ஸ்ரீராமா! உமக்கு நல்வரவு!**

**புயலின் பின் வரும் அமைதிபோல்**
**ஓசையின்றி நீர் வந்துநின்றீர்**
**யாரும் அழையாத போதும்**
**அருள் புரிய வந்துநின்றீர்**

**வருக, வருகவே! எழுந்தருளுகவே!**
**உங்களை எங்கள் கண்களில் நிறைத்து**
**சிரத்தில் தாங்கி வணங்குகிறோம்**
**எங்கள் பிரார்த்தனை ஏற்றருளுக!**

ஆம், கடவுள் இப்படித்தான் வருகிறார். அமைதியாக, காலடி ஓசையும், எழுப்பாமல் வருகிறார். ஆர்ப்பாட்டம், ஆரவாரம் எதுவும் கிடையாது. ஆகவே யோக சாதனை, ஜபம், தபம் ஆகிய எதுவும் தேவையில்லை. நீ உன் இயல்பில் நிலைத்து நின்றால் போதும். நீ சாந்தத்தால் நிறைந்து விளங்கி, புனிதமான ஆனந்த உணர்வில் லயித்திருந்தால் போதும். அப்படி ஆனந்தத்தில் அமிழ்ந்து வாழ ஒரு வழிதான் உள்ளது. நீ மற்றவர்களின் எதிர்பார்ப்புகளுக்கு முதலிடம் கொடுத்து, அவற்றை பூர்த்தி செய்வதில் ஈடுபட்டு, உன்னைப் பின்னுக்குத் தள்ளிக்கொள்ளாதே. நீ உன்னைத்தான் கெடுத்துக் கொள்வாய். நீ பிறருக்கு எவ்வளவுதான் செய்தாலும் அவர்கள் ஒருநாளும் முழுதிருப்தியடைய மாட்டார்கள்.

உன் மனைவி உன்னிடம் சந்தோஷமாக இருக்கிறாளா? இல்லையே! அவளுக்காகத்தானே நீ உழைத்து-உழைத்து ஓடாகப் போனாய். குடும்பத்திற்காக இரவும் பகலும் உழைத்தாய். உன் பிள்ளைகள் உன்னிடம் சந்தோஷமாக இருக்கிறார்களா? இல்லையே! அவர்களை முன்னேற்றத்தானே நீ பாடுபட்டாய். அதற்காக உன் சௌகரியங்களைக் குறைத்துக் கொண்டாய். பிள்ளைகள் படிக்க வேண்டும்; நன்கு வளர வேண்டும்; சுகமாக வாழ வேண்டும்-

---

* All I can do is be me
whoever that is
– Bob Dylan

இதற்காகவெல்லாம்தானே நீ தேய்ந்து கரைந்தாய். இதுதானே வாழ்வதன் அர்த்தம் என்று நினைத்தாய்.

உன்னையே ஆராய்ந்து பார். பிறர் தேவைகளை நிறைவேற்றி னாயே. அதன் விளைவாக உனக்கு சந்தோஷம் ஏற்பட்டதா? உன் உழைப்பின் அளவிற்குப் பிறர் உன்னிடம் நன்றியுடையவர்களாக இருக்கிறார்களா?

நீ இப்படி குடும்பத்திற்காக சிரமப்பட்டபடி இருப்பதால் உன்னிடம் மகிழ்ச்சி தென்படவில்லை. உன்னுடைய பிள்ளைகளும் சந்தோஷமாக இல்லை. நீ அவர்கள் மீது அளவுக்கு மீறி அதிகாரம் செலுத்திக் கட்டுப்படுத்துவதாக அவர்கள் புழுங்குகிறார்கள். "உங்களுக்காகத்தான் எல்லா வேலையும் இழுத்துக் கொண்டு நான் தவிக்கிறேன், செத்துமடிகிறேன்," என்று அவர்களிடம் சொல்கிறீர்கள். இதற்குப் பெயர்தான் அன்பா? இதில் பிள்ளைகளுக்காகச் செய்கிறோம் என்கிற ஆனந்தம் எதிரொலிக்கிறதா? நீ பேசுவது அவர்களைக் குறைகூறுவதுபோல் அல்லவா உள்ளது? 'நீங்கள் பிறக்காமல் இருந்திருந்தால் எனக்கு இத்தனை சிரமம் ஏற்பட்டிருக்காது' என்று பிள்ளைகளிடமே புகார் செய்வதுபோல் அல்லவா உள்ளது? இதே பிள்ளைகள் வளர்ந்து, பெரியவர்களாகி, தங்கள் பிள்ளைகளிடம் இதேமாதிரிதான் பேசுவார்கள். எத்தனை தலைமுறைகளானாலும் இதே கதைதான்.

நீ ஒரு வேலையை மேற்கொள்ளுகிறாய் எனில் அதை ஆனந்த உணர்வின் அடிப்படையில் செய்ய வேண்டும். உன் நடவடிக்கை களால் பிள்ளைகளுக்கு நன்மை விளையும் என்பதை மறைமுகமான நன்மையென நினைக்க வேண்டும். அதுவே உனது லட்சியமன்று.

இது உனது வாழ்க்கை. எப்படி வாழ்வது என்பது உன் கையில்தான் உள்ளது. ஆகவே வாழ்வின் கடமைகளை மகிழ்ச்சியுடன் நிறைவேற்று. உன் மனைவிக்கு நீ செய்ய வேண்டியவற்றை விருப்பத்துடன் நிறைவேற்ற வேண்டுமே தவிர, தலைவிதி என்று மேற்கொள்ளக் கூடாது. குழந்தைகளை வளர்க்கும்போதும், கடமைகளை நிறைவேற்றினாலும், தலைவிதி என்றெல்லாம் பேசுவது அவர்கள் மனத்தில் விஷத்தை நிரப்புவது போலாகிவிடும்.

முல்லா நஸ்ருத்தின் ஒருமுறை போட்டோ பிடித்துக் கொள்ளச் சென்றார். முகத்தைக் கடுகடுவென வைத்துக் கொண்டிருந்தார். ஆகவே போட்டோ பிடிப்பவர் எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் முல்லாவின் முகம் சரியாக இல்லை. கேட்டதற்கு, முல்லா அப்படித்தான் முகத்தை வைத்துக் கொள்வது தனது பழக்கம் என்று கூறிவிட்டார். புகைப்படம் பிடிப்பவர் கெஞ்சலாக, "ஐயா, மற்ற சமயங்களில் முகத்தை எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். போட்டோ எடுக்கும் இந்த சில விநாடிகள் மட்டும் புன்முறுவலுடன் இருங்கள். பிறகு உங்கள் பழைய சிடுசிடுத்த முகத்திற்குத் திரும்பி விடுங்கள். இல்லாவிடில் போட்டோவில் உங்கள் கடுகடுப்பான முகத்தைப் பார்த்தால் பிறகு என் பிழைப்பு நடக்காது," என்றார்.

ஆம், மக்கள் புன்முறுவல் செய்வதைக் கூட மறந்துவிட்டார்கள். வாய்விட்டுச் சிரிப்பதை பாவம் என்றுகூட நினைக்கிறார்கள். அழுவது போல் முகத்தை கம்பீரமாக வைத்துக் கொண்டால்தான் மரியாதை தருகிறார்கள். மக்களின் இந்த மனநிலை பரிதாபத்திற்குரியது. வெடிச்சிரிப்பு தேவையில்லை, புன்முறுவல் போதும். சைகை மொழியைப் புரிந்துகொள்ள முடியுமானால் சிறியதாய் ஓர் அசைவே போதும்.

**வானில் ஒரு தாரகை போதும்**
**பார்வையற்ற ஒருவனுக்கு**
**அந்த ஒன்றே அதிகம்தான்**
**நட்டாற்று வரை ஏன் செல்ல வேண்டும்**
**முழங்காலளவு நீரே போதும் மூழ்குபவனுக்கு**

இயல்பான தன்மை (சகஜமான தன்மை) என்பதுதான் அடிப்படை மந்திரம். ஆன்ம விழிப்புப் பெற வேண்டுமானால் உனக்குரிய இயல்பான தன்மையையே கடைப்பிடி. அத்தன்மை அறிவோட்டத்துக்கும், உள்ளொழுங்கிற்கும், மனப்பக்குவத்திற்கும் இன்றியமையாதது. வாழ்வில் மற்றதை இழந்தாலும் இயல்பான தன்மையாகிய கோக்கும் கயிற்றைத் தொலைத்து விடாதே. உன் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை மணிகள்போல் கற்பனை செய்தால், அவற்றை இயல்புத் தன்மை என்னும் நூலில் கோக்கவும். இவ்வாறு நீ கடவுளை அலங்கரிக்கும் மணிமாலையாக விளங்க முடியும்.

மூடுபனியுடன் தனியாய்ப் போரிட்டு
வெற்றியுடன் வெளிப்பட்டான் சூரியன்.

மெல்லிய தென்றல் காற்றின் வழியே
விடியலின் பனித்துளி உடலை வருட,
செடிகளின் கிளைகள் அசைந்தாடி
மலர வேண்டிய பூக்களை எழுப்புகின்றன.

பூக்களே, உங்களுக்கு ஞாபகமறதியா?
இன்று இன்னும் பூக்கவில்லையே
நீங்கள் விழிக்கும் நேரம் வேறா?
அல்லது கனவு காண்பது முடியவில்லையா?

வண்ணத்துப்பூச்சிகள் குதூகலிக்கின்றன.
வண்ணப் பட்டாடை அணிந்துகொண்டு
ஒவ்வொரு மொட்டிடமும் அவை சென்று
காதில் மந்திரம் போல் ஓதுகின்றன!

'எழுந்திருங்கள், இனிய தோழியரே!
காலையாகிவிட்டது கண்விழிப்பீர்
வெண்பனித் துளிகளில் நீராடுவீர்
விலைமதிப்பற்ற பொன்காலைப் பொழுதை
வீணாக்கி விடாதீர் உறங்கியே.'

எல்லாம் தயார்நிலையில் உள்ளன. நீயோ தூங்குகிறாய். விடியலின் காற்று புறப்பட்டுவிட்டது. சூரியன் உதித்து விட்டான். வண்ணத்துப்பூச்சிகள் ரீங்காரம் செய்கின்றன. மலயமாருதம் வீசுகிறது. இவை அனைத்தும் சேர்ந்து, 'பூக்களே, எல்லாம் தயார். நீங்கள் மயங்கிக் கிடப்பதைப்போல் இப்படித் தூங்குகிறீர்களே!' என்று பரிகசிக்கின்றன.

கடவுள் பக்தனுக்காக ஒவ்வொரு கணமும் தயாராக உள்ளார். ஆனால் நீயோ இன்னமும் இருட்டில் கிடக்கிறாய். சோகத்தில் ஆழ்ந்துள்ளாய். நரகம் போன்ற சூழ்நிலையில் உள்ளாய். இந்த நரகத்தைப் படைத்தவன் நீதான். உலகம் நரகமாக மாற நீங்கள் ஒவ்வொருவரும்தான் காரணம். ஆயிரக்கணக்கான மக்களின் வாழ்க்கையை ஆராய்ந்த பிறகுதான் நான் இந்த முடிவிற்கு வந்திருக்கிறேன்.

போன பிறவிகளில் செய்த பாவங்களால் நீ நரகமயமான வாழ்க்கை நடத்துவதாக நினைக்காதே. இந்தப் பிறவியில் உனக்குப் பலவிதமான பிரமைகளால் தவறான வாழ்க்கைக் கண்ணோட்டம் அமைந்து விட்டது. அதனால்தான் உனது வாழ்க்கை சிக்கலாகிப் போனது.

கடந்த காலத்தில் செய்த பாவங்களைப் போக்கிக் கொள்ள உபாயம் கிடையாது. நீ பின்னோக்கிச் செல்வதற்கு வழி கிடையாது. முன்பு பாவம் செய்ததாக இப்போது கற்பனை செய்வதும், அக்காலத்துச் செயலுக்கு இப்போது பிராயச்சித்தம் செய்ய முடியுமென நினைப்பதும் உன்னையே நீ ஏமாற்றும் செயலாகும். இம்மாதிரியான மன இறுக்கத்தால் உன் வாழ்க்கை குழப்பமாகிவிட்டது. போன பிறவிகள் பற்றி உனக்கு என்ன தெரியும்? அவை உண்மையென்றாலும் உன் கையிலுள்ளது இந்த ஒரு பிறவிதானே. இதில் சகஜமாக, இயல்பாக, உன் சுபாவப்படி இரு. அவ்வாறு இருப்பதற்கான விலையைக் கொடுக்கவும் தயாராக இரு. இதுதான் சந்நியாசம் என்பது. நீ கொடுக்கும் விலைதான் (மேற்கொள்ளும் தியாகம்தான்) இந்த சந்நியாசத்தில் நீ மேற்கொள்ளும் தவமாகும். ஆகவே கடந்த பிறவி என்றெல்லாம் சொல்லுகின்ற முகமூடியை மாட்டிக்கொண்டு நீ உன் உண்மையான முகத்தை மறைத்துக் கொள்ளாதே.

ஜென் சம்பிரதாயத் துறவிகள் நம்மை நமது உண்மையான முகத்தைத் தேடிக் கண்டுபிடிக்கச் சொல்கிறார்கள். சகஜத் தன்மைதான் அந்த உண்மை முகமாகும். இயேசு நம்மை மீண்டும் குழந்தைகளைப் போல் ஆகும்படி சொல்கிறார்.* ஏனெனில் குழந்தைகளிடம் போலித்தனம் கிடையாது. அவை எப்போதும் தமது இயற்கைப்படியே நடந்து கொள்கின்றன. அஷ்டாவக்ரர் விடுக்கும் செய்தியும் இதுவேதான். அவர் சொல்கிறார்-உண்மையில் நீ எப்படியோ அப்படியே நடந்துகொள். இதனால் சில விநாடிகளில் உனக்குள் ஆன்மிகப் புரட்சி நிகழ்ந்துவிடும். நீ எச்சரிக்கையாக இரு. உன்னை இன்னொருவனாகக் காட்டிக் கொள்வதை, இயற்கையை மறைத்துச் செயற்கையாக நடந்து கொள்வதைக் கைவிடு.

---

* Except ye be converted, and become as little children, ye shall not enter into the kingdom of heaven. (The Bible)

ஆரம்பத்தில் இது கடினம்தான். ஏனெனில் போலித் தன்மையே பழக்கமாகி அதுவே உன் சுபாவம் என்று நினைக்கிறாய். ஆனால் நீ கடந்து செல்லும் ஒவ்வொரு சிரமமும் உன்னைப் புதிய வாசல்களுக்குக் கொண்டு செல்லும்; புதிய அனுபவங்களை அறிமுகப்படுத்தும். அவை உன் வாழ்க்கையை இனிமையாக்கிச் செல்லும். ஒவ்வொரு பிரச்சினையும் தடையும் உனது சமாளிக்கும் திறனை மேம்படுத்தும்; உள்ளத்தை வலுவாக்கும். உள்ளே புதிய பலத்தைத் தோற்றுவிக்கும். இவ்வாறு ஒவ்வொரு நாளும் மெதுவாக ஒவ்வொரு காலடியாக எடுத்துவைத்து ஒருநாள் நீ சகஜநிலையை அடைந்துவிடுவாய். பிறகு உனது வாழ்க்கையில் மறைப்போ, ரகசியமோ இருக்காது; கபடமும் தந்திரமும் இருக்காது.

இத்தகைய வாழ்க்கையைத்தான் நான் அறவழி வாழ்க்கை என்பேன்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்

அகிஞ்சனபவம் ஸ்வாஸ்த்யம் கௌபீனத்வே அபி துர்லபம்|
த்யாகதானே விஹாயாஸ்மாதஹமாஸே யதாஸுகம்|| 115

குத்ராபி கேத: காயஸ்ய ஜிஹ்வா குத்ராபி கித்யதே!
மன: குத்ராபி தத்தயக்த்வா புருஷார்த்தே ஸ்தித: ஸுகம்||
116

க்ருதம் கிமபி நைவ ஸ்யாதிதி ஸன்சிந்த்ய தத்த்வத:|
யதா யத்கர்துமாயாதி தத்க்ருத்வா அஸே யதாஸுகம்|| 117

கர்மநைஷ்கர்ம்யநிர்பந்தபாவா தேஹஸ்ய யோகின:|
ஸம்யோகாயோக விரஹாதஹமாஸே யதாஸுகம்|| 118

அர்த்தானர்தௌ ந மே ஸ்தித்யா கத்யா வா ஸயனேன வா|
திஷ்ட்டன் கச்சன் ஸ்வபன்ஸ்தஸ்மாதஹமாஸே
யதாஸுகம்|| 119

ஸ்வபதோ நாஸ்தி மே ஹானி: ஸித்திர்யத்னவதோ ந வா|
நாஸோல்லாஸௌ விஹாயாஸ்மாதஹமாஸே யதாஸுகம்||
120

ஸுகாதிரூபாநியமம் பாவேஷ் வாலோக்ய பூரிஷ:|
ஸுபாஸுபே விஹாயாஸ்மாதஹமாஸே யதாஸுகம்|| 121

அலெக்ஸாந்தர் உலகம் முழுவதையும் வெல்வதற்காகப் படையுடன் கிளம்பினார் பல நாடுகளை வென்றபின் அவர் மலைச்சாதியினர் வசிக்கும் ஒரு பிரதேசத்தை அடைந்தார். அம்மக்களுடன் போரிட்டு அப்பிரதேசத்தை அவர் கைப்பற்ற விரும்பினார். அவர்களோ கையில் ஆயுதங்கள் எடுத்து வருவதற்குப் பதிலாகப் பூமாலைகள் சூட்டி அவரை வரவேற்றார்கள்.

அவர்கள் ஆயுதங்களே வைத்திருக்கவில்லை. அவர்களின் வரலாற்றின்படி அவர்களுக்குப் போர் என்றாலே என்ன என்று தெரியாது. கோவணம்தான் கட்டியிருந்தனர்! பக்காவான வீடுகள் கிடையாது. குடிசைகளே தென்பட்டன. ஆனால் குடிசைகளினுள்ளே பொருள்கள் கிடையாது. பொருள்களைச் சேமிக்கும் வழக்கம் அவர்கள் அறிந்திராத ஒன்றாகும்.

ஆம். பொருள்கள் சேமிக்கும் வழக்கத்தால்தான் வன்முறை தோன்றுகிறது. அங்குதான் போரும் மூள்கிறது. ஒன்று தனக்குச் சொந்தமென நினைக்கிற எஜமான மனோபாவத்தால்தான் போட்டி-பொறாமை தலைதூக்குகிறது.

போரிடுவதை மட்டுமே அறிந்திருந்த அலெக்ஸாந்தர் அம்மக்களின் வரவேற்பைக் கண்டு கூச்சப்பட்டார். அவர்கள் அவரைத் தங்கள் தலைவரின் குடிசைக்கு அழைத்துச் சென்றனர். தலைவரும் அவருக்கு மாலை அணிவித்து வரவேற்றார். உணவு நேரம் வந்தது. தங்கத் தட்டும், வைரமும் ரத்தினங்களும் இழைக்கப் பட்ட பாத்திரமும் அவர் முன் வைக்கப்பட்டன.

இதெல்லாம் அவருக்குப் பழக்கம்தான். எங்கும் அவருக்கு இத்தகைய மரியாதை அளிக்கப்பட்டே வந்திருக்கிறது. ஆனால் அடுத்து நடந்த நிகழ்ச்சி அவரை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. தலைவர் தமது கையாலேயே தங்க ரொட்டிகள் இரண்டைத் தட்டில் பரிமாறினார்; தொட்டுக் கொள்வதற்காக வைரம்-ரத்தினங்கள் தூவப்பட்ட கூட்டைப் பாத்திரத்தில் ஊற்றினார்!

அலெக்ஸாந்தர் சீறினார், "உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்ன? இவற்றைச் சாப்பிடக் கொடுக்கிறீர்களே. எவனால் இவற்றைச் சாப்பிட முடியும்?" என்று கேட்டார்.

தலைவர் சமாதானப்படுத்தினார். "ஐயா, நாங்கள் வேறுவிதமாக மதிப்பிட்டுவிட்டோம். நீங்கள் சாதாரண ரொட்டியுடனேயே திருப்தி அடைபவராய் இருப்பின் அது உங்கள் தேசத்திலேயே உங்களுக்குக் கிடைத்திருக்கும். இவ்வளவு தொலைவு பயணங்கள் மேற்கொண்டு இங்குமங்கும் அலைய நேரிட்டிருக்காது. இத்தனை போராட்டம், இத்தனை போர்கள், இவ்வளவு வன்முறை, இவ்வளவு சாவுகள் வெறும் கோதுமை ரொட்டியே தொடர்ந்து சாப்பிடுவதற்காகவா

மேற்கொண்டீர்கள்? சாதாரண கூட்டுகறியே தொடர்ந்து சாப்பிடவா இவ்வளவு அலைச்சல்? கோதுமை ரொட்டியும் ஸப்ஜியும் உங்கள் தேசத்திலேயேதான் கிடைக்கின்றனவே. பிறகு ஏன் நாடு பிடிக்கும் வெறி? நீங்கள் இந்த திசையில் வருகிறீர்கள் என்று தெரிந்ததும் நாங்கள் இங்குள்ள சுரங்கங்களைத் தோண்டித் தங்கம், வைரம், ரத்தினங்கள் வெட்டியெடுத்து தயார் நிலையில் வைத்திருந்தோம்."

அலெக்ஸாந்தர் திகைத்துப் போனார். கிராமத் தலைவர் தொடர்ந்தார்: "அரசே, உங்கள் நாட்டில் மழைபெய்கிறதா? கோதுமை விளைகிறதா? சூரியன் உதிக்கிறதா? சந்திரனும் நட்சத்திரங்களும் இரவில் தோன்றுகின்றனவா?"

"உங்களுக்கென்ன கிறுக்கா?" என்று இடைமறித்தார் அலெக்ஸாந்தர். "சூரியன் எப்படி எங்கள் நாட்டில் உதிக்காமல் போகும்? சந்திரனும் நட்சத்திரங்களும் ஏன் தோன்றாது? மற்ற நாடுகளைப் போன்றுதானே எங்கள் நாடும் இருக்கும்?"

கிராமத் தலைவர் விடவில்லை. "என்னால் நம்ப முடியவில்லையே. உங்கள் நாட்டில் பறவைகள் உண்டா? வீட்டு விலங்குகளும், காட்டு மிருகங்களும் உண்டா?"

"அதிலென்ன சந்தேகம்? எல்லா வகையான பறவைகளும் விலங்குகளும் எங்கள் நாட்டிலே ஏராளமாக உண்டு." அலெக்ஸாந்தர் கர்வமாகப் பதில் கூறினார்.

கிராமத் தலைவர் சிரித்தார். "இப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. போர் என்ற பெயரில் அப்பாவி மக்களைக் கொன்று குவிக்கும் நீங்கள் ஆளும் நாட்டில் கடவுள் சூரியன் உதிப்பதை ஏன் தடுக்கவில்லை என்றும், மழை பெய்வதை அவர் ஏன் நிறுத்திவிடவில்லை என்றும் யோசித்தேன். ஓஹோ, உங்கள் நாட்டில் மரம்-செடி-கொடி-பறவை-வீட்டு விலங்கு-காட்டு விலங்கு எல்லாம் உள்ளனவா? அவை உயிர் வாழத்தான் உங்கள் நாட்டில் இன்னமும் சூரியன் பிரகாசிக்கிறது, மழை பொழிகிறது. கடவுளின் கருணையே கருணை." என்று கிராமத் தலைவர் கைகுவித்தார்.

அலெக்ஸாந்தர் ஏன்தான் இந்த மலை ஜாதியினர் மீது படையெடுத்து வந்தோம் என்று தன்னையே நொந்து கொண்டார்.

நீயும் வாழ்க்கையின் ஒரு காலகட்டத்தில் இப்படித்தான் யோசிப்பாய். தங்கத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்? அதைச் சாப்பிடவோ, குடிக்கவோ முடியுமா? பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வாய்? அதை ஆடையாகவோ, படுக்கையாகவோ உபயோகிக்க முடியுமா? சமூக அந்தஸ்து, கௌரவம், பதவித் திமிர் ஆகியவற்றைக் கொண்டு என்ன செய்வாய்? இவையும் பயனற்றவை.

ஒன்று நிச்சயம். பிறரை நசுக்கிக் கொள்ளையடித்துப் பெற்ற தங்கத்தால் வீடு கட்டி, உள்ளே தங்கத்தால் சூழப்பட்டு, அகங்காரத்துடன் நீ வாழ்க்கை நடத்தினால், உன் மீது கடவுளின் சூரிய ஒளி விழாது. கடவுளின் நிலவு உன்வரையில் தோன்றாது. உன்னுடைய இரவுகள் சிறிதும் ஒளியின்றி இருண்டு கிடக்கும். நட்சத்திரங்கள் உன்னைவிட்டு விலகிவிடும். மழை பெய்யாது. நீ உலகில் எல்லாவற்றாலும் வஞ்சிக்கப்பட்டுத் தனிமைப்படுத்தப்படுவாய். சிறு மேகம் கூட தென்படாத பாலைநிலமாக உன் வாழ்க்கை வறண்டு விடும்; துன்பம் நிறைந்ததாகிவிடும். சுகம் என்பது கனவாகிவிடும்.

அலெக்ஸாந்தரின் பேராசை, வானளாவிய ஆசை, வானத்தின் கீழுள்ள நாடுகளையெல்லாம் வெல்லும் ஆசை இளமையிலேயே அவரது உயிரைப் பறித்துவிட்டது.* பேராசையைக் கைவிட்டால்தான் அறவழி வாழ்க்கை நடத்துவது சாத்தியப்படும்.

'கைவசம் எதுவுமில்லை என்னும் உணர்வால் தோன்றும் ஆரோக்கியமான மனநிலை குறைந்தபட்ச ஆடையான கோவணத்தை அணிந்திருந்தால்கூட வராது. தியாகமும் சரி, சேகரிப்பதும் சரி, இரண்டையும் கைவிட்டு நான் ஆனந்தமாக இருக்கிறேன்.' **(சுலோகம் 115)**

**இ**ந்த உலகத்தில் பெறத் தகுந்த பொருள் எதுவும் கிடையாது. எஜமானனாக நம் வசம் வைத்துப் பேணுவதற்குரிய பொருளும் எதுவும் இங்கில்லை. இவ்வுலகம் வெறும் கனவுகளால் மட்டுமே உருவாகியுள்ள தோற்றம். இதையெல்லாம் புரிந்துகொண்டால் நாம் எந்த பாரமும் இல்லாத உடலும் மனமும் இலேசாகிவிட்ட நிலையை, சூன்ய நிலையை அடைந்துவிடுவோம். 'நான் பூஜ்ஜியம்' என்பது எத்தகைய பரவசநிலை என்பது அதை அனுபவிப்பவர்களுக்குத்தான்

* அலெக்ஸாந்தர் (கி.மு.356-323) 33 வயதிலேயே இறந்துவிட்டார். போரில் வீரமரணமில்லை, வயிற்றுப்போக்கால்!

தெரியும். உலகியல் வாழ்க்கையில் இந்த சூன்ய உணர்வை நிரப்ப வழி ஏதுமில்லை. ஏனெனில் இந்த உலகெலாம் ஓர் பெருங்கனவு. கனவைக் கொண்டு சூன்யத்தை நிரப்ப முடியாது. கடவுள் பிரவேசித்தால்தான் சூன்யம் நிரம்புகிறது. அவருடைய திருவடிகள் பட்டால்தான் இந்தக் கோயில் நிரம்பும். அவர்தான் இங்கு வந்து வீற்றிருக்க வேண்டும்.

நீ உன்னை எத்தனை-எத்தனை உலகப் பொருள்களால் நிரப்பிக் கொள்கிறாயோ அந்த அளவிற்கு நீ ஏமாறுவாய். நீ மற்றவர்களை ஏமாற்றிப் பெற்றாலும்கூட, கடைசியில் நீ உன்னைத்தான் ஏமாற்றிக் கொண்டதை உணர்வாய். உன் திறமை, தந்திரம் உன்னையே காலை வாரிவிட்டது தெரிந்து அதிர்ச்சியடைவாய். வாளெடுத்தவன் வாளால் மடிவதுபோல், தந்திரசாலிகளும் தமது கபடத்தினாலேயே வீழ்த்தப்படுகின்றனர். இதை நான் உறுதியாகச் சொல்லுவேன். நேர்மையான, எளிமையான மனிதர்கள் சத்தியத்தை விரைவிலேயே அடைந்து விடுகிறார்கள். உலகியலில் கெட்டிக்காரர்களும், தந்திரசாலிகளும் சத்தியத்தை ஒருபோதும் அடைவதில்லை.

எவ்வளவு பரிதாபம்-உனது அறிவே உன்னைக் குறுக்கு வழியில் செலுத்தும் சத்துருவாகி விடுகிறது. கபட வழியில் செல்லும் உனது அறிவே உனக்குத் தூக்குக்கயிறாகி விடுகிறது!

ஜனகர் சொல்வது-'நான் ஒன்றுமே இல்லை, சூன்யம். சூனியத்தை நிரப்புவதற்கு உலகில் எந்த உபாயமும் கிடையாது. இதை நான் அறிந்துள்ளதால் என் சூன்யநிலையுடன் சமரசம் செய்து கொண்டு ஒத்துப்போகிறேன்,' என்பதாகும்.

இதுதான் புரட்சியின் வாசலாகும். வெளியுலகிலுள்ள எப்பொருளாலும் தன்னை நிரப்ப முடியாது என்றும், தான் முழுமையாக வெற்றிடமாகி விட்டதாகவும் ஒருவன் முடிவுசெய்தால் அவனிடம் ஒரு பலத்த மாறுதல் தென்படும். அவன் சாந்தமான மனநிலைக்கு வந்துவிடுவான். உள்ளம் அங்குமிங்குமாக ஓடித் திரிவது நின்றுவிடும். பிறருடன் கொண்டிருந்த போட்டி மனப்பான்மை அகன்றுவிடும். இதுதான்-சூன்யமான உணர்வுதான்-தனது சுபாவம் என்னும் நிலைக்கு ஒருவன் உயர்ந்ததும் அவனது வாழ்க்கையில் ஆரோக்கியமான சம்பவம் நிகழும்.

ஆரோக்கியம் என்பதற்கு இன்னொரு சொல்லான 'ஸ்வாஸ்த்ய' (சொஸ்தம்) என்பது இந்த சுலோகத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது முக்கியமான ஒரு சொல்லாகும். இதைப் பிரித்தால் ஸ்வ+சுஸ்த்ய என வருகிறது. இதன் பொருள் 'தன்னில் நிலையாக இருத்தல்' என்பதாகும். தற்சமயம் நீ பரபரப்பாக ஓடி அலைகிறாய். உன் மனம் மிகவும் சலனமடைந்துள்ளது. நீ உன்னில் நிலைபெறவில்லை. நீ உன் மையத்தில் இல்லை. நீ பணத்தைத் துரத்திக்கொண்டு ஓடுகிறாய். இது ஒரு நோய். பதவியைத் தேடி அலைகிறாய். இதுவும் நோய். ஓடுவதால் நீ உன் இயல்பிலிருந்து, உன் மையத்திலிருந்து விலகுகிறாய். ஓடுவது நின்றால், நீ சொஸ்தமாகி (ஸ்வாஸ்தியம் பெற்று, உன்னில் நிலைபெறுவாய்.

தன்னில் வருதல், தன்னில் லயித்தல்-இதெல்லாம் சிக்கலானவை அல்லவா என்று மக்கள் கேட்கிறார்கள்.

அப்படியில்லை. தன்னில் நிலைபெறுதல் கஷ்டமான காரிய மில்லை. உண்மையில் இதைவிட சுலபமானது வேறெதுவுமில்லை. சுயத்திற்குத் திரும்புவதில் என்ன சிரமம் இருக்கப் போகிறது? ஏனெனில் நீதானே அந்த சுயம் என்பது! ஆகவே சரியான கேள்வி 'நாம் சுயத்திற்கு எப்படி வருவது?' என்பதல்ல. 'நாம் பிறவற்றிலிருந்து எப்படி விடுபடுவது?' என்று கேட்பதுதான் பொருத்தமாக இருக்கும். பிறவற்றின் பிடியிலிருந்து விடுபட்டால் நாம் முயற்சி எதுவும் செய்யாமலே சுயத்திற்குத் திரும்பி விடுவோம். இதற்கான வழியென்ன? பிற என்பவை பிரயோஜனம் இல்லாதவை என்பதைக் கண்டு கொண்டால் போதும்.

**வாழ்க்கை என்பது இதுதானா?**

**கண நேர மின்னல் கீற்றில்**
**வாழ்க்கை இனித்து, அதில் சாரம் தெரிந்தது**
**அவற்றை நிரந்தரமாய் ஆக்க முயன்ற**
**கைகள் மறைந்தன. காரிருளில்.**

**விண்ணில் இருந்து வேகமாய் வீசிய**
**வெண்பனிக் காற்றில் விழுந்தது தாரகை**
**கைகளில் வந்து அடங்குவது போலிருந்தது**
**கைகளைத் திறந்தேன், கூழாங்கல்!**

**மகிழ்ச்சியாய்ப் பாடினேன், சோகமாய் அழுதேன்**
**உலகம் சிறிதும் கண்டுகொள்ளவில்லை**
**எனது பாட்டும், எனது அழுகையும்**
**சுவற்றிலடித்த பந்தாய் திரும்பின எனக்கே.**

எதை நீ இதுவரை வாழ்க்கை என அறிந்து வந்துள்ளாயோ, அதை உன் கண்களை விரித்து நன்றாகப் பார். இதுவே போதும். நீ ஒன்றுமில்லாதவனாகிவிடும்போது உனக்கு ஒரு சாம்ராஜ்ஜியமே கிடைத்துவிடுகிறது! விண்ணுலகப் பேரரசுதான் அது. ஆகவே இயேசுநாதர் சொல்கிறார்-'தரித்திரர்கள் அதிர்ஷ்டசாலிகள், கொடுத்து வைத்தவர்கள். கடவுளின் பேரரசு அவர்களுடையதுதான்.*

இங்கே தரித்திரம் என்பது வறுமையைக் குறிப்பிடவில்லை; வெறுமையைக் குறிப்பிடுகிறது. இந்த வெறுமை (emptiness) விரும்பியே வலிந்து மேற்கொள்ளப்பட்டது. இது சாதாரண ஏழைமை இல்லை. இந்த வெறுமை ஆன்மிகச் செழிப்பின் நுழைவு வாயிலாக அமைந்து விடுகிறது. பிறகு நீ என்றுமே தரித்திரன் ஆவதில்லை. ஏனெனில் கடவுளின் பேரரசு உனக்குச் சொந்தமாகி விடுகிறது.

'நான் ஒன்றுமே இல்லை, இவ்வுலகிலும் எதுவும் இல்லை. எல்லாம் வெறும் கனவுதான்,' என்ற எண்ணம் வேரூன்றிவிட்டால் ஸ்வாஸ்த்யம் (சொஸ்தமான, ஆரோக்கியமான) நிலை பிறக்கிறது. அலைதல்-திரிதல்-தேடுதல் முடிவு பெறுகிறது. படபடப்பு என்னும் காய்ச்சல் நீங்குகிறது. மனிதன் தனது நிஜமான வீட்டிற்குத் திரும்புகிறான். தன்னிலேயே தங்கிவிடுகிறான். இனி உள்ளுலகமே அவன் உலகம்.

இவ்வாறு தன்னிலேயே தங்கிவிடுவதைத்தான் ஜனகர் உண்மையான சந்நியாசம் என்கிறார். காஷாயம் அணிவதால் உடலில் மாற்றம் தெரியுமேயொழிய அது மனமாற்றத்தின் அடையாளம் இல்லை. கௌபீனம் தரித்து, தீட்சை பெற்று ஒருவன் நிஜமான சந்நியாசி ஆகிவிட முடியாது. தீட்சை என்பது ஒரு சடங்கு மட்டுமேயாம். அது ஒரு சுபமான ஆரம்பம். சுபவேளையில் ஏற்கப்படும் ஒரு வலுவான முடிவு (சங்கல்பம்)

---

* Blessed are the poor. Theirs is the Kingdom of God.

இப்படி கௌபீனம் கட்டி, காஷாயம் அணிந்து, தீட்சைச் சடங்கு நிறைவேறுவதால் மட்டும் பலன் விளைவதில்லை. சந்நியாசம் ஏற்றால் பயணம் முடிந்துவிட்டது என்று அர்த்தமில்லை. இப்பொழுதுதான் யாத்திரை தொடங்குகிறது. இது முதல் அடி எடுத்துவைப்பது போன்றது. இதிலேயே நின்றுவிட்டவர்கள் பிறகு அடுத்த அடி எடுத்துவைக்க முடிந்ததில்லை. தீட்சைச் சடங்கு என்பது ஓர் அறிவிப்பு மாத்திரமே. அப்போதே நீ முழு சந்நியாசி ஆகிவிடமாட்டாய். அந்தச் சடங்கு, 'நான் சந்நியாசியாக விரும்புகிறேன். சந்நியாசம் என்னும் பாதையில் நடைபோட விரும்புகிறேன்,' என்று நீ உலகிற்குச் சொல்வதாகும்.

'கௌபீனம் மட்டுமே தரிப்பதால்கூட சந்நியாசம் முழுமை பெற்றுவிடாது. தன்னை வெற்றிடமாக (vacuum) ஆக்கிக் கொண்டவன்தான் நிஜமான சந்நியாசி. தியாகத்தால்கூட நிரப்பிக் கொள்ளக்கூடாது. தியாகம்-ஏற்பு இரண்டையும் கைவிட்டதால் நான் சந்தோஷமாக இருக்கிறேன்,' என்கிறார் ஜனக மகாராஜா.

ஆகவே நான் இப்போது எதையும் பிடித்துக் கொள்வதில்லை. விடுவதற்கும் எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. எதன் மீதும் இப்போது எனக்குப் பிடிப்பு (பற்று) இல்லை. எதனுடனும் எனக்கு விரோத மில்லை. ஒன்றுடன் விரோதம் என்றால் மற்றொன்றுடன் ஒட்டுதல் என்றாகிறது. ஆகவே இரண்டும் வேண்டாம்.

இதைப் புரிந்துகொள். இது சுலபமான கருத்துதான். அதாவது, ஒட்டுதலை, பிரியத்தை விரோதமாக மாற்றிக் கொள்வது சுலபம். ஆனால் பிரியமானதிலிருந்து கழற்றிக் கொள்வது என்பது மகாசிரமம்.

உதாரணமாக-ஒருகாலத்தில் நீ பணத்தைத் துரத்திக் கொண்டு ஓடினாய். இதனால் மிகுந்த இன்னல்களுக்கு உள்ளானாய். வேதனை அனுபவித்தாய். எந்த சுகமும் கிடைக்கவில்லை. தொடர்ந்து தோல்வியே உண்டானது. உனக்குச் சினம் பொங்கியது. நீ பணத்தின் எதிரியாக மாறினாய். 'பணம் பாபக்கறை படிந்தது. அதை இனித் தொடக்கூட மாட்டேன்' என்று சூளுரைத்தாய். ஆனாலும் மனத்தின் வெகு ஆழத்தில் பணத்தின்மீது கவர்ச்சி நீடிக்கத்தான் செய்கிறது. ஏனென்றால் இப்போதும் பணத்தைப் பற்றித்தான் பேசுகிறாய், ஆனால், எதிர்மறையில்.

ஜைனத் துறவி ஒருவரைச் சந்திக்குமாறு நான் அழைக்கப் பட்டிருந்தேன். அவர் தாமே இயற்றிய துதிப்பாடலைப் பாடலானார்:

**சக்கரவர்த்திகளின் சிம்மாசனங்களில்**
**அமர எனக்கு நாட்டமில்லை**
**மன்னர்களின் மாட மாளிகைகளில்**
**வாழ எனக்கு விருப்பமில்லை**
**புனிதத் தலம் செல்லும் பாதையில்**
**படிந்திருக்கும் மணல் தூசியே**
**பிடித்தம் எனது மனத்திற்கு.**

துறவியைச் சுற்றிலும் பணக்காரர்களே உட்கார்ந்திருந்தனர். அவருடைய பக்தர்களான அவர்கள் பாட்டை ரசித்துத் தலையாட்டினர். பாட்டு முடிந்ததும் எல்லோரும் 'வாஹ், வாஹ்' (பேஷ், பேஷ்) என்று பாராட்டினர். நான் அமைதியாக இருந்ததைப் பார்த்த துறவி, "நீங்கள் எதுவுமே சொல்லவில்லையே. இந்த பஜன் உங்களுக்குப் பிடிக்க வில்லையா?" என்று கேட்டார்.

எனக்கு சங்கடமாகிவிட்டது. நான் எதையும் ஆழ்ந்து யோசிப்பவனாதலால் என் பதில் விசித்திரமாகத் தோன்றியிருக்கும். நான் கேட்டேன்: "சுவாமிஜி, உங்களுக்கு சக்ரவர்த்திகளின் சிம்மாசனங் களில் ஆர்வம் இல்லையென்றால் அவற்றை ஏன் உங்கள் பாட்டில் இழுக்கிறீர்கள்? நீங்கள் அவர்கள்மீது மறைமுகமான பொறாமை கொண்டிருக்கிறீர்கள் என்பதுதான் இதன் அர்த்தம். நீங்கள் தூசியான பாதையை மட்டும் புகழ்ந்துவிட்டுப் போக வேண்டியதுதானே. அரண்மனை வாசத்தை ஏன் இழுக்க வேண்டும்? அது கிடைக்காது என்பதால்தான் தூசியைப் போற்றுவதுபோல் ஆகிறதே. நீங்கள் பாடியது மற்றவர்களுக்காக அல்ல. உங்கள் மனத்தையே கட்டுப்படுத்தத்தான் ஆடம்பர வாழ்க்கையில் ஆசையில்லை என்று பாடுகிறீர்கள். ஆகவே ஆசை ஒட்டிக்கொண்டு தானிருக்கிறது. உதாரணமாக, பேய்-பிசாசில் நம்பிக்கை இல்லாதவர்கள் அந்தச் சொற்களைக்கூட உபயோகப்படுத்தக் கூடாதல்லவா?", என்று விளக்கினேன்.

இருட்டில் மக்கள் நடமாட்டமில்லாத பாதையில் நீ தனியாகப் போக நேர்ந்தால் சத்தமாகப் பாடியபடியேதானே செல்வாய். பயத்தை மறக்கப் பாடுகிறாய். பாடுவதால் அந்த சூழ்நிலை மாறிவிடப்

போவதில்லை. ஆனால் உன் குரலைக் கேட்டு உனக்குக் கொஞ்சம் தைரியம் மேலிடுகிறது. மற்றவர்களும் இருட்டில் சந்துகளின் வழியாகப் போகின்றவர்கள் சீட்டியடித்தபடியே செல்கிறார்கள். தங்களுக்குத் துணிச்சலூட்டிக் கொள்ளவே அவ்வாறு செய்கிறார்கள். 'பார், நான் பாடுகிறேன், சீட்டியடிக்கிறேன். எனக்கு பயமேது?' என்று உங்கள் மனத்திடம் நீங்கள் சொல்வது போலிருக்கிறது. ஆனால் அவ்வாறு செய்வதே நீங்கள் பயந்து விட்டீர்கள் என்பதைத்தான் உறுதிப்படுத்துகிறது.

நான் தொடர்ந்து சொன்னேன், "உங்களுக்கு மாளிகை வாசம் கிடைக்காதா என்று மனத்தின் மூலையில் ஏக்கம் உள்ளது. உங்கள் கண்ணுக்கு சக்கரவர்த்தியின் சிம்மாசனம் தெரிகிறது. வேண்டாம் என்று ஒன்றை தீவிரமாக மறுத்தால், அதன்மீது முன்பு தனக்கிருந்த நாட்டமும் வெளிப்படுகிறது. ஆடம்பர வாழ்க்கைத் திகட்டிப்போய் ஓர் அரசர் இப்படிப் பாடினால் அதில் நியாயமிருக்கிறது."

நான் சொன்னதை அந்தத் துறவி சட்டென எல்லோர் முன்னிலையிலும் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. மறுநாளும் வரச் சொன்னார். அவ்வாறே நான் சென்றேன். அவர் மட்டுமே தனியாக இருந்தார். சீடர்களைக் காணோம். அவர் காரணம் சொன்னார்:

"இன்று நான் உங்களிடம் தனியாகப் பேச விரும்புகிறேன். சீடர்களின் முன்னிலையில் மனம்விட்டுப் பேச இயலாது. நீங்கள் நேற்றுச் சொன்னது சரிதான். என் ஆழ்மனத்தில் இருப்பது உங்களுக்கு எப்படித் தெரியவந்தது? உங்கள் விளக்கத்தைக் கேட்டு முதலில் கோபத்தால் துடித்தேன். இரவு முழுதும் தூங்காமல் சிந்தித்தேன்.

"ஆம், எனக்குப் பண ஆசை இருந்தது. ஆனால் செல்வம் சேரவில்லை. 'சீச்சி, இந்த திராட்சை புளிக்கும்' என்று பணத்தை ஏசினேன். உலக வாழ்க்கையைக் கைவிட்டுத் துறவியானேன். துறவியானதும் எனக்கொரு பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. எந்தப் பணக்காரர்களின் வீட்டில் எனக்கு வாயில் காப்போனாகக்கூட வேலை கிடைத்திருக்காதோ அவர்கள் என்னைத் தேடிவந்து, என் கால்களைத் தொட்டு வணங்கினார்கள்! அப்போதிலிருந்தே நான் விடாமல் பணத்தாசையை எதிர்த்துப் பேசிவருகிறேன். நேற்றுப் பாடிய பாடல் மட்டுமல்ல, ஏராளமான பஜன்களைப் பணத்திற்கு எதிராகப்

பாடியுள்ளேன். ஆனால் இந்த எதிர்ப்பின் பின்னணியில், வெறுப்பின் அடியாழத்தில் பணத்தின்மீது எனக்கு எதிர்மறையான, நுணுக்கமான ஆசை இருப்பதை நீங்கள் கண்டுபிடித்து விட்டீர்கள்." என்று உண்மையை ஒப்புக் கொண்டார். ஒன்றை நாம் தீவிரமாக எதிர்ப்பதற்கு நமக்கு அதன் மீதுள்ள கவர்ச்சி ஒரு காரணமாக இருக்கலாம். அல்லது அப்பொருள் கிடைக்காததால் ஏற்பட்ட தோல்வி, பழிவாங்கும் உணர்வைத் தூண்டியிருக்கலாம்.

சந்நியாசிகளில் பலர் பெண்ணாசையைத்தான் பலமாக நிந்திக்கிறார்கள். பெண்கள் என்றாலே தப்பி ஓடுகிறார்கள். ஒரு காலத்தில் பெண்களைப் புகழ்ந்து பேசியவர்கள். இப்போது அவர்களை ஏசுகிறார்கள். முன்பு பெண்ணழகைப் போற்றி நூறு பாட்டுப் பாடியவர்கள், இப்போது பெண்களை இகழ்ந்து நூறு வைராக்கியப் பாடல்கள் பாடுகிறார்கள். முன்பு பெண்களை தலையிலிருந்து கால்நகம் வரை மோகத்துடன் வர்ணித்தவர்கள் சாமியாரான பிறகு பெண் உடலை ஏராளமான அசுத்தங்கள் நிரம்பியது என அருவருப்புடன் கூறுகிறார்கள்.

கவனியுங்கள்-பெண்ணைக் கருவிழியாள், மீன்விழியாள், ரோஜாப்பூ கன்னக்காரி என்று வர்ணித்தவனுக்கும், பெண்ணைக் கழிவுப் பொருள்கள், மாமிசப் பிண்டம், ரத்த பாத்திரம் என்று பட்டியலிடுபவனுக்கும் இடையே அதிக வேற்றுமையில்லை. அவ்விருவரையும் ஒருவருக்கொருவர் முதுகு காட்டி நிற்பதாகச் சொல்லலாம். பரஸ்பரம் எதிரிகள்போலுள்ள இந்த இருதரப்பினருமே பெண் நினைவில்தான் சிக்கியுள்ளார்கள். ஒருவரை சம்சாரி என்றும், மற்றவரை சந்நியாசி என்றும் பிரித்துக் கூறுவது தவறு.

எதிலும் எதுவும் இல்லை. எல்லாம் சூன்யம். இந்த மனப்பான் மையிலிருந்து விளைவதே ஸ்வாஸ்த்யம் அல்லது ஆரோக்கியம்.

பெண் என்பவள் ரோஜாப்பூவும் அல்லள், அசுத்தத் தொட்டியும் இல்லை. பணம் என்பது உயிரூட்டும் அமுதமும் இல்லை; உயிர்க் கொல்லியான விஷமும் இல்லை. இந்த உலகம் சாதகமாக இருந்து நீ அனுபவிக்கவும் தகுதியற்றது; பாதகங்கள் நிறைந்து உதறிவிட்டு ஓடிப்போகவும் தேவையற்றது. எதிலும் எதுவும் இல்லை. எல்லாம் சூன்யம். ஏதோ இருப்பதுபோல் நீ நினைப்பது கனவு.

'இத்தகைய மனப்பான்மையால் விளையும் ஆரோக்கிய உணர்வு, கௌபீனம் மட்டும் தரித்த சந்நியாச நிலையிலும் கிடைக்காது. ஆகவே போகம்-தியாகம் என்னும் உணர்வுகளைக் கடந்து நான் சுகமாக இருக்கிறேன்' -என்கிறார் ஜனகர்.

இத்தகைய மனப்பக்குவம் நாம் விழித்துக் கொண்டதைக் காட்டுகிறது. தியாகமும் போகமும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் என்பது புரிந்து போகிறது. போகம் தலைகீழாக சிரஸாஸனம் செய்யும் போது அது தியாகமாகத் தெரிகிறது. போகி என்ன செய்தானோ அதேபோல் தீவிரமாக தியாகியும் செய்கிறான், ஆனால் போகத்தை எதிர்த்து.

நீ சாதாரண மனிதன், உன்னால் முடியாததை தியாகி செய்வதால் நீ பிரமிக்கிறாய். பூப்படுக்கையில் படுத்தும் உறக்கம் வராத நீ, தியாகி முள்போல் கரடுமுரடான தரையில் தூங்குவதைப் பார்த்து வியக்கிறாய். நீ அவனுடைய பாதங்களைக் குனிந்து வணங்குகிறாய்.

நீ பணத்தின் பின்னால் வெறியுடன் ஓடுகிறாய். ஆனால் ஒருவன் காலால் உதைப்பதுபோல் பணத்தை அலட்சியம் செய்வது கண்டு நீ அசந்துபோகிறாய். அவனை நோக்கி, "என்னால் முடியாத காரியத்தை நீங்கள் செய்து காட்டுகிறீர்கள். நான் பலஹீனன், பாவி. உங்களைப் போற்றுகிறேன்," என்று கூறி வணங்குகிறாய்.

தியாகி இருக்கும் இடத்திலெல்லாம் போகிகள் அவன் காலைப் பிடித்துவிடுவதுபோல் சேவை புரிவதில் ஈடுபட்டிருப்பதைப் பார்க்கலாம். தியாகி-போகி இருவருமே தியாகம்-போகத்தைக் கடந்த சந்நியாசியை விரும்புவதில்லை. ஆனால் போகி, தியாகியைக் கண்டு பிரமிக்கிறான். தியாகியோ தான் போகிபோல் இல்லையே என மறைமுகமாக ஏங்குகிறான். அதை வெளியிட முடியாத காரணத்தால் சுவர்க்கம் பற்றிய கற்பனைகளில் ஆழ்கிறான். அவன் தனக்குள் சொல்லிக் கொள்கிறான்:

'இவ்வுலகப் பெண்களிடம் அப்படி என்ன இருக்கிறது? சில ஆண்டுகளிலேயே வாடிப்போய்க் கிழவிகளாகி விடுகிறார்கள். நான் சுவர்க்கத்தில் அனுபவிக்கப்போகும் அப்ஸரப் பெண்கள் என்றும் பதினாறு வயதிலேயே நீடிப்பார்கள். போகி இங்கே சாதாரணக் கள் குடிக்கிறான். நீண்ட நேரம் வரிசையில் நின்று அதை வாங்குகிறான்.

சுவர்க்கத்திலோ அமிர்தமே கிடைக்கும். அது நதிபோல் பெருக்கெடுத்தோடும். போகி இங்கு அற்ப சுகமே அனுபவிப்பான். நான் தியாகியானதால் கிடைத்த புண்ணிய பலத்தால் சுவர்க்கத்தில் நிரந்தரமாக நிறைய சுகம் அனுபவிப்பேன்.'

ஆகவே தியாகியும் ஒருவகையில் போகிதான். போகி உடனுக்குடன் அனுபவிப்பதை தியாகி சுவர்க்கத்தில் அனுபவித்துக் கொள்ளலாமெனத் தள்ளிப்போடுகிறான். அவ்வளவுதான் வேறுபாடு. பின்னால் அனுபவிக்கலாம் என்று இப்போது தியாகம் செய்பவனும் அடிப்படையில் போகிதான்.

விசித்திரம் என்னவெனில், போகிக்கு அடிக்கடி தியாகம் பற்றிய நினைவு மேலிடுகிறது. 'ஐயோ, தியாகியாக இருப்பது எவ்வளவு உயர்ந்த நிலை! என்னால் அப்படி ஆக முடியவில்லையே. நான் இவ்வளவு பலகீனனான இருக்கிறேனே. இன்ப நாட்டத்தைத் துறக்கும் பலம் எனக்கு முதுமையில்தான் கிடைக்குமோ? அடுத்த பிறவியில்தான் கிடைக்குமோ?' என போகி நினைக்கிறான். இதற்கொரு தூண்டுதல் தேடவே அவன் தியாகிகளை வணங்குகிறான்.

அப்போது அவன் மனத்திற்குள் சொல்லிக் கொள்கிறான்: 'தியாகி அவர்களே, நீங்கள் முன்னால் சென்றுவிட்டீர்கள். நான் பின்தங்கிவிட்டேன். என்றோ ஒருநாள் நீங்கள் அடைந்துள்ள இலக்கை நானும் அடைவேன் என்று நம்புகிறேன். அதுவரை உங்கள் பாதங்களை வணங்கி ஊக்கம் பெற்றுக் கொள்கிறேன்.'

நான் சந்தித்துப் பேசியது ஜைனத் துறவியுடன் என்பதை நினைவூட்டுகிறேன். இந்திய மதங்களில், இந்திய சமூகத்தில், அதிகபட்ச தியாகம் ஜைனத் துறவிகளிடம்தான் எதிர்பார்க்கவும் காணவும் படுகிறது. அதேசமயம் இல்லற வாழ்க்கை நடத்தும் ஜைனர்கள்தாம் இந்தியாவில் பெரும் பணக்காரர்கள் என்பதும் கவனிக்கத்தக்கது. ஜைனர்கள் வணங்கும் மகாவீரர் திகம்பரராக (ஆடையணியாதவராகச்) சித்திரிக்கப்படுகிறார். இந்தியாவில் அதிக எண்ணிக்கையில் துணிக்கடைகள் வைத்திருப்பவர்களும் ஜைனர்களே!

**ஒ**ரு காலத்தில் நான் ஜபல்புரில் வசித்து வந்தேன். என் உறவினர் ஜவுளிக்கடை வைத்திருந்தார். கடையின் பெயர் 'திகம்பர்

ஷாப்' நான் இந்த முரண்பாட்டை அவருக்குச் சுட்டிக்காட்டினேன். "துணி அணியாத மகாவீரர் பெயரைத் துணிக்கடைக்கு வைப்பது சரியா?" என்று கேட்டேன்.

தாங்கள் தெய்வமாக வணங்கும் மகாவீரர் பிறந்தமேனியாகவே இருந்த நிலையில் ஜைனர்கள் அதிகபட்சம் துணி வியாபாரமும் ஏன் செய்கிறார்கள்? இந்த இரண்டும் எதிர்மறைக் கவர்ச்சிக் கொள்கையால் பாதிக்கப்பட்டுள்ளது தெரிகிறது. துருவங்கள் ஆகர்ஷிக்கின்றன என்று சொல்வார்களே (Poles attract). ஆண்-பெண் கவர்ச்சியின் அடிப்படையும் இதுவே.

ஜைன சமயத்தில் தியாகத்திற்கு முதலிடம் அளிக்கப்படுகிறது. ஆனால் இந்தியாவில் ஜைனர்களே அதிக எண்ணிக்கையில் செல்வந்தர்களாக உள்ளனர். அதேசமயம் அவர்களுடன் தியாகத்தின் உச்சியைத் தொடுகின்ற துறவிகள் நல்லுறவு கொண்டுள்ளனர். ஒருவருக்கொருவர் உதவியாக, ஆதரவாக இருக்கின்றனர். விபரீதங்களிடையே ஒற்றுமையும் உண்டு என்பது வாழ்க்கையின் விசித்திரம்.

தன்னைப் போலவே உள்ள இன்னொருவரிடம் நமக்குக் கவர்ச்சி உண்டாவதில்லை. அவர் நமது நிழல்போலத்தான் தெரிவார். உன்னுடைய 'காப்பி' (பிரதி, படி) போலத்தான் தெரிவார். ஆனால் நமக்கு நேர் எதிர்மாறாக உள்ளதிடமிருந்து அழைப்புக் கிடைக்கிறது. மனத்தில் ஒரு சவால் பிறக்கிறது. 'இதுவரை போகியாக வாழ்ந்து பார்த்து விட்டோம். தியாகியாக வாழ்ந்து பார்ப்பது மிச்சமுள்ளது' என்ற எண்ணம் உதிக்கிறது. அதில் ஒரு கவர்ச்சி தெரிகிறது. நாம் தற்போது எப்படி உள்ளோமோ அது சலித்துவிட்டது; சுவை குன்றி விட்டது. நாம் எதுவாக இதுவரை ஆகவில்லையோ அதில் சுவை இருக்குமென நம்புகிறோம். தூரத்துப் பச்சை குளிர்ச்சியாகத் தெரிகிறது. சிறிது-சிறிதாக, தியாகியாக மாறலாம் என்று எண்ணம் நம்மைப் பிடித்துத் தள்ளுகிறது. ஒவ்வொரு விரதமாக நிறைவேற்றி, முன்னேறி, ஒரு கட்டத்தில் முழு தியாகியாகி விடுவோம் என நம்புகிறோம்.

போகியின் மனத்திலும் தியாக ஆசை உண்டு. தியாகியின் மனத்தில் நுணுக்கமாக இன்பநாட்டம் உண்டு. ஜனக மகாராஜாவைப் போன்ற ஒருவரைக் காண்பது அரிது. அவர் தியாகியும் இல்லை.

போகியும் இல்லை. இந்த இரண்டு நிலைகளையும் கடந்தவராதலால் அவர் பேசுவது தியாகிக்கோ, போகிக்கோ புரிவதில்லை.

இதனால்தான் ஜனகர் தொகுத்த 'அஷ்டாவக்ர மகாகீதை' பலரால் அறியப்படாமல் உள்ளது. இந்தியா இதைத் தலைமேல் வைத்துக் கொண்டாடவில்லை. ஏனெனில் இதன் மொழி எளிதில் புரியப்படாததாய் உள்ளது. போகியோ, தியாகியோ ஜனகரைச் சந்தித்திருந்தால் அரண்மனை இன்பங்களின் நடுவே தேக உணர்வே இல்லாதவராக (விதேகர்) இவர் முரண்படுகின்ற மனிதராக இருக்கிறாரே என்று இவரை மதித்திருக்க மாட்டார்கள். இவர் தொகுத்த 'அஷ்டாவக்ர மகாகீதை' நூல் அலட்சியப்படுத்தப்பட்டதும் இந்தக் கண்ணோட்டத்தால்தான்.

**க**பீர்தாசருக்கு ஒரு மகன். பெயர் 'கமால்'. அதன் பொருள் அதிசயமானவன் என்பதாகும். கபீர் அவனுக்குப் பொருத்தமான பெயர்தான் வைத்தார் என்பது பிற்கால நிகழ்ச்சிகளால் தெரியவருகிறது. கமால் தன் தந்தையிடம் சீடராகவும் இருந்தார். மற்ற சீடர்களுக்கு கமால்மீது பொறாமை. கபீருக்குப் பிறகு அந்த சம்பிரதாயத்திற்கு (கபீர் பந்த்) கமால் தலைவராக வருவதை அவர்கள் விரும்பவில்லை.

கபீர் இதை ஊகித்துவிட்டார். அவர் சீடர்களைக் கூப்பிட்டு அவர்களுக்கு கமாலிடம் ஏன் விரோத மனப்பான்மை என்று விசாரித்தார். அவர்கள் சொன்னார்கள்: "குருதேவ், உங்களுக்கும் கமாலுக்குமிடையே நிறைய வித்தியாசம் உள்ளது. அவருடைய இயல்பு உங்களுக்கு நேர்விரோதமானது. உங்களைப்போலவே அவரும் தியாகத்தைப் பேசினாலும், உள்ளத்தின் ஆழத்தில் அவர் ஒரு போகிதான். அவரை உங்களிடமிருந்து விலக்கிவிடுங்கள். அவரால் உங்களுக்கும் கெட்ட பெயர் வருகிறது. நேற்று ஒரு செல்வந்தர் ஆயிரம் பொற்காசுகளை உங்களிடம் சமர்ப்பிக்க வந்தாரல்லவா? அந்த அன்பளிப்பை ஏற்காமல் நீங்கள் அவரை விரட்டிவிட்டீர்கள். அவர் திரும்பிச் செல்லும் சமயம் கமால் வாசல் கதவருகில் உட்கார்ந்திருந்தார். அவர் செல்வந்தரைப் பார்த்து, 'கையிலே அதென்ன பை? உள்ளே என்ன?' என்று கேட்டார். செல்வந்தர் நடந்ததைச் சொன்னார். அதற்கு கமால், 'இவ்வளவு தூரம் இந்தச் சுமையைத் தூக்கிவந்த பிறகு மறுபடியும் சிரமப்பட்டு அதை

ஏன் வீட்டுக்குத் திருப்பி எடுத்துச் செல்லவேண்டும். இங்கேயே போட்டுவிட்டுப் போங்கள்,'' என்றார்.

"அப்படியா விஷயம்?''என்று கபீர்தாஸ் கமாலைத் தன் வீட்டில் தங்கவிடாமல் வெளியே தனிக்குடிசை போட்டு வசிக்கச் சொன்னார்.

கபீர் வசித்தது காசி நகரத்தில். அவரை அவ்வப்பொழுது சந்திக்க காசி அரசர் வருவார். அவருக்கு கமாலைப் பிடிக்கும். மேற்படி சம்பவம் நிகழ்ந்தபின் ஒரு முறை வந்த காசி அரசர் கமால் தென்படாததைப் பற்றி விசாரித்தார். கபீர்தாசர் சீடர்களின் பொறாமை, அவர்களின் புகார், கமால் பணப்பையை ஏற்றது, தனிக் குடிசையில் வசிக்க அனுப்பிவிட்டமை ஆகிய எல்லாவற்றையும் சொல்லிவிட்டார்.

அரசர் கமாலின் குடிசைக்குச் சென்றார். தனது சட்டைப் பையிலிருந்து விலை உயர்ந்த வைரக்கல் ஒன்றை எடுத்துக் கமாலிடம் காண்பித்தார். "இதைத் தங்களுக்குக் காணிக்கையாகக் கொண்டு வந்துள்ளேன்,'' என்று தெரிவித்தார். கமால் அலட்சியமாக, "போயும்-போயும் ஒரு கல்லைக் கொண்டுவந்து காட்டுகிறீரே. இதைச் சாப்பிட முடியுமா அல்லது கரைத்துக் குடிக்க முடியுமா? இதை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது?'' என்று கேட்டார்.

மன்னர் பிரமித்துப் போனார். மனத்தில் நினைத்தார், 'இவரையா மற்ற சீடர்கள் போகி என்று குற்றம் சாட்டினர். இவர் மகாதியாகியாக அல்லவா திகழ்கிறார். இந்தியாவில் தற்சமயம் அதிகபட்ச மதிப்புடைய வைரமாயிற்றே' இவ்வாறு நினைத்தவர் வைரத்தைச் சட்டைப்பைக்குள் வைக்கப் போனார் கமால் தடுத்தார். "எடுத்துக் கொண்டுதான் வந்துவிட்டீரே. பிறகு ஏன் கொடுக்காமல் திருப்பிச் செல்கிறீர்? வெறும் கல்தானே. இங்கே எறிந்துவிட்டுப் போங்கள். இங்கே கிடக்கட்டும்,'' என்று கட்டளையிட்டார்.

மன்னருக்கு மயக்கம் வரும்போலாகி விட்டது. ஆனாலும் அவர் விடவில்லை. "இந்தக் குடிசையில் எங்கே எறிவது?'' என்று கேட்டார்.

"எங்கே எறிவது என்று கேட்கிறீர்களா? கொடுக்கத் தயங்குவது போலிருக்கிறதே. அப்படியானால் திரும்ப எடுத்துப்போய் விடுங்கள். நீங்கள் இதை வெறும் கல்வகையாக நினைக்கவில்லை. மனத்தில்

இதற்குப் பெரிய விலை நிர்ணயித்திருக்கிறீர்கள். வெறும் கல்தானே. குடிசையில் எங்கு வேண்டுமானாலும் போட்டுவிட்டுச் செல்லுங்கள்," என்றார் கமால்.

அரசராயிற்றே. விலை உயர்ந்த வைரத்தைக் கல்லின் ஒருவகை என்று கமால் சொல்வதை அவரால் எப்படி ஏற்க முடியும்? கண்ட திசையில் வைரத்தை எறிந்துவிட்டுச் செல்ல அவரது மனம் ஒப்பவில்லை. "இதைக் கூரையில் செருகிவிட்டுப் போகிறேன்," என்று சொல்லிப் போய்விட்டார். அது ஒரு வகையான பரீட்சையுமாகும். தான் கிளம்பியதும் கமால் கூரையை அலசி வைரத்தை எடுத்துக் கொண்டு விடுவாரென அவர் நினைத்தார்.

ஒரு வாரம் கழித்து அரசர் வந்து கமாலைச் சந்தித்தார். "நான் போன வாரம் வைரம் ஒன்று காண்பித்தேனே. நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

"வைரம் என்று தனியாக ஒன்றும் கிடையாதே. நீங்கள் எங்கேயிருந்து கொண்டுவர முடியும்? எல்லாம் வெறும் கல்தானே," என்றார் கமால்.

"சரிங்க. நான் கொண்டு வந்தது வெறும் கல் என்றே வைத்துக் கொள்வோம். நான் அதை இங்கேயே கூரையில் செருகிவிட்டுப் போய்விட்டேன். அது என்ன ஆனதோ, தெரியவில்லை" -அரசர் தெரிவித்தார்.

"வேறு யாராவது அதை எடுத்துப் போகாதிருந்தால் அது இன்னமும் அங்கேயேதான் இருக்கும்," என்றார் கமால்.

இருந்தது!

கமாலின் மன அமைப்பைப் புரிந்துகொள்வது கடினம். சீடர்கள் நினைத்ததுபோல் அவர் போகி அல்லர். அரசர் நினைத்ததுபோல் அவர் தியாகி அல்லர். இரண்டையும் கடந்த உயர்ந்த நிலையை அடைந்தவர் கமால். கபீர் அவருக்கு அதிசயமானவர்(கமால்) என்று குழந்தைப் பருவத்தில் பெயர் சூட்டியது பொருத்தமாக அமைந்துவிட்டது.

கபீரின் புகழ்பெற்ற வாக்கியம் ஒன்று: 'டூபா வம்ச கபீர் கா, உபஜா பூத கமால்' (மகன் கமால் பிறந்ததால் கபீரின் வம்சம் மூழ்கியது)

கமாலைப் பிடிக்காத கபீர் பக்தர்கள் இதற்கு தப்பர்த்தம் கூறிவரு கின்றனர். கமால் பிறந்ததால் தமது வம்சமே நாசமாகிவிட்டதாக கபீர் வருந்திக் கூறியதாக அவர்கள் நினைக்கின்றனர். கபீர் நினைத்தது வேறு. கமால் யோகி போன்றவன். குடும்ப ஆசையில்லாதவன். அதிசயமான அவன் பிறந்ததால் தமது வம்சம் நிறைவுற்றது என கபீர் நினைத்தார். சாதாரண அர்த்தத்தில் பார்த்தாலும், கமால் திருமணம் செய்துகொண்டு, குழந்தைச் செல்வம் பெறாமையால் கபீரின் பரம்பரை மேற்கொண்டு வளரவில்லை.

இயேசுநாதர் கதையும் இப்படித்தான். பைபிளில் உள்ளபடி பரமாத்மா முதலில் ஆதம்-ஈவ் இருவரையும் படைத்தார். அதன் பிறகு அவர்களின் பரம்பரை சங்கிலித் தொடர்போல் நீண்டுகொண்டே செல்கிறது. ஒரு கட்டத்தில் ஜோசப்-மேரியின் மகனாக இயேசு பிறக்கிறார். அவருக்குப் பிறகு யாரும் கிடையாது. இயேசுவுடன் பரம்பரை சட்டென்று முடிந்து போகிறது. ஏனெனில் சிகரம் வந்து விட்டது. உச்சியை அடைந்தாகிவிட்டது. அதற்கும் மேலே போக எதுவுமில்லை. பயணம் முடிந்துவிட்டது. பாசறையை அடைந்தாகி விட்டது.

கபீர் தன் மகனால் குலம் நாசமாகிவிட்டது என்று கோபமாகச் சொன்னதாக பக்தர்கள் நினைக்கிறார்கள். அவர் சொன்னது பரவச நிலையில். அவருக்குத் தன் மகனின் ஆன்மிக முன்னேற்றம் புரிந்துவிட்டது. ஆன்மிகத்தில் கமால் தன்னைவிட வெகுதூரம் முன்னேறிவிட்டதை அவர் உணர்ந்தார். அத்தகைய மகன் சராசரி மனிதனாக குடும்ப வாழ்க்கை மேற்கொள்ள வாய்ப்பு இல்லை. ஆகவே கபீரின் வம்சம் முடிந்துவிட்டது என்று தெளிவாகத் தெரிந்தது. எவரெஸ்ட்டைத் தொட்டாகிவிட்டது.

'ஏற்றல்-விடுத்தல்' இரண்டையும் கைவிட்டு நான் சுகமாக உணர்கிறேன்' என்றார் ஜனகர்.

ஆம். ஏதேனும் ஒன்றைப் பிடித்துக் கொண்டாலும் உனக்கு மகிழ்ச்சி கிடைக்காது. ஆகவே எதையும் தேர்ந்தெடுக்காமையே ஞானம் (Choiceless awareness) என்கிறார் ஜே.கிருஷ்ணமூர்த்தி. இதுவும் வேண்டாம்-அதுவும் வேண்டாம் என்னும் சாட்சி மனப்பான்மையே மன அமைதிக்கான வழி.

'சில சமயம் உடலால் துன்பம்; சில சமயம் பேச்சால் துன்பம்; சில சமயம் மனத்தில் வருத்தம். ஆகவே இந்த மூன்றையும் கைவிட்டு, நான் ஆத்மானந்தத்தில் திளைத்து சுகமாக இருக்கிறேன்.'' **(சுலோகம் 116)**

**உ**டலுக்கு நூறு-நூறு துன்பம். எண்ண முடியாத அளவு நோய்கள் நம் உடலில் மறைந்துள்ளன. பிறக்கும்போது சில நோய்களையும், வளரும்போது பல நோய்களையும் கொண்டுள்ளது நமது உடல். சமயம் பார்த்து இவை வெளிப்படுகின்றன. உடலையே ஒட்டுமொத்தமாக ஒரு வியாதி என்று முற்கால ஞானிகள் கூறிச்சென்றனர்.

இதைப் புரிந்துகொள்ளவும். உடலெடுத்தாலே வியாதிகளால் அவதிப்பட வேண்டியதுதான். வழக்கமான நோய்களால் நாம் துன்பமடைவதுடன், முதுமையும் ஒரு நோய்தான். உடற்குறையும் நோய்தான். குரூபமாக இருப்பதாலும் துக்கம்தான். வேடிக்கை என்னவெனில், ஆரோக்கியமாக இருப்பவனும் சுகமாக இல்லை. அழகானவனும் சுகமாக இல்லை. ஆக, உடல் இருக்கும்வரை, உடலில் இருக்கும்வரை யாரும் மகிழ்ச்சியாக இல்லை. நோயாளி துன்புறுவது புரிகிறது. ஆரோக்கியமானவனும் ஏன் கஷ்டப்படுகிறான்?

நீ ஒரு விஷயம் யோசித்துப் பார்த்திருக்கிறாயா? உனக்கு நோயாக இருக்கும்போது அதிகமாக கஷ்டப்படுகிறாய். ஆனால் நோய் நீங்கியபின் முழுமையான சந்தோஷம் திரும்புவதில்லை. உனக்கு இப்போது புதுக் கவலை. நோய் ஏன் வந்தது; இனி வராமலிருக்க என்ன செய்வது; மீண்டும் ஒரு காலத்தில் வரும் என்றுதானே எச்சரிக்கிறார்கள்- இப்படிப் புது-புதுக் கவலைகள்.

குரூபமாக உள்ளவன் தோற்றம் குறித்துக் கவலைப்பட்டு பலவித அலங்காரம் அல்லது சிகிச்சை செய்து கொள்கிறான். ஆனால் அழகானவனும் அழகு குறைந்துவிடுமோ என்று கவலைப்படுகிறான். அதைத் தடுக்கப் பலவிதமான அழகு சாதனங்களைப் பயன்படுத்து கிறான். விரும்பிய உணவைக்கூட அவனால் சாப்பிட முடியாமல் போய்விடுகிறது.

அமெரிக்காவின் புகழ்பெற்ற நடிகை மர்லின் மன்ரோ* ஆவார். அவர் பேரழகி. கவர்ச்சிப் பெட்டகம். ஜனாதிபதி ஜான் கென்னடியும்

* Marilyn Monroe (1925-1962)

அவளிடம் மயங்கினார். [1]அமெரிக்காவின் மாபெரும் பணக்காரர்கள் பலர் அவள் காலடியில் கிடந்தார்கள். தான் விரும்பியவரை அடையவும், தான் விரும்பியதைப் பெறவும் அவளுக்குத் தடையே இருந்ததில்லை. ஆனாலும் மனத்தளவில் அவள் சுகமாக இல்லை. தனது 36ஆம் வயதிலேயே தற்கொலை செய்துகொண்டு விட்டாள்!

நாம் வாழ்க்கையில் பெற்ற அனுபவங்களின் அடிப்படையில், உடலோடு இருக்கும்வரை துன்பத்தையும் தாங்க வேண்டியதுதான் என்று நினைக்கத் தோன்றுகிறது. பேச்சாற்றல் உள்ளவனும் பேசி முடித்தபின் முழு திருப்தி பெறுவதில்லை. அறிவு, பேச்சாற்றல், சிந்தனை சக்தி உள்ளவரும் அமைதியாக இல்லை. சிலர் மூளைக் கோளாறு அல்லது தற்கொலை நிலைக்கும் போய்விடுகின்றனர்.

ஐரோப்பிய நாடுகளில் கடந்த நூறு ஆண்டுகளில் இப்படி சிலர் பைத்தியம் பிடித்து அலைந்தமைக்குச் சான்றுகள் உண்டு. அவர்கள் பேரறிஞர்கள். குறிப்பாக, நீத்ஸே மாமேதை. கடந்த சில நூற்றாண்டுகளில் நீத்ஸேபோல் பேச்சாற்றல், சிந்தனையாற்றல், எழுத்தாற்றல் எல்லாம் ஒருங்கே அமையப் பெற்றவர் தோன்றியதில்லை. அவர் எழுதிய எந்த நூலைப் படித்தாலும் அவர் தீர்க்கதரிசி, மகாஞானி என்றே பிரமிப்போம். உதாரணமாக, 'தஸ் ஸ்பேக் ஜரதுஸ்த்ரா'[2] நூலைச் சொல்லலாம். ஆனால் உடல்நலக் குறைபாட்டாலும், மனக்கோளாறுகளாலும் அவர் வாழ்க்கை முழுதும் அவதிப்பட்டார். நிம்மதியாக இறக்கவில்லை.

பேசத் தெரியாதவர்களை ஊமைகள் என்கிறோம். பேச்சாற்றல் உள்ளவர்களோ காலப்போக்கில் உளறுவாயர்களாகி விடுகிறார்கள். சிந்தனா சக்தி இல்லாதவர்கள் பரிதாபத்துக்குரியவர்கள். 'நமக்குப் போதுமான அறிவு இல்லாமல் போய்விட்டதே' என அவர்கள் வருந்துகிறார்கள். அறிவுள்ளவர்களோ கோணல்-மாணலாகப் பலவகைச் சிந்தனைகள் செய்து தங்களையும் குழப்பிக் கொள்கிறார்கள், மற்றவர்களையும் குழப்பி விடுகிறார்கள்.

உடல் ஆரோக்கியமாயிருந்து, சிந்தனை தெளிவாக இருந்து, பேச்சாற்றல் நிறைந்திருந்து, வாழ்க்கை வளங்கள் அமைந்திருந்து

1. அவர் சகோதரர் ராபர்ட் கென்னடியும் இந்த நடிகையின் காதலர்களில் ஒருவர்!
2. **Thus Spake Zarathustra** எழுதி முடிக்கப் பத்தாண்டுகள் **(1883-92)** ஆயின.

விளங்கினாலும் மனத்தில் முழுமையான சந்தோஷம், முழு திருப்தி ஏற்பட்டுவிடாது. மனத்தின் விசேஷம் என்னவென்றால் எல்லாம் ஒருவனிடம் இருந்தாலும், இல்லாத ஒன்றைக் கற்பனையாவது செய்து அதை அடைய ஏங்கும். இருக்கின்றவற்றுடன் திருப்தி அடையாமல், இல்லாத ஒன்றை மட்டுமே நினைத்து வருந்துவதில் நமது மனம் தனிச்சுவை காண்கிறது. மனத்தை முழுமையாக சந்தோஷப்படுத்த எந்த உபாயமும் கிடையாது. ஆகவே ஞானிகள் மனத்தைவிட்டு வெளியேறுவதற்கான வழிகள் தேடலாயினர்.

ஜனகர் சொல்கிறார்-'உடல், பேச்சு, மனம் (சிந்தனை) எல்லாம் துன்பம் தருபவையாய் உள்ளன. ஆகவே நான் இம்மூன்றின் பாதிப்பிலிருந்தும் வெளியேறி, எனக்குள்ளேயே ஆழ்ந்து லயித்து ஒரு குறிப்பிட்ட நிலையை வந்தடைந்துள்ளேன். இந்த நிலையில் நான் உடலும் இல்லை, மனமும் இல்லை. நான் சாட்சியாக இரண்டின் செயற்பாட்டையும் காண்கிறேன். ஆகவே மகிழ்ச்சியாக உள்ளேன்.'

'செய்யப்பட்ட செயல்களில் எதுவும் சுயத்தூண்டுதலால் செய்யப்பட்டவை அல்ல. இதுதான் யதார்த்தம். இதை நான் நினைவில் வைத்துள்ளேன். ஆகவே எப்பொழுதெல்லாம் ஏதேனும் காரியம் நான் செய்ய வேண்டியிருந்தால் அதை நிறைவேற்றி, சுகமாக என்னில் நிலைத்திருக்கிறேன்.' **(சுலோகம் 117)**

**மு**ல்லா நஸ்ருத்தீன் எந்த ஊருக்கோ நடந்துசென்றவர் வழி தவறிவிட்டார். வயல்கள் ஆரம்பிக்கும் பகுதி. அவர் ஒரு மரத்தின்மேல் ஏறிப் பார்த்தார். சற்றுத் தொலைவில் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. அவர் நேராக அங்கே சென்றார். வயல்களின் நடுவே ஒரு வீடு. வீட்டுவாசல் புறத்தில் ஒரு கட்டில் கிடந்தது. முல்லா கட்டிலில் ஓய்வாகச் சாய்ந்து கொண்டார். அக்கால வழக்கப்படி வீட்டிலுள்ளோர் அவர் சாப்பிட-குடிக்க ஏதாவது கொண்டு வருவார்களென எதிர்பார்த்தார். அவ்வாறு உபசரிப்பதை வீட்டின் உள்ளேயிருந்த கணவன்-மனைவி விரும்பவில்லை. உபசரிப்பைத் தவிர்க்க அவர்கள் ஒரு திட்டம் தயாரித்தனர். அதன்படி தங்களுக்குள் சண்டை போட்டுக் கொள்ள முடிவு செய்தனர். கணவன் மனைவியைப் போலியாக அடிக்கவேண்டும். மனைவி உரக்க அழுது பாத்திரங்களை வீச வேண்டும். சண்டை ஆரம்பித்தது. முல்லா பயந்துவிட்டார். கணவன் தன்னையும் அடிப்பானோ என்றும், மனைவி வீசும் பாத்திரம்

தன்மீதும் விழும் என பயந்த அவர் கட்டிலின் கீழே ஒளிந்து கொண் டார். சில நிமிடங்களானபின் கணவன்-மனைவி எட்டிப்பார்த்தனர். கட்டிலில் சாய்ந்திருந்தவரைக் காணாமல் சந்தோஷப்பட்டனர்.

கணவன் பெருமையாகச் சொன்னான், "நான் என்னையேதான் ஓங்கி அடித்துக் கொண்டேன். சப்தம் பலமாகக் கேட்டது. அந்த ஆளு 'நம்மால இப்படி அடி தாங்க முடியாது' என்று பயந்து ஓடியிருப் பான்."

மனைவியும் சிரித்தபடி சொன்னாள். "நானும் எவ்வளவு சத்தமா அழுதேன். பாத்திரங்களை உங்கமேல படாம வீசி எறிஞ்சேனே," என்றாள்.

முல்லாவுக்குத் தான் ஏமாற்றப்பட்டது புரிந்தது. அவர் கட்டிலின் கீழிருந்து வெளியேறி, "உங்க நாடகம் நல்லா இருந்தது. நானும் எப்படி உங்களால கண்டுபிடிக்க முடியாதபடி ஒளிந்து கொண்டேன், கவனிச்சீங்களா?" என்றார்.

கணவன்-மனைவி அவரிடம் தாங்கள் ஏமாறிவிட்டோம் என்பதைப் புரிந்துக் கொண்டனர்.

ஏமாற்ற முயல்வதால் எதுவும் மாறிவிடுவதில்லை. நமக்குத்தான் ஏமாற்றம் மிஞ்சும். நீ உன் வாழ்க்கையைத் திரும்பிப்பார். என்னதான் தகிடுதத்தம் செய்து வாழ்க்கையை மாற்றியமைக்க முயன்றாலும் அது சிறிது காலம் சென்றபின், நிமிர்த்த முயன்ற நாய்வால்போல், பழைய நிலைக்கே திரும்புகிறது. எல்லாம் எப்படியோ அப்படியோ உள்ளன. பூமியில் பிறக்கும் பெரும்பான்மையோர் ஏதோ வாழ்ந்து இறந்துபோகின்றனர். அவர்களின் வாழ்க்கையில் எத்தகைய புரட்சியும் நிகழ்வதில்லை. எதுவும் மாறுவதில்லை. வாழ்க்கையே வீணாகி விட்டதென அவர்களுக்கே கடைசியில் தெரிகிறது.

'செய்யப்படுபவையெல்லாம் நீ செய்கின்றவை அல்ல' என்று ஜனகர் கூறுவதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். நீ என்பது ஆத்மவடிவினன் என்பது நினைவிலிருந்தால்தான் இது புரியும். பசி எடுக்கிறது-உனக்கில்லை, உன் உடலுக்கு! அடுத்து உணவைத் தேடவேண்டியுள்ளது-தேடுவது நீ இல்லை, உன் உடல்! எங்கே, எப்படி உழைத்து, சம்பாதித்து உணவைப் பெறுவது என்று மனம்

வழிகாட்டுகிறது. அதுவும் உடலின் அங்கமாகிய மூளைதான். ஆனால் நீயோ உடலுக்கும் மனத்துக்கும் அப்பாற்பட்டவனாக உள்ளாய்.

அது மட்டுமல்ல. 'எப்பொழுது நான் செய்யவேண்டுமென்று எதிர்ப்பட்ட பணிகளைச் செய்து முடித்து சுகத்தில் ஆழ்ந்துள்ளேன்' என்றும் ஜனகர் கூறுகிறார். ஆகவே ஞானி அன்றாடப் பணிகளைக் கைவிடலாகாது. பசிக்கிறதா? சாப்பிடுவோம். உறக்கம் வருகிறதா? தூங்குவோம். யாராவது கேள்விகேட்டால், விசாரித்தால் பதில் சொல்லுவோம். ஆனால் ஒரு விஷயத்தில் விழிப்புடன் இருப்போம். செய்பவர் நாமல்லர் என்பதை நினைவில் கொள்ளுவோம்.

**அலை மீண்டும் திரும்புகிறது**
**ஆழ்கடலின் பரப்பிற்கே**
**எது எப்படி நடக்க வேண்டுமோ**
**அது அவ்வாறே நடந்தே தீரும்.**

**ஏனெனில் இதுவரை நடைபெற்றதெல்லாம்**
**அவ்வாறே நடைபெற விதிக்கப்பட்டிருந்தது**
**இந்த நெடிய சோகக் கதை**
**தொடக்கமும் முடிவும் அற்ற தொல்கதை**

திரும்பிப் பார். உனது வாழ்க்கைக் கதையின் பக்கங்களைப் புரட்டிப் பார். உன் கடந்த காலத்தை ஆராய்ந்து பார், அகழாய்வு செய்! என்ன கண்டாய்? எவை எல்லாம் நடைபெற வேண்டுமோ அவை எல்லாம் ஒரு திட்டப்படியே நிகழ்ந்திருக்கின்றன என்பது தெரியவரும். நடுவில் அநாவசியமாக நீ எத்தனை-எத்தனை கவலைப்பட்டாய்! நீ கவலைப்படாமலிருந்தாலும் அவை நடைபெற்றே இருக்கும். நீ எதிலோ தோல்வியடைந்தாய். கவலைப்பட்டிருந்தாலும் அதைத் தவிர்த்திருக்க முடியாது. நடப்பது நடந்தே தீரும். அப்படித்தான் நடக்கிறது. நீ கவலைப்பட்டு உடல்நலம் கெடாமலாவது, மன அழுத்தம் இருந்துவிடாமல் பார்த்துக் கொண்டிருக்கலாம். அதுதான் மனிதனின் கையில் உள்ளது.

ஆனால், 'செய்பவன் நானல்லன்' என உணர்ந்தால் வாழ்க்கை சப்பென்றாகி விடுகிறது. 'நான் இருக்கிறேன்-நான்தான் எஜமானன்-நான்தான் செய்பவன்,, சாதிப்பவன்' என்றெல்லாம் கருதுகின்றபோது ஏற்படுகின்ற பெருமிதம், போதை, யதார்த்தத்தை மறைத்து விடுகிறது.

ஒரு பக்தன் இறைவனிடம் பிரார்த்திக்கிறான்:

**ஐயனே! எனது பிரார்த்தனை இதுவே**
**இதை ஏற்பதும், சாத்தியமாக்குவதும்**
**உமக்கு மிகவும் எளிது.**

**உங்கள் பாதையில் நானும் வருவேன்**
**உங்கள் வழியை நானும் ஏற்பேன்**
**உங்கள் திருவடியைப் பின்பற்றி**
**நானும் காலடி எடுத்துவைப்பேன்.**

**நீங்கள் இழுக்கும் இழுப்பிற்கெல்லாம்**
**நானும் வளைந்து கொடுத்திடுவேன்**
**எதையெல்லாம் நான் தவிர்க்க வேண்டுமென**
**நீங்கள் விரும்புவதை நானும் தவிர்ப்பேன்**
**நீங்கள் அனுமதிக்காத எதையுமே**
**பார்க்கமாட்டேன், சிந்திக்கமாட்டேன்**
**நானாக எதுவும் செய்யமாட்டேன்.**

திடீரென பக்தனின் குரல் மாறுகிறது; சிந்தனைத் தடம் மாறுகிறது; மன ஓட்டம் திசை மாறுகிறது. இப்போது அவன் சொல்கிறான்.

**ஆனால், ஐயனே, இப்படியெல்லாம்**
**நடந்துகொள்ள என்னால் இயலாது**
**உன்னிடமிருந்து விடுபட, பிரிந்துபோக,**
**அதனால் தடுக்கி விழுந்தால் உருள,**
**எனது இஷ்டப்படி செயல்புரிய**
**என்மனம் துடிக்குது, என் செய்வேன்?**

'கடவுளே, நீ விரும்புகின்றபடியே நடக்கட்டும். நான் அதை ஏற்றுக் கொள்கிறேன். அதற்கேற்ப நான் செயல்படுவேன்' என்று சொல்லுகின்ற மனிதன், 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்கின்ற மனிதன், இவ்வாறெல்லாம் ஒப்புக்காகக் கூறிவிட்டு, மனதுக்குள் அகங்காரம் பிடித்தவனாகத்தான் உள்ளான். 'நான்தான் செய்பவன்; என் இஷ்டப்படிதான் எல்லாம் நடைபெறும்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்கிறான்.

நீ என்னதான் பாடுபட்டாலும் முன்பே நிச்சயித்ததுதான் நடைபெறும். அவ்வாறு நீ பாடுபடவேண்டும் என்பதும்கூட முன்பே நிச்சயிக்கப்பட்டிருக்கும்! வெற்றியும் தோல்வியும் தானாக நிகழ்பவை, அவற்றை உண்டாக்கவோ, தடுக்கவோ உன்னால் முடியாது. சில சமயம் எவ்வளவு முயன்றாலும் தோல்வி நேரிடுவதை நீ வாழ்க்கையில் பார்த்திருப்பாய். அதுபோலவே நீ சிலசமயம் ஒன்றும் செய்யாமல் மரத்தின்கீழ் சும்மா படுத்திருக்கும்போது தானாகவே வாயில் பழம் வந்து விழக்கூடும்.

**நா**ன் எம்.ஏ. வகுப்பில் படித்து வந்தபோது ஒரு பேராசிரியருக்கு என்மீது தனி பிரியம் இருந்தது. அவர் என்னிடம் அடிக்கடி சொல்லுவார்: "நீ மட்டும் கொஞ்சம் கூடுதலாக உழைத்தாயானால் பரீட்சையில் எனது பாடத்தில் தங்கப் பதக்கம் வெல்லலாம். இப்பொழுது நீ படிக்கும் நேரத்துடன் கூடுதலாக ஒரு மணி நேரம் சேர்த்துப் படித்தால் போதும். தங்கப் பதக்கம் உனக்குத்தான்."

நான் அவரிடம் தத்துவம் பேசினேன். "கூடுதலாக நான் உழைத்தாலும் அல்லது உழைக்காவிட்டாலும் உங்கள் பாடத்தில் தங்கப்பதக்கம் எனக்குத்தான் என்றால் அது கிடைத்தே தீரும்," என்றேன். நான் சொன்னது அவருக்கு சரியென்று படவில்லை. அவர் என்னை மடக்கினார், "அதெப்படிக் கிடைக்கும்? ஒரு பொருள் கிடைக்க வேண்டுமாயின் ஏதாவது முயற்சி செய்யத்தானே வேண்டும்? சும்மா இருந்தால் சோறு தானாக வாயில் வந்து விழுமா?" என்று அவர் கேட்டார்.

என் திறமை மீது அவருக்கு மிகுந்த நம்பிக்கை. நான் தங்கப்பதக்கம் வாங்காமல் போய்விடுவேனோ என்று அவர் மிகவும் கவலைப்பட்டார். பரீட்சைக்கு ஒரு மாதம்தான் இருந்தது. நான் அலட்சியமாய் உள்ளேனே என்று வருந்திய அவர் என்னை விடுதி அறையை காலிசெய்து தமது வீட்டிலேயே தங்கச் சொல்லிவிட்டார். "நீ எப்படிப் படிக்கிறாய் என்பதை நான் நேரடியாகக் கவனிக்க வசதியாக இருக்கும்," என்றார்.

நான் அவர் வீட்டுக்கு வந்துவிட்டேன். ஆனால் புத்தகக் கட்டைப் பிரிக்கவில்லை. இதை நாலைந்து நாள் கவனித்து, முதலுக்கே மோசம் வந்துவிடுமோ என்று அவர் பயந்து போனார். அவர்

என்னிடம் வந்து, "சரி, நீ சொன்னதெல்லாம் சரி என்று ஒத்துக் கொள்கிறேன். நீ படிக்க ஆரம்பி. இல்லாவிடில் 'பெயில்' ஆகிவிடுவாய்," என்று கெஞ்சினார்.

"நான் 'பெயில்' ஆக வேண்டும் என்றிருந்தால் அப்படித்தான் நடக்கும். நான் 'பாஸ்' ஆக வேண்டும் என்றால் அதையும் தடுக்க முடியாது. நான் புத்தகங்களைத் திறப்பதாயில்லை," என்று மறுத்து விட்டேன். மேலும் சில நாள் சென்றபின் அவரது நடுக்கம் அதிகரித்தது. அவர் என்னிடம், "என்னை மன்னித்துவிடு. தெரியாத்தனமாக உன்னோடு வாதத்தில் இறங்கிவிட்டேன். நான் சொன்னதையெல்லாம் வாபஸ் வாங்கிக் கொள்கிறேன். உன்னை ஹாஸ்டலிலேயே விட்டு வைத்திருந்தால் நீ கொஞ்சமாவது படித்திருப்பாய். நான் தவறு செய்து விட்டேன்," என வருத்தப்பட்டார்.

நான் அவரைத் தேற்றினேன்: "சார், நான் ஹாஸ்டலிலேயே நீடித்திருந்தால்கூட நான் படித்திருப்பேன் என்று சொல்ல முடியாது. எனக்கு எது விருப்பமோ அதன்படி செய்வேன். எது நடக்க வேண்டுமோ அதுவே நடக்கட்டும்."

பரீட்சை மிகவும் நெருங்கிவிட்டது. தற்செயலாக அவர்தான் கேள்வித்தாள் தயாரித்தவர். ஒருநாள் அவர் என்னிடம், "நான் உன்னோடு வாதம் செய்தது தப்பாகிவிட்டது. உன் எதிர்காலம் வீணாகக்கூடாது. நான் தேர்வில் வரவுள்ள சில முக்கியமான கேள்விகளைச் சொல்கிறேன். பதில் தயாரித்துவை. இப்படி நான் இதுவரை கேள்விகளை வெளிப்படுத்தியதில்லை, பிடிவாதமாக இருக்கும் உன்னைக் கண்டு பரிதாபம் உண்டாகிறது."

அவர் பயந்ததுக்கு காரணம் உண்டுதான். நான் அதிக நேரம் அவரது பங்களாவின் புல்தரையில் படுத்துக்கிடந்தேன். வெயில் நேரத்தில் மரங்களின் நிழலில் தூங்கினேன். ஒரு மாதமாக புத்தகங்களைத் தொடவில்லை. "சார், நீங்கள் கேள்விகளைச் சொன்னாலும் பிரயோஜனமில்லை. நான் புத்தகங்களைத் திறந்து பார்க்கப் போவதில்லை. ஏற்கெனவே படித்ததை வைத்துத் தேர்வு எழுதப்போகிறேன்," என்று அவருக்குத் தெரிவித்தேன்.

மறுநாள் தேர்வு. முதல் நாள் இரவு நான் அமைதியாக இருந்தேன், அவர் தவித்துப் போனார். இரவு 11 மணிக்கு அவர்

என்னைத் தட்டியெழுப்பினார். அவர் கையில் ஒரு காகிதம். "இதுதான் நான் தயாரித்த கேள்வித்தாளின் கையெழுத்துப் பிரதி. இவற்றைப் பார்த்து இப்பொழுதாவது பரீட்சைக்குத் தயார்செய்," என்று மன்றாடினார்!

நான் அவரைக் கண்டித்தேன், "சார், கடைசி நிமிடத்தில் என் நம்பிக்கையைத் தகர்க்காதீர்கள். நான் உங்களிடம் செய்த வாதங்களை நானே பொய்யாக்கும்படி செய்யாதீர்கள். நாளை என்ன நடக்க வேண்டுமோ அப்படியே நடக்கும். இந்த பேப்பரில் என்ன கேள்விகள் உள்ளன என்பது நாளை காலையே எனக்குத் தெரியத்தானே போகிறது. இப்போது என்ன அவசரம்? இந்தக் கேள்விகள் இப்போதே தெரிந்தாலும் நான்தான் படித்து தயார்செய்யப் போவதில்லையே," என்று கூறி உறக்கத்தைத் தொடர்ந்தேன்.

எனக்குத்தான் தேர்வில் தங்கப்பதக்கம் கிடைத்தது. அந்தப் பேராசிரியர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவர் என்னைப் பாராட்டினார். "நீ சொன்னது பலித்துவிட்டதே! நடக்கவுள்ளது நடந்தே தீரும் என்று நீ சரியாகச் சொன்னாயே. என்னால் இப்போதும்கூட இந்த மனப்பான்மையை நம்ப முடியவில்லை. சரி, நல்லபடியாக முடிந்தது," என்றார்.

சில ஆண்டுகளுக்குப் பின் அவர் என்னைச் சந்தித்தபோது, "உனக்கு எப்படித் தங்கப்பதக்கம் கிடைத்தது? அதன் இரகசியமென்ன?" என்று விசாரித்தார்.

"சார், உங்களுக்கே தெரியும். தேர்வுக்கு ஒரு மாதம் முன்பாகவே உங்கள் வீட்டிற்கு வந்து தங்கிவிட்டேன். புத்தகங்களையெல்லாம் ஒரு பெட்டியில் பூட்டி, சாவியை உங்களிடம் ஒப்படைத்து விட்டேன். இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும்கூட அந்த புத்தகங்களை நான் உங்கள் வீட்டிலிருந்து திருப்பி எடுத்துக்கொண்டு வரவில்லை. நான் செய்தது ஒரு பரிசோதனைதான். ஆபத்தான பரிசோதனை என ஒப்புக்கொள்கிறேன். நடக்க வேண்டியது நடந்தே தீரும் என நம்பியது நிஜமாகிவிட்டது," என்று விளக்கிறேன்.

உலகில் பலர் சில சமயம் எந்த முயற்சியும் எடுக்காமலே வெற்றி கண்டிருப்பார்கள். அப்படியும் நான் சொல்வதை நம்புவது சிரமம். தற்செயலாக வெற்றி கிடைத்தது என்றே அவர்கள் நினைப்பார்கள்.

ஆனால் நான் கூறுவது வாழ்க்கையின் உண்மை. எது நடக்க வேண்டுமோ அதுவே நடைபெற்று வருகிறது. இதை உணர்ந்து நீ அடக்கமுடன் விளங்கினால் உனது வாழ்க்கையில் அமைதியின் மேகங்கள் பரவிக் குளிர்ச்சி தரும். பிறகு எப்போதும் சுகமே.

அன்றாடக் கடமைகளைப் புறக்கணிக்கச் சொல்லவில்லை. வாசல்வரை வந்துவிட்ட கடமைகளைச் செய்து முடிப்போம். வேறு ஏதேனும் வேலை உள்ளதா என்று நாமாகத் தேடிக்கொண்டு போகவேண்டாம். நமக்கு விதிக்கப்படாத கடமைகளை நாம் செய்தாக வேண்டிய கட்டாயமும் இல்லை.

நாம் செய்வதால் ஒரு பணி நடப்பதாக நினைப்பது சரியன்று. நான் செய்து எதுவும் நடைபெறுவதில்லை. நிறைவேறிய எல்லா வேலைகளின் மீதும் கடவுளின் முத்திரை, கடவுளின் கையெழுத்து தான் உள்ளது. கடவுளின் கையெழுத்தை மறைத்து, உனது கையெழுத்தை அதன்மேல் இட்டு, நீதான் எல்லாம் செய்பவன் எனக் காட்டிக் கொண்டால் அச்செயல்கள் உன்னைப் பாதிப்பதைத் தடுக்க முடியாது.

நம்மிடம் வந்துசேரும் பணிகளைச் செய்வோம். அவற்றை மறுக்க வேண்டியதில்லை. சோம்பேறித்தனம் இல்லை. ஓடோடிச் செய்ய வேண்டியதுமில்லை. உடனே முடிக்க வேண்டுமென்ற ஆவேசமும் இல்லை. தள்ளிப்போடும் தாமச குணமும், தீவிரப்படும் ராஜச குணமும் இல்லை. சத்வகுணப்படி அமைதியாக அவ்வேலை களைச் செய்வோம்.

வீட்டிலே நெருப்புப் பிடித்துவிட்டது. அப்பொழுதும் தாமச குணமுடையவன் படுக்கையைவிட்டு எழுந்திருக்க மாட்டான். தீ இன்னும் கொஞ்சம் பரவட்டும்; அப்போது பார்த்துக் கொள்ளலாம் என நினைப்பான்.

ராஜச குணமுடையவன் வீடு வாங்கினதுமே தீ விபத்து நேருமோ என்று கவலைப்படுவான். தீயணைப்பான்களை வாங்குவான். தீ பிடிக்கும் காரணங்களையும், அதை அணைக்கும் முறைகளையும் பயில்வான். எப்பொழுதாவது வீட்டின் எந்த மூலையிலாவது ஏதாவது கருகும் வாசனை வந்தால் பரபரப்படைவான். அங்குமிங்கும் சென்று

கவனிப்பான். அதாவது, தீ பிடிக்க வாய்ப்பில்லாத நிலையிலும் அவன் உணர்ச்சிக் கோளமாக இருப்பான்.

சத்வ குணம் கொண்டவன் வீடு வாங்கியபின் தீயைப் பற்றி சிந்தனை செய்யமாட்டான். சாதாரணமாக தீ பிடிக்காது என்று அறிந்துள்ள அவன் அப்படி ஒரு நிலைமை வந்தால் அது பற்றிய விசேஷப் பயிற்சி பெற்றவர்கள், அனுபவஸ்தர்கள் வந்து உதவுவார்களென அமைதியாக இருப்பான்.

மனிதன் தன்னைச் செயல்புரிபவனாகவே, கர்த்தா என்றே நினைக்கிறான். ஆனால் மனத்தின் ஆழத்தின் ஒரு மூலையில் தன் செயலால் காரியங்கள் நடைபெறுவதில்லை என்னும் எண்ணமும் பதுங்கியிருக்கிறது. ஏனெனில் சில பணிகளில் நீ எவ்வளவோ முயன்றும் தோல்வியையே தழுவுகிறாய். சில சமயம் ஒரு முயற்சியும் செய்யாமல், செய்ய முடியாமல், நீ வீட்டில் சோர்வுடன் படுத்திருக் கையில் கூரையைப் பிய்த்துக் கொண்டு தங்கக்காசு கொட்டுகிறது.

**யூ**த நாட்டு அரசர் ஒருவர், ஜனகரைப் போலவே, எது நடைபெற வேண்டுமோ அது நடந்தே தீரும் என்னும் நம்பிக்கை கொண்டிருந்தார். அவர் அரசாண்ட ஊர் செழிப்பானது. அங்கு ஒரு மனிதன்தான் ஏழையாக இருந்தான். அவன் எதையும் தவறாகவே செய்தான். வாங்கும்போது தவறான பொருளையே தேர்ந்தெடுப்பான். வழி தவறியே அலைவான். மக்கள் கடைத்தெருவில் தங்கள் பொருள் களை சாதகமான நேரம் பார்த்து அதிக விலைக்கு விற்பார்கள். இவனோ அப்போதுதான் வாங்கும் வேலையில் ஈடுபடுவான்.

அமைச்சர்கள் இதைக் கவனித்து அவன் மீது இரக்கப்பட்டனர். அவர்கள் அவனைப் பற்றி அரசரிடம் தெரிவித்தார்கள். "இவனுக்கு விதி தலைகீழாக இருக்கிறது. ஏனெனில் இவனுக்குக் கோணல் புத்தியாக உள்ளது. மற்றவர்கள் உழைக்கும்போது இவன் குறட்டைவிடுவான். மற்றவர்கள் பணம் சம்பாதிக்கப் பாடுபடுகையில் இவன் கைகட்டி வேடிக்கை பார்ப்பவன். மற்றவர்கள் வயலில் விதைகள் தூவும்போது இவன் சும்மா உட்கார்ந்திருப்பான். மற்றவர்கள் அறுவடைக்குத் தயாராகையில் இவன் விதையெடுத்துக் கொண்டு வயலுக்குப் போவான்! இவன் மீது கருணை காட்டி, ஊரில் ஏழையாக மிஞ்சியுள்ள இவனைத் தாங்கள் வளம் நிறைந்தவனாக ஆக்கவேண்டும்," எனக் கேட்டுக் கொண்டார்கள்.

அரசர் அமைதியாகச் சொன்னார், “அது நம் கையில் இல்லை. நீங்கள் கேட்டுக்கொள்வதால் நாம் ஒரு முயற்சி செய்வோம்.”

அவனுடைய நடவடிக்கைகளைக் கவனித்த ஒற்றர்கள் அவன் தினமும் ஒரு பாலத்தின் வழியாக வீடு திரும்புவதாக அரசருக்குத் தெரிவித்தனர். ஒருநாள் அவன் வழக்கமாக வரும் நேரத்திற்குச் சில நிமிடங்கள் முன்பாக மக்கள் போக்குவரத்தைத் தடைசெய்து பாலத்தை காலியாக வைத்திருக்கச் சொன்னார். அமைச்சரை அழைத்து ஒரு பையில் தங்கக் காசுகள் நிரப்பி, பாலத்தில் பாதையின் நடுவில் போட்டுவைக்க ஏற்பாடு செய்தார். அவரும் அமைச்சரும் பாலத்தின்கீழ் ஒளிந்து கொண்டு அவன் வருவதைக் கவனித்தனர்.

பாலத்தின் ஆரம்பம்வரை ஒழுங்காக வந்தவன் பாலத்தில் காலடி வைத்ததும் முண்டாசால் கண்களைக் கட்டிக் கொண்டான்! தட்டுத்தடுமாறி முன்னேறலானான். கண்ணைக் கட்டிக் கொண்டு பாதையின் நடுவில் நடந்தால் ஏதாவது தடுக்கி கீழே விழுந்து விடுவோம் என்று அவன் அஞ்சினான். பாலத்தின் சுவரைப் பிடித்துக்கொண்டு ஓரமாகவே நடந்து அப்படியே பாலத்தைக் கடந்துபோய்விட்டான்! பாலப் பாதை காலியாக இருந்தது அவனுக்குத் தெரியாதே.

அரசர் அவனைப் பிடித்துவரச் சொன்னார். அவன் பாலம் முழுவதும் ஏன் கண்களைக் கட்டியபடி கடந்தான் என்று விசாரித்தார்.

“அரசே! வாழ்க்கையில் ஒரு தடவையாவது கண் திறக்காமல் இந்தப் பாலத்தைக் கடந்துபார்க்க ஆசைப்பட்டேன். ஆனால் எப்போதும் மக்கள் நடமாட்டமும் போக்குவரத்துமாக இருந்ததால் இதுவரை முயற்சி செய்யவில்லை. இன்று ஏனோ பாலத்தில் ஈ-காக்கை காணோம். ஆகவே கண்களைக் கட்டிப்போட்டு நடந்தேன். பாவம், நிஜமாகவே பார்வையற்றவர்கள் எப்படிச் செல்கிறார்கள் என்பதை ஒரு சிறிய அனுபவம் மூலம் பெற விரும்பினேன்,” என்று அவன் காரணம் தெரிவித்தான்.

அரசர் அமைச்சரைக் கடைக்கண்ணால் நோக்கினார். அமைச்சர் அன்று வாழ்க்கையில் ஒரு பாடம் கற்றுக் கொண்டார்-‘எது நடைபெற்றாக வேண்டுமோ, அது நடந்தே தீரும்.’ அகங்காரத்திற்கு

நேர் எதிரானது இந்தக் கொள்கை. அகங்காரத்தை விட்டவனின் சிந்தனை பின்வருமாறு இருக்கும்:

**எனது லட்சியத்தை நிச்சயிப்பவன் நானல்லன்**
**எனது பாதையைத் தேர்ந்தெடுப்பவன் நானல்லன்**
**எனது நடையின் வேகம் என் வசமில்லை**
**மேடு-பள்ளங்களைக் கவனிப்பவன் நானல்லன்**
**ஆபத்துகளுக்கு அஞ்சுகிறானே அவன் நானல்லன்**

வாழ்க்கையின் மேற்பரப்பில் மாறி-மாறி விளையாடுவதுபோல் வெற்றி, தோல்வி, சுகம்-துக்கம் என்பவை அலை-அலையாய்ப் பரவுகின்றன. ஆனால் ஆழ்மனத்தில், ஆத்ம உலகில் கடவுள் நம் புஜத்தைப் பற்றியிருப்பதால் அமைதியே நிலவுகிறது.

மனிதன் முரண்பாடுகளின் உருவம். ஒரு தளத்தில் அவன் 'நான்தான் எல்லாம் செய்பவன்' என்னும் இறுமாப்புடன் இருக்கிறான். திடீரென அச்சம் மேலிடுகிறது. தனக்குள் ஆழத்தில் இருக்கும் ஏதோ ஒரு சக்தியை அலட்சியப்படுத்தக் கூடாது என்று உணர்கிறான். சூழ்நிலை காரணமாக அதை அவன் வெளிப்படையாகச் சொல்ல முடிவதில்லை. இந்த தர்மசங்கடமான நிலையில் சிலர் ஒடிந்து போகிறார்கள்.

இதிலிருந்து தப்பவே மேற்கத்திய நாட்டு மக்கள் 'கடவுள் நம்மைக் காப்பாற்றுவார், பள்ளத்தில் விழுந்தால் கைதூக்கிவிடுவார்' என்றெல்லாம் ஒப்புக் கொள்வதில்லை. ஏனெனில் கடவுள் தலையிடுபவர் அல்லர் என்பது அவர்களின் வாதம். வேறு சிலர் உலகத்தைப் படைத்த பிறகு அந்த வெடிப்பில்* கடவுள் இறந்து போய்விட்டார் என்கிறார்கள்! அது புராண காலம். இன்றைய தேதிக்கு, நாம் என்னென்ன வேலைகள் செய்ய வேண்டுமோ அவற்றை நாமேதான் செய்தாக வேண்டும். மனிதன்தான் உலகில் கர்த்தா. வேறு எந்த உயிரினத்திற்கும் இந்தப் பெருமை கிடையாது.

இதனால் மேற்கத்திய நாட்டு மக்களின் சிந்தனை சிக்கலின்றி, சங்கடமின்றி எளிமையாக உள்ளது. 'நான்தான் கர்த்தா' என்று முடிவெடுத்துவிட்டால் பிறகு ஆராய்ச்சிக் குழப்பம் எல்லாம்

* அண்டப் பெருவெடிப்பு. பத்து பில்லியன் ஆண்டுகள் முன் அளவு கடந்த வெப்பத்தால் பிரபஞ்சம் வெடித்தது என்னும் கோட்பாடு big bang theory.

தேவைப்படாது. ஜனகரின் சிந்தனையும் தெளிவாக இருக்கிறது. அவர் 'நான் சாட்சி மட்டுமே, கர்த்தா இல்லை' என்கிறார். நடுவில் உள்ள நிலைமைதான் பிரச்சினையானது. கீழ்திசை நாடுகளின் மக்கள், குறிப்பாக இந்தியர்கள், ஒரு தளத்தில் சாட்சி தத்துவத்தை நம்புகிறார்கள். மற்றொரு தளத்தில் தாங்கள் கர்த்தாக்கள் என்று நம்புவதையும் அவர்களால் நிறுத்த முடியவில்லை. இதனால் மனத்தில் ஒரு துவந்த யுத்தம் நிகழ்ந்தபடி உள்ளது.

ஐரோப்பியர்கள் என்னைச் சந்தித்துப் பேசுகையில் நான் அவர்களிடம் ஒருவிதமான எளிமையும் தெளிவும் தென்படுவதைக் காண்கிறேன். அவர்கள் இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு-எப்பொழுதுமே நான்கு-என்பார்கள். ஆனால் இந்தியன் சில சமயம் ஐந்து என்பான் அல்லது மூன்று என்றும் கூறுவான். ஏனெனில் அவனது சிந்தனை ஒரு சிக்கலில் அகப்பட்டுக் கொண்டுள்ளது. அவன் மகாசத்திய சித்தாந்தம் பற்றி அறிந்திருக்காவிடிலும் கேள்விப்பட்டிருக்கிறான். பாரத நாட்டில் மகாசத்தியம் அறிவிப்பு பலமுறை நிகழ்ந்துள்ளது. புத்தர், மகாவீரர், கிருஷ்ணர், அஷ்டாவக்ரர் என்றெல்லாம் பலர் மகாசத்தியத்தை அறிவித்துள்ளனர். இந்த பாரம்பரியம் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகத் தொடர்கிறது. அந்த தெய்வீக புருஷர்கள் நம் ஆழ்மனத்தில் அழிக்க முடியாத முத்திரை பதித்துச் சென்றுள்ளனர். அவர்களின் ஞானக் குரல் இப்பொழுதும் எதிரொலிக்கிறது. அவர்கள் விடுத்த செய்தி நமது ரத்தத்தில் கலந்துள்ளது. ஆனால் அதே சமயம் நமது அகங்காரமும் நம்மை விட்டு அகலவில்லை. அந்த அகங்காரம் நம்மிடம் இருப்பதையும் நாம் உணர்ந்தே இருக்கிறோம். நமது மனம் இந்த இருவிதமான பாதிப்புகளால் பிளவுபட்டிருக்கிறது.

கிழக்கத்திய நாடுகளின் மனிதன் தந்திரசாலியாக இருக்கிறான். ஐரோப்பிய நாட்டு மனிதன் ஒரு விஷயத்தில் குழப்பமற்றவனாக உள்ளான். 'நான்தான் எல்லாம் செய்பவன்' என்னும் கண்ணோட்டத்தில் அவன் உறுதியாக உள்ளான். இந்தியன்-ஹிந்து-முடிவுக்கு வரமுடியாமல் தள்ளாடுகிறான். அவனது படகு முன்னும் பின்னுமாக அலைக்கழிக்கப்படுகிறது. அவனது மாட்டுவண்டி இரு பக்கமும் மாடு பூட்டிய விசித்திரமான வண்டி. இம்மாதிரியான வண்டியில் பயணிப்பதால் அவன் மிகுந்த வேதனைக்குள்ளாகிறான்.

சராசரி இந்தியனிடம் நேர்மை கிடையாது. ஒரு வேலையில் வெற்றி பெற்றால் தன் திறமையால்தான் வெற்றி கிடைத்தது என்று மார்தட்டிக் கொள்வான். ஒரு வேலையில் தோல்வியடைந்தால், 'என் தலைவிதி அப்படி எழுதியிருக்கிறது' என்று விதியை நொந்து கொள்வான். நடப்பது நடந்தே தீரும் என்று தோல்வியின்போது சமாதானம் கூறும் அவன் மற்ற சமயங்களில் இதை நினைவில் கொள்வதில்லை. நான் நினைத்தால், 'நான் ஆணையிட்டால் அது நடந்துவிடும்' என்று முழங்குவான்.

'யோகியும் உடல்பற்று உடையவன். செய்தல்-செய்யாமலிருத்தல் என்னும் தளைகளால் அவனும் கட்டப்பட்டிருக்கிறான். ஆனால் நானோ உடலுடன் உறவு-பிரிவு என்பனவற்றிலிருந்து முற்றிலும் விலகியிருப்பதால் சுகமாக ஆத்மாவில் லயித்திருக்கிறேன்' என்கிறார் ஜனகர். **(சுலோகம் 118)**

**போ**கிக்குத்தான் தேகத்தின் மீது பற்று இருக்கும்; யோகிக்குமா அப்படி என்ற கேள்வி எழலாம். யோகியும் இந்த விஷயத்தில் விதிவிலக்கில்லை. இந்த இருவகையினரின் பற்றுகள் வெவ்வேறு விதமானவை. ஆனாலும் பற்று பற்றுதான். போகி உடலால் சுகமாக வாழ்வதற்காக ஆடம்பரப் பொருள்கள் வாங்குவதில் கவனம் செலுத்துகிறான். படுப்பதற்கு வெல்வெட்டு மெத்தை வேண்டுமென ஆசைப்படுபவன் அவன். யோகி உடலை வலுவாக்க, ஆரோக்கியமாக இருக்க, அதன் மூலம் வாழ்க்கையில் சுகமாக இருக்க விரும்புகிறார். இதற்காக அவர் சித்தாசனம் முதலிய பல ஆசனங்கள் பயில்கிறார். ஹடயோகம் கற்கிறார். சுவாசப் பயிற்சி மேற்கொள்ளுகிறார். இந்த இரு வகையினரின் நடவடிக்கைகள் உடலுடன்தான் சம்பந்தப்பட்டுள்ளன. யோகியின் முயற்சி உயர்தரமானது. ஆனால் அடிப்படையில் இருவருக்குமிடையே வேறுபாடில்லை.

யோகி என்றால் கருமத்தைக் கைவிட்டவர். போகி என்றால் கருமத்தில் சிக்கிக் கொண்டவன். ஆனால் இரண்டின் அடிப்படையும் கருமம்தான். அது வெளிப்படும் விதம்தான் வேறு. ஜனகர் கருமம்-அகருமம் இரண்டின் பாதிப்பிலிருந்தும் தாம் விடுபட்டவர் எனத் தெரிவிக்கிறார். இதன் காரணமாகவே அவர் காரியங்கள் செய்தபடியே சுகமாக இருப்பதாகக் கூறுகிறார். 'நான் செய்கிறேன்-நான்

செய்யவில்லை என்னும் இரு நிலைகளையும் நான் கடந்துவிட்டதால், எனக்குரிய கடமைகளைச் செய்தாலும் அவற்றின் விளைவு என்னைப் பாதிப்பதில்லை' என்கிறார்.

'நான் ஓரிடத்திலேயே இருந்தாலும், அங்குமிங்கும் அலைந்தாலும், தூங்கியே போனாலும் பாதிப்படைவதில்லை. கருமங்கள் செய்தாலும், செய்யாவிடிலும் ஏற்படும் நல்ல-தீய விளைவுகள் என்னைப் பாதிப்பதில்லை. தூக்கம் வந்தால் உறங்குகிறேன். எழுந்து நடமாட வேண்டுமானால் அவ்வாறே செய்கிறேன். உட்கார வேண்டும் போலிருந்தால் உட்கார்ந்து விடுகிறேன்.' **(சுலோகம் 119)**

**ஜென்*** சம்பிரதாய ஞானிகள் இம்மாதிரியேதான் எப்போதும் சொல்லி வருகிறார்கள். உதாரணமாக, போகோஜூ என்ற ஜென் ஞானியிடம் ஒருவர், "தங்களது சாதனை முறை எத்தகையது? தாங்கள் தியானம், பிராணாயாமம், யோகாசனம், பூஜை ஆகிய எதையும் செய்வதில்லை. பிறகு எப்படித்தான் வழிபடுகிறீர்கள்?" என்று கேட்டார்.

ஞானி சொன்னார்: "தூக்கம் வரும்போது உறங்கிவிடுவேன். பசிக்கும்போது சாப்பிடுகிறேன். நடக்கத் தோன்றினால் நடக்கிறேன். உட்கார வேண்டும் போலிருந்தால் அமர்ந்து விடுகிறேன். இதுதான் எனது சாதனை முறை," என்று தெரிவித்தார்.

கேள்வி கேட்டவர் ஆடிப்போயிருப்பார். அஷ்டாவக்ரரும் ஜனகர்மூலம் இதைத்தான் சொல்கிறார். அதாவது, நானாகத் தேர்ந்தெடுப்பது எதுவுமில்லை.

**ஓ**ர் இளைஞனைச் சிலர் என்னிடம் அழைத்து வந்தார்கள். அவனுக்கு மூளைக் கோளாறு வளர்ந்து வருவதாகத் தெரிவித்தார்கள். அவன் கல்லூரி மாணவன். நான் அவனிடம், "உனக்கு என்ன பிரச்சினை? உனக்கு மனக் குழப்பம் அதிகமாக உள்ளது என்கிறார்களே," என்று பரிவுடன் விசாரித்தேன்.

---

* **Zen** என்பது புத்தமதத்தின் முக்கியமான ஒரு பிரிவு. சீனாவில் கி.பி.6ஆம் நூற்றாண்டில் தோன்றியது. கி.பி.12ஆம் நூற்றாண்டில் ஜப்பானில் முழுவளர்ச்சி பெற்றது. மாற்றி யோசித்துச் செயல்படுவதால் ஞானம் பெறலாம் என்பது இதன் அடிப்படை.

அவன் சொன்னான்: "ஐயா, நான் இமயமலையில் பெரும் புகழுடன் வாழ்ந்த ஒரு சுவாமிஜியின் தீவிரமான சீடன். அவர் காலமாகிவிட்ட போதிலும் அவருடைய நூல்களைப் படித்து யோகசாதனை செய்து வருகிறேன். அவர் சாதகன் ஐந்து மணி நேரத்துக்குமேல் தூங்கக்கூடாது என எழுதியிருப்பதால் அதிகாலை மூன்று மணிக்கே எழுந்துவிடுகிறேன். இதனால் பகலில் தூக்கம் வருகிறது. பகலில் தூக்கம் வந்தால் தாமச உணவு* சாப்பிடுவதாக அர்த்தம் சத்வ உணவாக மாற்றிக்கொள் என்று அவர் அறிவுறுத்தியுள்ளார். எனவே நான் பால் மட்டுமே ஆகாரமாகக் கொள்கிறேன்."

எனக்கு விஷயம் பிடிபட ஆரம்பித்தது. அவன் பாலை மட்டுமே ஆகாரமாகக் கொண்டதால் அவன் பலஹீனமடைந்து மெலிந்து போயிருந்தான். இரவில் குறைந்த நேரமே தூங்கிவந்ததால் உறக்கத்தின் மூலம் உடலுக்கும் மனத்துக்கும் கிடைக்கும் ஓய்வும் அவனுக்குக் கிட்டவில்லை. அப்படியும் அவன் இந்த சாதனை முறையையே தொடர்ந்தான். ஏனெனில் சுவாமிஜி தமது நூலில் அப்படித்தான் சோதனைகளும் அசௌகரியங்களும் வருமென்றும் சாதகன் தடுமாறக் கூடாது என்றும் எழுதியிருந்தாராம்.

ஒரு வலையில் சிக்கிக்கொண்டவன் நிலையில் இந்த இளைஞன் இருக்கிறான். ஆனால் அவனே வலைவிரித்து, தானாகவே அதில்போய் மாட்டிக் கொண்டவன். விடுபட வேண்டும் என்று நினைப்பவனாகவும் தோன்றவில்லை. ஆன்மிகம் என்றால் இப்படித்தான் இருக்குமென அவன் கருதிவிட்டான்.

எல்லோருக்கும் ஐந்து மணி நேரம் போதாது. கிழவர்களுக்குப் போதுமானதாக இருக்கலாம். முதுமையில் தூக்கம் குறைவாகத்தான் வரும். முதுமையில்தானே சாஸ்திரங்கள் எழுதப்படுகின்றன. ஆகவே முதுமைக் கால அனுபவத்தின்படி எழுதிவிடுகிறார்கள். முதுமையில் உணவும் அதிகமாகச் சாப்பிட முடிவதில்லை. இப்பருவத்தில் பால் நல்ல ஆகாரமாகப் பயன்படும். இதனால்தான் முதுமையை இரண்டாவது குழந்தைப் பருவம் என்கிறோம். வயோதிகரின் வாழ்க்கையும் குறுகிய எல்லைக்குள் அடங்கிவிடுகிறது. வயோதிகர்

* ஆறிப்போனது, சுவையிழந்தது, புளித்துப்போனது, பழையது, உண்டு மிஞ்சியது, பூஜைக்கு உதவாதது என்னும் நிலையிலுள்ளது தாமச உணவு. (பகவத்கீதை 17:10)

புதிதாக எதுவும் நிர்மாண வேலை செய்யப் போவதில்லை. எனவே பால்போதும்.

சிசு தாயின் வயிற்றில் இருபத்து நான்கு மணி நேரமும் தூங்குகிறது. அது ஐந்து மணி நேரம்தான் தூங்கலாம் என்றால் அதன் வளர்ச்சி என்ன ஆகும்? பிறந்த பிறகும் அது இருபத்திரண்டு மணி நேரம் உறக்கத்திலேயே உள்ளது. பிறகு தூங்கும் நேரம் படிப்படியாகக் குறைந்து இளைஞனாகும்போது எட்டு மணி நேரம், நடுவயதில் ஏழு மணி நேரம் என்றாகிறது. இதெல்லாம் இயற்கையாக நடைபெறுபவை. வயோதிகம் மேலிட்டதும் குறைவாகத்தான் தூக்கம் வரும். உடலில் சேதமடைந்த திசுக்களைப் புதுப்பித்தல் உறக்கத்தினால் கிடைக்கும் பலனாகும். ஆனால் முதியோர் உடலில் திசுக்கள் மீண்டும் உருவாவதில்லை. ஆகவே தூக்கக் குறைவால் பாதிப்பில்லை.

சிசு தாயின் வயிற்றில் நாள் முழுதும் ஆழ்ந்து தூங்குவதால் அதன் உடல் உருவாவதற்குத் தேவையான நூற்றுக் கணக்கான பணிகள் நடைபெற முடிகிறது. உறக்கம் என்னும் இருண்ட நிலை வளர்ச்சிக்குத் தேவை. பூமிக்கு அடியில் இருட்டில்தான் விதை வளர்ந்து செடியாக மேலே வருகிறது. விதையை அப்படியே வெளிச்சத்தில் ஒரு பாறைமேல் போட்டுவிட்டால் வளருமா? வளர்ச்சிக்கு இருட்டு தேவை; ஆழ்ந்த தூக்கம் தேவை; ஓய்வு தேவை.

இந்த இளைஞன் வேண்டுமென்றே தன் தூக்கத்தைக் குறைத்துக் கொண்டவன். இது ஒரு முரண்பாடு. கிழவர்களுக்கு இயற்கையாக, சுபாவமாகவே, படிப்படியாகத் தூக்கம் குறைந்து விடுகிறது. இது இயற்கையானது என்பதைப் புரிந்து கொள்ளாமல் கலவரப்படுகிறார்கள். சிலர் என்னிடம் வந்து, "சுவாமிஜி, முன்பெல்லாம் நாங்கள் எட்டு மணி நேரம் தூங்கினோம். இப்போதோ மூன்று மணி நேரம்தான் தூங்க முடிகிறது. மிகவும் கவலையாக உள்ளது. 'இன்ஸாம்னியா' வால் (உறக்கமின்மை நோயால்) பீடிக்கப்பட்டுள்ளதாக நினைக்கிறோம்," என்னகிறார்கள்.

இது நோயில்லை. முதுமையின் வழக்கமான அறிகுறிகளில் ஒன்றுதான். முதுமையில் விரும்பினாலும் எட்டு மணி நேரம் தூங்க முடியாது; வயிறு புடைக்கச் சாப்பிட முடியாது. இவற்றிற்கான தேவையும் எழாது.

என்னைச் சந்தித்தவனோ இளைஞன். வளர்ந்து வருபவன். சரியாகத் தூங்காததாலும், வயிறு நிறையச் சாப்பிடாததாலும் மனக்குழப்பம் ஏற்பட்டுள்ளது. அவனோ இவற்றை ஞானப் பாதையில் தடுமாற வைத்துப் பின்வாங்கச் செய்யும் சோதனைகள் என்று நினைத்துவிட்டான்.

ஜனகரின் கருத்து மதிப்பு மிக்கதாகும். அவர் கூறுவது- 'நான் பல வேலைகளைச் செய்து வருகிறேன். உடலின் இயக்கங்களையும் தவிர்க்கவில்லை. என்ன நடைபெறுகிறதோ, அது எந்த அளவிற்கு நடைபெறுகிறதோ, அதனுடன் நான் ஒத்துப் போகிறேன். லாபம்-நஷ்டம் என்று பிரித்துப் பார்ப்பதில்லை. தானாக வந்துசேரும் எப்பணியையும் தவிர்க்காமல் செய்வதால் சுகத்தில் தோய்கிறேன்.'

ஜனகரின் சொற்களில் சமர்ப்பண உணர்வு தெரிகிறது. அஷ்டாவக்ரர்தான் ஜனகரின் உள்ளத்தில் ஒளியெழுப்புகிறார். குருதான் சீடரிடம் பேசுகிறார். அவர்தான் சீடரின் உள்ளத்தில் சிந்தனை அலைகளை எழுப்புகிறார். அஷ்டாவக்ரர் இடையிடையே தமது உபதேசத்தை நிறுத்திவிட்டு ஜனகரைப் பேச விடுவதுபோல் தோன்றுகிறது. அஷ்டாவக்ரரின் உபதேசம் ஜனகரின் மனவயலில் விதையாக நடப்பட்டு, பிறகு ஜனகரின் வார்த்தைகளின் மூலம் மலராக வெளிப்படுகிறது. ஆகவே ஜனகரின் வார்த்தைகள் கூடுதலான அழகு பெற்றுள்ளன. ஆனால் எல்லா சுலோகங்களுமே அடிப்படையில் அஷ்டாவக்ரரின் படைப்புகள்தாம். எனினும் ஜனகரின் சொற்களைக் கேட்டு அஷ்டாவக்ரர் பேரானந்தம் அடைந்திருப்பார். குருவுக்கேற்ற சீடன் மட்டுமல்ல, குருவை விஞ்சிய சீடன் என அவர் ஜனகரைப் பற்றி பெருமையாக நினைத்திருப்பார்.

**ஹ**ஸீத் என்றொரு துறவி. புகழ்பெற்ற அறிஞர். ஞானி. மனசாட்சிக்கு துரோகம் செய்யாதவர். தமது ஐம்பதாவது வயதில் அவர் நாத்திகராகிவிட்டார். அதை அவர் மறுக்கவோ, மறைக்கவோ இல்லை. இதுவரை அவரிடம் ஆத்திக உபதேசம் பெற்றுப் பலர் ஆன்மிகத்தில் உயர்ந்த நிலையை அடைந்திருந்தனர். அவர்கள் நாத்திகராகிவிட்ட ஹஸீத்துடனான தொடர்பைத் துண்டித்துக் கொண்டனர். ஒரு சீடன் மட்டும் விலகவில்லை. பெயர் ரபி மேயர்.

மேயர் அடிக்கடி குருவிடம், "பழைய பாதைக்குத் திரும்பி விடுங்கள். மீண்டும் ஆத்திகராகி விடுங்கள்," என்று கெஞ்சுவான்.

முற்காலச் சீடனாயிற்றே. அவன் குருவுடன் ஆத்திக-நாத்திக விவாதம் செய்ய விரும்பவில்லை.

ஒருநாள் அவன் குருவிடம், "இனிமேல் ஆத்திகத்திற்குத் திரும்பினாலும் இதுவரை நாத்திகராக இருந்ததற்காகக் கடவுள் கோபமாக இருக்கமாட்டாரா என்று நினைக்காதீர்கள். அவர் யாரையும், எதையும் மன்னிப்பவர்," என்பதைச் சுட்டிக் காட்டினான். அப்போது நோயால் படுத்திருந்த குரு, "இப்பொழுது கூடவா கடவுளால் என்னை மன்னிக்க முடியும்?" என்று கேட்டார் உடனே இறந்துபோனார்.

அவரைப் புதைத்த இரண்டாம் நாள் மக்கள் சீடனிடம் ஓடிவந்தார்கள். "கடைசியில் நாங்கள் பயந்தபடியே நடக்கிறது. உன் குருவின் கல்லறையிலிருந்து நெருப்பு எழுகிறது. இங்கேயே அவருக்கு நரக தண்டனை தொடங்கிவிட்டதுபோல் தெரிகிறது" என்று தெரிவித்தனர்.

மேயர் கல்லறைக்கு விரைந்து ஓடி ஒரு கம்பளியைப் போர்த்தி மானசீகமாகப் பேசினான். "குருவே, போதும் உங்கள் புரட்சி. கடைசி நேரத்திலும் பிடிவாதமாக இருக்காதீர்கள். இரவு முழுதும் அமைதியாகக் கடவுளை தியானம் செய்யுங்கள். அவர் மன்னித்து உங்களுக்கு மோட்சம் தருவார். நாளை காலைக்குள் தீயும் வெப்பமும் அடங்கி அதனால் உங்களுக்கு மோட்சம் கிடைத்துவிட்டது என்று தெரிந்து கொள்வேன். அப்படி நடைபெறாவிடில் நானே உங்களுக்கு மோட்சம் வழங்கிவிடுகிறேன்," என்று அறிவித்தான்.

விண்ணிலிருந்து குரல் கேட்டது, "மேயர், நீ சரியாகத்தான் சொல்கிறாயா? எங்காவது சீடன் ஒருவன் தன் குருவிற்கு முக்தியளிக்க முடியுமா?"

"ஏன் முடியாது? என்ன இருந்தாலும் நான் இந்த குருவின் நிழல்தானே. நான் சுத்தமானவனாக இருக்கிறேன். என் குரு அசுத்தமடைந்தவர் இல்லை என்பது தெளிவாகிறது. இவர் பின்னர் நாத்திக வழியில் சென்றாலும் ஆத்திகத்தில், ஆன்மிகத்தில் எனக்கு ஞான விழிப்புக் கொடுத்தவர் இவர்தான். இதனால் என்னிடமும் விசேஷமான வலிமை உள்ளது. ஆகவே கடவுளின் கருணை வற்றிப்போய் இன்று இவருக்கு முக்தி தராவிடில், நாளை நான் வந்து

இவரது எரியும் ஆத்மாவை சாந்தப்படுத்தி முக்தி வழங்குவேன்," என்று ஆகாயத்தைப் பார்த்துப் பதிலளித்தான்.

ஒரு சீடன் ஞானமுதிர்ச்சி அடைந்தால் அவன் குருவிற்கு மோட்சம் கிடைக்கிறது. பல சீடர்கள் ஞான விழிப்புப் பெற்றால் குருவிற்கு மீண்டும்-மீண்டும் மோட்சமுண்டு. அவர் தமது சொந்த முயற்சியால் பெற்ற மோட்சம் தனிக் கணக்கு.

'உறக்கத்தின் போதும் எனக்கு இழப்பு இல்லை. நான் பெற்ற சித்தி முயற்சி செய்ததால் கிடைத்ததன்று. ஆகவே நான் லாபம்-நஷ்டம் இரண்டையும் கைவிட்டு சுகத்தில் லயித்துள்ளேன்.' **(சுலோகம் 120)**

**ஜ**னகர் சொல்வது: 'உறங்கும்போதும் நான் முதலில் விழித்திருந்த அதே ஆள்தான். ஆகவே உறக்கத்தால் எனக்கு நஷ்டமேதும் இல்லை. வழி தவறினாலும் வழியைத் தொலைத்தவன் நான்தான். கும்மிருட்டிலும் நான் ஒளியின் அங்கமாகத்தான் உள்ளேன். உலகில் நிலைபெற்று வாழ்ந்தபோதிலும் நான் இறைவனுடன் இணைந்தேதான் இருக்கிறேன்.'

சித்தி அல்லது ஆன்மிக வெற்றி என்பது முயற்சிகளை மேற்கொள்வதால் மட்டும் கிடைத்துவிடுவதில்லை. ஏனெனில் ஆன்மிக வெற்றி வெளியிலிருந்து கிடைக்கும் வஸ்துவன்று. பிறக்கும்போதே நீ ஒரு சித்தன்தான். அதுவே உனது சொரூபம். அதுவே உனது சுபாவம்.

**எனது கனவில் தெரிபவன் நீ**
**எனது விழிப்பிலும் உள்ளாய் நீ**

**வெளிச்சத்தில் வேறெதுவும் என்னைக்**
**கவர்ந்ததில்லை உன்னைத் தவிர**
**எத்தகைய இருட்டும் உன்னை**
**என்னிடமிருந்து மறைத்ததில்லை**
**இரவின் இருட்டில் உள்ளவன் நீயே**
**நீயே உள்ளாய் விடியலின் கிரணமாய்**

**எனது கவனம் உன்னையே நோக்கி**
**எனது லட்சியம் நீயாய் உள்ளாய்**
**எனது அகத்தில் நீ உறைகின்றாய்**
**எனது புறத்தில் தெரிபவன் நீயே**

**உருவங்கள் எடுத்து உலவுகிறாய் நீ**
**ராகமாகி எதிரொலிப்பவன் நீ**
**எனது கண்களில் அமர்பவன் நீ**
**எனது உள்ளத்தில் வாழ்பவன் நீயே**

பௌர்ணமி இரவின் முழுநிலவு ஒன்றே ஒன்றுதான். ஆனால் உலகெங்கும் அதன் பிரதிபலிப்பு தெரிகிறது. சந்திரன்கள் பலவோ என நினைக்கத் தோன்றுகிறது. பாத்திரங்கள், ஏரிகள், கடல், ஆறுகள், குளங்களில் எண்ணற்ற பிரதிபிம்பங்கள் தென்படுகின்றன. அண்ணாந்து பார்த்தால் ஆகாயத்தில் ஒரு சந்திரன்தான் பிரகாசிக்கிறது. பிரதிபிம்பங்களைப் பார்த்து அவையும் சந்திரன்கள்தான் என நீ நினைத்தால் உனக்குத்தான் பிரமை பிடித்துள்ளது எனலாம்.

'தூங்குவதால் எனக்கு இழப்பில்லை. முயற்சிகள் செய்வதால் விசேஷமான வெற்றியில்லை' இவ்வாறு நினைப்பவனுக்கு மனஇறுக்கம் ஏற்படும் சாத்தியமில்லை. படபடப்பு இருக்காது. தியானம், சமாதி ஆகிய இரண்டையும் கடந்த நிலை இது.

'ஆகவே பல்வேறு சூழ்நிலைகளில் சுகம்-துக்கம் நிரந்தரமானவை அல்ல என்பதை அடிக்கடி கவனித்ததால் சுபம்-அசுபம் ஆகிய இரண்டையும் கைவிட்டு ஆத்மசுகத்தில் லயித்துள்ளேன்' என்கிறார் ஜனகர். **(சுலோகம் 121)**

**எ**த்தனையோ தடவை, எத்தனையோ சூழ்நிலைகளில் பார்த்ததன் அடிப்படையில் சுபம்-அசுபம், இன்பம்-துன்பம், லாபம்-நஷ்டம் எதுவும் நிரந்தரமில்லை.

பலமுறை நல்லது செய்து பார்த்தாகிவிட்டது. அறிந்தோ-அறியாமலோ தீமையும் செய்து பார்த்தாகிவிட்டது. எதுவும் நிலைத்து நிற்கவில்லை. நீரின் மேல் இழுக்கப்பட்ட கோடுகள்போல் அவை சட்டென மறைந்துவிட்டன. ஆகவே சுபம் செய்யவேண்டும் என்பதில் எனக்கு ஆர்வம் இல்லை. அசுபம் செய்வதிலும் விருப்பம் இல்லை.. அன்பில், காதலில் சுகம் தெரியவில்லை. வைராக்கியத்தில், பற்றின்மையிலும் நாட்டம் இல்லை. எப்போதும் சுகமே கிடைக்கட்டும் என ஏங்குவதில்லை. ஒருபோதும் துன்பமே கூடாது என்றும் வேண்டிக் கொள்வதில்லை.

எல்லாவற்றையும் கடந்த மனநிலை காரணமாக நான் இப்போது ஆத்மசுகத்தில் லயித்துள்ளேன். இதுவே மோட்சம், நிர்வாணம் என்றெல்லாம் கூறப்படும் நிலை.

**துடிப்பும் இல்லை, துள்ளலும் இல்லை**
**களிப்பும் இல்லை, கண்ணீரும் இல்லை**
**காலநடையுடன் கைகோத்து**
**இந்தப் புயல்கள் கலந்து ஓய்ந்தன.**

காலம் ஓடோடிவிட்டது. குழந்தைப் பருவம் கழிந்தது. இளமை விடைபெற்றுக் கொண்டது. முதுமையும் முடிந்துவிட்டது. உடலின் அலைகள் ஓய்ந்துபோயின. மனத்தின் அலைகள் மறைந்துவிட்டன. இனி புயலெதுவும் எழ வாய்ப்பில்லை.

எல்லாம் கழிந்து முடிந்தபின், சூறாவளிகள் ஓய்ந்தபின், புயல்கள் தரைதட்டியபின் மிஞ்சியிருப்பது நீ மட்டுமே—தத்வமஸி. அதுதான் உண்மையான நீ. அதுதான் உனது பிரம்ம சொரூபம். நீயே பிரம்மம்! நீயே பரமாத்மா!

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! அன்பின் மூலமாக பரமசத்தியத்தை அடைவது சாத்தியமான ஒன்றா?**

அன்பும் சத்தியமும் இருவேறு நிகழ்ச்சியின் இரண்டு முகப்புகள். சத்தியத்தைச் சென்றடை. உடனே அன்பும் வெளிப்படுகிறது. அன்பை அடைந்துவிடு. சத்தியம் அங்கே காட்சி தரும். சத்தியத்தைத் தேடிச்செல். அதன் முகாமைச் சென்றடையும் போது நீ அன்பெனும் ஆலயத்தினுள்ளும் பிரவேசித்து விட்டதை உணர்வாய். சத்தியத்துடன் சேர்ந்து அன்பும் கிடைத்து விடுகிறது. அல்லது அன்பை அடையப் பயணம் தொடங்கு. நீ அன்பெனும் கோயிலைச் சென்றடைந்ததுமே சத்தியமும் உனக்குக் கிடைத்துவிடும். அவை அருகருகே உள்ளன. பேரன்பும் பரம சத்தியமும் ஒரே பரமாத்மாவின் இரண்டு பெயர்கள்தான்.

உலகில் இந்தத் தேடலில் ஈடுபடுவோர் இருவகையினர். ஒரு வகையினருக்கு சத்தியத்தைத் தேடிப் பெறுவது சுலபமாக இருக்கிறது. அதன் பின்விளைவாக அன்பு கிடைத்து விடுகிறது. சிலருக்கு அன்பைப் பெறுதல் எளிதாக உள்ளது. அவர்களுக்கு அதன் பின்விளைவாக சத்தியம் கிடைக்கிறது. ஆகவே ஞானமும் பக்தியும் ஆன்மிகத்தின் இரண்டு மூல வழிகள் என்று கூறப்படுகின்றன. இதேபோல் ஆணும் பெண்ணும் மனித இனத்தின் இரண்டு மூலப் பிரிவுகளாவர்.

நான் இங்கு ஆண்-பெண் என்று கூறுவது வழக்கமான உடலமைப்பின் அடிப்படையில் அல்ல. எத்தனையோ ஆண்களிடம் பெண்களின் இயல்பான அன்பு நிறைந்து விளங்குகிறது. எத்தனையோ

பெண்களிடம் சத்தியத்தை தேடக்கூடிய அளவு உறுதியான தர்க்க அறிவு இருக்கிறது. முதலில் நீ, பிறப்பால் ஆணோ-பெண்ணோ, மன அமைப்பால் எத்தகையவன் என்று அடையாளம் கண்டுகொள். பிறகு கடவுளை அடையாளம் காண முயலலாம். உனக்கு ஒத்துவராத பாதையில் நீ செல்ல வேண்டாம். அன்பு வழியோ, சத்திய வழியோ, உனக்கு எது இயல்பாக இருக்கிறதோ, அந்த வழியையே கடைப்பிடி.

சத்தியத்தைத் தேடுதலில் இறுதிக் கட்டத்தை அடைகையில் 'நீ' என்பவன் நீங்கிவிடுகிறான். திடீரென 'நான்' என்பது புதிய அர்த்தத்தில் வெடிக்கிறது. அஹம் ப்ரம்ம அஸ்மி—நான் பிரம்மமாய் (பரமாத்மாவாக) இருக்கிறேன். அதாவது என்னைத் தவிர வேறு தனியாக பிரம்மம் கிடையாது. சத்தியத்தின் தேடலில் நான் என்னும் பிரம்ம உணர்வைத் தவிர, மற்ற தொடர்புகளிலிருந்து விடுபட வேண்டும்.

ஒரு விஷயம் கவனி. சத்தியத்தைத் தேடுவதற்கு எது உபாயமாக அமைகிறதோ அதுவே அன்பைத் தேடும் முயற்சியில் தடையாக்க் குறுக்கிடும். இதையே மாற்றி, அன்பைத் தேடுவதில் உபாய மாக அமைவது சத்தியத்தைத் தேடும்போது முட்டுக்கட்டையாகிவிடும். இந்த இரண்டு வழிகளும் வெவ்வேறு திசையிலிருந்து தொடங்கு கின்றன. ஆனால் இந்த இரண்டின் போய்ச்சேரும் இலக்கு ஒன்றேதான்.

உதாரணமாக, ஒருவன் இந்தியாவை அடைய மேற்கிலிருந்து கிளம்புகிறான். இன்னொருவன் இந்தியாவை அடையக் கிழக்கிலிருந்து புறப்படுகிறான். தெளிவாகச் சொல்வதானால் இந்தியாவை அடைய இங்கிலாந்துக்காரன் கிழக்கு திசையில் பயணிக்க வேண்டும். ஜப்பான் நாட்டவனாயின் மேற்காகப் பயணிக்க வேண்டும். இருவரும் இந்தியாவிற்கு வருகிறார்கள். இருவரும் ஒரே இலக்கை அடைவார்கள். ஆனால் புறப்பட்ட இடமும் பயண திசையும் வெவ்வேறு.

சத்தியத்தைத் தேடுபவன் 'நீ' என்னும் உணர்வை வீழ்த்தி விடுகிறான். நான் ஆத்மா-நீ பரமாத்மா என்று பிரிப்பதைவிட்டு, நான் பரமாத்மா என்கிறான். அப்போது பர (அந்நிய) ஆத்மா எப்படி இருக்க முடியும்? அனைத்து தேசத்தவரும் நான்தான் என்றால் பரதேசி (அந்நிய நாட்டினன்) என்று தனியாக எவன் இருக்க முடியும்?

ஆகவே தன்னிலிருந்து வேறுபட்ட தனியானதொரு கடவுள் உண்டு என்பதை மகாவீரரும் புத்தரும் ஒப்புக் கொள்ளவில்லை. 'நானே கடவுள்' என்றுதான் அவர்கள் நினைத்தனரேயொழிய, கடவுளே கிடையாது என்று அவர்கள் சொன்னதாக அர்த்தம் எடுத்துக் கொள்ளக்கூடாது. தன்னிலிருந்து வேறுபட்ட ஒன்றை (பர ஆத்மாவைக்) கடவுளாகக் கொண்டால், அவருடைய திருவடிகளில் வழிபட வேண்டும்; அர்ச்சனை செய்ய வேண்டும்; படையல் சமர்ப்பிக்க வேண்டும். ஆகவே புத்தரும் மகாவீரரும் தனி உருவம் கொண்ட கடவுள் உண்டென்பதை மறுக்கிறார்கள்.

பதஞ்சலியும் தனியானதொரு கடவுளைத் தயக்கத்துடன்தான் ஏற்கிறார். அந்த ஏற்பிலும் மறுப்புத் தெரிகிறது. ஆனால் இந்தக் கோட்பாடு சத்தியத்தை அடைவதற்காக ஓர் உபாயமாகும். ஒரு விதியாகும். இந்தக் கோட்பாடு அவசியமோ, கட்டாயமோ இல்லை. கடவுள் உண்டா-இல்லையா என்று யோசிக்க வேண்டியதில்லை. கடவுள் உண்டென்பது சத்தியத்தைத் தேடுவதில் உபயோகமாக இருக்கிறது.

ஞானிகள் எல்லோருமே ஏதோ ஒருவகையில், அவர்கள் அறியாமலே கூட கடவுளை மறுத்துள்ளனர். ஆதிசங்கரர் ஈஸ்வரனையும் மாயையின் அங்கம் என்கிறார். 'நான் பிரம்மம்' என்னும்போது எந்த இடைவெளியும் இல்லை. ஆனால் கோயிலில் சிலையாக வீற்றுள்ள கடவுள் அவர் மாயையின் ஓர் உருவம்தான். அவர் உலகம் சார்ந்தவர். உலகமோ நமக்கு வெளியிலிருப்பது (பர). இந்நிலையில் நீ கோயிலுக்கோ, கடைக்கோ, கடைத்தெருவிற்கோ எங்கு வேண்டுமானாலும் போ ஒரு வித்தியாசமும் கிடையாது. உன்னிலிருந்து நீ வெளியேறினால் நீ உலகத்தில்தான் இருப்பாய். கோயிலும் கடைகளும் உலகத்தின் அங்கம்தான்.

சத்தியத்தைத் தேடுபவன் 'உன்னிலிருந்து அன்னியமாக உள்ளதை (பர) மறந்துவிடு' என்று கட்டளையிடுகிறான். பெண்ணை, பணத்தை மட்டுமல்ல, கடவுளை அடையவும் மக்கள் ஓடிக்கொண்டே இருக்கிறார்கள். சத்தியத்தைத் தேடுபவன் கண்டிக்கிறான். 'ஓடாதே, நில். நீ அடைய விரும்பும் கடவுள் உனக்குள்ளேயேதான் அமர்ந் திருக்கிறார்,' என்று தடுக்கிறான்.

அஷ்டாவக்ரரின் மார்க்கம் சத்தியத்தின் பாதைதான். ஆகவே அவர் சாட்சி மனப்பான்மையை வலியுறுத்துகிறார். நீ சாட்சி மனப்பான்மையை வளர்த்துக் கொண்டால் உனக்கு வெளியே உள்ள எதுவும் உன்னைப் பாதிக்காது. நீ உன்னையே வணங்கும் சூழ்நிலை ஏற்படும். ஏனெனில் உனக்கு வெளியே யாரும் மிஞ்சியிருக்க வில்லையே. வேறு யாரை நீ வணங்குவாய்?

அன்பைத் தேடிச் செல்பவன் இதற்கு எதிரான வழியில் நடைபோடுவான். அவன் சொல்வான்: 'நீ உன்னையே இல்லாதவன் போல் ஆக்கிக்கொள்ள வேண்டும். உனது எல்லாவற்றையும் பரமாத்மா விற்கு சமர்ப்பித்துவிட வேண்டும். பிறகு கடவுள் மட்டுமே மிச்சம். நீ அவரில் உருகிவிடு, கரைந்துவிடு, உன்னை இழந்துவிடு, லயித்துவிடு.'

சத்ய மார்க்கத்தில் 'நான்' உண்டு. அது அகங்காரமில்லை. 'நான் பிரம்மம்' என்று அர்த்தம். பிரேம மார்க்கத்தில் கடவுள் மட்டுமே உண்டு; 'நான்' கிடையாது. ஆகவேதான் இயேசுநாதர் 'நானும் பரமபிதாவும் ஒன்று' என்று சொன்னது யூதர்களுக்குப் பிடிக்காமல் போய்விட்டது. இயேசு தன்னையும் கடவுளின் அம்சம் என்று தன்னை அறிவித்ததை அகங்காரத்தின் வெளிப்பாடாகக் கருதி யூதர்கள் அவர்மீது சினம் கொண்டனர்.

ஜலாலுத்தீன் ரூமி* எழுதிய புகழ்பெற்ற கதை ஒன்றுண்டு. காதலன் காதலியின் வீட்டிற்கு வந்து கதவைத் தட்டுகிறான். உள்ளேயிருக்கும் காதலி, "வாசல் கதவைத் தட்டுபவர் யார்?" என்று வினவுகிறாள். "நான்தான். உன் காதலன். என் குரல் அடையாளம் தெரியவில்லையா?" என்று காதலன் பதிலுக்குக் கேட்கிறான். உள்ளேயிருந்து ஒரு சத்தமும் கேட்கவில்லை. ஒரு பதிலும் வரவில்லை. கதவும் திறக்கப்படவில்லை.

காதலன் பலமாக மறுபடி கதவைத் தட்டினான். "நீ என்னை மறந்து விட்டாயா என்ன?" என்று கேட்டான். காதலி கதவைத் திறக் காமலே, "மன்னிக்கவும். இந்த வீட்டில் இரண்டு பேர் வசிப்பதற்குப் போதுமான அளவு இடம் இல்லை. ஓர் உறையில் ஒரு கத்திக்கே இடமுண்டு.

---

* சூஃபி சம்பிரதாய ஞானி. புகழ்பெற்ற பாரசீகக் கவிஞர் (1207-73). பக்தி பரவசத்தில் பாடல்கள் இயற்றிப் பாடுவார், சுழன்றாடுவார்.

**காதலர் சந்து குறுகலானது**
**இருவர் செல்ல இடம் தராதது**

நீ என் காதலன் என்று கூறுகிறாய். கதவைத் திறக்க முடியாது. திரும்பிச் செல். பக்குவப்பட்டதும் திரும்பிவந்து நீ யார் என்று அறிவிப்புச் செய்,'' என்று கூறிவிட்டாள்.

காதலன் அங்கிருந்து அகன்றுவிட்டான். காடுகள்-மலைகளில் அலைந்தான். தியானம் செய்தான், விசாரித்தான், அழுதான், பாடினான், யோசித்தான். காதலியின் வீட்டிற்குள் பிரவேசிப்பது எப்படி என்று சிந்தித்தான். நாட்கள் உருண்டோடின. சந்திரன் தோன்றி மறைந்தது எண்ணற்ற முறை. சூரியன் உதித்து அஸ்தமித்தது எண்ணற்ற முறை. மாதங்கள் ஆண்டுகளாக வளர்ந்தன.

ஒருநாள் காதலன் திரும்பி வந்தான். காதலி வீட்டுக் கதவைத் தட்டினான். அதே பழைய கேள்வி-“கதவைத் தட்டுபவர் யார்?'' காதலன் சொன்னான், “உன்னைத் தவிர வேறு யார் உண்டு? எங்கும் நீயே. எதிலும் நீயே.'' சட்டென்று கதவு திறந்தது! இதுவரை பரமாத்மா மூடிவைத்திருந்த கதவு அது. அதாவது: நான் என்பது இனி நீ: நீ என்பது இனி நான்!

அன்பு மார்க்கம் சமர்ப்பண உணர்வை எதிர்பார்க்கிறது. தன்னையே எரித்துக் கொள்வது, தன்னைச் சாம்பலாக்கிக் கொள்வது அவசியமாகிறது. தன்னை வெளியுலகத்தின் எல்லாப் பாதிப்பு களிலிருந்தும் விலக்கிக்கொள்ள நேரிடுகிறது. சத்தியப் பாதையும் அன்புப் பாதையும் சென்று முடியும் இடம் ஒன்றாக இருக்கிறது. அது பின்வருமாறு சாத்தியமாகிறது. 'நீ' என்பது நீங்கிவிடும்போது 'நான்' என்பது மிஞ்சியிருக்க வாய்ப்பில்லை. நீ என்பதும் நான் என்பதும் இரண்டும் இருக்கும் அல்லது இரண்டும் இருக்காது. தர்க்கப்படி இந்த இரண்டில் ஒன்று மட்டும் இருக்க முடியாது. அவை ஒரே காசின் இருபக்கங்கள். 'நான்' என்று சொல்லும்போதே 'நீ' என்று ஒருவன் இருப்பது அவசியமாகி விடுகிறதே. 'நீ' என்பதன் ஆதரவின்றி 'நான்' என்பது பிழைக்க முடியாது. அது அர்த்தமற்ற சொல்லாகிவிடும். நான் இருந்தால் நீ இருப்பது இலக்கணப் படியும் நிச்சயம். ஒன்றில்லாவிடில் மற்றொன்றும் இல்லை.

நீ உன் வீட்டைச் சுற்றிலும் வேலி அமைத்திருக்கிறாய் அல்லது சுற்றுச் சுவர் எழுப்புகிறாய். இதெல்லாம் பக்கத்து வீட்டுக்காரன் காரணமாகத்தான். அப்படி ஒருவன் இல்லாமல் நீ மட்டுமே உலகில் இருந்தால் உன் வீட்டிற்கு எல்லை வகுப்பாயா? எல்லைக் கோடு போட இருபுறமும் ஒவ்வொருவராவது தேவை 'நீ' என்று எல்லைக்கு அப்பால் ஒருவன் இருந்தால்தான் இப்பக்கம் உள்ளவன் 'நான்' என்று தன்னைச் சொல்லிக் கொள்ள முடியும். ஞானி தனியாக 'நீ' என்பதை ஒப்புக்கொள்ளாததால் 'நான்' என்பதை இழக்க நேரிட்டு சூன்யமாகி விடுகிறான். ஞானியே பகவான்.

காதலன் (அன்பன்) விஷயத்திலும் இவ்வாறே நடக்கிறது. ஒரு கட்டத்தில் அவனும் 'நான்' என்னும் தனித்தன்மையைக் கைவிடுகிறான். பூஜாரி மிஞ்சியிருக்கவில்லை. இலக்கணப்படி 'நான்' இல்லையெனில் 'நீ' என்னும் சொல்லும் இல்லை. 'நான்' என்று சொல்லிக் கொள்ளும் பக்தன் உள்ளவரையிலும் அவன் ஆராதனை செய்கின்ற 'நீ' என்னும் பகவானும் உள்ளார். ஆனால் பக்தனின் 'நான்' சூன்யமாகிவிட்டால், பகவானுக்கும் வேலை இல்லை. அவர் விடைபெற்றுக் கொண்டு போய்விடலாம்! பக்தனே பகவான்.

விளையாட்டிற்கு இரண்டு பேர் வேண்டும். உலகம் இரட்டைமயமானது. இதை துவைதம் என்கிறோம். நீ ஒன்றை எப்படியாவது வீழ்த்தினால், அதன் ஜோடியாக உள்ளது தானாக விழும். நீ ஒன்றை அழி. அதன் ஜோடி தானாகவே அழியும். ஒவ்வொரு ஜோடியும் இணைந்தே செல்கின்றன. மனிதன் இரு கால்களாலும் நடப்பது போன்றதுதான் இது. ஒரு காலை உடைத்துவிட்டால் பிறகு அவன் எப்படி நடப்பான்? பறவை இரட்டை இறக்கைகளின் உதவியால் பறக்கிறது. ஓர் இறக்கையை வெட்டி விட்டால் பிறகு அது எப்படிப் பறக்கும்?

ஆண்-பெண் ஜோடி அமைப்பு காரணமாக உலகம் இயங்குகிறது. எல்லாப் பெண்களையும் அழித்துவிட்டால், ஆண்கள் மிஞ்சியிருக்க முடியுமா! எவ்வளவு காலம் அவர்களால் தாக்குப்பிடிக்க முடியும்? எல்லா ஆண்களையும் அழித்துவிட்டால், பெண்களால் காலம்தள்ள முடியுமா? ஆண்களால் மட்டுமோ, பெண்களால் மட்டுமோ உலகம் இயங்காது. இந்த இருவகையினரில் ஒரு வகையினர் இல்லாமல் போனால் மற்ற வகையினரும் இல்லாமல் போய்விடுவர்.

எனவே ஞானியர், பக்தர்கள், விஷயமறிந்தவர்கள் ஒன்றே கடவுள் என்று சொல்லவில்லை. அத்துவைதம் என்றே சொன்னார்கள். அதாவது, 'இரண்டு அல்ல.' நேர்மறைச் சொல்லுக்குப் பதிலாக எதிர்மறைச் சொல். 'ஒன்று' என்று சொல்வதில் ஆபத்து உள்ளது. ஏனெனில் 'ஒன்று' என்று சொன்னால் இரண்டாவதான பொருள் ஒன்றும் இருக்க வேண்டும். ஒன்றுதான் மிஞ்சியுள்ளது என்றால் அதை எப்படி வரையறுக்க முடியும்? அதற்கு எல்லை எப்படி வகுக்க முடியும்? இரண்டு என்னும் எண்ணால்தான் ஒன்று என்பதன் எல்லை அமைகிறது. இவ்வாறே ஒவ்வோர் எண்ணும் அடுத்த எண்ணின் மூலம் தனது எல்லையைப் பெறுகிறது. ஆகவேதான் 'ஒன்று' என்பதற்குப் பதிலாக 'அத்துவைதம்' (இரண்டல்ல) என்கிறோம்.

பரமஞானியான ஒருவரிடம் சென்று, "கடவுள் ஒருவரா, இருவரா?" என்று கேட்டுப்பார். அவர் ஒன்று என்றோ, இரண்டு என்றோ பதிலளிக்க மாட்டார். அவர், "இரண்டல்ல. இதற்குமேல் கூடுதலாக எதுவும் சொல்ல முடியாது," என்று மட்டுமே உரைப்பார். ஒன்று என்று சொல்ல முடியாது. இரண்டு என்றும் சொல்ல முடியாது. இரண்டல்ல என்று மட்டுமே உறுதியாகச் சொல்ல முடியும்! இதற்கப்பால் எதுவும் சொல்ல மொழி சக்தியற்றது.

நீ சத்தியப் பாதையிலோ, அன்பு மார்க்கத்திலோ எப்படி வேண்டுமானாலும் செல். ஒரு கட்டத்தில் இரண்டாவது நபர் என மிஞ்சியிருக்க மாட்டார். நீயும் மிஞ்சியிருக்க மாட்டாய். அப்பொழுது மிஞ்சியிருப்பது எதுவோ அதுவே சாரம், அதுவே பூரணம். அதை பக்தன் கடவுள் என்பான்; ஞானி ஆத்மா என்பான். சொற்கள்தான் வேறு. விஷயம் ஒன்றேதான்.

தேடலை ஆரம்பிக்கும் முன் நீ உன்னையே பின்வருமாறு கேட்டுக்கொள்ள வேண்டும்-நீ எங்கே இருக்கிறாய்? நீ என்னவாக இருக்கிறாய்? நீ எப்படி இருக்கிறாய்? தவறான வழியைத் தேர்ந்தெடுத்துவிடாதே. உனக்குப் பொருத்தமான வழிதான் உன்னை லட்சியத்தில் சேர்ப்பிக்கும். அந்தப் பொருத்தமான வழி உன் இதயத்திலிருந்து கிளம்ப வேண்டும். சிலந்தி தனக்குள்ளேயிருந்து இழையை வெளிக்கொணர்ந்து வலையைப் பின்னுவதுபோல்தான் இதுவும். ஆன்மிக சாதகன் தனது வாழ்க்கைப் பாதையை தனக்கு உள்ளேயிருக்கும் உணர்வுகளை வெளிப்படுத்தி அமைக்கிறான்.

உன்னால் அன்புவலையைப் பின்ன முடியுமானால் பக்தி மார்க்கம் உனக்குப் பொருத்தமாக இருக்கும். பிறகு அஷ்டாவக்ரர் சொல்கின்ற ஞானவழி உபதேசங்களை நீ புறந்தள்ளி விடலாம். அதற்குப் பதிலாக நீ நாரதர், சைதன்யர், மீராபாய் காட்டிய பக்திவழியில் பயணிக்கலாம்.

ஆனால் உன் இதயத்திலிருந்து அன்பு இழைகள் வெளிவராவிடில், இதனால் அன்புவலையைப் பின்ன முடியாமல் போனால் பயப்படவோ, அழவோ வேண்டாம். ஒரு பிரச்சினையும் இல்லை. எல்லாவற்றிற்கும் உபாயம் உண்டு. நீ பிறக்கும்போதே அந்த உபாயமும் சேர்ந்து பிறந்துவிட்டது. அது உனக்குள்ளேயே கிடக்கிறது. அது உன் அழைப்பை எதிர்பார்த்து உன் ஆழ்மனத்தில் காத்திருக் கிறது. ஒருவேளை சத்திய மார்க்கம்தான் உனக்குப் பொருந்திவரும். அந்நிலையில் நாரத பக்தி சூத்திரம் உனக்கு வேண்டாம். மீராபாயின் பாடல்கள் காதில் விழாதபடி பார்த்துக்கொள். உனது உள்ளத்திலிருந்து இயற்கையாக ஊற்றெடுப்பதை மட்டும் ஒப்புக்கொள். உனது பிரார்த்தனை உனது சுபாவத்தின் அங்கமாக இருக்க வேண்டும்.

உலகில் வெவ்வேறு வகையான பிரார்த்தனைகள் நிலவுகின்றன. உலகில் எதுவும் பல ரகங்களாக உள்ளது. இதனால்தான் உலகம் அழகாகத் தெரிகிறது.

முஸ்லிம்கள் பள்ளிவாசலில் தொழுகை செய்யும் விதத்தைத் தவறானதென்று நினைக்காதே. இந்துக்கள் கோயிலில் மணியடிப்பதைக் கேட்டுக் கோபமடையாதே. கிறிஸ்தவர்கள் தேவாலயத்தில் பாடுகிறார்கள். பௌத்தர்கள் பூஜை அறையில் தியானம் செய்கிறார்கள். இவ்வாறு ஒவ்வொரு வகையினரும் தாங்கள் உள்ள இடத்திற்கு ஏற்பத் தங்களை பரம சத்தியத்திற்கு சமர்ப்பித்துக் கொள்கிறார்கள். வெயில், பூ, அருவி, வயல் என உலகிலுள்ள ஒவ்வொன்றும் தமக்கே உரிய வழியில் பிரார்த்தனையில் ஈடுபட்டுள்ளன.

பெண்கள் பெண்பாலர்களின் வழியிலேயே செல்வார்கள். ஆண்கள் தமது வழியிலேயே போவார்கள். நான்தான் எனக்குரிய வழியைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். இது உனக்கும் பொருந்தும். உன் வழியில் நீ போ. மற்றவர்களை அந்த வழிக்கு இழுக்காதே.

வற்புறுத்தும் கண்ணோட்டத்தால் உலகில் கெடுதலே விளைந்திருக்கிறது. மனைவி தான் செல்லும் கோயிலுக்குத் தனது கணவனும் வரவேண்டுமென வற்புறுத்துகிறாள். தந்தையும் தான் செல்லும் கோயிலுக்குப் பிள்ளைகளையும் கட்டாயப்படுத்திக் கூட்டிக்கொண்டு போகிறார். இதனால்தான் உலகில் அதர்மம் மலிந்திருக்கிறது. ஏனெனில் மக்களுக்கு அவர்களின் சுபாவப்படி வழிபாடு செய்யும் வசதி அல்லது அனுமதி தரப்படவில்லை. நான் இந்தியாவில் பல்லாண்டுகள் பயணம் செய்தபோது இதைக் கவனித்திருக்கிறேன்.

ஒருவன் ஜைன சமயக் குடும்பத்தில் பிறந்திருப்பான். அவன் பக்தி நிறைந்த இதயம் படைத்தவனாயின் அவ்வாறு பிறந்தது துரதிருஷ்டமேயாகும். ஏனெனில் சமண மதத்தில் பக்தி உணர்வு சிறப்பாகக் கருதப்படுவதில்லை. அங்கே தியானம் ஒன்று மட்டுமேதான் அனுமதிக்கப்படுகிறது.

இன்னொருவன் பக்தி உணர்வு மிக்க குடும்பத்தில் பிறந்திருப்பான். உதாரணமாக, கிருஷ்ண பக்தியைப் பரப்புகின்ற வல்லப சம்பிரதாயத்தைப் பின்பற்றும் குடும்பமாக அது இருக்கக்கூடும். ஆனால் அவனுக்கு பக்தி வழியில் நாட்டம் இருந்திருக்காது. குடும்பத்தினருக்கோ தியானம் என்றாலே பிடிக்காதிருக்கலாம். இப்படி பெற்றோர் காரணமாகவா ஒருவனது ஆன்மிகப் பாதை அமைவது? ஒருவனது சுபாவத்திற்கேற்றபடியான ஆன்மிக சூழ்நிலை இருந்தால் தான் அவன் ஆன்மிக முன்னேற்றம் பெற முடியும். ஒரு குறிப்பிட்ட குடும்பத்தில் பிறப்பதென்பது தற்செயலான நிகழ்ச்சி. நீ எந்தக் குடும்பத்தில் பிறந்தாய் என்பதை வைத்து உனது ஆன்மிகத்தை நிச்சயிக்கக் கூடாது.

உலகத்தில் சமயமும் அறமும் தலைதூக்க வேண்டுமாயின் நாம் குழந்தைகளைக் குறிப்பிட்ட விதமாக மதத்தைப் பின்பற்றுமாறு கட்டாயப்படுத்தக் கூடாது. நாம் அவர்களுக்காக எல்லா வாசல் களையும் திறந்துவைத்துவிட வேண்டும். அவர்கள் விரும்புகின்ற இடத்திற்குச் சென்று வழிபடட்டும். அவர்களே பாதையைத் தேர்ந்தெடுக்க விட்டுவிடுங்கள். கடவுளைத் தேடி ஆத்ம முன்னேற்றம் பெற வேண்டும் என்னும் ஆசையை மட்டும் அவர்களின் உள்ளத்தில்

விதைத்து விடுங்கள். பிறகு அவர்கள் எந்த புனிதநூலை வேண்டுமானாலும் அடிப்படையாகக் கொள்ளட்டும். கடவுளின் இல்லத்தை அடைவது மட்டுமே குறிக்கோள். வழியில் தங்கிவிடவோ, பின்வாங்கவோ கூடாது. அப்போது ஒரே குடும்பத்தில் பலவிதமான வழிபாடுகள் நடைபெறும். வேற்றுமையில் ஒற்றுமையைக் காட்டும் அந்த வழிபாட்டு நாட்களை நான் சுபதினம் என்றே சொல்வேன். இப்படி ஒரு நிலை உருவானால்தான் உலகத்தில் தர்மத்தின் (அறநெறியின்) ஆட்சி ஸ்தாபிதமாகும்.

என்னிடம் வருபவர்களுக்கு இதுதான் என் செய்தி. ஆகவேதான் நான் எல்லா விஷயங்களைப் பற்றியும் பேசுகிறேன். என்னிடம் வருபவர்கள், "சுவாமி! தாங்கள் ஒரே ஒரு உபாயத்தை மட்டும் உபதேசியுங்களேன். நாங்கள் குழப்பமெல்லாம் நீங்கி, குறிப்பிட்ட முறையில் ஆன்மிகப் பயணம் செய்ய வசதியாக இருக்கும். சில சமயம் பக்தியைப் பாராட்டிப் பேசுகிறீர்கள். சில சமயம் ஞானத்தைத் தூக்கிப்பிடிக்கிறீர்கள். சில சமயம் சாட்சி மனப்பான் மையை மேற்கொள்ளச் சொல்லுகிறார்கள். ஒருசமயம் ஞானம் போதிக்கும் அஷ்டாவக்ரரையும், இன்னொரு சமயம் பக்திநெறியைப் பரிந்துரைக்கும் நாரதரையும் கொண்டாடுகிறீர்கள். இதனால் நாங்கள் தர்மசங்கடமான நிலையில் உள்ளோம்," என்று புகார் செய்கிறார்கள்.

உனக்கு ஏற்படுகின்ற தர்மசங்கடம் எனது உபதேசத்தின் காரணமாக அன்று. உனக்குப் பொருத்தமான வழி எது என்பதை உன்னால் இதுவரை அடையாளம் காண முடியாமைதான் உனது குழப்பத்திற்கு ஆதாரம். கடையில் பல பொருள்களை எடுத்துக் காட்டுவதைப்போல, நான் உனக்கு எல்லா வழிகளையும் சாஸ்திரங்களையும் அறிமுகப்படுத்துகிறேன். அப்போது நீ உனக்கு உகந்த பாதையை அடையாளம் காண இயலும்.

**இ**ரண்டாம் உலகப்போர் சமயம் இங்கிலாந்தில் ஒரு சிப்பாய் காயமடைந்து விழுந்துவிட்டான். இதனால் அவன் ஞாபகசக்தியை இழந்துவிட்டான். தன் பெயரும் அவனுக்கு நினைவில்லை. அவன் சட்டையில் மாட்டியிருந்த பெயரும் அடையாள எண்ணும் பொறித்த வில்லை போர்க்களத்தில் எங்கோ விழுந்துவிட்டது. ஆகவே அவனை எங்கே கொண்டு போய்விடுவது என்று ராணுவ அதிகாரிகளுக்குச் சிக்கலாகிவிட்டது.

மனநோய் மருத்துவர்கள் ஓர் ஆலோசனை வழங்கினார்கள். 'இவனை இங்கிலாந்தில் ஊர் ஊராக அழைத்துச் செல்லுங்கள். சொந்த ஊரைப் பார்த்ததும் அடையாளம் கண்டு அவனுக்குப் பழைய நினைவுகள் திரும்பலாம். எந்த ஊரில் அவன் பிறந்தானோ, சிறுவயது கழிந்ததோ, எந்த மரங்களின் கீழ் விளையாடினானோ, நதியில் குளித்தானோ அவற்றைப் பார்த்தால் அவை அவனது ஞாபகசக்தியை இழுத்துவரும்' என்று கூறினார்கள்.

உயர் அதிகாரிகள் ரயில் மூலம் அவனை அழைத்துச் சென்று ஒவ்வொரு ரயில்நிலையத்தையும் காண்பித்தார்கள். ஆனால் அவனுடைய கண்களில் சூன்யமே தெரிந்தது. ஒருமுறை அவன் பயணித்த ரயில் வழக்கமாக நிறுத்தம் இல்லாத நிலையத்தில் நின்றது. எதிரேயிருந்து ஒரு ரயில் வருவதால் சிக்னல் கிடைக்கவில்லை.

அந்த சிப்பாய் எதிர் ரயிலைப் பார்க்க ஜன்னல் வழியாக வேடிக்கை பார்த்தான். திடீரென அவன் கண்களில் பிரகாசம். கண்களில் நீர் நிறைந்தது. உடன்வந்த அதிகாரிகளிடம் கூறாமல் அவன் சட்டென்று அந்த ஊரில் இறங்கினான். நிலையத்துக்கு வெளியே வந்ததும் ஒரு திசையில் ஓடினான். அதிகாரிகள் அவனைப் பின்பற்றினர். ஓரிடத்தில் அவனைத் தடுத்து, "ஏன் இப்படித் தலைதெறிக்க ஓடுகிறாய்? உனக்குப் பைத்தியமா பிடித்துவிட்டது?" என்று விசாரித்தனர்.

அவன் சொன்னான்: "இல்லை, ஐயா, நான் சற்றுநேரம் முன்வரைதான் பைத்தியமாக இருந்தேன். இப்பொழுது எனக்கு சுயவுணர்வு திரும்பிவிட்டது. இந்த ரயில் நிலையக் கட்டடம், இதன் வளாகத்திலுள்ள மரங்கள் ஆகியவற்றைப் பார்த்ததும் இதுதான் என் ஊர் என அடையாளம் தெரிந்தது. என் பின்னாலேயே வாருங்கள்," அவன் அதிகாரிகளை அழைத்தான்.

அவன் ஓட ஆரம்பித்தான். தெருக்கள், சந்துகளைக் கடந்து சென்றான். கடைசியில் ஒரு வீட்டை அடைந்தான். "இதுதான் என் வீடு. அதோ உள்ளே தெரிபவர் என் அம்மா," என்று அதிகாரிகளுக்கு அடையாளம் காட்டினான்.

இவ்வாறேதான் நான் உன் எதிரில் பலவகையான சாஸ்திரங்களைத் திறந்துவைக்கிறேன். அஷ்டாவக்ரர், நாரதர், மகாவீரர்,

புத்தர், சூபி, இஸ்லாம், ஜென் என்றெல்லாம் விரித்துரைக்கிறேன். ஒரு நம்பிக்கையில்தான் அவ்வாறு செய்கிறேன். ஏதாவது ஒரு கோட்பாடு உனது சுபாவத்துடன் ஒத்துப்போக வேண்டுமென எதிர்பார்க்கிறேன். அப்போது உனது ஆன்மிகத் தேடல் பயணத்தில் உனக்குரிய ஸ்டேஷன் வந்துவிடும். உடனே உன் கண்கள் பிரகாசிக்கும். நீ ஓடுவாய், ஆடுவாய், புளகாங்கிதம் அடைவாய்.

உலகில் எத்தனை வகை மக்கள் உள்ளனரோ அத்தனை வகையான ஆன்மிக வழிகளும் உண்டு. ஆனால் அடிப்படையில் இரண்டு பிரவாகங்கள்தாம் உண்டு—ஞான வழி, அன்பு வழி. இந்த இரண்டும் ஏராளமான சிறு பிரவாகங்களாகப் பாய்கின்றன.

ஒரு வேறுபாடும் உண்டு. அன்பு மார்க்கம் திட்டவட்டமானதாக, தெளிவானதாக இல்லை. ஞான மார்க்கமோ பூரணமாக சுத்தத்துடன் விளங்குகிறது. அன்பு மார்க்கம் சற்று மங்கலாக, சற்றுக் கலங்கலாகக் காட்சி தருகிறது. சத்ய மார்க்கம் நண்பகலில் சூரிய ஒளி அதிகபட்சமாகப் படுவதுபோல் தெளிவாகத் தெரிகிறது. அன்பு மார்க்கத்தைப் பின்வருமாறு கற்பனை செய்யலாம்-மாலைநேரம். சூரியன் ஏறத்தாழ மேற்கில் மறைந்துவிட்டான். நட்சத்திரங்கள் இன்னும் உலா புறப்படவில்லை. எல்லாப் பொருள்களும் கண்ணுக்குத் தெரிந்தபோதிலும் எதுவும் முழுமையாகத் தெளிவாகக் காணப்படவில்லை. ஆகவே அன்பு மார்க்கத்தை விளக்குகின்ற சொற்களும் திட்டவட்டமான அர்த்தம் தருவதில்லை.

**மாலைநேர மங்கல் ஒளியில்**
**பாதை ஒண்ணு தெரியுது**
**பாதையின் மறுகோடியிலே**
**மந்தமாய் விளக்கு எரியுது**
**காற்றில் அதன் சுடர் துடிக்குது**
**அடிமேல் அடியெடுத்து வந்து**
**அவ்வொளி என்னை அழைக்குது**
**எனது கையைக் கோத்துக்கொண்டு**
**சேர்ந்து என்னுடன் உலவுது**

**மினுக் மினுக்கென்னும் அதன் ஒளியில்**
**எனது அகமும் புறமும் பிரகாசிக்குது**
**நாள் முழுதும் பட்ட அலுப்பும் சலிப்பும்**
**புழுக்கம் வேதனையும் கரையுது**

**எனது உயிரில் உனது அன்பு**
**எங்கும் பரவி நிற்பதால்**
**நான் கால் வைக்கும் இடமெல்லாம்**
**கங்கையாய், காசியாய் உணர்கின்றேன்**

அன்பு வழி கலங்கலானது. ரசம் நிறைந்த அந்தப் பாதை ஆனந்தமயமானது. ஞான வழி சாட்சி மனப்பான்மை கைவரப் பெற்றவனின் பாதையாகும். அன்பு வழி மெய்ம்மறக்க வைக்கக் கூடியது. ஞான வழி அறிவை அடிப்படையாகக் கொண்டது. அன்பு வழி உணர்வை அடிப்படையாகக் கொண்டது. ஞான வழியில் தியானம் செய்தல் உதவுகிறது. அன்பு வழியில் பிரார்த்தனை, பஜன், குழு நடனம், பாட்டு முதலியவை அடங்கியுள்ளன. ஞான வழி பாலைநிலத்தின் வழியாகச் செல்கிறது. அன்பு வழியில் செடி கொடிகள், காடுகள், பிருந்தாவனம் உள்ளன.

ஞான வழியில் செல்பவன், அதாவது சத்தியத்தைத் தேடுபவன் மிகவும் கூர்மையான முறையில் தனது அறிவைத் தனது முயற்சிக்குப் பயன்படுத்துகிறான். கூரான கத்தியால் வெட்டுவதுபோல் எதிர்ப்பு களையும் தடைகளையும் வெட்டி வீழ்த்தி அவன் முன்னேறுகிறான். 'இது இல்லை, இது இல்லை' என்று மறுத்தபடியே முன்னேறுவது அவன் வழக்கம். 'அசத்தியத்தை வெட்டித் தள்ளியபடியே செல்; சாரமற்றதை உடைத்தெறிந்தபடியே செல்; பிறகு எது உடையாமல் மிஞ்சி நிற்கிறதோ அதுவே சாரம்.. அதுவே சத்தியம்' என்பான்.

அன்பு வழியை மேற்கொள்பவன் எதையும் வெட்டுவதோ, உடைப்பதோ கிடையாது. அந்த வழியில் விரக்தி-வைராக்கியத்திற்கும், தியாகத்திற்கும்கூட இடமில்லை. உன்னுள் இருக்கும் அன்பைக் கொண்டு ஒரு பாலம் கட்டி முன்னேற வேண்டும். உன்னுள் மங்கலாக எரியும் அன்பு ஒளியைப் பெரியதாக்க வேண்டும். எதையும் மறுக்கும் ஞான வழியைப் போலன்றி, அன்பு வழி எல்லாவற்றையும் நம்பிக்கையுடன் அரவணைத்து ஏற்கிறது.

**நான் தொடர்ந்து கீதம் இசைக்கிறேன்**
**பாடல்கள் பாடுகிறேன் நம்பிக்கையுடன்**
**எனது குரல் அலை விண்ணில் பரவி**
**விண்மீன்களை அடைந்து உரசியபின்**
**மீண்டும் உன்னிடம் திரும்பி வரும்**

**எதிரொலியாக ஒரு சமயம்.**
**ஒவ்வொரு முறையும் என் காலை**
**நம்பிக்கையுடன்தான் எடுத்துவைக்கிறேன்**
**கரடுமுரடான பாதையினாலும்**
**பரவியுள்ள இருட்டினாலும்**
**தடுக்கிவிழ நேரிடும்போது**
**எங்கிருந்தோ ஒரு செங்கிரணம்**
**வெளிப்பட்டு எனக்கு வழிகாட்டும்**

பக்தன் தட்டுத் தடுமாறி, தொட்டுத் தடவி முன்னேறிச் செல்கிறான். 'நான் ஒருநாள் என் லட்சியத்தை அடைந்து விடுவேன்' என்று அவன் முழு நம்பிக்கையுடன் கூறுகிறான். அவன் அவசரப்படுவதில்லை; தாமதத்திற்காக ஏக்கம் கொள்வதில்லை. சட்டென்று பலன் கிடைக்க வேண்டுமென அவன் ஆசைப்படுவதில்லை. 'விளையாட்டு தொடரட்டும், உடனே முடிய வேண்டும் என்னும் அவசியமில்லை' என்பான் பக்தன், "கடவுளே, இந்தக் கண்ணாம்பூச்சி விளையாட்டு தொடர்ந்து நடைபெறட்டும். நீ ஒளிந்துகொள். நான் உன்னைத் தேடுகிறேன். நான் உன்னை நெருங்கியதும் நீ மீண்டும்-மீண்டும் ஒளிந்துகொள். இந்த லீலை தொடரட்டும்," என்று அவன் கேட்டுக் கொள்வான். ஆனால் இறைவனை அடைவதற்கான முயற்சியை ஞானி விளையாட்டாக எடுத்துக் கொள்வதில்லை. அது ஒரு கம்பீரமான, கனமான விஷயம் என்றே அவன் கருதுகிறான். அதில் நிறையச் சிக்கல்கள் உள்ளதாகவும் நினைக்கிறான்.

வெவ்வேறு மொழிகளில் ஒரே உண்மையைச் சொல்வதுபோல் தான் இது. ஒரு மொழியில் சொல்வது உண்மையெனில் அதையே இன்னொரு மொழியில் சொல்லும்போது அது தவறாகிவிடாது. வாழ்க்கை மிகவும் விசாலமானது. அதில் முரண்பாடுகள் நிறைய எதிர்ப்படுகின்றன. அவற்றை வாழ்க்கை சமாளித்துவிடுகிறது. நீ நினைக்கும் அளவிற்கு வாழ்க்கை குறுகலானது அல்ல.

ஞானி அவசரப்படுகிறான். எப்படி முக்தி கிடைக்கும் என ஏங்குகிறான். உலக பந்தத்திலிருந்து விடுபடுவது எப்படி என யோசிக்கிறான். அவனது இறுதி லட்சியம் மோட்சம்தான். பக்தன் மோட்சம் பற்றிப் பேசுவதில்லை. அவனது ஆன்மிக அகராதியில்

மோட்சம் என்ற சொல் கிடையாது. வைகுந்தம் என்னும் சொல் உண்டு. 'உலகில் விளையாட்டுப் போல் கடவுளைத் தேடினோமோ, அதுபோல் வைகுந்தத்திலும் ஆனந்தம்தான். கண்ணா, இங்கே நீ புல்லாங்குழல் ஊதினாயே. அதுபோல் வைகுந்தத்தில் வாசிப்பதைக் கேட்டு ஆனந்திப்போம். இங்கு மானசீகமாக உன்னை ஸ்தாபித்து உன்னைச் சுற்றிவந்து நடனமாடினோமே, அதுபோல் அங்கு நிஜமான உன்னுடன் நடனம் ஆடுவோம்"-இது பக்தர்களின் பாஷை. ஞானியின் மோட்சமோ சூன்யநிலை ஆயிற்றே.

இந்த இரண்டு கண்ணோட்டங்களுமே சரிதான். உனக்கு எது பொருந்தி வருகிறது என்பதைக் கவனித்தால் போதும். அந்த ஒன்றைத் தேர்ந்தெடுத்தபின் மிஞ்சியுள்ள இரண்டாவது கண்ணோட்டத்தைக் கைவிடு, மறந்துவிடு; அந்தச் சிக்கலில் மாட்டிக் கொள்ளாதே. உனக்கு எந்த வழி சரியெனப்படுகிறதோ, உன் சுபாவத்துடன் ஒத்துவருகிறதோ, உன் இதயத்தைத் தொடுகிறதோ அதையே ஆதாரமாகக் கொண்டு உனது ஆன்மிக வலையைப் பின்னு. சிலந்தி வலைபோல் அது சுயமான தயாரிப்பாக அமையும்.

முற்கால சாஸ்திரங்கள் பரமாத்மா உலகைச் சிலந்திவலைபோல் பின்னி உருவாக்கினார் என்கின்றன. அதற்கான இழைகளை அவர் தனக்கு உள்ளேயிருந்துதான் பெற்றிருப்பார். வேறு வழியும் கிடையாது. வெளியே இருந்து எதுவும் பெறுவதற்கு அந்த சமயம் இன்னும் உலகம் படைக்கப்படவில்லையே.

எல்லாமே உள்ளேயிருந்துதான் வெளியே வருகிறது. ஒரு சிறு விதையைப் பார்க்கிறோம். மீன் முட்டையை விடச் சிறியதான அதனுள் மாபெரும் ஆல மரம் மறைந்துள்ளது. அதை பூமியில் நடு. உரிய பருவகாலம் வரட்டும். மழைநீர் படட்டும். உள்ளேயிருந்துதான் கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்பட்டு, வளர்ந்து, கடைசியில் மரமாகக் காட்சிதருகிறது.

**ஜ**ப்பானில் தாவரவியல் நிபுணர் ஒருவர் விசித்திரமான பரிசோதனை ஒன்றை மேற்கொண்டார். செடி மொத்தமாக விதையிலிருந்துதான் வருகிறதா அல்லது மண்ணும் செடியின் பாகமாகச் சேர்ந்து கொள்கிறதா என்பதுதான் அந்த ஆராய்ச்சி. அவர் ஒரு தொட்டியில் தேவையான மண்ணை நிரப்பினார். நிரப்பும் முன்

மண்ணின் எடையைக் குறித்துக் கொண்டார். விதை நட்டார். செடி தோன்றி, ஓரளவு வளர்ந்தபின், அதை எடுத்துவிட்டு, மீண்டும் தொட்டியிலிருந்து மண்ணை அகற்றி எடைபோட்டார். மண்ணின் எடை அப்படியேதானிருந்தது. எந்த மாற்றமும் இல்லை. அப்படி யென்றால் ஏறத்தாழ ஒன்றுமேயில்லாத சூன்யம் போன்ற விதையி லிருந்துதான் பெரிய மரம் தோன்றுகிறது என்பது தெளிவாகிறது. அதுபோலவே சூன்யமாய் விளங்கும் கடவுளிடமிருந்தே அனைத்துப் படைப்பும் தோன்றியது என்பதை ஊகிக்கலாம்.

நீயும் உனது தனித்தன்மையை, நிஜத்தன்மையை உனக்குள்ளே விதையைப் போல் மறைத்து வைத்துள்ளாய். அதை நீ அடையாளம் காணத்தான் வேண்டும். உனக்குள்ளே எந்த விதை உள்ளது என நீ ஆராய வேண்டும். அன்பு, சத்தியம் என விதைகள் மொத்தம் இரண்டுதான். அவைதாம் அடிப்படை. எனவே நீ சபதம் செய் அல்லது சமர்ப்பணமாகு. சபதம் செய்தல் சத்தியத்தின் பாற்பட்டது. அது கடப்பதற்குக் கடினமான பாதை. இதனால்தான் இந்தப் பாதையைக் கடந்தவரான வர்த்தமானனை மகாவீரர் என்று போற்றுகிறார்கள். அவரது இயற்பெயரான வர்த்தமானன் என்பதையே மக்கள் மறந்துவிட்டார்கள். அவர் அந்த அளவிற்கு ஆன்மிக முயற்சிகள் மேற்கொண்டவர். சரணாகதி வழியை நாடாமல் வலுவான சங்கல்ப வழியைக் கடைப்பிடித்தார். **மகாவீரர்** ஒரே வார்த்தையில் சொல்கிறார்- 'அஸரண்'-யாருடைய காலிலும் போய் விழாதீர்கள்!

**புத்தர்** தன் பிரதம சீடரிடம் சொன்னார்- ஆனந்தா! 'அப்ப தீபோ பவ'-நீயே உனக்கு ஒளியாகு. சுயம்பிரகாசியாகிவிடு. உனக்கும் யாருக்கும் அயலார் யாரும் வழிகாட்டியாக இருக்க முடியாது.

**ஜே.கிருஷ்ணமூர்த்தி** கூறுகிறார்: 'நான் யாருக்கும் குரு இல்லை. நீ மறந்தும்கூட யாரையும் குருவாக ஏற்றுக்கொண்டு விடாதே. சத்தியுத்தைத் தேடுபவனுக்கு உதவியாளன் யாரும் தேவை இல்லை. அவன் தனியாகச் சென்று தேடுகிறான். அவனது பாதை பாலைநிலம் போன்றது. ஆகவேதான் அவன் காவியம் எதுவும் படைப்பதில்லை. பாலைநிலத்தில் காவியம் படைக்கும் ஆர்வம் எழாது. காவியம் பிறக்க அங்கே அன்பின் சிற்றோடையாவது பாய வேண்டும். இல்லாவிடில் பூக்கள் மலராது. பசும்புல் முளைக்காது. பசுமை பரவாது. பாட்டெதுவும் காதில் விழாது. உலர்ந்த, வறண்ட பூமி அது.

எல்லாவற்றையும் சுண்டவைப்பதுதான் சத்தியத்தைத் தேடுபவனின் செயல். துளிக்கூட ரசம் அல்லது ஈரம் மிஞ்சியிருக்கக் கூடாது. ரசம்-ஈரம்-பற்று என்பதற்கு 'ராகம்' என்று ஒரு சொல்லுண்டு. ராகம் நீங்குவது விராகம் அல்லது வைராக்கியம். அவ்வாறு நீங்கியவர் வைராகி அல்லது பைராகி.

உனக்குள் இருக்கும் உன் இயல்பான அம்சம் என்ன என்பதை நீ ஆராயும்போது, பாலைநிலம்தான் உன்னை அழைக்கிறது, வரவேற்கிறது, சவால்விடுகிறது என்று தோன்றினால் அதில் தவறொன்றும் இல்லை. பாலைவனமே உனக்குச் சோலைவனமாக அமையும்.

எந்த வழி உனக்கு ஏற்ற வழி என்றறிய ஓர் உரைகல் உண்டு. நீ செல்லும் வழி உனக்கு அனுகூலமாக உள்ளதெனில் நீ உடனே மலர்ச்சி பெறுவாய். நீ சாந்தமாகிவிடுவாய். உனது குரல் மென்மையான ஒரு நிலைக்கு வரும். உனக்கெனப் புதிய பூமி அமைந்துவிட்டதாக, உனக்குரிய பருவகாலம் நெருங்கிவிட்டதாக, பூத்து-பழுத்து-பக்குவப்படும் காலம் வந்துவிட்டதாக நீ உணர்வாய்.

அன்பு வழியிலோ குறிப்பிட்ட ஒருவரின் குரல் கேட்டுமே உன் உள்ளத்தில் ஓர் எதிரொலி கேட்கிறது. உன் இதயக் கதவு திறக்கிறது. குறிப்பிட்ட ஒருவரைப் பார்த்ததுமே உன் உள்ளத்தில் அன்பு பொங்குகிறது. குறிப்பிட்ட ஒருவரை நெருங்கியதுமே உன்னை விவரிக்க முடியாத அமைதி போர்த்துகிறது. ஆனந்த ஊற்று பெருக்கெடுக்கிறது.

நீ தேர்ந்தெடுக்கும் வழி எதுவாயினும் அதனுடன் உனக்கு ஒத்திசைவு இருந்தால் இவ்வாறெல்லாம் நிகழும்.

இப்போது உங்கள் முன்னால் நான் சொற்பொழிவு செய்கிறேன். எவன் மெய்ம்மறந்து கேட்டு அசைகிறான் என்றும், எவன் பாதிக்கப்படாமல் குத்துக்கல்லாக உட்கார்ந்திருக்கிறான் என்பதும் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. என் உபதேசம் சிலரது உள்ளத்தைத் தொடுகிறது. வேறு சிலர் என் பேச்சை ஆராயத் தொடங்கிக் குழப்பத்தில் ஆழ்கிறார்கள்.

**எனது பாதையில் குறுக்காக**
**பருமனான உடலுடன் நீ**
**ஏன் அசைக்க முடியாதபடி**
**உறுதியாய் உட்கார்ந்து விட்டாய்?**
**ஏதாவது பேசேன் கொஞ்சம் நீ**
**எனது இசையொலி உன்னைத்**
**துளியும் வருடி செல்லவில்லையா?**
**சரி, பேசத்தான் முடியாதெனில்**
**அசைந்து.நெளிந்து ஆடினால் என்ன?**
**உன் மனமென்னும் கூழாங்கல் உருகட்டும்**
**உறைந்த பாறையான உன் இதயத்தில்**
**பிடிவாதம் நீங்கி அலைகள் எழட்டும்**
**என்னுடன் உன் மனம் சேரவிடு**
**பிறகு பார், உன்னிடமிருந்தும்**
**தேனினும் இனிய சொற்கள் தோன்றி**
**எங்கும் எதிரொலி கேட்கத் தொடங்கும்**
**எனது சிந்தனை ஓட்டத்துடன் நீ**
**சிறிது சேர்ந்துகொண்டாலும் போதும்**

ஆம், உனக்குப் பொருத்தமான வழி கிடைத்துவிட்டால் மற்ற கவலைகளை உதறித்தள்ளு. உன் மனம் உருகும் இடத்தில், பாறை போன்ற உன் இதயத்தில் சலனம் தோன்றும் இடத்தில், நீ பாம்புபோல் லயித்து நெளிந்தாடு.

மகுடி ஒலி கேட்டுத்தான் பாம்பு ஆடுகிறது என்று விலங்கியல் அறிஞர்களும் நினைத்தார்கள். பாம்பை அவ்வாறு ஆடச் செய்வதால் பாம்பாட்டி என்ற பெயரும் ஏற்பட்டது. பிறகு ஆராய்ச்சி அடிப்படையில் பாம்புக்குக் காது கிடையாது என அறியப்பட்டு அறிவியலார்க்குத் திகைப்பு உண்டானது. ஒலியைக் காதால் கேட்க முடியாதபோது பாம்பு எப்படி ஆடுகிறது என்று அவர்கள் குழம்பினார்கள். பாம்பாட்டி ஏதாவது ஏமாற்றுவேலை செய்கிறானா? ஒருவேளை தன் கை அசைவின்படி ஆட பாம்பிற்குப் பயிற்சி கொடுத்திருக்கிறானா? இதைக் கண்டுபிடிக்க ஒரு பரிசோதனை செய்யப்பட்டது.

பாம்பாட்டி மகுடியுடன் சற்றுத் தொலைவில் உட்கார வைக்கப் பட்டான். பாம்பு அவனைப் பார்க்க முடியாதபடி நடுவில் படுதா

தொங்கவிடப்பட்டது. மகுடியையும், பாம்பாட்டியின் கையையும், உடல் அசைவதையும் பாம்பால் பார்க்க முடியாதபடி செய்தனர். காது இல்லாவிடிலும் கண்ணால் மேற்கண்ட அசைவுகளைப் பார்த்து பாம்பு ஆடக்கூடும் என்பதற்காகவே மறைப்புப் போடப்பட்டது.

சைகை காட்டியதும் பாம்பாட்டி மகுடி வாசித்தான். திரைக்கு அப்பாலிருந்த பாம்பு இலேசாக ஆட ஆரம்பித்தது! இது கண்டு வியந்த விலங்கியலார் புதிய முடிவிற்கு வந்தனர். மகுடியிலிருந்து கிளம்பும் ஒலி அலைகள் சுற்றிலும் பரவும்போது பாம்பின் உடலையும் முழுமையாக வருடிச் செல்கின்றன. உடலில் ஏற்படும் அதிர்வுகளால் பாம்பு நெளிந்து வளைந்து ஆடுகிறது.

இதேபோல் ஒரு விஷயம் நமக்குப் பிடித்துப் போனால் இதயம் துள்ளும். எந்த வழியில் செல்கையில் நீ ஆனந்தமாக ஆடுகிறாயோ அதுவே உனக்குரிய மார்க்கம். எந்த உபதேசம் கேட்டு உனக்குள்ளே ரசப் பெருக்கு ஏற்படுகிறதோ, அதுவே உனக்குரிய மார்க்கம். பிறகு மற்றவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பது பாம்புபோல் உனக்கும் காதில் விழாதிருக்கட்டும். உன் இதயத்தின் குரலை மட்டும் கேள்.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! உங்களுடைய சொற்பொழிவைப் படிக்கும்போது எனக்கு ஆச்சரியமாக உள்ளது. ஆனால் காதால் கேட்கும்போது ஒலி மட்டுமே வந்து சேர்கிறது! கடைசியில் மிஞ்சுவது சூன்யமும் மெய்ம் மறந்த நிலையும் மட்டுமே. இந்தச் சுவையைத்தான் தாங்கள் பரப்ப விரும்புகிறீர்களா?**

**நா**ன் உனது அறிவிற்கு ஏற்ற விளக்கம் தருவதற்காக உரை நிகழ்த்தவில்லை. உன் மனத்தில் சமாதான உணர்வை ஏற்படுத்தவும் நான் முயலவில்லை. சில சமயம் நான் பக்தியைப் பற்றி பேசுகிறேன். அது உன் இதயத்தில் அலைகளை எழுப்புவதற்கான என் முயற்சியாகும். சில சமயம் ஞானத்தைப் பற்றி பேசுகிறேன். அது 'நீ இதயத்தையும் அறிவையும் கடந்து சாட்சியாகிவிடு' என்று உன்னைத் தாண்டுவதற்கான என் முயற்சியாகும். ஆனால் அறிவை மட்டும் குறிவைத்து நான் எதுவும் பேசுவதில்லை. புத்தி (அறிவு) சொறிசிரங்கு

போன்றது. அரிப்பின் காரணமாகச் சொறியும்போது சுகமாக இருக்கும்; பிறகு வலிக்கும்.

நான் பேசுகிறேன். இதன் ஒலி உன்னை வந்தடைகிறது. நீ பாம்பைப் போல் அசைந்தாடத் தொடங்கினாய். இது சுபமான விளைவுதான். இதில் கவலைப்படுவதற்கு எதுவுமில்லை. ஆனால் நீ கவலைப்படுவதாகக் கூறுவது நியாயம்தான். நீ இங்கே வந்தது சொற்களின் வழியாக என் உரையைக் கேட்பதற்கே. ஆனால் ஒலி மட்டுமே உன்வரை வந்துசேர்ந்தது என்கிறாய். உபதேசம் எதுவும் உன்னை அடையவில்லை என்கிறாய். இங்கிருந்து திரும்பும்போது கொஞ்சம் ஞானமும், கூடுதலான சாஸ்திர அறிவும், கூடுதலாக வளர்ச்சி பெற்ற புத்தியும் கிடைக்கப் பெற்றுத் திரும்பலாம் என்று கற்பனை செய்தாய். ஆனால் நடந்தது என்ன? எந்த புதிய சித்தாந்தமும் உன் கைக்கு வரவில்லை. சங்கீதம்தான் உன்னை வந்தடைந்தது. ஆனால் இசை இன்பம் பெறுவதற்காக நீ இங்கே வரவில்லையே. அவ்வாறு நீ நினைத்துப் பார்த்ததுகூட இல்லையே. ஆகவே உனது மனத்தில் கவலை பரவுகிறது. ஏதோ பெரிய இழப்பு நேரிடுகிறதோ என்று அச்சமாகக்கூட உள்ளது. ஏனெனில் நாம் வாழ்க்கையில் எப்பொழுதும் வார்த்தைகளையே, சிந்தாந்தங்களையே சேகரித்துவந்தோம். ஆகவே கடந்த காலப் பழக்கம் காரணமாக நமது மனம் நம்மை மிரட்டுகிறது– ‘இங்கே ஓஷோவிடம் வந்து என்ன செய்துகொண்டிருக்கிறாய்? எதையாவது சேகரி. கொஞ்சமாவது ஞானம் சம்பாதி; பின்னால் எதற்காவது உபயோகப்படும்.’’

மனத்தின் இந்த மிரட்டலுக்கு மதிப்பளிக்காதே. உனக்கு சங்கீதம் கேட்கத் தொடங்கினால், ஒலி கேட்கத் தொடங்கினால், உள்ளேயிருந்து அலை எழும்பினால், நீ சொற்களைக் கடந்த நிலைக்குச் சென்றுவிட்டாய் என்று அர்த்தம். சங்கீதம்தான் சொற்களைக் கடந்து செல்லக்கூடிய ஊடகம். ஆகவே அது எல்லோர் மனத்திலும் சலனம் உண்டாக்குகிறது.

சங்கீதம் மொழிகளால் கட்டுப்படுத்தப்படுவதில்லை. குறிப்பிட்ட ஒரு மொழியில் பேசப்படுவதை அம்மொழி அறிந்தவரே புரிந்துகொள்ள முடியும். ஆனால் வீணை வாசி. எல்லா மொழியினரும் அதன் இனிமையை ரசிப்பார்கள்.

**ஸ்**விட்சர்லாந்தில் பன்னாட்டுக் கவியரங்கம் ஒன்று நடைபெற்றது. இந்தியாவிலிருந்து இரண்டு கவிஞர்கள் அதில் பங்கேற்றனர். ஒருவர் இந்திக் கவிஞர்; மற்றவர் உருதுக் கவிஞர். இந்திக் கவிஞர் பெயர் தேவையில்லை. உருதுக் கவிஞர் பெயர் ஸாகர் நிஜாமி. இந்திக் கவிஞருக்கு உரிய மரியாதை கொடுத்து கூட்டத்தினர் அமைதியாக அவரது கவிதையைக் கேட்டனர். ஆனால் அதை மீண்டும் சொல்லுமாறோ, அவர் இயற்றிய வேறு கவிதைகளைக் கூறுமாறோ கூட்டத்தினர் கேட்டுக் கொள்ளவில்லை.

ஸாகர் நிஜாமியின் உருது கவிதையில் மக்கள் மயங்கிவிட்டனர். அந்நாட்டு மக்கள் ஜெர்மன், பிரெஞ்ச், இத்தாலியன் மொழிகளே அறிந்தவர்கள். இந்தியோ, உருதுவோ இதுவரை காதால் கேட்டதில்லை. ஆயினும் மக்கள் உருதுக் கவிஞரை மீண்டும்-மீண்டும் கவிதை சொல்லச் சொன்னார்கள். கவிஞர் ஸாகர் நிஜாமியாலேயே இத்தகைய வரவேற்பைப் புரிந்துகொள்ள முடியவில்லை. மக்கள் உருதுச் சொற்களைப் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் சொற்களின் இனிமை அவர்களின் இதயத்தைத் தொட்டுவிட்டது. உலக மொழிகளிலேயே இனிமை, மென்மை, நளினம், கலைநயம் மிகுந்த மொழி உருதுதான்.*

துரதிருஷ்டவசமாக இந்திக் கவிஞர் வாசித்தது இக்காலப் புதுக்கவிதை. அதில் சொற்களின் இனிமையோ, சீரான வரிசையோ, ஏற்ற இறக்கமோ, சந்த லயமோ, இசை நயமோ இல்லை. சொற்களை இஷ்டப்படி அமைத்து, வரிகளின் நீளம் சரிபார்க்காமல், ஓசை நயமுமின்றி, சாதாரணமாகப் பேசுவதுபோல் கவிதையை வாசித்து முடித்துவிட்டார். இந்தி தெரிந்திருந்தால் மக்கள் அர்த்தத்தையாவது ரசித்திருப்பார்கள். அதற்கும் வழியில்லாமல் போய்விட்டது.

கூட்டத்தினர் ஸாகர் நிஜாமியை ஆறு மணி நேரம் பிழிந்தெடுத்துவிட்டனர். ஒரே கவிதையைப் பலமுறை பாடத் தூண்டினர். அடியோடு களைத்துப்போன நிஜாமி கூட்டத்தினரைப் பார்த்து,

---

* நாம் இந்திமொழியை அறிந்திராவிடிலும், அல்லது இந்திமொழியை எதிர்த்தாலும் இந்தித் திரைப்படப் பாடல்களில் நம்மை அறியாது மயங்குகிறோம் அல்லவா? அவை உண்மையில் உருதுமொழிப் பாடல்களே! இந்தித் திரைப்படங்களின் பெயரும் கவர்ச்சிக்காக உருதுமொழியில்தான் வைக்கப்படுகிறது.

"என்ன விஷயம்? என் கவிதைகளின் அர்த்தம் உங்களுக்குப் புரியாதே. பிறகு ஏன் 'ஒன்ஸ்மோர்' என்று பலமுறை கேட்கிறீர்கள்?" என்று கேட்டார்.

கூட்டத்தினர் அதற்கு, "அர்த்தம் தெரிந்தாக வேண்டும் என்று எங்களுக்குத் தோன்றவில்லை. நீங்கள் பாடும் கவிதைகளில் வரும் சொற்களின் இனிமையும், வரிகளின் இசைமயமான அமைப்பும் எங்களை 'கப்'பென்று பிடித்துக் கொண்டு விடுகிறது. உங்கள் கவிதைகளின் ஓசைநயம் இதயத்தை மத்துபோல் கடைந்தெடுக்கிறது. கவிதையின் அர்த்தம் புரியாவிடிலும் மொத்தமாகக் கவிதைபுரிந்தது போன்றே நாங்கள் உணர்கிறோம்," என்று பதிலளித்தனர்.

நான் இங்கே உரையாற்றும்போது என் சொற்கள்தாம் உனக்குப் புரிய வந்தால் வட்டத்தின் சுற்றளவு எல்லைவரை நீ வந்துவிட்டதாகக் கொள்ளலாம். என் உரையை சங்கீதமாக உன்னால் உணர முடிந்தால் நீ வட்டத்தின் மையப்புள்ளிக்கு வந்துவிட்டாய் என்று அர்த்தம். இங்கிருந்து நீ திரும்புகையில் சொற்களை மட்டும் எடுத்துச் சென்றாயானால் நீ முன்பைவிட கூடுதலான அறிவாளியாக விளங்குவாய். முன்பே நீ ஓரளவு அறிவாளிதான். அந்த அறிவு என்னும் நோய் என் சொற்களை மட்டும் நீ கேட்டதால் இப்போது அதிகரித்துவிட்டது எனலாம்! என் உபதேசத்தின் அடிநாதமாகிய சங்கீதம் உனக்குக் கேட்பதற்கு வசப்பட்டது என்றால் நீ முன்பைவிட எளிமையுடன் சுமையேதும் இன்றி விளங்குவாய். நீ கொண்டுவந்த அறிவையும் இங்கேயே உதறிவிடுவாய்.

சொற்களின் சேர்க்கை உடலமைப்பைப் போன்றது. அவற்றினுள்ளே இருக்கும் ரசம்-சாரம்-சொற்களின் ஆத்மா ஆகும். என் சொற்களில் மறைந்துள்ள இசை உன்னை சூழ்ந்ததும், நீ உன்னை அதில் இழந்து, சாய்ந்தாடும்போது, அது உன்னை மெய்ம்மறக்கச் செய்யும்போது நீ உன் உயிரின் மையத்தை ஸ்பரிசிக்கிறாய்; ஒலிகளின் மூல ஒலியை ஸ்பரிசிக்கிறாய்.

நான் நிகழ்த்தும் உரை மேலோட்டமானது. நான் உனக்குக் கொடுப்பதோ என் பேச்சிலிருந்து வித்தியாசமானது. சொற்கள் உன்னைப் பிடித்து நிறுத்துவதற்காக மட்டுமேயாகும். அவ்வாறு நீ சொற்களில் ஆழ்ந்திருக்கும்போது நான் உன் இதயமென்னும் பாத்திரத்தை நிரப்பிவிடுவேன்.

சொற்கள் தர்க்கத்தை அடிப்படையாகக் கொண்டவை. அர்த்தம் மாறக் கூடியவை. காலம், சூழ்நிலைக்குக் கட்டுப்பட்டவை. சொற்களின் மூலம் உட்புறக் கதவுகள்-உள் வாழ்க்கைக் கதவுகள்-திறப்பதில்லை. அர்த்த மாற்றத்தாலும், அர்த்தக் குழப்பத்தாலும்தான் மக்கள் ஆன்மிகப் பாதையில் ஆங்காங்கே தேங்கி நிற்கிறார்கள்.

என் உரையை, சொற்களைக் கேள். ஆனால் ஓரளவு உள்ளே எட்டிப்பார். கரையிலேயே, மேற்புறத்திலேயே மேய்ந்து கொண்டிராதே. கடலின் மேற்புறம் உள்ள அலைகளின் ஸ்பரிசத்தோடு நின்றுவிடாதே. நீ ஆழத்தில் இறங்கு. முழுக்குப்போடு. என்னுடைய சொற்களில் நீ மூழ்கி எழுந்தால், நீ சூன்யநிலையின் சுவையை உணர்வாய். அதுதான் சூன்யத்தின் சங்கீதம். இந்த நிலையை நீ வற்புறுத்தி அடைய முடியாது. இது தானாக, இயற்கையாகவே மலர்கின்ற நிலை.

உனக்குள் ஆன்மிக மலர்ச்சி ஏற்பட வேண்டும் என்று முன்கூட்டியே எதிர்பார்க்காதே. எதிர்பார்த்தால் ஏதேனும் குறுக்கீடு வரும். குறிப்பிட்ட தினத்தன்று இந்த மாறுதல் ஏற்பட்டுவிட வேண்டும் என்று பிடிவாதமாக இருக்காதே. மலர்ச்சி-மாறுதல் சுயமாக ஏற்பட்டுத் தான் வருகிறது. நீ குறுக்கிடாதே. முன்கூட்டியே ஆசைப்படாதே. ஏனென்றால் திட்டம்போட்டு நடைபெறும் நிகழ்ச்சியில்லை இது. திட்டமிட்டால் உடனே புத்தியின் துணை தேவைப்படும். புத்தி பலவகையான கணக்குப்போடும். ஆன்மிகம் லௌகிகமாகி (உலகியலாகி) விடும்.

உனக்கு மென்குரலில் பாடவேண்டுமெனத் தோன்றினால் தயங்காமல் பாடு. அதில் பிடிப்பு ஏற்பட்டால் ஆழ்ந்து லயித்துவிடு. ஆனால் ஆன்மிக உணர்வு சட்டென்று தோன்றாவிடில் மன இறுக்கம் கொள்ளாதே. 'இதோ வரும்-அதோ வரும்' என்று காத்துக் கொண்டிருக்காதே. காற்று வீச வேண்டிய நேரத்தில்தான் அது வீசும். கடவுள் என்னும் காற்றும் அது இஷ்டப்படும்போதுதான் வீசும். மனிதன் சாதாரணக் காற்றை தன் வசதிப்படி இழுக்க முடியாததைப் போல், கடவுள் என்னும் காற்றையும் பிடித்து இழுத்துக் கொண்டுவர மனிதனால் முடியாது. கடவுளின் அருள் அவர் விரும்பும்போது நமக்கு பிரசாதமாகக் கிடைக்கும்.

எல்லாம் சுபமாக நடைபெற்று வருகிறது. ஆன்மிகப் பயனை வற்புறுத்திக் கேட்காதே. வாழ்க்கையின் மற்ற நிகழ்ச்சிகளைப்

போலவே ஆன்மிக அனுபவத்தையும் அப்படியே தொடர்ந்து பெற முடியாது. தானாகவே அது விட்டு-விட்டுக் கிடைக்கும்.

கடவுள் உனக்கு எதை வழங்குகிறாரோ அதை ஏற்றுக்கொள். என்றைக்குக் கொடுக்கிறாரோ அன்றே, உடனே நன்றி தெரிவித்துவிடு. கொடுக்காத அன்றைக்கும் 'கடவுளே உமக்கு எல்லாம் தெரியும்' என்று நன்றி கூறு. உனக்கு என்றைக்குக் கொடுக்கிறாரோ அன்றுதான் உனக்குப் பொருத்தமான நாள் என்று கடவுள் நினைப்பதைப் புரிந்துகொள்.

## மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே, உங்களுடன் தொடர்பு ஏற்பட வேண்டுமானால் சந்நியாசம் மேற்கொள்வது கட்டாயமா? நான் இதுவரை துறவறம் மேற்கொள்ளவில்லை. தனிப்பட்ட முறையிலும் உங்களைச் சந்தித்ததில்லை. ஆனாலும் உங்களைக் குறித்து அபூர்வமான உணர்ச்சிகளால் நிறைந்து போயுள்ளேன். சில சமயம் அழுதும்விடுகிறேன். சில சமயம் தொலைவிலிருந்து உங்களைப் பார்த்தபடி இருக்கிறேன். எனக்கு ஏன் அவ்வாறு நேர்கிறது? இது சம்பந்தமாக நான் என்ன செய்ய வேண்டும்?**

சந்நியாசம் என்பது ஓர் அணுகுமுறை மட்டுமே. என்னுடன் தொடர்பு கொள்வதற்கான வசதியான சாக்கு என்றும் அதைக் கூறலாம். நாம் ஒருவரிடம் நமக்குள்ள அன்பை வெளிப்படுத்த விரும்புகிறோம். அதற்காக அவரது கையை நம் கையில் எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமா? அவரை மார்புடன் அணைத்துக் கொள்ள வேண்டியது கட்டாயமா? அன்பு இல்லாமலேகூட சமூக வழக்கமாக நாம் பிறரை மார்புடன் தழுவிக் கொள்வது உண்டு. ஆனால் அன்பு இருந்தால் ஒருவரையொருவர் தழுவிக் கொள்ளாமலிருப்பதும் சாத்தியப்படாது.

மீண்டும் கேள். கையுடன் கை கோக்காமலேயே இருவரிடையே அன்பு தோன்ற முடியும். ஆனால் அன்பு தோன்றிவிட்டால் கையுடன் கை சேராமல் இருப்பது சாத்தியப்படாது. அன்பு பல வகையில்

வெளிப்படும். யாரை நாம் நேசிக்கிறோமோ அவரைச் சந்திக்கச் செல்கையில் அன்பளிப்பாக ஏதாவது எடுத்துச் செல்கிறோம். அது பூவாகவோ, பூவின் மொட்டாகவோ இருந்து விட்டுப் போகட்டுமே. அன்பை வெளிப்படுத்த பரிசுப் பொருள் எடுத்துச் செல்லத்தான் வேண்டுமா? இல்லை, துளிக்கூட கட்டாயமில்லை. ஆனால் அன்பு ஏற்பட்டுவிட்டால் அதை வெளிப்படுத்த ஏதாவது கொடுக்க வேண்டும், தனது எல்லாவற்றையும் கொடுக்க வேண்டுமென்ற தீவிரம் தோன்றும்.

சந்நியாசம் என்றால் என்ன அர்த்தம்? 'நான் என்னையே சமர்ப்பிக்க தயாராக உள்ளேன்' என்னும் செய்தியின் அறிவிப்புதான் சந்நியாசம் என்பது. அந்த அறிவிப்பின் அடிப்படையில், 'நீங்கள் என் கையை உங்கள் கையில் எடுத்துக்கொண்டால், நான் உங்கள் கையை உதறிவிட்டு எங்கும் தப்பித்து ஓடிப்போக மாட்டேன்' என்று நான் உறுதியளிக்கிறேன். சந்நியாசம் என்பது உள்ளத்தின் நிலைமையின் வெளிப்பாடாகும். 'நான் உங்களுடன் சேர்ந்து இருக்கிறேன். நீங்களும் என்னுடன் இணைந்து இருங்கள்' என்பதை வெளிப்படுத்தும் மதிப்புமிக்க அடையாளமே சந்நியாசம்.

என்னுடன் சம்பந்தப்பட சந்நியாசம் மேற்கொள்வது அவசியமா என்று கேட்டதிலிருந்து கேள்வி கேட்டவன் துறவறத்தை அதிகக் காலம் தள்ளிப்போட முடியாது என்பது வெளிப்படுகிறது. அந்த விருப்பம் உயிரில் கலந்துவிட்டது. ஆனால் கொஞ்சம் பயமும் உள்ளதால் இப்படிக் கேள்வி பிறக்கிறது.

அழைப்புக் குரல் கேட்டுவிட்டது. ஆகவேதான் நீ கண்ணீர் விட்டாய்; என்னைப் பார்த்தபடி இருந்தாய். ஆனால் எவ்வளவு காலம்தான் அழுவது? எவ்வளவு காலம்தான் பார்ப்பதுடன் நிறுத்திக் கொள்வது? கதவு திறந்திருக்கிறது. உள்ளே நுழை.

தனிப்பட்ட முறையில் என்னைச் சந்திக்கவில்லை என்று கூறினாய். ஒருவேளை பயம் காரணமாக என்னை நெருங்க அஞ்சி யிருப்பாய். ஆம், ஜாக்கிரதையாகச் சந்திக்க வேண்டும். இல்லாவிடில் சட்டென்று உன்னைப் பிடித்து சாமியாராக்கி விடுவேன் அல்லவா!

ஆனால் என்னிடமிருந்து அதிகக் காலம் ஒளிந்து கொள்ளவும் முடியாது. அன்பை ஒளித்துவைக்க முடியுமா? நூற்றுக் கணக்கான

உபாயம் செய்தாலும் அன்பை மறைக்க முடியாது. என் எதிரில் நீ வந்தாலே நான் உன்னை அடையாளம் கண்டுகொள்வேன். 'இவன்தான் அழுதவன்; இவன்தான் என்னை உற்றுப் பார்த்தபடி இருந்தவன்' என்பதைக் கண்டுபிடித்து விடுவேன். ஆகவே நன்கு யோசித்தபின் என்னிடம் வா.

முதலில் உன் வாழ்க்கையில் சமர்ப்பண உணர்வு உதித்த பிறகு தான் நீ என் எதிரில் வருகிறாய். அனைத்தையும் துறக்க உன் உள்ளம் சம்மதித்தபின், வணங்கி அடக்கமாக இருக்க நீ தயாரானபின், எனது சூன்யக் கொள்கையுடன் உனது சிந்தனையை முடிச்சுப் போட்டுக் கொள்ள நீ தயாரான பிறகுதான் என்னிடம் வந்துசேரத் தூண்டப் படுகிறாய்.

இதுவும் ஒருவகையான திருமண முடிச்சுதான், திருமணம்தான். உன் கழுத்தில் போடப்படும் மாலை ஒருவகையில் தூக்குக்கயிறு போன்றதுதான். இது உன் 'இருத்தல் உணர்வை' நீக்கும் உபாயமாகும். நீ காணாமல் போய்விடுவாய். உனக்கு அணிவிக்கப்படும் காவி ஆடையின் நிறம் உனது முந்திய வாழ்வை எரிக்கும் சிதை நெருப்பின் அடையாளமாகும். துறவின் மூலம் 'நான்' என்னும் உணர்வு மறைந்துவிட்டால் கடவுள் உனக்குள்ளே வந்து குடியேறுவார்.

சந்நியாசம் என்பது ஒருவகையான வீரம்; யாருக்கும் எதற்கும் அடங்காத வீரம். என்னிடம் சந்நியாசி ஆகின்றவர்களுக்குக் கூடுதலான தைரியம் தேவை. ஏனெனில் என் சீடர்களுக்கு சமூகத்தில் அவ்வளவாக மரியாதை தரப்படுவதில்லை. நான் கற்பிக்கும் சந்நியாச முறை காரணமாக நீ எங்கே போனாலும் தொந்தரவு இருக்கும்; இடைஞ்சல் எழும். மனைவி-குழந்தைகள்-பெற்றோர்-உறவினர்-கடையில் வேலை செய்பவர்கள், வாடிக்கையாளர்கள் ஆகிய எல்லோருடனும் எரிச்சலூட்டும் உரசல் உண்டாகும். என் காரணமாக விளைகின்ற இந்தத் தொல்லைகளை நீ அமைதியாகப் பொறுத்துக் கொண்டால் நீ சாட்சி மனப்பான்மை கொண்டவனாக வளர்ச்சி பெறுவாய். இன்னொருவராகிய என் மீதுள்ள அன்பு காரணமாக இந்த மனப்பான்மை தோன்றுவதால் உன் மனத்தில் பக்தி உணர்வும் பிறக்கும்.

**மேகம் முழங்கியது**
**இருண்ட வானில் முழங்கியது**

**மழை பொழிந்தது**
**பிரளய ஓசையுடன் பொழிந்தது**
**மலைகளின் சிகரங்களை உடைத்துச்**
**சீறும் பிரவாகங்கள் பெருகி**
**அருவிகளாகி நதியிடம் நிரம்பி**
**மீண்டும் பொங்கி எழுவதுபோல்**
**நீயும் பல பிறவிகளுக்கும் சேர்த்து**
**இன்றே பொங்கியெழு**

புத்தர் சமாதி நிலைக்கு தர்மமேக சமாதி என்று பெயர் சூட்டியுள்ளார். சாதகன் வெற்றிகரமாக சமாதிநிலையை அடையும்போது அவன் மேகமாகி விடுகிறான். தர்மத்தின் ஜலம் (அற நீர்) அவனிடமிருந்து அருவியாகச் சொட்டுகிறது. மேகத்திலிருநது மழை பெய்வதுபோல்தான் இதுவும்.

இந்த நல்ல சமயத்தை நழுவ விடாதே. உன் உள்ளத்தில் ஒலிக்கும் குரலை அமுக்கி விடாதே. சந்நியாசத்தின் மீது உனக்கு ஈர்ப்பு உண்டாகியுள்ளது. பின்வாங்காதே.

நல்லது செய்ய நாள் கடத்தாதே. கெடுதல் செய்யத்தான் தாமதிக்க வேண்டும். கோபம் வருகிறதா? அதை நாளைய தினம் வெளிப்படுத்திக் கொள்ளலாம். அன்பு சுரக்கிறதா? உடனே வெளிப் படுத்திவிடு. ஒத்திப்போடாதே. நாளைய தினம் எப்படியிருக்குமோ? ஒருவரை விரோதித்துக் கொள்ள வேண்டுமா! நாளை விரோதிக்கலாம், நாளை மறுநாள் விரோதிக்கலாம் என்று நாள்களை நகர்த்திக்கொண்டே செல். நட்பை உருவாக்கிக் கொள்வதாயின் நொடிப்பொழுதும் தள்ளிப் போட வேண்டாம். இப்பொழுதே, இங்கேயே நட்பை ஏற்படுத்திக் கொள். உடனே முயன்றால்தான் நட்பு துளிர்க்கும் பிறகு சிநேகம் செய்து கொள்ளலாம் என்று தவிர்த்தால் என்றுமே வாய்ப்புக் கிடைக்காமல் போகும். உன் தாமதம் உன்னை நெருங்கியவர் மனத்தில் சந்தேகத்தை விளைவித்து மீண்டும் கிட்டவராமல் தடுத்துவிடும்.

**கூடலில் யாருக்குத் தான்**
**துடிதுடிப்பில்லை?**

அடிவானம்வரை பரவிய பூமி
அடிக்கடி கேட்கிறது ஒரு கேள்வி-

'நீ எப்போது வந்து என்னுடன் கலந்து
சாந்த நிலையை அடையப் போகிறாய்?'

வானில் தடையின்றி வீசும் காற்று
கணந்தோறும் கேட்கிறது ஒரு கேள்வி-
'உன் உடலென்னும் சுவர் எப்போது விழுந்து
அதில் சிறைப்பட்டுள்ள உன் மூச்சுக் காற்று
என்னுடன் கலந்து சுதந்திரம் ஆகும்?'

எங்கும் பரவிய உலக மகாசக்தி
விடாது கேட்கிறது ஒரு கேள்வி-
'"நான்" எனும் உனது அகந்தை அழிந்து
எப்போது பூரணமாய் என்னுடன் கலப்பாய்?'

கடவுளும் உன்னைச் சந்திக்க, உன்னுடன் இணையத் துடிப்புடன் இருக்கிறார். நீதான் அவரைத் தேடி அலைவதாக நினைக்காதே. அவரும் உன்னைத் தேடிவருகிறார். நீ மட்டுமே அவரை நோக்கி ஓடவில்லை. அவரும் உன்னை நோக்கி ஓட்டமாக வருகிறார். நெருப்பு இரு பக்கமும் எரிகிறது. இதில்தான் மகிழ்ச்சி நிறைந்துள்ளது; சுவை நிறைந்துள்ளது.

நான் உன்னை சந்நியாசம் ஏற்க அழைக்கிறேன். ஏனெனில் என்னிடம் உள்ளதைப் பிறருக்குப் பகிர்ந்தளிக்க விரும்புகிறேன். நீ ஏற்றுக்கொண்டால் நான் உனக்குக் கடமைப்பட்டவனாவேன்! உனக்கு நன்றி கூறுவேன்! யோசித்தபடி ஊர்ந்து செல்லாமல், ஒரு தாவலில் சந்நியாசியாகிவிடத் தோன்றினால், தயங்கி நில்லாதே. நாளைக்கு மீண்டும் அப்படியொரு சந்தர்ப்பம் வராது.

**பு**த்தர் தமது நாற்பது ஆண்டு கால யாத்திரைகளில் ஒரு குறிப்பிட்ட ஊர் வழியாக முப்பது முறை சென்றிருக்கிறார். ஒரு மனிதன் அவரை அணுகி சந்நியாசியாக தீட்சை பெற ஆசைப் பட்டான். அதைச் சட்டென்று செயல்படுத்த முடியவில்லை. அடிக்கடி விருந்தாளிகள் வந்தார்கள். ம்னைவிக்கும் அடிக்கடி ஏதாவது ஒரு நோய் வந்து படுத்தியது. சில சமயம் தனக்கே தலைவலி முதலிய தொந்தரவு உண்டானது. கடையிலிருந்து நினைத்தபோது கிளம்ப

முடியாதபடி வாடிக்கையாளர்களின் கூட்டம். அவர்கள்தான் தனது வாழ்வாதாரம் என்பதால் அவர்களைப் புறக்கணிக்கவும் முடியாது. கடையில் சற்று ஓய்வாக இருந்தால் நண்பர்கள் சந்திக்க வந்தபடி இருந்தனர். இப்படியே அவன் நீண்ட காலமாக புத்தர் வருகை தந்த முப்பது முறையும் அவரை தரிசிக்கத் தவறிவிட்டான்.

முப்பது முறையுமா சந்திக்க முடியவில்லை என்று வியப் படையாதே. உன் கதையும் அதுவேதான். நீ மூவாயிரம் முறைகூட வாய்ப்பை நழுவ விட்டிருக்கிறாய். இதுவரை நீ எத்தனை பிறவிகள். எடுத்துள்ளாய். எத்தனையோ புத்தர்களைச் சந்திக்கத் தவறிவிட்டாய். நீ உனது வாழ்க்கைப் பாதையில் அக்கம்பக்கமாகச் சென்ற புத்தர்களை நீ நெருங்கவில்லை. 'அப்படியென்ன பெரிய அவசரம்? எத்தனையோ வேலைகள், கடமைகள் மிஞ்சியுள்ளன. அவற்றை முடித்துக்கொண்டு பிறகு அப்போதைய புத்தரிடம் போய்க் கொள்ளலாம்' என்று நீ நினைக்கிறாய்.

நாம் செய்ய வேண்டிய கடமைகளின் பட்டியலில் கடவுளை அடைய முயலுவதைக் கடைசி இடத்தில் வைத்திருக்கிறோம். எல்லா வேலைகளும் முடிந்தபின், கையில் ஒன்றும் மிச்சமில்லாது போனபின் கடவுள் விஷயத்திற்கு வரலாம் என நினைக்கிறோம்.

பிறகு ஒருநாள் அந்த ஊரில் ஒரு செய்தி பரவியது. புத்தர் அன்றைய தினம் உயிரை விட உள்ளார் என்பதே அச்செய்தி. நாம் முன்பு சொன்ன மனிதன் அதிர்ச்சியடைந்தான். தன் மனைவிக்கு வழக்கம்போல் அன்றும் உடல்நலமில்லை; மகளின் திருமணப் பேச்சு நடைபெற்றுவருகிறது; தன் கடையில் வாடிக்கையாளர்கள் காத்திருக் கின்றனர் என்றெல்லாம் கவலைப்படாமல் புத்தமடத்தை நோக்கி ஓடினான். கடையைப் பூட்டக்கூட இல்லை. அவனைப் பார்த்து மக்கள், "எங்கே இப்படித் தலைதெறிக்க ஓடுகிறாய்? உனக்கென்ன பைத்தியம் பிடித்துவிட்டதா?" என்று கேட்டார்கள். அவன் எதையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அப்படி ஓடியும் அவன் போய்ச்சேரத் தாமதமாகிவிட்டது.

அதற்கு ஒரு மணி நேரம் முன்னர்தான் புத்தர் சீடர்களிடம், "நீங்கள் ஏதாவது கேட்க, தெரிந்துகொள்ள விரும்புகின்றீர்களா? எதுவும் மிச்ச மில்லையென்றால் நான் இப்போது மறைந்துபோக

விரும்புகிறேன். நான் புறப்படும் வேளை வந்துவிட்டது. எனது படகும் தயாராகக் கரையில் காத்திருக்கிறது. நான் கிளம்பட்டுமா?'' என்று கேட்டார்.

பிட்சுகள் அவரை வணங்கி, ''நாங்கள் கேட்காமலேயே நீங்கள் எங்களுக்கு ஏராளமான நல்லுரை வழங்கியிருக்கிறீர்கள். நாங்கள் மேற்கொண்டு கேட்பதற்கு என்ன மிஞ்சியுள்ளது? நீங்கள் இதுவரை வழங்கிய உபதேச மொழிகளையே கூட நாங்கள் இன்னமும் முழுமையாகப் புரிந்து கொண்டதில்லை. அவற்றின் சாரத்தை நாங்கள் பல பிறவிகள் எடுத்தால்தான் உள்வாங்க முடியும்,'' என்று கூறி, கண்ணீர்விட்டனர்.

புத்தர் அமைதியாக மரத்தின் இன்னொரு புறம் சென்று அமர்ந்தார். தன் உடலையே அந்நியமாக, சாட்சியாகக் கருதி அதைவிட்டு வெளியேறினார்!

அப்பொழுது பார்த்து அந்த மனிதன் ஓட்டமாக அங்கு வந்து சேர்ந்தான். ''புத்தர் எங்கே? கண்ணில் படவில்லையே. மறுபடியும் நாளைக்கு வரமுடியாது. இன்றே அவருக்குக் கடைசி நாளாம்,'' என்று கதறினான்.

பிட்சுகள் அவனை மிரட்டினார்கள்: ''இந்தாப்பா, வாயை மூடு. நீ வாய்ப்பை இழந்துவிட்டாய். நாங்கள் அவரிடம் முறையாக விடைபெற முடிந்தது. அவர் வாழ்க்கையை மூடியுள்ள மடிப்புகளை ஒவ்வொன்றாகக் கடந்து வெளியேறி முடிவில்லாத பயணத்தை மேற்கொண்டுவிட்டார். அவரது படகு கரையிலிருந்து இதோ புறப்படவுள்ளது. இனி நீ அவரைப் பார்க்க முடியாது. காலம் கடந்துவிட்டது.''

புத்தர் அப்போதுதான் மனத்தையும் அந்நியமாகக் கருதி அதிலிருந்தும் வெளியேறிக் கொண்டிருந்தார். அவர் முழுமையாக வெளியேறி இருந்தால் இந்த உரையாடலை அவர் கேட்டிருக்க முடியாது. மனத்தின் கடைசித் துறையிலிருந்து படகின் கயிற்றை அவிழ்த்துக் கொண்டிருந்தார். அவர் காதில் பேச்சு விழுந்ததும் திரும்பிவந்தார்!

''அவனைத் தடுக்காதீர்கள். எனக்குக் கெட்ட பெயர் உண்டாகும். நான் மூச்சுவிட்டுக் கொண்டிருந்தபோது என்னிடம் வந்துசேர விரும்பிய ஒருவன் என் வாசல்வரை வந்தும் வெறுங்கையுடன்

திரும்பிச் செல்ல நேர்ந்தது என்னும் அவப்பெயர் எனக்கு வேண்டாம். அவன் கேட்க விரும்புவதைத் தடுக்காதீர்கள். முப்பது ஆண்டுகளை அவன் நழுவவிட்டது தப்புதான். ஆகவே நானுமா திருப்பி ஒரு தப்பு செய்ய வேண்டும்? அவசரம் என்றதும் அவன் வந்தடைந்து விட்டா னல்லவா? முப்பது வருஷத்திலேயே என்னை அடைந்துவிட்டது ஒரு சாதனைதானே? எத்தனையோ பேர் முப்பது பிறவிகளெடுத்தும் என்னை அடைந்தாரில்லை," என்று புத்தர் சுட்டிக் காட்டினார்.

**பு**த்தர் கூறிய கதை ஒன்று. பார்வையிழந்த ஒருவன் ஓர் அரண்மனைக்குள் மாட்டிக் கொண்டான். அரண்மனைக்கு எத்தனையோ வாசல்கள் இருந்தும் அரசன் எதிரிகளின் பயம் காரணமாக ஒரு வாசலை மட்டுமே திறந்து வைத்திருந்தான். மற்றவை மூடப்பட்டிருந்தன. பார்வையற்ற அந்த மனிதன் எங்காவது திறந்திருக்கிறதா என்று சுவரைத் தடவியபடியே சுற்றி வந்தான். திறந்த வாசல் அருகே வந்தபோது தலையில் உறுத்தல் ஏற்பட்டுக் கையால் சொறிந்ததால் அவன் சுவரில்லாததைத் தடவி அறியாமல் போய்விட்டான். பிறகு மீண்டும் சுற்ற ஆரம்பித்துச் சிறிது நேரம் கழித்து அதே திறந்த வாசலருகே அவன் வந்தான். அப்போது பார்த்து அவன் மூக்கின்மேல் ஓர் ஈ மீண்டும்-மீண்டும் வந்து உட்கார்ந்தது. அதை விரட்டும் முயற்சியில் அவன் மீண்டும் அந்த வாசலைத் தவறவிட்டான்!

வாழ்க்கையில் லட்சக்கணக்கான நிமிஷங்கள் கழிந்தபடி உள்ளன. அவ்வப்பொழுது குறிப்பிட்ட நிமிடத்தில் நீ சந்நியாசத்திற்கு மிக அருகில் வந்துவிடுகிறாய். அந்த சமயம் பார்த்து ஈயை விரட்டிக் கொண்டிருக்காதே. தலையைச் சொறிய ஆரம்பித்து விடாதே. மறுபடியும் அந்த வாய்ப்பு வருமோ, வராதோ; திறந்த வாசல் மறுபடியும் வருமோ வராதோ, யாருக்குத் தெரியும்?

தனிப்பட்ட முறையில் என்னைச் சந்தித்திராதபோதிலும், என்னை நினைத்து அதிசயமான உணர்வுகள் எழுவதாகவும், அதனால் சில சமயம் அழுவதாகவும், சில சமயம் என்னையே கவனிப்பதாகவும் கேள்வி கேட்டதை நினைவுபடுத்துகிறேன்.

இது சுபமான அடையாளம். இருவருக்கும் இடையே சில அம்சங்கள் பொருந்திவருவதன் அடையாளம். உன் வாழ்க்கைப்

பிரவாகம் என் வாழ்க்கைப் பிரவாகத்திற்கு இணையாகப் பாய்ந்தோடத் தயாராகி வருகிறது. நீ இறக்கைகளை விரித்துப் பறக்க சம்மதித்து விட்டாய். ஆகவே புதிய-புதிய அனுபவங்களை நீ சந்திப்பாய். புதியது என்றாலே பயப்பட வேண்டிய தேவையில்லை. பழைய விஷயம் எனில் நமக்கு அறிமுகமானதாக இருக்கும். அறிமுகமான ஒன்றிடமிருந்து கஷ்டம் ஏற்படலாமே தவிர, பயம் ஏற்படாது. துன்பம் நமக்குப் பழக்கமாகிவிட்டால் சுகத்தைக் கண்டு பயப்படுவோம். சுகம் நம் வாசலுக்கு வந்தால் கதவைச் சார்த்திவிடுவோம்! மூன்று காரணம் சொல்வோம்: உலகில் சுகமே கிடையாது; சுகம் என்ற பெயரில் வருவது ஏமாற்றுவேலையாக இருக்கும்; துன்பம் பழகிப்போய் விட்டதால் அதுதான் வாழ்க்கைக்கு வசதியாக உள்ளது. சிறையில் நீண்ட காலம் இருப்பவர், அந்த வாழ்க்கை பழகிவிட்டதால், வெளியே வருவதற்கு சங்கடப்படுவார். அந்த அளவிற்குச் சிறை வாழ்க்கையுடன் சமரசம் ஏற்பட்டுவிட்டது.

**நா**ன் சில ஆண்டுகள் மத்திய பிரதேசத்தில் வசித்தேன். அங்குள்ள மத்திய சிறைச்சாலையின் வார்டன் எனக்குத் தெரிந்தவராய் இருந்தார். அவர் என்னை முடிந்தபோது சிறைக்குள் வந்து கைதிகளுக்கு உபதேசம் செய்யக் கேட்டுக் கொண்டார். நான் முதல் முறையாகச் சிறைக்குள் சென்று சில கைதிகளைச் சந்தித்துப் பேசினேன். சில மாதங்கள் கழித்து மீண்டும் சென்றேன். அதே முகங்கள்தாம். சிலர் விடுதலையாகி மீண்டும் திரும்பிவிட்டவர்கள்! சில ஆண்டுகள் பல முறை அங்கே போயிருந்தேன். எத்தனையோ பேர் அவ்வப்போது விடுதலையானாலும் ஒன்று அல்லது இரண்டு மாதங்களில் சிறை வாழ்க்கைக்கே திரும்பி விடுவது தெரிந்தது. நான் வயோதிகராயிருந்த ஒரு கைதியிடம், "நீங்க எத்தனையாவது முறையாக இங்கு வந்துள்ளீர்கள்?" என்று வினவினேன்.

"இப்போது பதின்மூன்றாம் முறையாக இங்கே வந்துள்ளேன், ஐயா."

"சிறைக்கு வெளியுலகில் உங்களுக்கு என்ன சிரமம்?"

"வெளியுலகம் எனக்குத் தோதாக இல்லை. எனக்கு பிரியமான வர்கள் எல்லாரும் இந்த ஜெயிலில்தான் உள்ளனர்! இவர்கள் தாம் எனக்கு வேண்டியவர்கள். வெளியே எல்லாம் அறிமுகமில்லாததாக

உள்ளது. வெளியே ஆயிரமாயிரம் தொல்லைகள். சாப்பாட்டுக்கு கஷ்டப்படாமலிருக்க வேலை தேடிக்கொள்ள வேண்டும். வசிக்க இருப்பிடம் தேவை. அங்கே வாழ்க்கை நடத்தப் பலவிதமான சாமான்கள் வாங்க வேண்டும். இங்கே ஜெயிலில் எல்லா வசதிகளும் உள்ளன. சாப்பாட்டுக்குக் கவலையில்லை. ரேஷன் கடைக்குப் போய் வரிசையில் காத்திருக்க வேண்டியதில்லை. நாலு மணிக்கே எழுந்து, தெருக்குழாய்க்குப் போய், சிரமப்பட்டு வீட்டிற்குத் தண்ணீர் பிடித்து வரத்தேவையில்லை. தேவைப்படும்போது டாக்டரே எங்களைத் தேடிவந்து இலவசமாக வைத்தியம் பார்க்கிறார். பெரிய அதிகாரிகள் பார்வையிட வரும்போது சில சமயம் எங்களைச் சங்கிலியால் கட்டி விடுவது தவிர போலீஸ்காரர்கள் வேறு சிரமம் தருவதில்லை. அவர்களுடன் நெருங்கிய நட்பும் ஏற்பட்டுவிட்டது. மற்ற கைதிகளும் என்னிடம் சிநேகமாக உள்ளனர். இந்த இடத்தைவிட்டுப் போக மனசு வருவதில்லை. தண்டனைக் காலம் முடிந்து வெளியே போனாலும் ஏதாவது உபாயம் செய்து இங்கேயே திரும்பி விடுகிறேன்." ஒரு சொற்பொழிவே செய்துவிட்டார்!

சிறையானாலும் நீ அங்கு நீண்ட காலம் வசித்தாயானால் அதுவே உனக்கு வீடுபோல் பழக்கமாகி விடுகிறது. இன்னொரு சிறையும் உண்டு. அதுதான் உன் உடலென்னும் சிறை! இந்தச் சிறையில் நீ பல பிறவிகளாக அடைபட்டுள்ளாய். உனக்கு வெளியே இருந்து முக்தி பெற்ற பறவைகளின் கானம் அழைப்புவிடுத்தால், அவற்றின் இனிய ஒலி உன்னை ஈர்த்தால், உன்னைக் கட்டிப் போட்டுள்ள சங்கிலியை உடைத்தெறிய துணிந்து முயற்சி செய்.

வேடிக்கை என்னவென்றால், இந்தச் சிறையில் உனக்குச் சங்கிலி போட்டுக் காவல் காப்பவன் வெளியாள் எவனுமில்லை. நீதான் சுயமாகச் சங்கிலியை மாட்டிக் கொண்டு உன்னையே வெளியேறி விடாதபடி காவல் காக்கிறாய். உன் துயரங்களுக்கு நீயேதான் காரணம். உனக்கு வானில் பறக்கும் பட்சிகளிடமிருந்து அழைப்புச் சைகை கிடைத்துவிட்டால் நீ தயங்காதே. சிறைக் கதவு மூடியிருக்கவில்லை. உன்னைத் தடுக்க வாசலில் காவலாளியும் எவருமில்லை.

சந்நியாசம் என்பதன் அர்த்தம் நீ புதுமையான ஒன்றைப் பரிசோதித்துப் பார்க்க தயார் என்பதாகும். மேலும், பழைய துன்பங்களுடனான உனது தொடர்பை வேருடன் அறுக்க நீ துணிச்சல்

கொண்டுள்ளாய் என்று அர்த்தம். மேலும், நீ வாழ்க்கைக்குப் புதிய பாணி, புதிய வேஷம் தருவதற்கு சம்மதித்துள்ளாய் என்றும் அர்த்தம். சந்நியாசம் மாவீரமான முயற்சியின் அடையாளம்.

உன் வாழ்க்கையில் அலைபோல் திரண்டு வருகின்ற புதிய-புதிய உள்ளுணர்வுகளை அலட்சியம் செய்யாதே. அந்த அலைகளை இழந்துவிடாதே. அவற்றை உன் வாழ்க்கையில் சுவீகரித்துக் கொள். இல்லாவிடில், அந்த அலைகள் மீண்டும் தோன்றுமா என்பது தெரியாது. முக்தி அனுபவம் பெற்ற குருவின் சொற்களை நீ அடிக்கடி கேட்டபடி இரு. நீயாக எதுவும் செய்ய வேண்டாம். உனக்கு மேலும்-மேலும் அம்மாதிரி நல்லுரைகளைக் கேட்பது பழக்கமாகி விடும். பிறகு உன் மனம் சாந்தநிலையை அடைந்துவிடும். கண்ணீர்விட நேரிடாது.

மறுபடியும் கேள்வியை நினைவுகூருங்கள். 'உங்களுடனான புதிய தொடர்பில் புதிய உள்ளுணர்வுகள் எழுந்தவண்ணம் இருக்கின்றன,' இந்த உள்ளுணர்வுகள் தமது அர்த்தத்தை இழந்துவிடுவதற்கு முன், இந்த உணர்வலைகள் ஜடமாக ஆகிவிடுவதற்குமுன், நீ இந்த அலைகளைச் சிறிது-சிறிதாக சுவீகரித்துக்கொள்.

'சில சமயம் கண்ணீர் மல்குகிறது. சில சமயம் உங்களைப் பார்த்தபடியே இருக்கிறேன்' என்றும் கூறினாய்.

கண்ணீர் ஒரு செய்தியைத் தெரிவிக்கிறது. இதயங்களிடையே தொடர்பு உண்டாகிவிட்டதை அது நிரூபிக்கிறது. அறிவு ஒற்றுமை காரணமாக விளையும் தொடர்பு கண்ணீரை வரவழைக்காது. தலை மட்டுமே அசையும். 'இது சரி-இது தவறு' என்பதை வெளிப்படுத்துவதுடன் தலை அசைவு நின்றுவிடுகிறது. கண்ணீருக்கும் தலைக்கும் சம்பந்தமே கிடையாது. அது கபாலத்திலிருந்து ஊறுவதில்லை. இதயத்தின் நெகிழ்ச்சியால் அது கண்ணில் துளிர்க்கிறது. அது ஆழ் மனத்தில் சுரக்கிறது. கொள்கைகள், கோட்பாடுகள், சம்பிரதாயங்களை விட கண்ணீர் அதிக அர்த்தம் பெற்றுள்ளது. இதயத்தில் நடுக்கம் ஏற்பட்டுள்ளது. உள்ளத்தில் சலனம் உண்டாகியுள்ளதை அது தெரிவிக்கிறது. அந்தக் கண்ணீர் உலர்வதற்கு முன்னால் நீ செய்ய வேண்டியது ஒன்றுள்ளது. அக்கண்ணீரை நல்லதொரு, சகுனமாகக் கருது. கண்ணீர் கூறும் செய்தியை நீ புரிந்து கொண்டால், கண்ணீரின்

பின் மறைந்திருக்கும் ஓர் அற்புதமான சிரிப்பு உன் வாழ்க்கை முழுவதும் எதிரொலிக்கும்.

சந்நியாசம் என்பது என்னைப் பொறுத்தவரையில் சோகமான விஷயம் அன்று. சந்நியாசம் சிரிப்பும் மலர்ச்சியும் நிறைந்தது; ஆனந்தத்தில் ஆழ்த்துவது. அது வாழ்க்கையில் ஒரு புதிய திருப்பம்; புதிய வளர்ச்சி. நீ உடலாலும்; உள்ளத்தாலும் மூடிக்கிடக்கிறாய்; மொட்டாக உள்ளாய்; குள்ளனாக இருக்கிறாய்; சிறையில் இருப்பது போல் அடைபட்டுக் கிடக்கிறாய்.

சந்நியாசம் உனக்குப் புதிய செய்தி சொல்கிறது-இந்த ஆகாயம் முழுவதும் உன்னுடையது. இதன் கீழுள்ள எல்லாவற்றையும் அனுபவி. உலகில் வடியும் சுவையான ரசம் உனக்கே சொந்தம். இந்த சூரிய சந்திரனும் நட்சத்திரங்களும் உனக்காகவே இயங்குகின்றன. மலர்கள் மலர்வதும் உனக்காக. இவற்றின் நறுமணத்தில் திளைத்திரு.

நீ அன்பு வழியில் செல்பவனாயின் எல்லாவற்றையும் அனுபவி. நீ ஞான வழியில் செல்பவனாயின் எல்லாவற்றையும் பற்றி விழிப்புக்கொள். இரண்டு வழிகளும் சரியே. இரண்டுமே உன்னை லட்சியத்தை அடையச் செய்கின்றன. என் சீடர்களில் இந்த இருவகையான துறவிகளும் உள்ளனர்.

எனது சந்நியாச வழி தனியானதொரு சம்பிரதாயமில்லை. இங்கே உலகின் பல மதங்களைச் சேர்ந்தவர்களும் வருகிறார்கள். இப்படி ஒரே இடத்தில் எல்லா மதத்தினரையும் பார்க்க முடியாது. இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், யூதர், பௌத்தர், சீக்கியர், பார்ஸி மதத்தினர் ஆகிய எல்லோரும் இங்கே வந்து தத்தம் வாழ்க்கை பிரவாகத்தை ஒரே கங்கை நதியில் கலக்குமாறு செய்துள்ளனர். இங்கு யாரும் யாரையும் வித்தியாசமாக பாவிப்பதில்லை. எல்லா மதங்களும் சமமானவை என்றோ, சமயங்களிடையே ஒருங்கிணைப்புத் தேவை என்றோ கூட கருதப்படுவதில்லை. இம்மாதிரிக் கண்ணோட்டம் கேட்க நன்றாக இருக்குமேயொழிய நடைமுறைக்கு ஒத்துவராது. 'ஈஸ்வர அல்லா தேரே நாம்' என்று இங்கு யாரும் பாடுவதில்லை. அவ்வாறு சொன்னாலே இந்த இரண்டு பெயர்களுக்கும் இடையே விரோதம் உள்ளது என்று நினைக்கத் தோன்றும். பாடுபவர் பக்தராக இல்லாமல், இந்த இரு பெயர்களையும் இணைக்க முயலும் அரசியல்வாதியாகி விடுகிறார்!

இங்கோ அல்லா என்றோ ஈஸ்வரா என்றோ எப்படி வேண்டுமானாலும் கூப்பிடலாம். நீ கூப்பிடுவது ஒருவரைத்தான் என்று இங்குள்ளோருக்குப் புரிகிறது. இங்கே விளக்கும் முயற்சி கிடையாது.

இங்கே முதல் முறையாக வருபவர்கள் இங்குள்ள சூழ்நிலை கண்டு அசந்து போகிறார்கள். காஷாய உடை அணிந்த முஸ்லிம் துறவிகளைப் பார்த்துத் திகைக்கிறார்கள். இங்கே 'கிருஷ்ண முகம்மது' என்பவரைப் பார்க்க முடியும்; 'ராதா முகம்மது' என்பவரையும் பார்க்க முடியும்! ஒரு பார்வையாளர் கேட்டார், "ராதா இந்துவா அல்லது முஸ்லிமா?"

நான் திருப்பிக் கேட்டேன், "தெரிந்து என்ன ஆக வேண்டும்? இந்து-முஸ்லிம் பிரச்சினையுடன் நமக்கு என்ன சம்பந்தம்?"

"அப்படியில்லீங்க. ராதை என்ற பெயர் இந்துப் பெண்தானே வைத்துக் கொள்வாள்? அவள் கிருஷ்ண முகம்மதுவுடன் செல்வதைப் பார்த்தேன்."

"இதில் ஆச்சரியமில்லை. அவள் கிருஷ்ண முகம்மதுவின் மனைவி. இந்த மாறுதல்கள் யாருடனும் மோதாமல், யாரையும் கீழே தள்ளாமல், எந்த முயற்சியும் செய்யாமல், யாருடனும் சமரசம் செய்து கொள்ளாமல், தாமாகவே நிகழ்கின்றன. தானாக நிகழும் ஒன்றிற்கு மதிப்பு அதிகம்; அழகு அதிகம்; அது வரப்பிரசாதம் போன்றது."

இங்கு நிலவுகின்ற சந்நியாச முறைபோல் வேறெங்கும் காண முடியாது. இது கங்கோத்ரிபோல்-கங்கை உற்பத்தியாகும் இடம்போல்-அதிகபட்சம் தூய்மையான முறை. எனவே நீ எவ்வளவு விரைவில் சந்நியாசம் ஏற்கிறாயோ அந்த அளவிற்கு நல்லது. இங்கு கிடைக்கும் சந்நியாசம் கங்கையைப் போல் விசாலமானது; உலகம் முழுவதையும் தழுவுவது.

**நா**ன் பல்கலைக்கழக மாணவனாக இருந்தபோது புத்த ஜெயந்தி நிகழ்ச்சியில் துணைவேந்தர் பேருரையாற்றினார். புத்தர் காலத்தில் நானும் பிறந்து வாழ்ந்திருந்தால் எவ்வளவு அருமையாக இருந்திருக்கும் என்று எனக்கு நினைப்பு மேலிட்டது. 'அவருடைய திருவடிகளை அடைந்தவர்கள், அவரது அருகே அமர முடிந்தவர்கள், அவரது மூச்சுக் காற்றுடன் சேர்ந்து மூச்சுவிட்டவர்கள்; புத்தரின்

நயனங்களுடன் தங்கள் பார்வையை இணைத்தவர்கள்; புத்தரின் சரணங்களைப் பின்பற்றியவர்கள்; புத்தரின் நிழலில் அமர்ந்தவர்கள் ஆகியோர் எவ்வளவு கொடுத்து வைத்தவர்கள்! அந்த சமயத்தில் நான் வாழாமல் போய்விட்டேனே!' என்று உணர்ச்சிவசப்பட்டேன்.

இந்த ஆவேசத்தில் நான் எழுந்து துணைவேந்தரைப் பார்த்து, "ஐயா, பேச்சை நிறுத்திக் கொள்ளுங்கள். புத்தரையும் சமகால மக்களையும் புகழ்ந்ததெல்லாம் போதும்," என்றேன்.

அவர் திடுக்கிட்டு, "ஏன்? என்ன பிரச்சினை?" என்று கேட்டார்.

"நீங்கள் வாய்ப்பந்தல் போடுகிறீர்கள். புத்தர்மீது உங்களுக் குள்ள மதிப்பு போலியானது. நீங்கள் அவரது காலத்திலும் வாழ்ந்தீர்கள். ஆனால் நீங்கள் அவரிடம் சென்றீர்களில்லை."

துணைவேந்தருக்கு நான் சொன்னது விளங்கவில்லை. நான் விடவில்லை. "ஐயா, தங்களுக்கு மறுபிறவியில் நம்பிக்கை உண்டுதானே?"

"ஏன்? கட்டாயம் நம்பிக்கை உண்டு. நான் இந்து. மேலும் பிராமணன்."

"ஆகவே முற்பிறவி ஒன்றில் புத்தர் காலத்தில் வாழ்ந்திருப் பீர்கள். மிருகமாகவோ, பறவையாகவோகூட நீங்கள் அப்போது பிறந்திருக்கக் கூடும்."

மிருகம் அல்லது பறவை ஜென்மம் என்பதை அவரால் சகிக்க முடியவில்லை. ஆகவே அவர், "அப்போதும் நான் மனிதப் பிறவி தான் எடுத்திருப்பேன்," என்று கர்வமாகப் பகன்றார்.

"அதிலென்ன சிறப்பு? நீங்கள்தான் புத்தரை நெருங்க வில்லையே. கங்கோத்திரியில் கங்கை நதி காணப்படுவதில்லை. மிகவும் விசாலமான பிறகுதான் கங்கை கண்ணுக்குத் தெரிகிறது. அப்போது அது தான் உற்பத்தியான இடத்திலிருந்து வெகு தொலை விற்குப் போய்ச் சேர்ந்திருக்கும். இதேபோல் கால ஓட்டத்தில் புத்தர் விசுவரூபம் தரித்துவிட்டார். அவரது பெயர் எங்கும் பரவிவிட்டது. எண்ண முடியாத அளவிற்கு அவருடைய சிலைகள் நிறுவப்பட் டுள்ளன. கோடிக்கணக்கில் மக்கள் புத்தமதத்தைப் பின்பற்றுகிறார்கள்.

இந்த வளர்ந்த நிலையைக் கண்டு பிரமித்துதான் நீங்கள் புத்தரைப் பற்றி சொற்பொழிவு செய்தீர்களே தவிர, அடிப்படையில் நீங்கள் புத்தரால் ஆட்கொள்ளப்பட்டவர் இல்லை. சரி, இந்தக் காலத்து மகாத்மாக்களில் யாரிடமாவது சென்று உபதேசம் கேட்டிருக்கிறீர்களா?''

எனக்கு அவரது பலகீனங்கள் தெரியும். குறிப்பாக, மகாத்மாக்களின் நிழல்கூட தன் மேல் படாதபடி தள்ளிநிற்பவர் அவர். ஏதாவது கிளப்பில் அவரைப் பார்க்கலாமேயொழிய, ஆசிரமங்களில் தென்படமாட்டார். ஆன்மிகத்தில் அவர் நாட்டம் கொண்டவரில்லை. அவர் அடிப்படையில் அரசியல்வாதி. தற்காலத்தில் அரசியல் செல்வாக்கு இருந்தால்தானே யாரும் துணைவேந்தர் பதவியைப் பிடிக்கமுடியும்.

துணைவேந்தர் என் கருத்தை ஒப்புக்கொண்டார். ''ஆம், நான் புத்தர் காலத்தில் வாழ்ந்திருந்தாலும் அவரை அணுகியிருப்பேனா என்பது சந்தேகம்தான்,'' என்றார்.

பிறகு ஒருநாள் அவர் என்னைத் தமது அறைக்கு அழைத்தார். ''நீ ஏதாவது மாற்றுக் கருத்துப் பேச வேண்டுமானால் இங்கே வா. கூட்டத்தின் நடுவே எழுந்து சங்கடப்படுத்தாதே,'' என்று கேட்டுக் கொண்டார்.

கேள்வி கேட்ட நீ இப்பொழுது நதியின் ஆரம்ப இடத்தினருகே உள்ளாய். இங்கு கிளம்பும் ஊற்று கங்கையாக விரியும். ஊற்றின் மகிமையை இப்போதே நீ உணரவில்லையானால் பின்னால் பரிதவிப்பாய்.

உனக்குள்ளே மங்களமான கிரணம் பிரவேசித்துள்ளது. ஆகவேதான் உணர்ச்சிக் கொந்தளிப்புத் தோன்றியுள்ளது. அதிலேயே நீ லயித்துவிடு. தயங்காதே, பயப்படாதே.

சந்நியாசம் அளிப்பது என்பது 'நீ யார்?' என்று உனக்கு ஞாபகப்படுத்துவதாகும். உன்னிடம் ஏற்கெனவே உள்ளதைத்தான் நான் உனக்கு எடுத்துத் தருகிறேன். தற்சமயம் நீ அதை மறந்த நிலையில் உள்ளாய். உன்னை உனக்கு நினைவுபடுத்துவதற்கான சீரான, முறையான, கட்டுக்கோப்பான நடவடிக்கைதான் சந்நியாசம் என்பது.

**இடை விடாமல் சுழலும் இச்சக்கரத்தில்**
**சுற்றிச் சுற்றி வந்தாயிற்று**
**என் உடலும், மனமும், வாழ்க்கையும்**
**சிதைந்து சீரழிந்துவிட்டது**
**ஐயா குயவரே! போதுமய்யா**
**இதற்கு மேலும் துன்புறுத்தாதீர்**
**என்னைப் பாத்திரம் பாண்டமாய்**
**உருவாக்காதீர் இனிமேல்**

சந்நியாசம் ஓர் அறிவிப்புச் செய்கிறது. 'இறைவா! உலக வாழ்க்கை எனும் சக்கரத்தில் நான் சுற்றிவந்தது போதும்' என்று அறிவிப்பதே அதன் நோக்கம்.

உலக இருளிலிருந்து தப்பிக்க வைப்பது சந்நியாசம். துன்ப நரகத்திலிருந்து மீட்டு உன்னை வெளியே கொண்டுவருவது சந்நியாசம். விடியலை அருகில் அழைப்பது சந்நியாசம். வாழ்க்கையை இறைவனின் மணத்தால் நிரப்புவது சந்நியாசம். நீ ஆலயமாக விளங்க தயாராக உள்ளதைத் தெரிவிப்பது சந்நியாசம். இதனால் இறைவன் அவர் விரும்பும் தருணத்தில் உன் இதயத்தில் எழுந்தருள்வார்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

ஜனகர் மொழிகிறார்:

ப்ரக்ருத்யா சூன்யசித்தோ ய: ப்ரமாதாத்பாவபாவன:|
நித்ரிதோ போதித இவ க்ஷீணஸன்ஸரணோ ஹி ஸ:|| 122

க்வ தனானி க்வ மித்ராணி க்வ மே விஷயதஸ்யவ:|
க்வ் ஸாஸ்த்ரம் க்வ ச விக்ஞானம் யதா மே கலிதா
ஸ்ப்ருஹா|| 123

விக்ஞாதே சாட்சிபுருஷே பரமாத்மனி சேஷ்வரே|
நைராஸ்யே பந்தமோட்சே ச ந சிந்தா முக்தயே மம|| 124

அந்தர்விகல்பசூன்யஸ்ய பஹி: ஸ்வச்சந்தசாரிண:|
ஆந்தஸ்யேவ தஸாஸ்தாஸ்தாஸ்தாத்ருஷா ஏவ ஜானதே||
125

**மே**ற்கண்ட சூத்திரங்கள் மகாவாக்கியங்கள். இவை சாதாரண அறிக்கை அல்ல. அளவிடற்கரிய ஆழத்திலிருந்து பெறப்படுகின்ற நல்முத்துகள் இவை. இவற்றைக் கவனமாகப் படித்தால்தான் புரிந்துகொள்ள முடியும். ஆனாலும் இது அறிவு வழியாகப் புரிந்துகொள்ளுதல் மட்டுமே ஆகும். இவற்றை வாழ்க்கையுடன் பொருத்திப் பார்க்காத வரையிலும் நீ மேலோட்டமாகவே புரிந்துகொள்வாய். ஆனால் அந்நிலையில் ஆழ்மனம்வரை இவை எதிரொலிக்க வாய்ப்பில்லை. இந்த சூத்திரங்களிலுள்ள சொற்களின் அர்த்தம் அனுபவங்களின் மூலமே புரியவரும்.

எனினும் அறிவுபூர்வமான, தர்க்க அடிப்படையிலான முறையில் இவற்றைப் புரிந்துகொள்வதும் உபயோகமானதுதான். ஆனால் நுணுக்கமான அணுகுமுறை தேவை. இல்லாவிடில் தப்பாக அர்த்தம் எடுத்துக் கொள்ளக்கூடிய அபாயமும் உண்டு.

முதல் சூத்திரம்- 'இயற்கையாகவே எல்லாம் நீங்கிய சூன்யமான மனநிலையை வந்தடைந்த மனிதன், விளையாட்டாகவே சுற்றியுள்ள விஷயங்களைக் கற்பிதம் செய்கிறான். தூங்குவதுபோல் தெரிந்தாலும் அவன் விழிப்புடன் இருப்பதற்கு சமமான நிலையில் உள்ளான். அவன் உலகத்திலிருந்து முக்தி (விடுதலை) பெற்றவன் ஆவான்.' **(சுலோகம் 122)**

**இ**ந்த சுலோகத்தில் வரும் 'ப்ரமாத' என்ற சொல் பொருந்தாது. அதற்கு மூர்ச்சை நிலை என்று அர்த்தம் வரும். சூன்யமான மனமுள்ளவன் மயங்குவது போன்ற நிலையை அடையமாட்டான். இங்கு 'ப்ரமோத்' என்னும் சொல்தான் சரியாக இருக்கும். அதற்கு 'விளையாட்டாகவே, லீலை போலவே' என்னும் பொருள் கிடைக்கும். சாட்சி நிலை இப்படித்தான் எல்லாவற்றையும் விலகி வெளியே நின்று காணச் செய்யும். 'பார் வேடிக்கையை' என்று சுட்டிக்காட்டும். மரணத்தைக்கூட வேடிக்கையாகப் பார்க்கச் செய்யும்.

'அலகிலா விளையாட்டு' என்ற கோட்பாடு (சித்தாந்தம்) கிழக்கத்தியச் சிந்தனையாளர்கள் அளித்த பெருங்கொடையாகும். உலகில் எத்தனையோ மதங்கள் தோன்றின. ஆனால் கிழக்கு நாடுகளில் கடவுளை அறிந்து கொண்டதுபோல் வேறு எந்த நாடும் அறிந்ததில்லை. கிழக்கே கடவுளை ஆழமாகவும் அறிந்து கொண்டனர்.

'கடவுள் உலகை ஏன் படைத்தார்?' என்று கேள்வி கேட்டுப்பார். அதற்கான சரியான பதில் கிழக்கேதான் கிடைக்கும். 'விளையாட்டாக, லீலையாகப் படைத்தார்' என்பதுதான் அந்தப் பதில். ஏதோ காரணத்தோடு அவர் உலகைப் பார்த்தார் என்று கூறுவது தவறான கருத்து. காரணம் என்று சொன்னாலே 'ஏதோ குறைபாட்டை நீக்க' என்றே பொருள்படும். 'கடவுள் வேலையில்லாமல் இருந்தார். அது சங்கடமாக இருந்தது. அவர் தனிமையில் வாடினார். பொழுதுபோக உலகைப் படைத்தார்' என்றால் அது காரணமாகிவிடும்.

கடவுளால் தனி ஒருவராக இருக்க முடியாதெனில் மனிதன் எந்த மூலைக்கு? கடவுளே ஜோடி தேடி 'துவைதத்தை' (இரண்டாக உள்ளமை) ஆதரித்தார் எனில், மனிதன் மட்டும் எப்படி 'அத்வைத' (ஒன்றே உண்டெனும்) நிலையை அடையும் திறமையைப் பெற்றிருக்க

முடியும்? 'தனிமையைப் போக்கிக் கொள்ளக் கடவுள் உலகைப் படைத்தார்' என்பது மனித மனத்தின் இயல்பைக் கடவுளின் மேல் சுமத்துவதாகும், கடவுளுக்குக் கற்பிக்கும் செயலாகும். நமது மனத்தையே பலமடங்கு விரித்து, கடவுளின் மனம் அப்படித்தான் இருக்கும் என நாம் நினைக்கிறோம். நாம் தனிமையில் நீடிக்க நேர்ந்தால் சங்கடப்படுகிறோம். இப்போது என்ன செய்து காலத்தை ஓட்டுவது எனத் தவிக்கிறோம். வேலையின் பரபரப்பு, செயல்களில் இடைஞ்சல்கள் முதலியவற்றை எதிர்பார்க்கிறோம். மனம் எந்த வேலையிலாவது ஈடுபட்டிருந்தால் போதுமெனத் தோன்றுகிறது. இந்தக் கண்ணோட்டத்தையே நாம் கடவுளின் மீது ஏற்றுகிறோம். அவர் தனிமை காரணமாகச் சலிப்படைந்து உலகைப் படைத்திருப்பார் என நினைக்கிறோம்.

மனிதன் நற்கதி (முக்தி) பெற சூழ்நிலை அமைத்துத் தரவே கடவுள் உலகைப் படைத்தார் என்பார் சிலர். இது முட்டாள்தனமான வாதம். மனிதன் விடுதலை பெற அவன் கட்டிப்போடப்பட்டான் என்று அர்த்தமாகிறது. ஏன் கட்டிப்போடப்பட்டான்? அவன் ஏற்கெனவே சுதந்திரமானவன்தானே. இது விசித்திரமான வாதமாக அல்லவா இருக்கிறது. மனிதன் விடுதலை அடைவதற்காகவே சிறைச்சாலை ஏற்பட்டது என்று சொல்வதுபோல் அல்லவா உள்ளது. நீ ஏற்கெனவே சுதந்திரமானவன்தான். சிறையில் அடைக்கவேண்டிய அவசியம் என்ன? எனவே சிலர் கூறும் இந்த வாதமும் அர்த்தமில்லாதது.

முதலில் கூறிய காரணவாதத்திலும் அர்த்தமில்லை. கடவுளே காரணமற்றவர். ஏதோ காரணத்தால் தோன்றியவர் அல்லர். அவர் ஏற்கெனவே எக்குறையுமின்றி முழுமையாக உள்ளவர். எந்தப் பற்றாக்குறையும் இல்லாதவர். சத்-சித்-ஆனந்தம் ஆனவர். தனிமை அவரை வாட்டாது. அவ்வளவு ஏன்? உலகிலேயே மனிதப் படைப்பிலேயே சிலர் தனிமையை விரும்பி வாழ்கிறார்கள். அதிலே உள்ள சாரத்தை அனுபவித்து ஆனந்தமாக இருக்கின்றனர்.

புத்தர் தமது போதிமரத்தடியில் வீற்றிருக்கிறார். முழுமையான தனிமையில் இருக்கிறார். அவர் எக்குறையுமின்றி முழுமையாக உள்ளார். குன்றுகளின் நடுவில் உயர்ந்து நின்ற மகாவீரர் தனிமையில்தான் காணப்படுகிறார். இந்த சிறப்புநிலைத் தனிமைக்கு

அவர் 'கைவல்யம்' என்று பெயர் கொடுத்தார். இந்தியில் கேவல் நிலை என்றாகும். கேவல் (கைவல்யம்) என்றால் ஒன்று மட்டுமே, அது மட்டுமே என்று பொருள். ஆகவே வேறு யாரும்/எதுவும் கிடையாது என்னும் நிலை தனிமையைத்தானே குறிக்கிறது.

புத்தர் இந்த ஆன்மிகத் தனிமைக்கு நிர்வாண் (நிர்வாணம்) என்று பெயர் சூட்டியுள்ளார். நிர்வாண நிலையில் உன்னைத் தவிர வேறு எவரும் கிடையாது என்பதுடன் நீயும் இல்லாமல் போய்விடுகிறாய்!

நிர்வாணம் என்பதற்கு அணைந்துபோதல் என்றும் பொருளுண்டு. இதோ விளக்கு எரிகிறது. யாராவது வாயால் ஊதினால், அதனால் தீச்சுடர் அணைந்தால், விளக்கு நிர்வாண நிலைக்குத் திரும்பிவிட்டது என்று சொல்வோம். அதேபோல் நீயும் காணாமல் போய்விடுகிறாய். இது, சுடர் அணைந்ததும் ஒளியும் மறைந்துவிடுவது போன்றது. தனிமையின் உச்சநிலையில் சூனியமே மிஞ்சுகிறது. ஆனாலும், மனிதர்களாகிய புத்தரும் மகாவீரரும்கூட இந்நிலையில் பரமானந்தத்தை அனுபவித்தார்களெனில் கடவுளைப் பற்றி சொல்ல வேண்டுமா என்ன? இதனால்தான் நாம் புத்தரையும் மகாவீரரையும் கடவுள் என்கிறோம். ஏகாந்த நிலையை (ஆன்மிகத் தனிமையை) விரும்பி அனுபவித்தவரை நாம் கடவுள் என்றே கூறினோம். இது கடவுளின் குணநலன்களில் ஒன்று.

தனிமையில் ஆனந்தமாக இருத்தல் என்பது இனி வேறு எவரின் தேவையும் கிடையாது என்ற நிலையைக் காட்டுகிறது. இந்நிலையில் நீ பூரணனாய் இருக்கிறாய். மற்ற எவருடைய தேவையாவது நமக்கு இருக்கும்வரை வாழ்க்கையில் துன்பத்தைத் தவிர்க்க முடியாது. இதனால்தான் காதலர்கள் ஒருவரை ஒருவர் மன்னிக்க முடிவதில்லை ஏனெனில் ஒருவருக்கு இன்னொருவர் தேவை என்பதால், ஒருவர் மற்றவரால் கட்டப்பட்டிருக்கின்றனர். யாரால் கட்டப்பட்டிருக்கிறோமோ அவர் மீது நுணுக்கமான கோபமும் இருக்கும். கணவன்-மனைவி இடையே கோபம், காதலர்களிடையே கோபம் என்பதற்கெல்லாம் ஆழ்ந்த காரணமுண்டு. மேலோட்டமாக, கணவன் கெட்டவன், மனைவி சண்டைக்காரி, காதலர்கள் பொருத்த மற்றவர்கள் என்றெல்லாம் முடிவுகட்டக் கூடாது. அடிப்படையான காரணம் என்னவெனில் நாம் சந்தோஷமாக, சுகமாக இருப்பது

யாரைப் பொறுத்துள்ளதோ, அவருக்கு நாம் அடிமைபோல் ஆகிவிடுகிறோம். யாருக்குத்தான் அடிமைத்தனம் இஷ்டம்? சுதந்திரம்தான் வேண்டப்படுகிறது. நமது மனத்தின் ஆழத்திலும் ஆழமான விருப்பம் சுதந்திர வேட்கையாகத்தான் இருக்கும்.

எவர் காரணமாக நமக்கு சுகமோ அவர் மீதுதான் கோபம்! உதாரணமாக, நீ மனைவி காரணமாக சுகமாக உணர்கிறாயானால், நீ அடிமனத்தில் உன் மனைவி மீது கோபமாக இருப்பாய். 'எனது சுகம் இவள் 'கையிலுள்ளது, சாவி இவள் வைத்திருக்கிறாள்' என்று மனத்துக்குள் முள்போல் உறுத்தல் இருக்கும். இவள் எப்பொழுது கதவைத் திறப்பாளோ, எப்பொழுது திறக்கமாட்டாளோ, நாம் இவள் தயவை எதிர்பார்த்திருக்க நேரிடுகிறது. இந்த அடிமைத்தனம் வலிக்கிறது.

ஆகவே சாவி நம் கையில் நமக்கு உரிமையாக இருப்பதுதான் மோட்சம் என்னும் நிலை. திறக்கவோ, பூட்டவோகூட தேவையிராது. திறந்து போட்டபடியே அமர்ந்திரு. யார் எழுந்து மூடுவது? எதற்கு மூடுவது? இரவும் பகலும் ஆனந்தத்தில் ஆழ்ந்திரு.

இறைவன் ஏதோ துக்கத்தால், ஏதோ வலியால், ஏதோ குறைபாட்டை நீக்கவோ இவ்வுலகைப் படைத்தாரில்லை. பிறகு ஏன் படைத்தாராம்? இதற்குக் கீழ்திசை நாடுகள்தாம் பதிலளித்திருக்கின்றன. 'விளையாட்டாக, லீலையாக, பொங்கிய உற்சாகத்தால்' என்பதுதான் அந்தப் பதில். குழந்தைகளின் விளையாட்டைப்போல், கரை மணலில் அவர்கள் பொம்மை வீடுகட்டுவது போல் படைத்தார்.

**பு**த்தர் ஒரு காட்சியை வர்ணித்தார். அவர் ஒரு நதியின் கரையோரமாக உலாவியபடி சென்றாராம். சிறுவர்கள் சிலர் ஆங்காங்கே கரை மணலில் பொம்மை வீடுகள் கட்டுவதைப் பார்த்தார். அவர்களிடையே அவ்வப்பொழுது பலத்த சண்டையும் மூண்டது. ஏனெனில் தற்செயலாகவோ, வேண்டுமென்றோ, ஒரு பையனின் வீடு இன்னொருவனின் கால் பட்டுச் சிதைந்தது. ஒருவரை ஒருவர் அடித்து உதைத்தனர். புத்தர் சிந்தித்தார்:

'உலகமும் இப்படித்தான் இயங்குகிறது. இங்கு வளர்ந்த மக்கள் வீடு கட்டுகிறார்கள். காலப்போக்கில் வீடு இடிந்து விழுகிறது. மக்கள்

அழுகிறார்கள், கஷ்டப்படுகிறார்கள், ஆத்திரம் கொள்கிறார்கள், வழக்குத் தொடுக்கிறார்கள். இந்த நதிக்கரையில் குழந்தைகள் செய்வதைத்தான் ஊர்-உலகில் பெரியவர்களும் செய்கிறார்கள்...'

சூரியன் மறைந்து இருளத் தொடங்கியது. யாரோ சத்தம் போடுவது கேட்டது: "டேய் பசங்களா! எல்லோரும் வீட்டுக்கு கிளம்புங்க. இருட்டிடுச்சு. வீட்ல தேடுவாங்கல்ல?" அவ்வளவுதான், எல்லாச் சிறுவர்களும் தத்தம் வீடு நோக்கிப் பாய்ந்தோடினர். இதுவரை தாங்கள் கவனமாகக் கட்டிய மணல்வீடுகளைச் சிதைத்தும், உதைத்தும், மிதித்தும் தரைமட்டமாக்கியபடியே ஓடினர். ஓடும்போது சந்தோஷ ஆரவாரம் செய்தனர்.

புத்தர் தம்முடைய பிட்சுக்களிடம் சொன்னார்: "இப்படித்தான் பரம ஞானியின் நிலையும் இருக்கும். ஞானி எல்லாம் விளை யாட்டெனக் கருதுவார். விளையாட விரும்பினால் தொடர்ந்து விளையாடியபடி இருக்கலாம். அப்போது அந்த விளையாட்டு அவரைக் கட்டுப்படுத்துவதில்லை. தன் வீட்டைத் தன் கையாலேயே கூட இடித்து வீழ்த்திவிட முடியும்."

பரமாத்மாவும் இப்படி லீலை செய்கிறார். ஏன் விளையாடுகிறார் என்று வினவினால் சர்வசக்தியின் அடையாளம் இதுதான் என்று கிழக்கித்திய ஞானம் பதில் கூறும். சக்தி வெளிப்படுகிறது. பாட்டு பிறக்கிறது. நடனம் தோன்றுகிறது. பூ மலர்கிறது. பறவைகள் சிறகடித்துப் பறக்கின்றன. இவை எல்லாம் கடவுள் என்னும் மகாசக்தி உயிரோட்டத்துடன் இருப்பதன் அடையாளம். உண்மையில் இவை பூக்கள் அல்ல; மரங்கள் அல்ல; நீ ... நீ அல்லன். இறைவன்தான் வெவ்வேறு அலைகளின் வாயிலாக இப்படி வெளிப்படுகிறார். பூக்கள், மரங்கள், செடிகள், பறவைகள், மனிதர்கள், சந்திரன்-நட்சத்திரங்கள் முதலியவை இல்லை என்றால் கடவுள் உயிரோட்டத்துடன் இருப்பதற் கான சான்று இல்லாது போய்விடும். கடல் உயிரோட்டமுள்ளதெனக் கருதுவதற்குச் சான்றாக அலைகள் எழும்பவேண்டும் என்பது போல்தான் இதுவும்.

இறைவன் பெருவாழ்வு வடிவினர். ஆகவேதான் அவர் எல்லை காண முடியாத அளவு உருவங்களில் வெளிப்பட்டுள்ளார். இப்படி அவர் வெளிப்பட விசேஷமான காரணம் எதுவும் கிடையாது. பறவை

காலையில் விழித்ததும் பாடுகிறது-காரணமின்றியே. செடிகளில் பூக்கள் விகசிக்கின்றன காரணமின்றியே. நீயும் எப்போதாவது காரணமின்றி எதையோ செய்வதாக உணர்கிறாய். காரணமின்றி எதையும் செய்யும்போது நீ கடவுளின் செயல்முறையைத்தான் பின்பற்றுகிறாய்.

ஆகவே நான் உங்களை காரணமின்றி தியானம் செய்யுங்கள் என்று தொடர்ந்து சொல்லி வருகிறேன். தியானம் செய்வதால் மனம் அமைதி பெறுகிறது என்ற எண்ணம்கூட மனத்தில் மேலிட விடாதீர்கள். அப்படி ஒரு காரணம் கூறினால் நீங்கள் தியானத் திலிருந்து நழுவிவிட்டதாக அர்த்தம் எடுத்துக் கொள்ளப்படும். தியானம் மூலம் அமைதி பெறுகிறேன் அல்லது பெற்றுத்தருகிறேன் என்று சொன்னால் அது ஒரு தொழிலாகிவிடும். காரணம் இன்றி தியானம் செய். தியானம் செய்ய வேண்டுமென்பதற்காகவே அதை மேற்கொள். அதற்காகவே அதைச் செய்.

துளசிதாசரை யாராவது அவர் ராமாயணம் இயற்றிய காரணத்தைக் கேட்டிருக்கக் கூடும். ஏனெனில் துளசிதாசர் ஆரம்ப சுலோகத்தில் இக்கேள்விக்கு விடையளிப்பதுபோல், ‘என் ஆழ்மனத்தின் ஆனந்தத்திற்காக ராமன் கதை பாடினேன்’ (ஸ்வாந்த: ஸுகாய துளஸி ரகுநாத காதா) என்கிறார். பொருள்-புகழ் என்று வெளிக்காரணம் எதுவும் கிடையாது.

கவிஞன் பாடுகிறான், ஏன்? அவனால் பாடாமல் இருக்க முடியாது. அந்த அளவிற்கு உள்ளேயிருந்து கவிதை பொங்கி வழிகிறது. மேகத்திலிருந்து மழை பொழிவதுபோல்தான் இந்த நடவடிக்கையும் அமைகிறது. இதே அடிப்படையில்தான் வைணிகர் வீணை மீட்டுகிறார்; ஆடற்பெண் நடனமாடுகிறாள்.

ரஷ்யாவின் புகழ்பெற்ற நடனக் கலைஞர் நிஜின்ஸ்கியிடம்* ஒருவர் வினவினார், “இப்படி நீண்ட காலமாக நடனமாடி வருவது உங்களுக்குச் சலிப்பாகத் தோன்றவில்லையா?”

---

* **Vaslav Nijinsky (1890-1950)** ரஷ்ய பாலே நடனக் கலைஞர். உலக நடன வரலாற்றில் அவர் ஒரு சகாப்தம் என்று சொல்லப்படும் அளவு சாதனை புரிந்தவர்.

நிஜின்ஸ்கி மறுத்தார். "அப்படியில்லை. நடனமாடாதபோதுதான் நான் சலிப்பாக உணர்கிறேன். நடனமாடும்போது எனக்குச் சிறகுகள் முளைத்தது போல் தோன்றுகிறது. நடனமாடினால்தான் 'நான்' என்பவனே இருக்கிறேன்; முழுமையாக இருக்கிறேன். ஆடாதபோது சோகமாக இருக்கிறது. அப்போது என் உயிரியக்கம் மந்தமாகி விடுகிறது. நடனமாடுகையில்தான் உயிர்சக்தி கிளர்ந்தெழுகிறது," என்று பதில் கூறினார்.

தியானம் செய். அது உன் ஆழ்மனத்தின் ஆனந்தத்திற்காகவே அமையட்டும். நாளை ஏதோ பலன் கிடைக்கும் என்பதற்காகச் செய்யாதே. இப்போதே விளையாட்டுப்போல் தியானத்தில் ஆழ்வதில் இன்பம் காண்.

இப்படி ஈடுபட முடிந்தவன் உலகிற்குப் புறமுதுகு காட்டுவ தில்லை. தப்பி ஓடினாலும், இருட்டும்வரை விளையாடிய சிறுவர்கள் சந்தோஷமாக வீடு திரும்புவதுபோல், விளையாட்டாகவே அதையும் செய்வான். சாது என்னும் சொல்லிலேயே அவரது அமைதியான குணம் பிரதிபலிப்பாகிறது. அவர் எதையும் தலைபோகிற விஷயமாக தீவிரமாக எடுத்துக்கொள்ள மாட்டார். ஆனால் உலகிலே நாம் காண்கின்ற சாது-மகாத்மாக்கள் ஏதோ கடினமான வேலையில் ஈடுபட்டிருப்பதுபோல் எப்போதும் கம்பீரமாக அல்லது கடுகடு வென்றே காட்சி தருகிறார்கள்.

ஆனால் கடவுள் அல்லது கடவுளின் உருவங்களில் இந்தக் கடுகடுப்பு இருக்காது. மகாத்மாக்கள் 'தவம் செய்கிறோம்; பூஜை செய்கிறோம்; பிரார்த்தனை செய்கிறோம்' என்றெல்லாம் மாபெரும் கடமைகளைச் செய்வதாக அலட்டிக் கொள்கிறார்கள். அதுவும்கூட உள்மனத்தின் ஆனந்தத்திற்காக அல்ல, வெளியுலகை திருப்திப்படுத்து வதற்காகத்தான்.

கடவுளை சோகமாகப் பார்த்திருக்கிறீர்களா? கடவுளை பார்த்ததில்லையே என்று திகைக்காதீர்கள். கொஞ்சம் கண்ணை விரித்து நாற்புறமும் பாருங்கள். எங்கும் அவரது லீலைதான் பிரதிபலிப்பாகி யுள்ளது. எங்கும் சந்தோஷ ஆரவாரம். உலகம் எங்கும் உல்லாசம், அருவிபோல் ஆனந்தம் பொழிகிறது. சூரியன்-சந்திரன்-நட்சத்திரங்களில், மரங்கள்-மலைகளில், பள்ளம்-சுரங்கங்களில் எங்கும்

புன்னகை, சிரிப்பொலி, எங்கும் நடனக் காட்சிகள். இந்த இடைவிடாத ஆனந்த உலகம்தான் ஆண்டவன்.

ஆகவேதான் இந்துக்கள் இறைவனை நடராஜன் என்று அழைக்கின்றனர். அவர் ஆடும் தெய்வம். சிற்பி சிலை செய்கிறான். வேலை முடிந்ததும் சிற்பி விலகிவிடுகிறான். சிலை ஒருபுறம் நீடிக்கிறது. சிற்பி இறந்த பிறகும் சிலை அப்படியே உள்ளது. ஆனால் நடனக் கலைஞர் இறந்தால் அவரது நடனமும் மறைந்துபோகிறது. அவரையும் நடனத்தையும் தனித்தனியாகப் பிரிக்க முடியாது. இதனால்தான் இறைவனைச் சிற்பக் கலைஞனாகப் பார்க்காமல் நடராஜனாகப் பார்த்தார்கள்.

சிலர் கடவுளைக் குயவர் போன்றவர் என்கிறார்கள். அவர்களுக்கு புத்தி மட்டு. கடவுள் பானையா படைத்து வருகிறார்? இல்லையே. மேலும், குயவரும் பானையும் பிரிந்து விடுவார்களே. நடராஜனாகிய கடவுள் ஆனந்த நடனமல்லவா ஆடுகிறார். நாட்டியம் நின்றுபோனால் அவரும் விலகிவிடுவார். அண்டவெளியில் எதுவும் மிஞ்சியிருக்காது.

இதை இப்படியும் புரிந்துகொள்ளலாம். நடனத்தை நடனக் கலைஞரிடமிருந்து தனிப்படுத்த முடியாது; கலைஞரை நடனத்தி லிருந்து பிரிக்கவும் முடியாது. ஏனெனில் நடனம் முடிந்தபின் ஆடியவர் மேற்கொண்டு நர்த்தகர் இல்லை. நடனம் உள்ளவரைதான் நர்த்தகரும். இருதரப்புகளும் இணைந்துள்ளன. இரண்டும் ஒரே அலையின் இரண்டு கூறுகள். அவை தனித்தனியானவை அல்ல. இறைவன் நடனமாடுகிறார். உலக இயக்கம் அவரது திருநடனம்தான். விளையாட்டாக நடனமாடுகிறார். சொந்த மகிழ்ச்சிக்காக ஆடுகிறார்.

சுலோகத்தின் அடுத்த பகுதிப்படி, இயற்கையாக மனம் சூனியமானவர்களுக்கு உறக்கத்திலும் விழிப்புணர்வு இருக்கும். அத்தகையோர் உலகிலிருந்து விடுதலை பெற்றவராவர்.

'நான் கர்த்தா (செய்பவன்) அல்லன் என்று அறிந்துகொண்டவன் அனைத்து கர்மங்களின் பாதிப்பிலிருந்தும் தப்பிவிடுகிறான். நீ காலையில் கண்விழிக்கிறாய். இரவில் கண்டதெல்லாம் கனவென அறிகிறாய். உன்மீது கனவின் பாதிப்பு தொடர்கிறதா? இல்லையே. நீ விழித்ததும் கனவு முடிந்துவிட்டது. சிறுவன் கனவு காண்கிறான்.

கனவில் அவன் கண்ணெதிரே விளையாட்டு சாமான்கள் குவிந் துள்ளன. அவற்றை எடுத்து அவன் களிக்கிறான். தூக்கம் கலைந்தபின் பார்த்தால் கைகள் காலியாக உள்ளன. 'என் பொம்மைகள் எங்கே காணோம்' என்று அவன் அழத்தொடங்குகிறான். சிறு வயதினர்க்குக் கனவுநிலைக்கும் விழிப்பு நிலைக்குமிடையே வித்தியாசம் தெரிவதில்லை. இரண்டிற்கும் இடையேயான எல்லைக்கோடு அவன் கண்ணில்படுவதில்லை. சிறுவயதினரைப் போலவே மனம் வெறுமையானவனும் கனவு எங்கே முடிகிறது, வாழ்க்கை எங்கே தொடங்குகிறது என்று பிரித்துப் பார்ப்பதில்லை. அவனுக்கு எல்லாமே பெருங்கனவுதான்.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஓர் இரவில் ஒரு கனவு கண்டார். கனவில் அவரிடம் யாரோ, "உங்களுக்கு எவ்வளவு ரூபாய் தரட்டும்?" என்று கேட்டார். முல்லா நூறு ரூபாய் தரச் சொன்னார். அந்த ஆளோ தொண் ணூற்று ஒன்பது ரூபாய்தான் தர முடியும் என்றார். முல்லா விட்டுக் கொடுக்கவில்லை. நூறு ரூபாய்க்குக் குறைந்து வாங்கிக்கொள்ள முடியாது என்று பிடிவாதம் பிடித்தார். இருவருக்குமிடையே பலத்த வாக்குவாதம் உண்டாகிக் குரல் ஓங்கியபோது சட்டென்று முல்லாவின் தூக்கம் கலைந்தது. முல்லா கனவு பாதியில் அறுந்துவிட்டதே என்று துடித்தார். மீண்டும் கண்களை இறுக்க மூடிக்கொண்டு, "சரிங்க, தொண்ணூற்று ஒன்பது ரூபாயே கொடுங்க, அதுவே போதும்," என்றார். ஆனால் இனி என்ன செய்வது? எவ்வளவு முயன்றாலும் அந்தக் கனவை உயிர்ப்பித்துத் தொடர முடியாதே. கொடுக்க வந்தவனும் மறுத்தவனும் மறைந்து போனார்களே.

ஜைன-பௌத்த மதங்களின் நோக்கில், மனம் சூன்யநிலையை அடைந்து விழிப்புப்பெற்றவன் மீது கனவு போன்ற இவ்வுலகத்தின் பாதிப்பு நிழலளவிற்குக்கூட படியாது. இந்துமதக் கண்ணோட்டத்தில், ஞான விழிப்பு பெற்ற மனிதன் இதுவரையிலான பிறவிகளில் நடந்தவை எல்லாமும் கனவென்ற முடிவிற்கே வருவான். இதுவரை விழித்திராதபோது எல்லாம் இருந்தது. இப்போது விழித்தபின்- முல்லாவுக்கு ஒரு ரூபாய்கூட கிடைக்காததுபோல்-எதுவுமே இல்லை.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒரு செல்வந்தர் வீட்டில் ஏதோ வேலையில் இருந்தார். கை-கால் அசைக்காத அந்த செல்வந்தர், "நஸ்ருத்தீன், வெளியே போய் பார். பொழுது விடிந்துவிட்டதா என்று பார்த்துவந்து

சொல்," எனக் கட்டளையிட்டார். நஸ்ருத்தீன் வெளியே சென்று எட்டிப்பார்த்தார். பிறகு உள்ளே வந்து ஓர் அரிக்கேன் விளக்கை எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பினார். எஜமானர், "என்ன விஷயம்? விளக்கு எதற்கு?" என்று காரணம் கேட்டார்.

முல்லா பணிவுடன், "ஐயா, முதலில் நான் வெளியே பார்த்தபோது மிகவும் இருட்டாக இருந்தது. பொழுது விடிந்துவிட்டதா என்று கண்ணுக்குத் தெரியவில்லை. அதைக் கண்டுபிடிக்கத்தான் நான் இப்போது விளக்கு எடுத்துப் போகிறேன்," என்று அப்பாவியாகப் பதிலளித்தார்.

பொழுது விடிந்திருந்தால் இருட்டு நீடித்திருக்க முடியுமா? விளக்கின் மூலம் பொழுது விடிந்ததை எப்படிக் கண்டுபிடிப்பாய்? விடிந்தது என்றால் விடிந்ததுதான். விடிகிறது என்றாலே இருள் நீங்குகிறது என்றதான் அர்த்தம். சூரியன் தென்பட்டதுமே இருள் காணாமல் போகிறது. ஓர் அறை. மூடியுள்ளதால் உள்ளே இருள் வியாபித்துள்ளது. நீ ஒரு விளக்கை எடுத்துக்கொண்டு கதவைத் திற. இருளைக் காணோம்! அது எங்கே போனது? நீ கதவை மூடிவை. வாசலில் ஒரு காவலாளி போடு. இருட்டை வெளியே போகவிடாதே. அதற்கான பந்தோபஸ்து எல்லாம் செய். ஆனாலும் நீ விளக்கேந்தி அங்கே போனதும் இருட்டைக் காணோம். விளக்கும் இருட்டும் ஒன்றாக இரா. ஒளியும் இருளும் அருகருகே இரா.

இதேபோல், ஒருவன் விழித்ததுமே எல்லாக் கனவுகளும் பறந்துபோகின்றன. முற்பிறவிகளும் அப்படித்தான். அவையும் கனவுதான். ஒரு சமயம் சிங்கமாக இருந்த நீ, இன்னொரு சமயம் ஆடாக இருந்தாய். ஒரு சமயம் மனிதனாக இருந்த நீ, இன்னொரு சமயம் குதிரையாய்க் கனைத்தாய்! எல்லாம் நீயாகக் கற்பித்துக் கொண்டவை. நீ இவற்றில் ஒன்றுகூட இல்லை. நீ பார்வையாளன் மட்டுமே. ஒவ்வொரு சமயம் ஒவ்வொன்றாகக் குதிரை, மரம், மனிதன், பெண், திருடன், சந்நியாசி (இவரே சிலசமயம் சாந்தமாக, பிறிதொரு சமயம் பதற்றமாகவும் தென்பட்டார்) கொலைகாரன்-எல்லாம் கனவு. விழித்ததும், சொடக்குப் போட்டதுபோல், பட்டென எல்லாக் கனவுகளும் கலைந்து விடுகின்றன.

எல்லாம் விளையாட்டு. சில சமயம் குழந்தைகளுடன் விளையாட்டாகப் பெரியவர்களின் செயல்களைப் புரிகிறாய். சிறுவன்-

உன் மகன்-உன்னுடன் குஸ்திபோட விரும்புகிறான். அப்பா மகனுடன் குஸ்திபோடுகிறார். மகனால் ஜெயிக்க முடியாது என்று அவருக்குத் தெரியும். ஆனாலும் தன்னை அவன் வெல்லவிடுகிறார். வேண்டுமென்று சிரிக்கிறார். சிறுவன் அவர் மார்பில் ஏறி உட்கார்ந்து விடுகிறான். அவனுடைய குதூகலம் கவனிக்கத்தக்கது. தந்தை, அதாவது நீ விளையாட்டில் உள்ளாய். மகன் விளையாட்டாக எடுத்துக் கொள்ளவில்லை. தான் நிஜமாகவே ஜெயித்துவிட்டதாக அவன் நினைக்கிறான். ஆகவே அவன் ஆரவாரம் செய்கிறான். வீட்டில் சுற்றி-சுற்றி வந்து, 'அப்பாவைத் தோற்கடித்துவிட்டேன்' என்று முழங்குகிறான். அவன் மிகவும் கர்வப்படுகிறான். உன்னைப் பொறுத்தவரையில் விளையாட்டுதானே.

**ஜெ**ர்மன் நாட்டு அறிஞர் ஒருவர் ஜப்பானுக்குச் சென்றிருந்தார். அவர் விருந்தினராகத் தங்கியிருந்த வீட்டின் குடும்பத் தலைவர் எண்பது வயதானவர். ஒருநாள் அவர் அறிஞரிடம், "இன்று மாலை என் நண்பர் வீட்டில் திருமண நிகழ்ச்சி ஒன்றுள்ளது. நாங்கள் அனைவரும் செல்லவுள்ளோம். தாங்களும் எங்களோடு சேர்ந்து வரமுடியுமா?" என்று வினவினார்.

"ஓ, கட்டாயம் வருகிறேன். நான் ஜப்பானுக்கு வந்திருப்பது இந்நாட்டுச் சடங்குகளையும், பழக்க வழக்கங்களையும் கவனித்து ஆராய்ச்சி செய்வதற்காகத்தான். நீங்கள் தரும் வாய்ப்பை நழுவவா விடுவேன்," என்று அறிஞர் சம்மதித்தார்.

எல்லோரும் குடும்ப நண்பரின் வீட்டை அடைந்ததும் அறிஞர் திருமண நிகழ்ச்சியைப் பார்த்துத் திகைத்துப் போனார். அங்கு மரப்பாச்சி பொம்மைகளின் கல்யாணம் நடைபெற்றுக் கொண் டிருந்தது! சிறுவர்கள் நிகழ்ச்சியை நடத்த, பெரியவர்கள், கிழவர்கள்கூட அதில் கலந்துகொள்ள வந்திருந்தனர். மிகவும் கம்பீரமாகத் திருமண விழா நடைபெற்றது. உலக நாடுகளில் எங்கும் குழந்தைகள் பொம்மை கல்யாண விளையாட்டு விளையாடுகிறார்கள் என்பதை அந்த அறிஞர் அறிந்திருந்தார். ஆனால் பெரியவர்களும் அதற்கு வருவதும், மாப்பிள்ளை அழைப்பிலும், ஊர்வலத்திலும் கலந்து கொள்வதும் அந்த அறிஞர் இதுவரை அறிந்திராத சம்பவங்களாக இருந்தது.

அறிஞரால் தன் ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. எல்லோரும் வீடு திரும்பியதும் அறிஞர் வீட்டுத் தலைவரை

அணுகினார். "ஐயா, ஒரு சந்தேகம். கேட்பது தவறெனில் மன்னியுங்கள். குழந்தைகளைப் பொறுத்தவரையிலும் இதெல்லாம் சரிதான். உலகெங்கும் குழந்தைகள் இந்த விளையாட்டில் ஈடுபடுகிறார்கள். ஆனால் பெரியவர்கள், முதியவர்கள்கூட இதில் கலந்து கொள்கிறார்களே. ஏன் அப்படி?" என்று கேட்டார்.

முதியவர் சிரித்தபடி விளக்கினார்: "குழந்தைகள் இதை உண்மையான நிகழ்ச்சியாக நினைத்து நடத்துகிறார்கள். நாங்கள் பெரியவர்கள் இதை விளையாட்டாக எடுத்துக் கொள்கிறோம். இந்த நிகழ்ச்சியில் குழந்தைகள் மிகவும் மகிழ்ச்சியடைகிறார்கள். ஆகவே அவர்களின் மகிழ்ச்சியைப் பல மடங்காக்கப் பெரியவர்கள் ஆதரவு தர வேண்டும். வளர்ந்தபின் அவர்கள் விழிப்புப் பெறுவார்கள். ஆனால் தற்சமயத்திற்குப் பெரியவர்களும் ஒத்துழைத்தால் சிறுவர்களுக்கு இது வாஸ்தவமான திருமணம்போல் தோன்றும். ஆனால் சற்று ஆராய்ந்து பார்த்தால், நாம் உண்மையான விவாகம் என்று நிஜமான மணமகன்-மணமகளை வைத்து நடத்துகிறோமே அதுவும் எந்த விளையாட்டையும்விட உயர்வானதா? அதுவும் விளையாட்டுதானே. பொம்மைக் கல்யாணம் சிறுவர்களின் விளையாட்டு. நிஜ கல்யாணம் பெரியவர்களின் விளையாட்டாகும்."

விழிப்புப் பெற்ற மனிதனும் விளையாட்டில் பங்கேற்கலாம். இறைவனே விளையாட்டை நடத்தி அவரும் அதில் ஈடுபடும்போது, இறை விழிப்புப் பெற்ற மனிதனும் விளையாட்டில் கலந்துகொள்ள என்ன தடை உள்ளது?

**போ**தி தர்மர்* புத்தருக்குப்பின் தோன்றிய தலைசிறந்த பௌத்த பிட்சு ஆவார். அவர் ஒருமுறை சீன நாட்டுக்குச் சென்றார். சீன அரசர் அவரை வரவேற்கக் கோட்டை வாசலுக்கே சென்றார். போதிதர்மரைப் பார்த்து அரசர் அதிர்ச்சியடைந்தார். போதிதர்மர் கிறுக்குப்போல் தெரிவதாக அவர் நினைத்தார்.** ஏனெனில் பிட்சு ஒரு செருப்பைக்

* புத்தரின் பரம்பரையில் 28வது பௌத்தத் தலைவர். சீனாவில் புத்தமதத்தை நிலைநாட்டியவர்.

** போதிதர்மர் இந்தியாவிலிருந்து புறப்பட்டு சீனாவில் Guangzhou வை அடைந்தார். அங்கு அவரை வரவேற்ற அரசர் பெயர் Wuti. நற்செய்கைகள் புரிவதைவிட தியானம்தான் ஞானம் அடைய மேலான வழி என்று போதிதர்மர் போதித்தார். அவரே அசையாமல் ஒன்பது ஆண்டுகள் தியானம் செய்திருக்கிறார்.

காலில் மாட்டிக்கொண்டு, இன்னொரு செருப்பைத் தலைமேல் வைத்தபடி வந்து கொண்டிருந்தார். அரசர் இந்தக் கோலம் கண்டு தடுமாறினார். அவருடன் வந்திருந்த அமைச்சர்களும் பிரபுக்களும் போதிதர்மரின் செய்கையைப் பார்த்து சங்கடப்பட்டனர். அவர்களும் போதிதர்மருக்கு மூளைக் கோளாறோ என்று சந்தேகித்தனர்.

எல்லாரும் திகைத்து நிற்பதைப் பார்த்து பிட்சு அட்டகாசமாகச் சிரித்தார்.

அரசர் கேட்டார்: "பிட்சு மஹாராஜ் அவர்களே! ஏன் இந்தக் கோலம்? தங்களது மனம் ஆரோக்கியமாக உள்ளதா? இந்தியாவிலிருந்து சீனாவரை நடந்தே வந்த நெடும் பயணத்தால் உங்கள் மனம் எவ்விதத்திலாவது பாதிக்கப்பட்டுள்ளதா? ஏன் எங்களுக்கு இந்த சந்தேகமென்றால் நீங்கள் ஞானவிழிப்புப் பெற்ற மகாஞானி என்ற செய்திகளைக் கேள்விப்பட்டே நகர வாசலிலேயே உங்களை வரவேற்கக் கூட்டமாக வந்துள்ளோம்."

போதிதர்மர் விளக்கினார்: "நீ இந்த வேடிக்கையை ஒரு விளையாட்டாகவே எடுத்துக் கொள்கிறாயா என்று அறியவே இப்படி வந்தேன். தலைமேல் தரித்தாலும், காலில் அணிந்தாலும் செருப்பு செருப்புதான். இது உனக்குப் புரிகிறதா என அறிந்துகொள்ள விரும்பினேன். என்னை மட்டுமே பார். எனது நடவடிக்கையைப் பொருட்படுத்தாதே. ஏனெனில் நான் கருமங்களைக் கடந்துவிட்டவன். உன் கண்ணில் ஒரு மனிதன் தலைமேல் செருப்பை வைத்தபடி வருவதுதான் தெரிகிறது. இந்தத் தலை ஒருநாள் கீழே விழத்தான் போகிறது. ஆயிரக்கணக்கானவர்களின் செருப்புகள் என் தலைமேல் படும். உனக்கு யார் மீதாவது கோபம் வந்தால் அவன் தலையை நோக்கித்தானே செருப்பை எறிவாய்?"

மனித மனத்தின் கட்டமைப்பு அற்புதமானது. உனக்கு யார் மேலாவது மிகுந்த மரியாதை உணர்வு இருந்தால், உன் தலையை செருப்பணிந்த அவர் கால்களின் மேல் வைத்துத்தானே வணங்குகிறாய்? ஆனால் உனக்கு ஒருவன் மீது கோபம் மூண்டால் உன் செருப்பைக் கழற்றி அவனது தலையைக் குறிவைத்து அல்லவா தாக்குகிறாய்? உன் காலாலேயே அவன் தலையில் ஓர் உதைவிட வேண்டுமென்றுதான் உண்மையில் நீ விரும்பினாய். ஆனால் அது

நடவாத காரியம். சர்க்கஸில் பயிற்சி எடுத்திருந்தால்தான் அது சாத்தியம். அந்த நடவடிக்கையின் அடையாளமாக, சின்னமாகத்தான் உன் செருப்பை அவன் தலையை நோக்கி எறிகிறாய். இந்த இரண்டையும் உனக்குச் சுட்டிக்காட்டத்தான் ஒரு செருப்பைத் தலைமேல் தாங்கியும் மற்றொன்றைக் காலில் அணிந்தும் வந்திருக்கிறேன்."

அரசர் கூடுதலாகச் சங்கடப்பட்டார். அன்றைக்கு முந்தியநாள் மாலை அவர் கோபத்தால் தன் வேலைக்காரன்மீது செருப்பை எறிந்து தண்டித்திருக்கிறார். அது இன்றுதான் வந்துள்ள பிட்சுவுக்குத் தெரியும்போல் சந்தேகமாகக் கூறுகிறாரே! அரசர் தடுமாறினார். அவரது உடல் வியர்த்தது. "குருதேவ்! ஏதோ ஒரு சம்பவத்தை மனத்தில் வைத்துக் கொண்டு தாங்கள் என்னைக் கேலி செய்வதுபோல் தோன்றுகிறதே," என்றார். போதிதர்மருக்கு அவர் செய்தது விளையாட்டு. ஆனால் ஆழ்ந்த அர்த்தம் பொதிந்த விளையாட்டு.

**இ**ன்னொரு பௌத்த பிட்சு. ஜப்பானில் கிராமம்-கிராமமாக அலைந்தபடி சென்றார். பெயர் ஹோதேயி. தோளில் ஒரு ஜோல்னா பை. அதில் பொம்மைகளும் மிட்டாய்களும். சந்திப்பவர்களில் யாராவது, "தர்மநெறி பற்றி ஏதேனும் சொல்லுங்கள்," என்று அவரைக் கேட்டால், ஹோதேயி பையிலிருந்து ஒரு பொம்மையோ, கொஞ்சம் மிட்டாயோ எடுத்து அவரிடம் கொடுப்பார்.

கேள்வி கேட்டவன், "என்னைக் குழந்தையென்றா நினைத்து விட்டீர்கள்?" என்று கோபப்பட்டால், ஹோதேயி சாந்தமாக, "நான் வளர்ச்சி பெற்ற மனிதன் யாராவது இருக்கிறானா என்றுதான் தேடி வருகிறேன். அப்படி யாரும் இதுவரை கிடைக்கவில்லை. எல்லோரும் விளையாட்டுகளில் திளைத்திருக்கிறார்கள். குழந்தைகளாவது பரவாயில்லை, பெரியவர்களும் விளையாட்டு புத்தியைக் கைவிடாத சிறுவர்களாகவே உள்ளனர்" என்பார்.

ஒருவன் கேட்டான், "தர்மம் என்றால் என்ன? உண்மையான மத வாழ்க்கை எப்படிப்பட்டது?" ஹோதேயி ஜோல்னா பையைக் கீழே தள்ளிவிட்டார். உள்ளே இருந்ததெல்லாம் வெளியே கொட்டிவிட்டது. இன்னொருவன் கேட்டான், "வாழ்க்கையில் அறநெறிக்கு எத்தகைய இடம் உண்டு?" ஹோதேயி கீழே விழுந்த வற்றை எடுத்துப் பையில் போட்டுக் கிளம்பி விட்டார். அப்போது

அவர் சொன்னது: "எல்லாப் பொருளும் வீண். அனைத்தையும் தியாகம் செய். பிறகு விளையாட்டாக எல்லாவற்றையும் தலைமேல் தூக்கிவைத்துக் கொள். அதாவது, அனுபவி-ஆனால் விளையாட்டாக, மேலோட்டமாக, ஒட்டிக் கொள்ளாமல்."

**க**லீல் ஜிப்ரான் கூறிய புகழ்பெற்ற கதை ஒன்று. ஓர் ஊருக்கு ஒரு மந்திரவாதி வந்தான். அவன் ஏதோ மந்திரம் ஓதி, கிராமத்துக் கிணற்றில் ஏதோ ஒரு பொருளைப் போட்டான். "இந்தத் தண்ணீரைக் குடிப்பவனுக்குப் பைத்தியம் பிடிக்கும்" என்று அறிவித்தான்.

கிராமத்தில் இரண்டே கிணறுகள். இந்தப் பொதுக் கிணறு தவிர அரண்மனையில் ஒரு கிணறு. ஊர் மக்கள் அனைவருக்கும் பைத்தியம் பிடித்துவிட்டது. அரசனும் மந்திரியும் மட்டும் தப்பித்தனர். 'நல்ல வேளையாக நாம் பைத்தியக்காரர்கள் ஆகவில்லை' என்று அரசன் மகிழ்ந்தான்.

ஆனால் விரைவிலேயே அவனது சந்தோஷம் துக்கமாக மாறியது. ஏனெனில் அரசனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று ஊர் முழுதும் செய்தி பரவியது. தாங்கள் எல்லாரும் பைத்தியக் காரர்கள் ஆகிவிட்டதால் ஊர்மக்கள் அரசன் வித்தியாசமாக இருப்பதைப் பார்த்து அவனுக்குத்தான் பைத்தியம் என்று முடிவுகட்டி விட்டார்கள்!

அரசர் அமைச்சரிடம், "இது ஆபத்தான விஷயமாகி விட்டதே. ஏனெனில் ஊர் முழுதுமுள்ள பைத்தியங்களில் நம்முடைய சிப்பாய்கள், சேனாபதி, மெய்க்காப்பாளர்களும் அடங்கியுள்ளனரே. இவர்களால் ஏற்படக்கூடிய அபாயத்தை நாம் எப்படி எதிர்கொள்வது?" என்று கேட்டார்.

மாலையானதும் ஊர் மக்கள் அனைவரும் அரண்மனையைச் சூழ்ந்தனர். 'இந்த ராஜாவை நீக்கவும். ஆரோக்கியமான மனதுள்ள ராஜாதான் எங்களுக்கு வேண்டும்', என்று கோஷம் எழுப்பினர்.

அரசன் பயந்துவிட்டான். அமைச்சரிடம் உபாயம் கேட்டான். "அரசே, ஒரே ஓர் உபாயம்தான் உள்ளது. வாருங்கள், நாமும் ஊர்க் கிணற்றின் நீரை குடித்து விடுவோம்," என்று அழைத்தான். இருவரும் ஓடிப்போய் அந்தத் தண்ணீரைப் பருகினார்கள். அவர்களும்

தங்களைப் போலவே நடந்துகொள்ள ஆரம்பித்து விட்டதைப் பார்த்து மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்; விழா கொண்டாடினார்கள். 'அரசனுக்குப் பைத்தியம் தெளிந்துவிட்டது' என்று ஆடிப்பாடி னார்கள்!

இந்த உலகம் பைத்தியக்காரர்களின் உலகம். இங்கு எல்லோரும் ஒருவகையான மயக்கத்தில்,' பிரமையில் ஆழ்ந்துள்ளனர். ஞான விழிப்புப் பெற்ற மனிதன் இத்தகைய மக்களிடையே வாழ்வதற்கு அவர்களைப் போலவே நடந்துகொள்ள வேண்டும். அவர்களின் வாழ்க்கை முறைகளையே பின்பற்ற வேண்டும். மக்கள் அந்தக் கட்டுப்பாடுகளைத் தீவிரமாகக் கடைப்பிடிப்பார்கள். விழிப்புப்பெற்ற மனிதன் அந்தச் சட்டதிட்டங்களை விளையாட்டாகப் பின்பற்றுவான்.

அவன் உறங்குவதுபோல் உனக்குத் தெரிந்தாலும் உறங்குவதாக நினைத்து விடாதே. நீயோ விழித்திருந்தாலும் அறியாமை உறக்கத்தில் ஆழ்ந்துள்ளாய். ஆகவே கிருஷ்ணன் கீதையில் 'யா நிஷா ஸர்வபூதானாம், தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ'* என்கிறார். இதன் பொருள்- எது எல்லோருக்கும் இரவோ, எப்பொழுது எல்லோரும் உறங்கி விடுகிறார்களோ, அப்பொழுதும் மனமடங்கியவன் விழித்திருப்பான்.' சில சமயம் அவன் உன்னோடு சேர்ந்து தூங்குகிறவன்போல் தோன்றினாலும், அவனது உள்மனம் விழித்தபடி இருக்கிறது; உள்ளே விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. அவன் தூங்கினாலும் விழிப்புடன்தான் இருப்பதாக ஜனகரும் கூறுகிறார்.

இதற்கு எதிரான நிலையில்-நாம் விழித்திருந்தாலும் தூங்குவதுபோல் சுய உணர்வின்றி இருக்கிறோம். ஆனால் ஒரு மனிதன் சற்று நம்மீது இடித்தால் போதும். ஓடிப்போய், அவன் கழுத்தைப் பிடிப்போம். சற்று யோசித்தால் நீ இயந்திரம்போல் செயல்படுவது புரியும். மின்சார விசிறி பட்டனைத் தட்டியதும் ஓடுவதுபோல் நீ செயல்படுகிறாய். ஆனாலும் நீ விழிப்பு நிலையில் இருப்பதாகக் கருத முடியாது. நீ புறத்தூண்டுதல் காரணமாக இயங்குவது இயந்திரம் இயங்கும் முறைதான். அகத்தூண்டுதலின் பேரில் இயங்கினால்தான் நீ விழித்தவன் ஆகிறாய்.

---

* பகவத் கீதை 2:69

**பு**த்தரை ஒருவன் கடுமையாக வசைபாடினான். அவர் அமைதியாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டார். பிறகு அவர் சொன்னார்: "சகோதர, என்மீது நீ மிகுந்த கவனம் செலுத்தி உதவியிருக்கிறாய். ஆனால் கொஞ்சம் தாமதமாக வந்திருக்கிறாய். பத்து வருஷம் முன்னால் வந்திருந்து நீ என்னைத் திட்டியிருந்தால் இருவருக்கும் சுவாரசியமாக இருந்திருக்கும். இப்போதெல்லாம் நான் திட்டுகளை ஏற்றுக்கொள்வதை நிறுத்திவிட்டேன். நீ காலம் கடந்து வசவுகளை எடுத்துவந்து சந்திக்கிறாய். நீ திட்டுகளை உன் வீட்டுக்கே திருப்பி எடுத்துச்செல். உன்னைப் பார்த்து பரிதாபமாக இருக்கிறது. இவற்றை நீ என்ன செய்யப்போகிறாய்? நான் எடுத்துக் கொள்வதாக இல்லையே. கொடுப்பது உன் கையில் உள்ளது. கொடுத்தலுக்கு நீ எஜமானன். ஆனால் எடுத்துக் கொள்வது என் கையில் அல்லவா உள்ளது? நீ திட்டு கொடுத்தாய். நான் வாங்கிக் கொள்ளவில்லை. இப்பொழுது நீ என்ன செய்வாய்?" திட்டியவன் வாயடைத்துப் போனான்.

ஆனால் உன் சங்கதி என்ன? யாராவது திட்டினால் அதைப் பொருட்படுத்தி ஏற்கத்தானே செய்கிறாய். ஏற்காமல் அலட்சியப்படுத்த உனக்குத் தேன்றுகிறதா? ஒருவன் திட்டியதுமே உடனுக்குடன் அது உன்மீது அம்புபோல் பாய்கிறது. இது அதை நீ அனுமதிப்பதால் உன்னைத் தாக்குகிறது. அம்பு பாய்ந்தால் ஒருவன் மயங்கிவிழுகிறான். பிறகு சுதாரித்துக் கொண்டு எழுந்து பதிலடி கொடுப்பதில் ஈடுபடுகிறான். நீயும் அதுபோல் முதலில் திட்டால் தாக்கப்பட்டு நிலைகுலைந்து போனாலும் பிறகு பதிலுக்குத் தாக்குகிறாய். சில சமயம் சண்டை வலுத்துக் கொலைகூட விழுகிறது.

**அ**க்பர் ஒருமுறை ஆக்ராவில் நகர்வலம் சென்றபோது ஒருவன் தன் வீட்டு மாடியிலிருந்து அவரைத் திட்டினான். சிப்பாய்கள் அவனைப் பிடித்து அக்பர்முன் கொண்டுவந்து நிறுத்தினர். அக்பர் அவனைப் பார்த்து, "நீ ஏன் என்னை ஏசினாய்? ஏன் நாகரிகமில்லாமல் நடந்துகொண்டாய்?" என்று அதட்டினார்.

அவன் அப்பாவிபோல் பதில் சொன்னான்: "பாதுஷா அவர்களே! என்னை மன்னியுங்கள். நான் தவறேதும் செய்யவில்லை. நான் கள் குடித்தேன். அதனால் சுயநினைவில் இல்லை. நீங்கள் எனக்கு-

தண்டனை கொடுத்தால், 'குற்றம் செய்தவன் ஒருவன்-தண்டனை பெற்றவன் வேறொருவன் என்னும் நிலை ஏற்படும். உங்கள் பெயர் கெடும். கள் குடித்ததற்காக வேண்டுமானால் நீங்கள் என்னை தண்டிக்கலாம். ஆனால் அதுவும் ஒரு குற்றமாகக் கருதப்படுவதில்லை. வசைபாடினேன் என்பதற்காக என்னை தண்டித்துவிடாதீர்கள். ஏனெனில் திட்டியவன் நானில்லை. நான் உங்களை ஏசினேன் என்பதைக்கூட நான் உணர்ந்திருக்கவில்லை. அதேசமயம் தங்கள் வாயிலிருந்தும் பொய் வராது. நீங்கள் சொல்வதால் நான் உங்களைத் தட்டியது உண்மையாகத்தான் இருக்கும். ஆனால் அந்தத் திட்டுகளை என் உள்ளேயிருந்து வெளியே கிளப்பியது கள்தான். நான் பாதுஷாவாகிய உங்களைத் திட்டுவேன் என்று கற்பனைகூட செய்ய முடியாது." இப்படி வாதம் செய்பவனை என்ன செய்வது? அக்பர் அவனைப் போகச் சொல்லி விரட்டிவிட்டார்.

இதனால்தான் குழந்தைகளின் மீது நீதிம்ன்றத்தில் வழக்குத் தொடர முடியாது. பைத்தியம் பிடித்தவர்கள் மீது வழக்குப் போட முடியாது. ஒருவன் கொலை செய்து, மனநோய் நிபுணர் அவன் பைத்தியம் பிடித்தவன் என்று சான்றிதழ் தந்து சாட்சியம் சொன்னால், அந்த வழக்கு அர்த்தமிழந்து விடும்.

நீ உன் வாழ்க்கையைக் கவனமாக நோக்கினால், நீ குடித்திராவிடிலும் சுயநினைவின்றித்தான் அனைத்துச் செயல்களும் புரிகிறாய் என்பது தெரியவரும். திருடனும் சரி, அவனை இழுத்துவரும் காவலரும் சரி, தண்டனை விதிக்கும் நீதிபதியும் சரி-எல்லோரும் ஒருவிதமான மயக்கத்தில்தான் உள்ளனர்.

உணர்வுடன் உள்ள நிலை-மயக்க நிலை ஆகிய இரண்டிற்கு முள்ள வேறுபாட்டை அறிந்துகொள். மயக்க நிலை என்பதன் பொருள்-நீ திட்டமிட்டு முடிவெடுத்துச் செயல்புரியவில்லை என்பதாகும். நீ விழித்து, யோசித்து, நிலைமையை முழுமையாக உணர்ந்து செயல் புரியவில்லை என்று அர்த்தமாகும். வேறு வழியின்றிச் செய்ததாக, வெளித் தூண்டுதலால் இயங்குவதாக அர்த்தம் கிடைக்கும். நீ உனக்கு எஜமானன் இல்லை என்றும், யாராவது உன்னைச் சற்றுப் புகழ்ந்து உன் மூலம் எதையும் செய்விக்க முடியும் என்றும் பொருள்படும்.

டேல் கார்நேகி* தனக்கு நேர்ந்த ஒரு சம்பவத்தைக் கூறுகிறார். அவர் ஓர் ஊருக்கு இன்ஷூரன்ஸ் ஏஜன்ட்டாக வந்தார். அங்கு ஒரு பெரும் பணக்கார மூதாட்டியை இன்ஷூரன்ஸ் எடுக்கவைக்கப் பல ஏஜன்ட்டுகள் முயன்றனர். இன்ஷூரன்ஸ் முகவர்கள் என்றாலே அவளுக்கு மகா எரிச்சல். அவர்கள் தன்னைக் கிழவி என்றும், விரைவில் சாகப் போகிறவள் என்றும் சுட்டிக்காட்டுவதாக அவள் நினைத்ததால், யாராவது முகவர் சந்திக்க வந்தால் அடித்து உதைத்து விரட்டிவிடுவாள்!

இந்த சூழ்நிலையில்தான் அந்த ஊருக்கு வந்த கார்நேகியிடம் அந்த மூதாட்டி பற்றி மற்ற முகவர்கள் கூறினார்கள். "விற்பனை தந்திரங்கள் குறித்து ஆங்காங்கே மேடையில் பேசும் நீ இந்த மூதாட்டியைக் காப்பீடு எடுக்கவைத்தால் அதை மாபெரும் விற்பனை சாதனையாகக் கருதுவோம்" என்று சவால்விட்டு அவரைத் தூண்டிவிட்டார்கள்.

ஒருநாள் கார்நேகி அந்த மூதாட்டியைச் சந்திக்கச் சென்றார். வீட்டினுள்ளே சட்டென்று நுழையாமல், வாசலிலிருந்த ரோஜாச் செடிகளைப் பார்வையிட்டபடி உலாவினார். வாசலில் யாரோ வந்திருப்பதை உணர்ந்த மூதாட்டி வெளியே வந்தாள். அவளது வருகையை அறியாதவர்போல் வேறுபுறம் திரும்பிக்கொண்டு, ஆனால் அவள் காதில் விழும்படியாக, 'அற்புதமான பூக்கள்! இவ்வளவு அழகான பூக்களைப் பார்த்ததே இல்லை!' என்று முணுமுணுத்தார். மூதாட்டி அருகே வந்து "பூக்களைப் பற்றி உனக்குத் தெரியும் போலிருக்கே," என்று அவரை உள்ளே அழைத்தாள். வீட்டின் பின்புறமிருந்த பூச்செடிகளையும் அவள் காண்பித்தாள். அடிக்கடி வந்து செடிகளின் வளர்ச்சியைப் பார்க்குமாறு கேட்டுக் கொண்டாள்.

அறைக்குத் திரும்பியபின் அன்றிலிருந்து கார்நேகி பூச்செடிகள் பற்றிய தாவரவியல் விவரங்களைத் தேடி படிக்கலானார்.

---

* **Dale Carnegie (1888-1955)** அமெரிக்க எழுத்தாளரும் சொற்பொழிவாளரும் ஆவார். வறுமை சூழ்நிலையில் பிறந்தும் விற்பனைத் திறமையால் வளமான வாழ்வை அடைந்தவர். சுயமுன்னேற்றப் பயிற்சி நிலையங்களை பெரும் எண்ணிக்கையில் அமைத்தவர். இவர் எழுதிய **How to Win Friends and Influence People** உலகப் புகழ் பெற்றது.

அவ்வப்பொழுது அந்த மூதாட்டி வீட்டிற்குப்போய், செடி வளர்ப்பு பற்றி பேசுவார். நிறையப் புதிய விஷயங்கள் அறிந்து மூதாட்டிக்கு மிகவும் சந்தோஷம்.

ஒருநாள் அவள் கார்நேகியை, "இன்ஷ்யூரன்ஸ் எடுத்துக் கொள்வது பற்றி என்ன நினைக்கிறாய்?" என்று திடீரெனக் கேட்டாள். அடிக்கடி முகவர்கள் தன்னைத் தொந்தரவு செய்வது பற்றியும் தெரிவித்தாள். கார்னேகி பொதுவாகப் பேசுவதுபோல், "எல்லோருமே இன்ஷுரன்ஸ் எடுத்துக் கொள்ளத்தான் வேண்டும். நானும் பாலிசி எடுத்திருக்கிறேன். பாலிசி எடுப்பவர்கள் சாவைப் பற்றி நினைப்ப தில்லை. எல்லாத் தவணைகளும் கட்டி, சில ஆண்டுகளுக்குப்பின் கிடைக்கும் கணிசமான தொகையைத்தான் கருத்தில் கொள்கிறார்கள்" என்றார்.

"அப்படியானால் உனக்குத் தெரிந்த முகவர் யாரையாவது அழைத்துவா," என்று மூதாட்டி கேட்டுக் கொண்டாள்.

"நானே ஒரு முகவர்தான். எல்லா ஏற்பாடும் நான் செய்து வைக்கிறேன். நான் இதுவரை சொல்லாததற்குக் காரணம் நான் வாழ்க்கையில் செடி வளர்ப்புக் கலைக்குத்தான் முதலிடம் கொடுக்கிறேன். இன்ஷுரன்ஸ் எனக்கு ஒரு பொழுதுபோக்குத்தான்," என்று கார்னேகி ஒரு போடுபோட்டார்.

பிறகென்ன? அவள் திட்டமிட்டிருந்ததைவிட, கார்னேகி எதிர்பார்த்ததைவிடப் பெரிய தொகைக்கு இன்ஷுரன்ஸ் பாலிசி எடுக்கப்பட்டது.

உன் வாழ்க்கையிலும் இப்படி ஏதேனும் நடந்தபடிதான் உள்ளது.ஒருவன் வந்து உன்னிடம், "சார், உங்களுக்கு நல்ல பெர்சனாலிட்டி இருக்கு," என்கிறான். உனக்குத் தெரியாதா உன் உருவம் எப்படி என்று. நீ தினமும் உன்னைக் கண்ணாடியில் பார்த் திருக்கிறாயே. அவன் பொய் சொல்கிறான் அல்லது மிகைப்படுத்திப் பேசுகிறான் என்பது உனக்குப் புரிந்துவிடுகிறது. ஆனாலும் உன் மனத்தில் பாதிப்பு ஏற்படுகிறது. 'அழகு என்பது பார்ப்பவர் கண்ணில்தானே இருக்கிறது. ஆகவே மற்றவர்களுக்கு நான் அழகாகத் தெரிகிறேன் போலிருக்கிறது' என்று அவனது பொய்ப் புகழ்ச்சியை

நியாயப்படுத்துவாய். அல்லது 'குறிப்பிட்ட உடையில் அல்லது ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் அவன் சொல்வது சரிதான்' என நினைப்பாய்.

நீ காதால் கேட்க விரும்புவதைத்தான் அவன் ஊகித்து அவன் வாயால் சொல்கிறான். இதேபோல் உன்னை அறிவாளி, திறமைசாலி, பண்பாளன் என்று பிறர் புகழும்போது உனக்கு உடல் மகிழ்ச்சியால் சிலிர்க்கிறது.

டேல் கார்னேகி தனது வியாபார உத்தியை மேலும் விளக்குகிறார். ஒருவனை எந்த விஷயத்திலாவது 'சரி' என்று சொல்லவைக்க வேண்டுமானால், அதற்கு முன்னதாக அவன் 'தவறு, வேண்டாம், தேவையில்லை' என்றெல்லாம் கூற முடியாதபடி சில விஷயங்களைக் கூறவேண்டும். உதாரணமாக, ஒருவர் நீ கவர்ச்சியாக இருப்பதாகப் புகழ்ந்தால், அதை நீ எப்படி மறுக்க முடியும்? ''ஆஹா, இப்படி என்னைச் சரியாக மதிப்பிடக்கூடிய ஆளைத்தான் இதுவரை நான் வாழ்க்கையில் தேடினேன். இவனது வேண்டுகோளை நான் எப்படி மறுப்பது?' என்று உனக்கு மனத்தில் நன்றி உணர்வு பொங்கும்.

இப்படி நாலைந்து விஷயங்களில் ஒருவரை 'ஆமாம், சரி' என்று ஒப்புக் கொள்ளவைத்து, பிறகு நீ உனக்குத் தேவையான கோரிக்கையை அவர் முன் வைத்தால், அவரால் மறுக்க முடியாது என்பது கார்நேகி காட்டும் உத்தி. அதே விஷயத்தை நீ எடுத்த எடுப்பிலேயே கேட்டிருந்தால் அவர் அதை மறுத்திருப்பார். மூன்று-நாலு விஷயங்களில் 'சரி' என்று சொன்னால், அடுத்துவரும் விஷயத்தில் 'சரி' என்னும் பதில் வழுக்கிக் கொண்டு வரும். நீ அதற்கான பாதையை ஆரம்பத்திலேயே அமைத்துவிட்டாய். இந்த உத்தியை 'காக்காய் பிடிப்பது' என்று மக்கள் கூறினாலும், இது வெற்றி பெறுவதை மறுக்க முடியாது.

ஒருவரை நாம் புகழ்ந்தால்-அது உண்மையான புகழ்ச்சி இல்லை என்றாலும்-அவர் நம் பின்னாலேயே வருவார். ஒருவரை நாம் திட்டினால்-அது நியாயமான திட்டமாக இருந்தாலும்-ஒவ்வொரு விஷயத்திலும் மறுப்பு அல்லது எதிர்ப்பே தெரிவிப்பார்.

குர்ஜியேஃப்* கூறுகிறார். "என் தந்தை காலமானபோது ஓர் அறிவுரை சொன்னார்: 'யாராவது உன்னைத் திட்டினால், திருப்பி அவரை ஏசாதே. இருபத்து நான்கு மணிநேரம் கழித்து வந்து பதில் கூறுவதாகச் சொல்லிவிடு. என்னைப் பலர் கடுமையாக விமர்சித்திருந்த போதிலும் நான் 24 மணி கழித்து அவர்களைச் சந்தித்துப் பதில் கூறும்படி ஆனதில்லை. ஏனெனில் சில சமயம் அவர்களது திட்டு எனக்கு நியாயமானதாகப்படும். என்னிடம்தான் குறை உள்ளது; இதிலிருந்து ஒரு பாடம் கற்க முடிந்தது; என்றெல்லாம் நினைத்து அவர்களுக்கு மானசீகமாக நன்றி கூறிவிடுவேன்.

'அல்லது, இந்த விமர்சனத்தில் சாரமில்லை, உண்மையில்லை, என்னைச் சீண்டுவதற்காகக் கூறப்பட்டது, இதைக் கூறியவன் என்மீது பொறாமைப்படுகிறவன் என்றெல்லாம் நினைத்து, இதற்கெல்லாம் பதில் சொல்லி ஏன் நேரத்தை வீணாக்க வேண்டும் என்று சும்மா இருந்து விடுவேன்.'

"என் தந்தை கூறிய இந்த அரிய அறிவுரை என் வாழ்க்கையை முழுவதுமாக மாற்றிவிட்டது. நம்மைக் கோபித்தவரிடம் 24 மணி நேரம் சலுகை கேட்பது அற்புதமான அணுகுமுறை. ஒருவர் திட்டியதும் நமக்கும் சட்டென்று கோபம் பொத்துக்கொண்டு வரும். நாம் 24 மணி நேரம் பதில் கூறுவதைத் தள்ளிப் போட்டால் அதற்குள் நமது ஆவேசம் தணிந்துவிடும்."

நானும் இதே அறிவுரையை உங்களுக்கும் அளிக்கிறேன். நல்லது செய்ய நினைத்தால் இன்றே, இப்போதே செய்துவிடுங்கள்- சுபஸ்ய சீக்ரம். கெடுதலான காரியம் செய்யத் தோன்றினால், கொஞ்சம் தாமதியுங்கள்; அதை நாளை அல்லது மூன்றாம் நாளுக்கு ஒத்திவையுங்கள். ஆனால், மக்கள் முரணாக நடந்து கொள்கிறார்கள். நல்லதை நாளைக்கெனத் தள்ளிப்போட்டு, கெட்டதை உடனே செய்கிறார்கள்.

* **Georges Gurdjieff** - ஆர்மேனிய நாட்டு ஞானி. அவர் மனிதனின் ஒத்திசைவான வளர்ச்சிக்கு உதவக்கூடிய பயிற்சிகள் தருவதற்காக, பிரான்ஸில் Institute for the Harmonious Development of Man என்னும் அமைப்பை ஏற்படுத்தினார்.

செயல் எதுவாயினும் அதன் பின்னணியிலுள்ள ஆவேசம் அதை நிறைவேற்றும் நேரத்தை நிச்சயிக்கிறது. ஒரு தீவிர உணர்ச்சியால் முடுக்கப்பட்டு நல்லது செய்யத் தோன்றியதுமே அதை மேற்கொள்ளாவிடில், அந்த உணர்ச்சி தணிந்தபின் அந்த நல்லதைச் செய்யத் தோன்றாது. தீயது செய்யத் தூண்டும் ஆவேசத்தைத் தள்ளிப் போட்டால், பிறகு அந்தத் தீமையைச் செய்ய மனம் வராது. ஆகவே, நல்லதை உடனே செய், தீமையை நாளைக்குத் தள்ளிப்போடு என்று உபதேசிக்கிறேன்.

சுபாவத்தால் (இயற்கையாக முயன்று) சூன்ய மனநிலையை அடைந்தவன், உறக்கத்திலும் விழிப்புணர்வு பெற்றவனாகவே கருதப்படுவான். அவன் உலகில் வாழ்ந்தபடியே முக்திநிலையில் இருக்கிறான்.

ஆத்மா எதனாலும் தீண்டப்படுவதில்லை. அது கன்னிப் பெண் போல் பரிசுத்தமாக விளங்குகிறது. நடக்கின்ற விளையாட்டெல்லாம், செயல்களெல்லாம் ஆத்மாவிற்கு அப்பாற்பட்ட களத்தில்தான் நிகழ்கின்றன. அவ்வாறு பிரித்துப் பார்க்கும் அளவிற்கு விழிப்புப் பெற்றவனின் வாழ்க்கையில் ஒரு புரட்சியே ஏற்பட்டுவிடுகிறது. பிறகு அவன் பேசுவது, நடப்பது என்று எல்லாவற்றையும் விளையாட்டுப் போல்-லீலையாகச்-செய்கிறான். ஆனால் அவற்றைக் கட்டாய மானவைபோல் செய்வதில்லை. வற்புறுத்தலுக்காகவோ, வேறு வழியின்றியோ அவன் எதுவும் செய்யமாட்டான்.

இரண்டு நண்பர்கள் சுவாரசியமாக அரட்டையடித்தபடி இருந்தனர். ஒருவன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு எழுந்தான். "இப்போது நான் போகவேண்டும்," என்றான். நண்பன் காரணம் கேட்டான். "நான் ஒரு மனநல மருத்துவரிடம் சிகிச்சை பெறுகிறேன். இதுதான் அவரைச் சந்திக்க வேண்டிய நேரம்," என்றான் மற்றவன்.

"பத்து-பதினைந்து நிமிஷம் தள்ளிப்போனால் என்ன? ஏன் பரபரக்கிறாய்?"

"மனநல மருத்துவர்கள் எப்படி சிகிச்சை செய்கிறார்கள் என்று உனக்குத் தெரிந்திருக்காது. பேச்சுதான் சிகிச்சை. தன் டயரியைப் பார்த்து நோயாளியின் பிரச்சனைக்கு ஏற்றபடி அவர் விடாமல்

பேசுவார். ஆகவே எனக்களித்த நேரத்திற்கு நான் போகாவிடில் அவர் டயரியைப் பார்த்துவிட்டு, நான் எதிரில் இல்லாவிடிலும் அவர் சொற்பொழிவைத் தொடங்கி விடுவார்! ஏதோ கட்டாயத்துக்குள்ளானவர் போல் பேசியபடி இருப்பார்.''

**நா**ன் பல்கலைக்கழக மாணவனாக இருந்தபோது எனக்கு ஒரு பேராசிரியரைப் பற்றி தெரியவந்தது. கல்கத்தாவைச் சேர்ந்தவர். அவர் தத்துவ இயல் பேராசிரியராகப் பணியாற்றினார். அவரது வகுப்பில் நான் ஒருவன்தான் படித்தேன்! மற்ற மாணவர்கள் அவரது வகுப்பில் சேர விரும்பியதில்லை. ஆனால் எனக்கு அவரைப் பிடித்திருந்தது. கடந்த 3-4 ஆண்டுகளாகவே அவரது வகுப்பிற்கு யாரும் வந்ததில்லை எனத் தெரிந்தது.

ஆகவே நான் ஒருவன் மட்டும் தத்துவ இயல் படிப்பில் சேர்ந்து அவரது வகுப்பில் போய் உட்கார்ந்தேன். முதலில் திடுக்கிட்ட அவர் பிறகு தன் நிலைமையை விளக்கினார்.

''தத்துவ இயலில் ஆர்வமில்லாமல் ஏதோ கட்டாயத்தில் படிக்க வருவதால் எனக்கு மாணவர்களைப் பிடிப்பதில்லை. அதற்கேற்ப மாணவர்களும் என் வகுப்பைத் தவிர்த்து விடுகிறார்கள். சில வருஷங்களுக்குப் பிறகு நீதான் மாணவனாக வகுப்பறைக்கு வந்துள்ளாய். ஆகவே ஓர் எச்சரிக்கை. எனது பாடவேளை வந்ததும் நான் உரையாற்றத் தொடங்குவேன். ஆனால் எப்பொழுது உரையை முடிப்பேன் என்று எனக்கே தெரியாது. ஏனெனில் மணியடிப்பதைக் கேட்டோ, கடிகாரத்தைப் பார்த்தோ நான் 'லெக்சர்' முடிப்பவனில்லை. சில சமயம் இரண்டு மணி நேரம்கூட தொடர்ந்து பேசுவேன். உனக்குச் சலித்துப்போனால், பாத்ரூம் போகவேண்டுமானால், வேறு வேலையிருந்தால் நீ ஓசைப்படுத்தாமல் எழுந்துபோ. என் அனுமதிக்காக எழுந்துநின்று 'நான் சற்று வெளியே போகட்டுமா?' என்று கேட்டு என் லெக்சரைக் கெடுக்காதே. அதேபோல் திரும்பியும் வரலாம். என் கையசைப்புக்காக அறை வாசலில் நிற்காதே,'' என்றார்.

நான் இதைக்கேட்டு பிரமித்துவிட்டேன். சில நாள் அவரது வகுப்பில் இருந்தபோது அவர் மடை திறந்த வெள்ளமாக லெக்சர் செய்வதைக் கேட்டேன். ஒருநாள் நான் நடுவில் வெளியே சென்று, ஜன்னலருகே நின்று, உள்ளே என்ன நடக்கிறதெனக் கவனித்தேன்.

அவர் தொடர்ந்து லெக்சர் கொடுத்துக் கொண்டே இருந்தார்! பேசியாக வேண்டும் என்று ஏதோ கட்டாயத்திற்கு உள்ளானவர்போல் தெரிந்தார்.

அடுத்த சில நாட்களில் அவருடன் எனக்கு நெருக்கம் ஏற்பட்டது. அப்போதுதான் அவர் திருமணமாகாதவர், நண்பர்களும் இல்லாதவர், உறவினர்களையும் நெருங்காதவர் என்றெல்லாம் தெரியவந்தது. எங்கும் எப்போதும் தனிப்பிராணியாக இருந்ததால் தனக்குத்தானே பேசிக் கொள்ளும் பழக்கம் அவருக்கு ஏற்பட்டு விட்டது. பேசிக் கொண்டேயிருப்பது அவருக்குக் கட்டாயமாகி விட்டது; அவரை நோய்போல் பிடித்துக் கொண்டது. அவரது பேச்சு யாரை முன்னிட்டும் நிகழவில்லை. நான் மாணவனாகச் சேர்ந்ததால் நீண்ட பிரசங்கம் செய்ய நேரிட்டது. நான் இல்லாமல் போயிருந்தாலும் நாற்காலி-மேஜைகளைப் பார்த்தபடி அவர் ஏதாவது பேசிக் கொண்டிருப்பார் என்று எனக்குத் தோன்றியது.

இந்த மாதிரி கட்டாயப்படுத்தப்படும் உணர்வு நீடிக்கும்வரை ஒருவர் முக்திநிலையை அடைய முடியாது. நீ மௌனமாக இருக்க முடியாதெனில், நீ சொற்களால் கட்டப்பட்டு விட்டதாக, சொற்களெனும் சிறையில் அடைக்கப்பட்டு விட்டதாகக் கருதப்படுவாய். ஆனால் மௌனமும் இயற்கையாக வரவேண்டும். நீ பயமுறுத்தப்பட்டு மௌனத்தைக் கடைப்பிடித்தால் அது மௌனமென்னும் சிறையில் நீ அடைபட்டிருப்பதாக, நீ மௌனத்திற்கு அடிமையாகிவிட்டதாகக் கருதப்படும்.

எல்லா திசைகளிலும், எல்லா பரிமாணங்களிலும் நமது வாழ்க்கை சுதந்திரமாக இருக்க வேண்டும். நாம் எந்தக் கட்டாயத் திற்கும் உள்ளாகக் கூடாது. அப்பொழுதும் அன்றாட வாழ்க்கைப் பணிகள் தொடர்ந்து நடைபெற்றுவரும். ஆனால் அவை சுமைபோல் அல்ல, விளையாட்டுப் போல் தோன்றும். அவற்றை மேற்கொள்ளா விடில் சிரமம் ஏற்படும், கவலை ஏற்படும் என்னும் கட்டாயம் இருக்கக்கூடாது.

'எனது தீவிர ஆசை ஒழிந்துபோனால் பிறகு செல்வம், நட்பு, புலன் விருப்பங்கள், சாஸ்திரம், ஞானம் எதுவும் எனக்கு எதுவும் தேவைப்படாது.' **(சுலோகம் 123)**

**ஜ**னக மஹாராஜா தமது அரண்மனையில் அமர்ந்தபடி இவ்வாறு சிந்திக்கிறார்.

இதைப் புரிந்துகொள்ள முயன்று பார். பணத்தைத் துறப்பது எளிது. பண ஆசையைத் துறப்பது கடினம். பணத்தைத் துறந்தால் புண்ணியம் கிடைக்கும் என்றொரு புதிய ஆசையும் முளைக்கிறது.

நட்பாசை காரணமாக நாம் நம்முடன் சம்பந்தப்பட்டவர்களை நண்பர்கள்-எதிரிகள் என்று பிரிக்கிறோம். ஆசை நீங்கினால் 'யாவரும் கேளிர்' என்னும் மனநிலை தோன்றும்.

நீ நண்பனென்று யாரைக் கூறுகிறாய்? உன் ஆசைகளில், உனக்குப் பிடித்தமானவற்றில், உன்னோடு சேர்ந்து பங்கேற்பவனைத் தானே உன் சிநேகிதன் என்று கருதுகிறாய்.

நீ எதிரி என்று யாரைக் கூறுகிறாய்? உன் ஆசைகள், விருப்பங்களில் பங்கேற்காதவனை, அவை நிறைவேற முடியாதபடி தடையாக இருப்பவனைத்தானே உன் எதிரி என்று கருதுகிறாய். அவன் உன் வாழ்க்கையில் சிக்கல்களைத் தோற்றுவிப்பதாக நினைக்கிறாய். உன்னை வாழ்க்கை ஏணியில் ஏற்றி விடுபவனை நண்பன் என்கிறாய். உன் வாழ்க்கை என்பது என்ன? உன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக நீ மேற்கொள்ளும் தொடர்ச்சியான ஓட்டம்தானே.

இதனால்தான் 'ஆபத்தில் உதவுபவன்தான் நண்பன்' என்றொரு பழமொழி ஏற்பட்டது. ஆபத்து என்பது பிரச்சினை ஏற்படுவதைக் குறிக்கிறது. அது என்ன பிரச்சினை? உன் ஆசைமயமான ஓட்டத்தில் தடங்கல் தோன்றினால் அப்போது வந்து உன் ஆசை தொடர அல்லது நிறைவேற உதவுபவனே உன் நண்பன் என்று பொருள்படுகிறது. அது நியாயமான ஆசையாக இல்லாவிடிலும் அதில் உனக்கு உதவுபவனையே நண்பனாக எடுத்துக் கொள்கிறாய்.

என் ஆசை, மோகம் உருகிப்போனால், எதன் பின்னாலும் ஓடுவதை நான் நிறுத்தினால், எதையும் பெறத் துடிக்காவிடில், இத்தகையவனாக ஆகவேண்டுமெனக் கற்பனையில் மூழ்காவிடில், ஏதோ ஒன்று கிடைக்க வேண்டுமென எதிர்பாராவிடில், மனத்தில் உணர்ச்சிக் கொந்தளிப்பு இல்லாவிடில், நான் யாரென்பதில்

சந்தோஷப்பட்டால், நான் எப்படி உள்ளேனோ அதில் சந்தோஷப் பட்டால், இன்னொருவன்போல் இருக்க ஏங்காவிடில்—

பிறகு பணத்திற்கு என்ன மதிப்பு? அது இருந்தால் என்ன? இல்லாவிடில் என்ன? பணம் இருந்தால் சந்தோஷமாக விளையாடலாம். பணம் இல்லாவிடில் வேறுவகையான சந்தோஷம். நம் அருகில் யாராவது நண்பர் இருந்தால் சந்தோஷம்; இல்லாவிடிலும் சரிதான். பணம் இருந்தாலும் எதைப் பார்த்தாலும் ஆசைப் பட்டாதவன்தான் செல்வந்தன். திருப்தியில்லாத பணக்காரன் மாடிவீட்டு ஏழைதான். நண்பர்கள் இல்லாதவனுக்கு மொத்த உலகமுமே நண்பனாக விளங்கும். மரங்களும், விலங்குகளும், பறவைகளும்கூட அவனுக்கு நண்பர்களாக இருக்கும். ஆசை காரணமாக மோதலும் பகைமையும் . உண்டாகிறது. ஆசை இன்மை நட்பைத் தோற்றுவிக்கிறது. கடவுளின் நட்பையும் பெற்றுத் தருகிறது.

சிறுவயதில் படிப்பைத் தொடங்கும்போதே நாம் குழந்தைகளின் மனத்தில் ஆசை என்னும் விஷத்தை நிரப்பத் தொடங்குகிறோம். முதல் மாணவனாக வரவேண்டும் என்று தூண்டும் நாம், யாருடனும் பகைமை கூடாது என்றும் சொல்லித் தருகிறோம். வகுப்பில் 30 மாணவர்கள் இருந்தால் ஒருவன்தானே முதலிடம் பெற முடியும். ஆகவே ஒவ்வொருவனும் மீதி 29 பேரைத் தன்னுடன் போட்டியிட்டு, தான் முதலிடம் பெறுவதற்குத் தடையாக இருக்கும் எதிரிகள் என்றுதானே நினைப்பான். யாருடன் போட்டியோ அவர்களுடன் நட்பு எப்படி ஏற்படும்?

வளர்ந்தவர்களிடம் நாம், 'இது உங்கள் தேசம். இங்குள்ளவர்கள் எல்லாம் உறவினர்கள் போன்றவர்கள். சமூகம் முழுவதையும், மனித இனத்தையே நேசியுங்கள்' என்கிறோம். இது எப்படி சாத்தியப்படும்? வாழ்க்கையே ஓட்டப் பந்தயமாக இருக்கும்போது மற்ற அனைவரும் நம்முடன் போட்டி போடுபவர்களாயிற்றே. எதிரியிடம் மட்டுமன்று, நண்பனிடம்கூட அல்லவா நாம் பயப்பட வேண்டியுள்ளது.

முல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் தொழுகை முடிந்தபின் ஒரு வரம் வேண்டுகிறார்: 'கடவுளே, நான் என் எதிரிகளைச் சமாளித்து விடுவேன். ஆனால் என் நண்பர்களிடமிருந்து நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.' ஆம், உண்மையில் நமக்கு இங்கே நண்பராக யார் உள்ளனர்?

அடால்ஃப் ஹிட்லரும் யாருடனும் நட்பு வைத்துக் கொள்ளவில்லை. அவரது தோளில் கைபோடும் அளவிற்கு யாரையும் நெருங்கவிட்டதில்லை. அவர் மட்டுமில்லை, எந்த அரசியல் தலைவரும் இன்னொருவரை அளவு மீறித் தன்மீது உரிமை கொண்டாட விடுவதில்லை. தன்னை இன்னொருவர் நெருங்குவது தனக்கு ஆபத்தாக முடியுமென அவர் நினைக்கிறார். நமக்கு அடுத்தபடி வரிசை எண் 2இல் இருப்பவனால்தான் நம் பதவிக்கு ஆபத்து விளையக்கூடும்.

மாவோத்ஸே துங் தனக்கு அடுத்தபடி நம்பர் 2 என யாரையும் உருவாக விடவில்லை. அவரை யாரும் மிகவும் நெருங்கினால் அந்த ஆள் தொலைந்தான் என்னும் நிலைமை இருந்தது. ஏனெனில் நம்பர் 2 என்பவன் நம்பர் 1 ஆவதற்கு முயலத்தானே செய்வான். அப்படி எவனும் வளர முடியாதபடி மாவோத்ஸே துங் தடுத்து வந்தார். அவர் கட்சியில் பிரபலமான இதரத் தலைவர்கள் தன்னை நெருங்கிவிடாதபடி சற்றுத் தொலைவிலேயே நிறுத்தி வைத்திருந்தார்.

இது ஆச்சரியம் தந்தாலும் அரசியல் தலைவர்கள் அனைவரும் இப்படித்தான் நடந்து கொள்கிறார்கள். யாரையாவது நெருங்கவிட்டால் சந்தர்ப்பம் பார்த்துத் தன் கழுத்தை நெரித்து விடுவார் என்றே ஒவ்வொரு தலைவரும் பயப்படுகிறார். கட்சியிலோ, ஆட்சியிலோ தன்னை யாராவது முந்துவதுபோல் தெரிந்தால் தலைவர் அவரை வேறு பதவிக்கு மாற்றி விடுவார். யாரும் ஒரே பதவியில் நீடிக்காதபடி பிரதமர் அல்லது முதலமைச்சர் அமைச்சரவையில் மாற்றம் செய்வதற்கு இது ஒரு காரணம். இது ஒரு முன்னெச்சரிக்கை நடவடிக்கை.

பக்தி உலகில் பிரவேசித்த பிறகும், பக்தர்களான பிறகும், பொருளாசை நீங்குவதில்லை. கபீர்தாசர் ஒரு போர்வையை ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தார். ஆனால் பக்தர்களுக்கு சந்தேகம். அவரில்லாதபோது போர்வையை ஆராய்கிறார்கள். எங்காவது விலை உயர்ந்த ரத்தினக் கல்லை அதில் முடிச்சுப்போட்டு வைத்திருப்பார் என நினைத்து, அதைக் கவர்ந்து செல்ல ஆசைப்படுகிறார்கள். இதை கபீர்தாசரே பாட்டு வடிவில் கூறுகிறார்:

**கபீர்தாசரின் போர்வையிலே**
**முடிச்சு ஒண்ணும் கிடையாது**
**நாலா பக்கமும் திறந்து கிடக்குது**
**ஆனா அதை அவர் காப்பதால்**
**அதிலே ரத்தினம் உள்ளதென**
**அவர் இல்லாதபோது சீடர்கூட்டம்**
**எடுத்து அத்னை ஆராயுது**

நீ பக்தி உலகில் பிரவேசிக்கும்போதுகூட ஆசைகளைத் துறந்துவிட்டுச் செல்வதில்லையே. ஆசை காரணமாகத்தானே நீ பக்தியில் ஈடுபடுகிறாய். ஆகவே கோயிலுக்குப் போகிறாய். சிலைகளின் முன் சிரத்தால் தரையை உரசுகிறாய். ஆனால உனக்குள் இறை உணர்வு பரவுவதில்லை. ஆசை நிரம்பி இருக்கும் உள்ளத்தில் கடவுள் பிரவேசிக்க வழி இல்லை. ஆசை இல்லாத மனம்தான் சூன்ய மனம் என்னும் உயர்நிலையை அடையும். அதில் சமாதி ஏற்பட வாய்ப்பு உள்ளது. அங்குதான் கடவுள் எழுந்தருள முழுதும் காலியான இடம் உள்ளது. ஆசையென்னும் தூசியும் புகையும் அங்கே பரவாது.

ஆசைகளின் பின்னால் ஓடி-ஓடி நீ எவையெல்லாம் சேகரித்தாயோ அவையே ஒருநாள் உன்னைப் பார்த்துச் சிரிக்கும். பணம் பணக்காரனைப் பார்த்து நகைக்கிறது. ஏனெனில் உலகிலிருந்து போகும்போது வெறுங்கையுடன்தானே செல்ல நேரிடுகிறது. வாழ்க்கை முழுதும் நீ நிரப்பும் செயலில் ஈடுபட்டாய். அதனாலேயே நீ ஒன்றுமில்லாதவனாகிப் போனாய். நீ கட்டிய மாளிகை உன்னையே ஏளனம் செய்கிறது. உன் பதவி உன்னையே கிண்டல் செய்கிறது.

**எனது வாழ்க்கை முழுதும் நான்**
**எதனை வெறியுடன் துரத்தினேனோ**
**அது கானல்நீரெனத் தெரிந்து போய்க்**
**கண்ணீர் விட்டேன் ஏமாற்றத்தால்**

**எனது சக்தியை எல்லாம் திரட்டி**
**எந்த லட்சியத்தை அடைந்து நான்**
**எதை நிரந்தரமாக்க முயன்றேனோ**
**அதுவே நழுவி நகைத்தது கேலியாய்**

**எனது பூஜை-ஆராதனையை**
**எனது முழுமையான சமர்ப்பணத்தை**

## எனது பலகீனத்தின் அடையாளமென நான் வணங்கும் சிலை சிரித்தது

நீ எதனை நிலைநாட்டினாயோ அதுவே உன்னைப் பார்த்து ஒருநாள் சிரிக்கும். உலகமே உன்னை ஏளனம் செய்யும். இங்கு ஓடத்தான் முடியும். சென்றடைய முடியாது.

ஆசை ஓடிக்கொண்டே இருக்க வைக்கிறது. எங்கே நின்றாலும் கானல்நீரே தென்படுகிறது. எவ்வளவோ முயற்சி செய்கிறோம். பலன் கிடைப்பதில்லை. மணலிலிருந்து எண்ணெய் எடுக்க முயலுவது போன்றதாகிறது நமது முயற்சி. இடைவிடாத ஓட்டம். மக்கள் களைத்துப் போகிறார்கள்; செத்துப் போகிறார்கள். சிறியவர்-பெரியவர், ஏழை-பணக்காரர் எல்லோரும் ஆசைகளால் நிரம்பி வழிகிறார்கள். பணம் சேருவதும் செலவாவதும் பிரச்சினை இல்லை. பணத்தாசை உள்ளது என்பதுதான் பிரச்சினை. ஏனெனில் ஏழைதான் பணத்திற்க ஆசைப்படுகிறான் என்றில்லை. பணக்காரனுக்கும் அதே ஆசை உள்ளது.

**யூ**த நாட்டுக் கதை ஒன்று. தர்மகுரு ஒருவர் பணத்தாசை, பதவியாசை முதலியவற்றின் தீமையை விளக்கிப் பேசினார்.

ஒருவன் எழுந்தான். "சுவாமி! நான் இந்த நாட்டுக்கு வெறுங்கையுடன் வந்தேன். முயன்று உழைத்து கோடிக்கணக்கான டாலர் சம்பாதித்தேன். உங்கள் உபதேசத்தைக் கேட்டு நான் வெறுங்கையனாக ஆகிவிட்டதுபோல் தோன்றுகிறது. என் பணத்தாசை நீங்கிவிட்டது." என்று அறிவித்தான்.

இன்னொருவன் எழுந்தான்: "சுவாமி! நானும் இந்நாட்டிற்கு வெறுங்கையுடன்தான் வந்தேன். இப்போது கோடிக்கணக்கான டாலர் சேர்த்துவிட்டேன். ஆனால் உங்கள் அமுதமயமான உபதேசம் கேட்டு நான் சூன்யமாகிவிட்டதுபோல் தோன்றுகிறது. உங்கள் முன்னிலையில் நான் வெறுமையான மனிதன்." என்று அறிவித்தான்.

மூன்றாவது ஆள் ஒருவன் எழுந்தான். "சுவாமி! நான் இங்கே வேலையில்லாதவனாக வந்தேன். நான் இப்பொழுது கண்ணியமான தபால்காரர் வேலை பார்க்கிறேன். ஆனால் உங்கள் பிரசங்கம் கேட்டு நான் மறுபடியும் ஓர் அந்தஸ்தும் இல்லாதவனாகி விட்டதுபோல் தோன்றுகிறது." என்று அறிவித்தான்.

யார் பெரிய தியாகி என்று மூவரும் வாதம் புரிந்தனர். யார் எவ்வளவு சேர்க்க முடியும் என்று ஆசை மூள்வதுபோல், யார் எவ்வளவு துறக்க முடியும் என்பதும் ஆசையின் இன்னொரு வகைதான். அடக்கம் நிறைந்த ஒரு சாமியாரிடம் 'உங்களைவிட அதிகம் அடக்கமான சாமியார் ஒருவரைக் கண்டேன்' என்று சொல்லிப்பார். அவருக்குக் கோபம் வரும். ஆக, யார் அதிகம் பணிவுடையவர் என்பதிலும் ஆசையின் தூண்டுதல் உள்ளது. சந்நியாசிகளிடமும் அகங்காரம் காணப்படுகிறது. தன்னைத்தான் பெரும் ஞானி, தன்னைத்தான் அதிகம் அடக்கமானவர் என்று மக்கள் கூறவேண்டுமென்ற ஆசை அவர்களுக்கு உள்ளது.

சாஸ்திர அறிவு சம்பந்தமான ஆசையும் உண்டு. யாருக்கு அதிக அறிவு உள்ளது என்று சமூகத்தில் போட்டி நிலவுகிறது. நீ மற்றவர்களிடம் பேசிப்பார். ஒவ்வொருவனும் தனது அறிவை வெளிப்படுத்துவதற்கு முயலுவதையே காண்பாய். இது மக்களிடையே வாத விவாதத்தைத் தூண்டிவிடுகிறது. தன்னைத்தான் தலைசிறந்த அறிவாளியெனப் பிறர் கூறவேண்டுமென ஒவ்வொருவனும் எதிர்பார்க்கிறான். ஒருவன் பணம் சேகரிக்கிறான். இன்னொருவன் ஞானம் திரட்டுகிறான். அடிப்படையில் இருவகையினருமே ஆசையால் அலைக்கழிக்கப்படுவர்கள்தாம்.

ஒரு சந்நியாசியின் ஆசிரமத்திற்கு ஒருமுறை நான் சென்றிருந்தேன். பள்ளிக்கூடச் சுவர்களில் எழுதப்படுவதுபோல் அவர் உட்கார்ந்திருந்த இடத்தின் பின் சுவரில் 'ஞானி எங்கும் வணங்கப்படுகிறார்' என்னும் மேற்கோள் எழுதப்பட்டிருந்தது. நான் கேட்டேன், "இது எதற்காக எழுதப்பட்டுள்ளது? தன்னைப் பிறர் வணங்க வேண்டுமென விரும்புபவன் ஞானியாக இருக்க முடியாது. உண்மையான ஞானம் இருந்தால் பூஜிக்கப்படுவதில் அக்கறை இருக்காது. ஞானியோ உண்மையில் பேராசைக்காரனாக இருக்கிறார்! பணம் சேகரிப்பவனைப் பார்த்து 'உனக்கு உன் நாட்டில் மட்டுமே பூஜை' என்கிறார். அரசரைப் பார்த்து 'உனக்கு உன் ஊரில் மட்டுமே பூஜை' என்கிறார். பிறகு மார்தட்டிக் கொள்வதுபோல் 'ஞானியாகிய எங்களுக்கு சென்ற இடமெல்லாம் சிறப்பு' என்கிறார். ஆசையே இருக்கக்கூடாத சந்நியாசிக்கு எவ்வளவு அதிகபட்ச ஆசை, பாருங்கள்!"

ஞானத்தைச் சேகரிக்க முயலுபவன் ஞானம் கிடைக்கப் பெறாதவனாகி விடுகிறான்! ஏனெனில் ஞானம் என்பது உனக்குள் ளேயே இருக்கிறது. அதை வெளியிலிருந்து திரட்ட வேண்டியதில்லை. வெளியிலிருந்து வருவது ஞானமில்லை. வெறும் தகவல் குப்பை கூளம். கைமாற்று போன்றது. உனக்குரிய சாஸ்திரம் உனக்குள்ளேயே இருக்கிறது. வெளியில் கிடைக்கும் சாஸ்திரத்தை உன் தலையில் சுமக்காதே.

பிறவி தோறும் நம் முன்னே கேள்விகள் பல வந்து நிற்கின்றன. பதில் கிடைக்காத நிலையில் அவற்றிற்கு நின்று-நின்று கால்கள் வலிக்கின்றன. எல்லா திசைகளிலும் பதில் தேடும் அவை உன் உள்ளத்தினுள்ளே பார்ப்பதில்லை.

**ஜென்** கதை ஒன்று. போகோஜு என்னும் துறவி சொற்பொழிவு செய்தபோது ஒருவன் நடுவில் எழுந்து நின்றான். “நான் யார்? இதற்குப் பதில் கூறிவிட்டுப் பேச்சைத் தொடருங்கள்” என்றான். திரண்டிருந்த மக்களைப் பார்த்து போகோஜு ‘எல்லோரும் வழிவிடுங்கள்’ என்று சத்தம் போட்டார். அவர் உடல்வலிமை வாய்ந்தவர். கூட்டம் வழிவிட்டது. அவர் நேரே அந்த மனிதனிடம் வேகமாகச் சென்றார். கையில் குண்டாந்தடி! அந்த மனிதன் அரண்டுவிட்டான். அவர் கேள்விக்குப் பதில் சொல்ல வருகிறாரா அல்லது அடிக்க வருகிறாரா என்று குழம்பினான். போகோஜு அவனது சட்டைக் காலரைப் பிடித்தார். குண்டாந்தடியை உயர்த்தினார். “கண்ணை மூடிக்கொள். உனக்குள்ளே பார். எங்கிருந்து உன் கேள்வி எழுந்ததோ அங்கே இறங்கு. நீ மறுத்தால் உன் கேள்விக்கான பதிலை இந்தக் குண்டாந்தடி சொல்லும்!” என்றார்.

அந்த மனிதன் பயந்துபோய்க் கண்களை இறுக மூடிக் கொண்டான். பயமிகுதியால் ஒரு கணம் அவன் சிந்தனை இழந்தான். இப்படித்தான் சில சமயம் கடினமான சூழ்நிலைகளில் நமது சிந்தனை ஸ்தம்பித்துவிடுகிறது. திடீரென ஒருவன் நம் கழுத்தில் கத்தியை அழுத்தினால் நம்மால் எதுவும் யோசிக்க முடிவதில்லை. ஏனெனில் சிந்திப்பதற்கு அவகாசம் தேவை, சூழ்நிலை தேவை. நாம் கார் ஓட்டுகிறோம். எதிரே நம் மீது மோதுவதுபோல் ஒரு கார் வேகமாக வந்தால், நாம் எதுவும் யோசிக்க முடியாமல் திணறுகிறோம்.

கேள்வி கேட்ட மனிதன் பார்த்தான். எதிரே பயில்வான் போன்ற உடல் கொண்ட துறவி. அவர் கையில் குண்டாந்தடி. அடிக்கத் தயங்கமாட்டார் போன்ற உறுதி. கண்களை மூடிக்கொண்டபின் அவனது முகத்தில் ஓர் ஒளி பரவியது. ஓர் உல்லாசம் பிரதிபலித்தது. அவனது உடல் இலேசாக அசைந்தாடியது.

துறவி இதைக் கவனித்து, "போதும், கண்களைத் திற, பேசு," என்று கட்டளையிட்டார்.

அதற்கு அவன், "ஆச்சரியமான பாதிப்பு எனக்கு ஏற்பட்டது. நான் இதுவரை எனக்குள்ளே பயணித்ததில்லை. அங்கே நான் சென்றடையச் செய்தீர்கள். 'நான் யார்?' என்று இதுவரை எத்தனையோ பேரிடம் கேட்டு அலுத்து விட்டேன். இதற்கான பதில் எனக்குள்ளேயே இருக்கிறது என்று எனக்கு இதுவரை தெரியாதிருந்துவிட்டது. நீங்கள் குண்டாந்தடியை உயர்த்தியதும் எனக்குப் பதில் தெரிந்துவிட்டது," என்று சந்தோஷப்பட்டான்.

ஜென் துறவிகள் விசித்திரமானவர்கள். தேவைப்பட்டால் அவர்கள் சாதகரைத் தூக்கி எறிந்துவிடுவார்கள். ஆளைக் கீழே தள்ளி நெஞ்சுமேல் உட்கார்ந்து விடுவார்கள்.

**போ**கோஜூ சம்பந்தமாக இன்னொரு நிகழ்ச்சி. அவர் பேசும்போதெல்லாம் கடவுளைக் குறிப்பிட அவர் ஒரு விரலை உயர்த்திக் காட்டுவார். அவருடைய சீடர்கள் மறைமுகமாக இதைக் கேலி செய்வார்கள். கொஞ்சநஞ்சமல்ல, அவருக்கு ஐந்நூறு சீடர்கள்! மிக விசாலமான ஆசிரம வளாகம். ஒரு சிறுவன் அவருக்குத் தண்ணீர் கொண்டுவந்து கொடுப்பது போன்ற சிற்றேவல் செய்து வந்தான். அவனும் போகோஜூ ஒரு விரலை உயர்த்துவதை வேடிக்கையாக நினைத்தான்.

போகோஜூ சீடர்களுக்கு உபதேசம் செய்கையில் சிறுவன் அவருக்குப் பின்னால் நிற்பான். ஒருமுறை உபதேச நடுவில் அவர் விரலை உயர்த்தினபோது சிறுவனும் இவ்வாறே செய்தான். இதைக் கண்டு சீடர்கள் புன்னகை செய்தனர். இதைக் கவனித்து போகோஜூ சட்டெனத் திரும்பிப் பார்த்தார். விஷயம் புரிந்தது. ஒரு கத்தியெடுத்துச் சிறுவனின் அந்த விரலை வெட்டிவிட்டார்!

இது மிகவும் குரூரமான செயல்போலத் தோன்றும். சிறுவனுக்கு ஓர் அதிர்ச்சி உண்டானது. விரல் வெட்டப்பட்டதும் அந்த வலி அம்பைப் போல் தாக்கியதும் சிறுவன் ஒருகணம் செயல்படாமல் உறைந்துபோனான். எதுவும் யோசிக்க முடியவில்லை. அக்கணம் அந்த அதிசயம் நிகழ்ந்தது. தன்னை மறந்த நிலையில் அந்தச் சிறு வயதிலேயே அவன் தனது உள்ளத்தினுள் பிரவேசித்துவிட்டான். அடுத்து சமாதி நிலையும் அடைந்து விட்டான்.

இவ்வாறான சத்குருக்களின் செயல்களை மேலோட்டமாக மதிப்பிடக் கூடாது. ஒரு சந்நியாசி ஒரு சிறுவனின் விரலை வெட்டியது சரியான செயலாகுமா? ஆனால் இதை யார் முடிவு செய்வது? பின்விளைவைக் கவனிக்கும்போது போகோஜூ கருணை காட்டினார் என்பது புரியும். பிறகு அப்படி ஒரு சந்தர்ப்பம் வராமல் போயிருக்கும். ஞானம் பெறாமலே அந்தச் சிறுவன் வளர்ந்து சராசரி வாழ்க்கை நடத்தியிருப்பான். மாறாக, இந்த அதிர்ச்சியில் அவன் ஞானம் பெற்றான். அவன் பிற்காலத்தில் ஒரு சத்குருவாகத் திகழ்ந்தான் என்பர். தனது ஊனமான விரலைச் சுட்டிக்காட்டி 'என் குருவின் கருணையால் ஓர் அதிர்ச்சி மூலம் என் சிந்தனைப் பிரவாகம் நின்றுபோய் அந்த சூனியத்தில் ஞானம் வந்து அமர்ந்தது' என்று அவர் கூறுவது வழக்கம்.

எல்லாமும் உள்ளே இருக்கிறது. செல்வமும் உள்ளே, சாஸ்திரமும் உள்ளே, ஞானமும் உள்ளே. நீ வெளியே கிடக்கும் குப்பையைச் சேர்த்தபடி இருக்கும்வரை, தகவல்களை மட்டும் திரட்டியபடி இருக்கும்வரை நீ அஞ்ஞானியாக, அறிவிலியாகவே நீடிப்பாய். புத்தகத்திலுள்ள சாஸ்திரம் உனக்கு ஞான விழிப்பு நல்காது. அந்த சாஸ்திரம் உனக்குச் சுமையாக அமையும். அதன் மூலம் நீ பிரகாசிக்க முடியாது. உன் உள்ளத்தினுள் ஞானதீபம் ஏற்றப்பட்டு ஒளிவீசாது.

நான் பலருடைய உள்ளத்தை ஆழ்ந்து நோக்கியிருக்கிறேன். அவர்களது உள்ளத்தின் ஜோதி புனித நூல்கள் எனப்படும் சாஸ்திரங்களால் அழுத்தப்பட்டு அணைந்து வருகிறது. ஒவ்வொரு மதத்தினரும் தங்களுக்குரிய புனிதநூலை நெஞ்சோடு அழுத்திப் பிடித்தபடி உள்ளனர். இல்லாவிடில் ஞானம் கீழே விழுந்துவிடுமோ என்று பயப்படுகின்றனர்.

இந்து ஞானம், இஸ்லாமிய ஞானம், ஜைன ஞானம் என்றெல்லாம் ஞானம் வகைப்படுத்தப்படுவதில்லை. அப்படிப் பிரிக்கப்படும் ஞானம் பயனற்றது. ஞானம் என்பது உனது சுபாவத்தினால் உருவாகும் தனிப்பட்ட தத்துவக் கோட்பாடு. அது உனக்குள்ளே ஒளிந்திருக்கிறது. அதை வெளியில் தேடவேண்டிய அவசியம் கிடையாது.

**ஆழத்தில் இறங்கினால்**
**ஆங்கும் ஒரு கரை**
**நீரின் பரப்பில் அலையின் எழுச்சி**
**கீழே சலனமற்ற தண்ணீர் விரிப்பு**
**சிப்பி, பவளம் மிதக்கும் மேலே**
**கீழே கிடைப்பது நல்முத்து**

உள்ளத்தின் ஆழத்தில் செல்லச் செல்ல முத்து-முக்தா-முக்தி கிடைக்கும்.

**ஆகாயம் மௌனமாய் இருக்கிறது**
**அந்த மௌனமே ஒலியாய்க் கேட்கிறது**

ஆகாயத்தின் மௌனத்தைக் கைப்பற்று. அதை உனதாக்கு. உனக்குள்ளேயும் ஆகாயம் உள்ளது-சித்த ஆகாயம், சிதாகாசம். வெளி ஆகாயத்தின் மௌனம் உள் ஆகாயத்திலும் பரவட்டும். உள் ஆகாயத்தின் மௌனமே ஓர் ஒலியாகிறது. அதை நாம் ஓங்காரம், அனாகத நாதம் என்றெல்லாம் அழைக்கிறோம். அந்த 'மௌன ஒலி'யைக் காதால் கேள்.

மௌனம்தான் தொடர்ந்து அடர்த்தியாகி ஒரு கட்டத்தில் இறைவன் என்று ஆகிறது. சாஸ்திரங்களில் காணப்படுவது வெற்றுச் சொற்கள் மட்டும்தான். மௌன சாஸ்திரம் நமக்குள்ளேயே இருக்கிறது. சாஸ்திர நூல் படிப்பதாயின் சொற்களைப் படிக்காமல் அவற்றின் இடையில் காணப்படும் வெற்றிடங்களைப் படித்துக் கொண்டே செல்! அல்லது சூஃபிகள் செய்வதுபோல் எதுவுமே எழுதப்படாத அல்லது அச்சிடப்படாத பக்கங்களுள்ள வெறுமையான புத்தகத்தைப் படி! காலியான பக்கங்களைப் புரட்டிப் பார்க்கையில் நீயும் காலியாகிவிடுவாய், சூனியமாகி விடுவாய். அந்த வெறுமையில்தான் இறை அனுபவம் நிறைந்துள்ளது.

'சாட்சியாக விளங்குதல், இறை அறிவு, ஆசையிலிருந்து விடுதலை, பற்றுகளிலிருந்து விடுதலை ஆகியவற்றை அறிந்து கொண்டதால் எனக்கு முக்தி (மோட்சம்) பற்றி கவலை இல்லை.' **(சுலோகம் 124)**

**சா**ட்சியாக விளங்கும் தன்மையை அறிந்துகொண்டால் அது கடவுளைப் புரிந்து கொண்டதற்கு சமமாகும். அப்போது ஆசைகள் அறுந்து விடுகின்றன. ஆசைதான் பற்றுக்கு காரணமாதலால் ஆசை நீங்கினால் பற்றும் அகன்றுவிடும். முக்தியும் ஒருவகை பிரமையே. கட்டுப்படுதல் மாயை என்றால், விடுபடுதலும் மாயையாகத்தான் இருக்கும். ஆத்மா எதற்கும் கட்டுப்பட்டதில்லை. ஆகவே 'ஆத்மாவிற்கு முக்தி' என்பதற்கு அர்த்தம் இல்லை.

இரவில் ஒரு கனவு. நீ சிறையில் இருக்கிறாய். கைகளில் விலங்கு. கால்கள் சங்கிலியால் கட்டப்பட்டுள்ளன. காலையில் விழித்ததும் எல்லாம் கனவெனப் புரிகிறது. 'எனக்குச் சிறையிலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது. கை-கால்கள் தெறித்து விழுந்தன' என்று நீ அறிவிப்பாயா என்ன? சிறையும் விலங்குகளும் உண்மையில் இல்லையே.

மக்கள் தமது அன்றாட வாழ்க்கைக் கவலைகளில் மூழ்கியிருக் கிறார்கள். எவ்வாறோ அந்தக் கவலைகள் நீங்கினால் வேறு புதுக்கவலை அந்த இடத்தைப் பிடித்துக்கொள்கிறது. மோட்சம் எப்படி அடைவது என்னும் சிந்தனையே இந்தப் புதுக்கவலை. இந்தக் கவலை காரணமாகத்தான் முக்தி கிடைப்பது சிரமமாக உள்ளது. கவலை நிறைந்த உள்ளம் கொந்தளிக்கும் உள்ளம்; நடுங்கும் உள்ளம். கடவுளைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக அது விளங்க முடியாது.

ஆகவேதான் நான் உங்களிடம் மோட்சம் பற்றியும் கவலைப் படாதீர்கள் என்று சொல்கிறேன். அது தானாகவே உங்களிடம் வந்துசேர அக்கறை எடுத்துக்கொள்ளட்டும். நீங்கள் கடவுளையும் தேடி அலைய வேண்டாம். அவரே உங்களை நோக்கி வழியில் வந்துகொண்டுதான் இருக்கிறார். தயவு செய்து அமைதியாக உட்கார்ந்திருங்கள். எதையும் தேடாதீர்கள். உங்கள் தேடும் முயற்சியின் பின்னணியில் ஆசை மறைந்திருக்கிறது. ஆசையில் நிராசை

(ஏமாற்றம்) மறைந்திருக்கிறது. தேடலில் வெற்றி பெற்றால் அகங்காரம் வளர்கிறது. தோல்வியுற்றால் துயரம் மேலிடுகிறது. எல்லாத் தேடலும் எதிர்காலத்துடன் சம்பந்தப்படுபவை. இதனால் நிகழ்காலத்துடனான தொடர்பு அறுந்துவிடுகிறது.

ஆனால் கைவசம் இருப்பதெல்லாம் இப்பொழுது, இங்கே நிகழ்காலத்தில்தானே உள்ளது.

ஜனகர் சொல்கிறார்-நீ உண்மையில் எப்படியோ அப்படியே நீடித்திரு. அமைதியில் ஆழ்ந்திரு. என்ன நடக்கிறது என்று பாரத்த வண்ணம் இரு. எல்லாவற்றிற்கும் பார்வையாளனாக மட்டும் இரு.

சாட்சி மனப்பான்மை கடவுளின் ஓர் அம்சம் (கூறு) ஆகும். உனக்குள் இருக்கும் சாட்சி கடவுளுடைய கிரணம்தான். ஆகவே அடுத்த கட்டமாக நீ கடவுளையும் அறிந்துகொள்வாய். ஆனால் மக்களோ ஒரு நோயிருந்து இன்னொரு நோய் தொற்றுவதுபோல், ஓர் அறியாமையிலிருந்து இன்னோர் அறியாமைக்குச் சென்றபடி உள்ளனர்.

**பிரிவைப்போல்தான் ஒருநாள்**
**கூடலும் உறுத்தும் முள்ளாய்**
**நேற்று சூழ்ந்தது ஏமாற்றம்**
**இன்று சூழ்கிறது சந்தேகம்**
**ஒன்றை ஒன்று மிஞ்சுகின்றன**
**என்னை முள்ளாய்க் குத்துவதில்.**

**மனம் கனவில் முழுகியுள்ளது**
**அதற்குக் காரணம் திருப்தியின்மை**
**எவர் காணும் எந்தக் கனவும்**
**என்றும் உண்மை ஆவதில்லை;**
**எவரது பாசமும் நேசமும் நட்பும்**
**முழுமையாகவோ, நிரந்தரமாகவோ**
**என்றும் உள்ளத்தை நிரப்புவதில்லை**

முதலில் உலகப் பொருட்களின் மீது பாசமும் நேசமும் வைக்கிறோம். மண்ணுலகத் தொடர்புகள் சலித்தபின் விண்ணுலக வாழ்வில் ஆசை வைக்கிறோம்.

முதலில் நீ ஒருவரது அன்பைப் பெற விரும்புகிறாய். அந்த முயற்சியில் வெற்றிபெற நீ சிரமப்பட வேண்டியுள்ளது. அவரது அன்பு கிடைத்துவிட்டாலோ புதிய தொல்லைகளைச் சமாளிக்க வேண்டியுள்ளது.

**ம**னநோயாளிகளின் மருத்துவமனைக்கு ஒரு பார்வையாளர் சென்றார். ஓர் அறையில் அடைக்கப்பட்டிருந்தவன் நெற்றியில் அடித்துக் கொண்டிருந்தான் அவன் கையில் ஒரு போட்டோ இருந்தது. பார்வையாளர் அவனைப் பற்றி விசாரித்தார். கண்காணிப்பாளர் அவன் கையிலுள்ள போட்டோவில் உள்ள பெண்ணை அவன் மிகவும் நேசித்தான் என்றும், அவளை மணந்துகொள்ள முடியாமல் போனதால் இப்படிப் பைத்தியம் பிடித்தவனாகிப் போனான் என்று விளக்கினார்.

பார்வையாளர் இன்னொரு அறையில் பார்த்த ஒருவன் தன் தலையால் கதவுக் கம்பிகளை முட்டிக்கொண்டு தலைமுடியைப் பிடுங்கியபடி காணப்பட்டான். கண்காணிப்பாளர் சொன்னார்; ''முதலில் பார்த்தவனிடமிருந்து போட்டோவில் உள்ள பெண்ணை இவன்தான் மணந்து மனைவியாகப் பெற்றான். இதனாலேயே இவன் பைத்தியமாகும் நிலைக்குத் தள்ளப்பட்டான்.''

ஒருவனுக்கு அப்பெண் கிடைக்கவில்லை. ஆகவே பைத்திய மானான். இன்னொருவனுக்கு அப்பெண் கிடைத்தாள். அதனாலேயே அவனும் பைத்தியமானான்!

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒரு பெண்ணைக் காதலித்துவந்தார். ஒருநாள் அவர் துணிந்து அவளிடம், ''என் கண்ணே, நீ என்னை மணந்து கொள்வாயா?'' என்று கேட்டார். அவள் மறுத்துவிடுவாள் என்று அவர் எதிர்பார்த்தார். இதுவரை அவர் பெற்றிருந்த அனுபவம் காரணமாக, தன்னைப்போய் எவள் மணப்பாள் என்று அவர் நினைத்திருந்தார். ஆனல் இம்முறை அவர் ஏமாற்றமடைந்தார். ஏனெனில் அப்பெண், ''சரி, உங்களை மணக்க சம்மதம்.'' என்று கூறிவிட்டாள்! முல்லாவின் முகத்தில் சோகம் படர்ந்தது. அவர் மௌனமாகிவிட்டார். இதைக் கண்டு அப்பெண், ''என்ன, பதிலே சொல்லவில்லையே, '' என்றாள். முல்லா பெருமூச்சு விட்டபடி, ''மேற்கொண்டு சொல்வதற்கு என்ன மிஞ்சியுள்ளது? அவசரப்பட்டு

விட்டேன். இனி எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை,'' என்றார்!

ஏழை அழுகிறான் பணம் இல்லை என்று. பணக்காரன் கவலைப்படுகிறான் பணத்தை எப்படிப் பாதுகாப்பது என்று. புகழ் கிடைக்கப் பெறாதவன் அழுகிறான்-தன்னை நாலு பேருக்குத் தெரியவில்லையே என்று. புகழ் பெற்றவனும் அழுகிறான்- தனக்குத் தனிமையே கிடைக்காதபடி எப்பொழுதும் நாலு பேராவது சூழ்ந்து நிற்கிறார்களே என்று.

இங்கிலாந்தின் புகழ்பெற்ற நடிகர் ஒருவர் சந்நியாசியாகி விட்டார். காரணம்-அளவுக்கு மிஞ்சிய புகழ் விஷம்போல் ஆனது.

நீ சாலையில் செல்கிறாய். உன்னை யாரும் கண்டுகொள்ள வில்லை. யாரும் வணங்கவில்லை. செய்தித்தாளில் உன் புகைப்படம் வருவதில்லை. வானொலி உன்னைப் பற்றி செய்தி கூறுவதில்லை. தொலைக்காட்சியில் உன் முகம் காட்டப்படுவதில்லை. உன்னை அறிந்தவர் யாருமில்லை. நீ இருந்தாலும் இல்லாவிடிலும் ஒன்றுதான். ஒருநாள் நீ இறந்துபோவாய். உன் குடும்பத்தினர் தவிர வேறு யாரும் வருந்தப்போவதில்லை. குடும்பத்தினரின் சோகமும் தற்காலிகம்தான். சிறிது காலம் கழித்து உன்னை நினைத்து யாரும் அழப்போவதில்லை. நீ இறந்துபோனதால் சமூகத்தில் வெற்றிடம் ஏற்படப்போவதில்லை. இந்த நிலையை நினைக்கும்போது உனக்கு மிகுந்த வருத்தம் ஏற்படும்.

மனிதன் புகழுக்கு ஆசைப்படுகிறான். அவன் ஒருத்தன் இருந்தான் என்பது உலகிற்குத் தெரியவேண்டுமென எதிர்பார்க்கிறான். அப்படி ஒருவன் புகழ் பெற்றுவிட்டால் தொல்லைகளும் தொடங்கிவிடுகின்றன. வெளியே சுதந்திரமாகப் போக முடிவதில்லை. எங்கே போனாலும் கூட்டம் சூழ்ந்துவிடுகிறது. ஏகாந்தம் என்பது அரிதாகிவிடுகிறது. தன்னை ஒருவரும் அறிந்திருக்காத இடத்திற்குப் போய், தனக்கு சுபாவமான வாழ்க்கையை நடத்த அவன் ஏங்குகிறான். ஆனால் தற்சமயம் மக்களின் பார்வை அவனிருக்கும் திசையை நோக்கியே உள்ளது. அவன் நடந்தால் பார்க்கிறார்கள்; உட்கார்ந்தால் பார்க்கிறார்கள்; எழுந்து நின்றால் பார்க்கிறார்கள்.

திரைப்பட நடிகராக இருந்தால் பல மடங்கு கஷ்டம். அவரைப் பக்கத்திலிருந்து பார்க்க நெருக்குதல், முட்டுதல், மோதல் என்று கலாட்டா. 'என்னைத் தனியாக விடுங்கள்' என்று கத்தவேண்டும் போல் அவருக்குத் தோன்றுகிறது.

**இ**ங்கிலாந்திலிருந்து ஒருவர் இங்கு என்னிடம் வந்து சேர்ந்துள்ளார். என்ன கஷ்டத்தால் என்று விசாரித்ததில், அவர் அங்கே புகழ்வாய்ந்தவர் அவருடைய செயல்களை மக்கள் ஊன்றிக் கவனித்தார்கள். அவர் தன் முயற்சிகளில் ஜெயித்தாலும் கஷ்டம், தோற் றாலும் கஷ்டம் என்னும்படி மக்களால் அவர் விமர்சிக்கப்பட்டார். இப்பக்கம் விழுந்தால் கிணறு; அப்பக்கம் விழுந்தால் அகழி என்பது போன்ற நிலை, நடுவிலே சமாளித்தபடி இருக்கத் தெரியவில்லை. அப்படி இருப்பதற்கு மிகுந்த விழிப்பு தேவை. போகத்தில் ஆழ்ந்தாலும் கஷ்டம்; தியாகத்தை மேற்கொண்டாலும் கஷ்டம் என்னும் நிலை.

போகி எனப்படுபவர்களும் கவலையுடன் உள்ளனர். கண்ணீர் விடுகின்றனர். அளவுக்கு மீறி வெறியுடன் சாப்பிட்டுவிடுகின்றனர். பிறகு, உடம்பு கனத்துவிட்டது; தொந்தி பெருத்துவிட்டது; வயிற்றில் வலி; இந்தப் பிரச்சினை-அந்த பிரச்சினை என்றெல்லாம் புலம்புகிறார்கள்.

ஜைன சமயத் துறவிகளுக்கோ வேறுவகையான பிரச்சினை. அவர்கள் அடிக்கடியும், நீண்டகாலமும் உபவாசம் (உண்ணாநோன்பு) கடைப்பிடிக்க நேரிடுகிறது. சாப்பிட அனுமதிக்கப்பட்ட நாள்களிலும் அந்தத் துறவிகளுக்கு அளந்துதான் உணவு வழங்கப்படுகிறது.

ஜனகர் அளவான வாழ்க்கையை, எல்லாவற்றிலும் கணக்காய் இருக்கும் வாழ்க்கை முறையை ஆதரிக்கிறார்.

சாட்சி மனப்பான்மையுள்ளவன் எல்லாப் போராட்டங்களிலும் நடுவுநிலை வகிப்பான். இப்பக்கமோ, அப்பக்கமோ சாயமாட்டான். எதையும் தேர்ந்தெடுப்பதில்லை. தியாகமும் இல்லை, போகமும் இல்லை. எது வருகிறதோ அதை இயற்கையான முறையில் ஏற்றுக்கொள். என்ன நடைபெறுகிறதோ அதை நடைபெறவிடு. என்ன நேர்ந்தாலும் அதை விளையாட்டாக (லீலையாக), மகிழ்ச்சியுடன்,

உள்ளத்தில் ஊறும் சுகமான உணர்வுடன் ஏற்றுக்கொள். நீதான் செயல்புரிபவன் (கர்த்தா) என்பதை மறந்துவிடு.

'எதையும் தேர்ந்தெடுக்காத சூனிய மனமுள்ளவனாய், ஆனால் வெளிப்பார்வைக்கு திசையின்றித் தடுமாறும் சராசரி மனிதர்களைப் போன்றே இருப்பவனாய், சுதந்திரமான செயல்பாடுகள் கொண்டவனை, அதேபோன்ற இயல்புடைய இன்னொருவனால்தான் புரிந்துகொள்ள முடியும்' **(சுலோகம் 125)**

இது புரிந்துகொள்வதற்கு கடினமான சூத்திரம். புரிந்துகொள்ள முயலு.

அதாவது, சாட்சிபோல் இருப்பவனின் உள்ளம் சூனியமாக, வெறுமையாக இருக்கும். இதுவா-அதுவா என்று தேர்ந்தெடுக்கும் நிர்பந்தம் அவனுக்கில்லை. அவன் எந்த முடிவும் எடுக்கவேண்டிய தில்லை. அவன் மனத்தில் அலைபோல் எண்ணங்கள் எழுவதில்லை.

ஆனால் வெளிப்பார்வைக்கு அவன் மற்றவர்கள் போலவே இருப்பான். மற்றவர்களைப் போலவே அவனும் பசித்தால் சாப்பிடுவான். களைப்பாக இருந்தால் படுத்துத் தூங்கிவிடுவான். உனக்கும் அவனுக்கும் வெளியில் வேறுபாடு தெரியாது.

நீ புத்தரிடம் சென்று அவரது வெளியுலக வாழ்வைப் பற்றி விசாரித்தால் அது உன் வாழ்க்கை போலவே இருக்கும். வெயிலடித்தால் அவரும் எழுந்து மரநிழலில் உட்கார்ந்துவிடுவார்.முள் குத்திவிட்டால் அவரும் அதைப் பிடுங்கத்தான் செய்வார். தாகமெடுத்தால் அவரும் தண்ணீர் கேட்பார். பசியெடுத்தால் பிட்சைக்குச் செல்வார். இரவானால் தூங்கிவிடுவார். வெளியிலிருந்து ஆராய்ந்தால் உனக்கும் புத்தருக்குமிடையே வித்தியாசம் கிடையாது. உன்னைப்போல் ஒருவர் என்றே நீ புத்தரையும் நினைப்பாய்.

புத்தரை நீ அறிந்துகொள்ள விரும்பினால் அவரது வெளிவாழ்க்கையை அடிப்படையாகக் கொள்வதால் பயனில்லை. நீ புத்தரின் நிலையை அடைந்தால்தான்-உன்னை உள்முகமாகப் பார்க்க முடிந்தால் தான் - உண்மையான புத்தரை அறிந்துகொள்வாய். வெளி யிலிருந்து பார்க்கையில் எல்லோருடைய உடல்களும் ஒரேமாதிரிதான் எலும்பு, தோல் , சதை முதலிய அம்சங்களால் உருவாகியிருக்கின்றன.

உடலின் தேவைகளும் எல்லோருக்கும் ஒரேமாதிரிதான். எல்லோருக்கும் முதுமை வரும்; நோய் வரும்; உடல் தேயும்; மரணம் ஏற்படும் .

பொய்ப் பேச்சுகளை நம்பிவிடாதே. புத்தர் உடலளவில் மற்றவர்களிடமிருந்து வித்தியாசமானவர் என்று நினைத்துவிடாதே. புத்தர் அவ்வாறு தன்னைப் பற்றிக் கூறியதில்லை. அவருடைய சீடர்கள்தான் அவரை அதிமானுடராக (சூப்பர்மேனாக) சித்திரிக்கிறார்கள். 'நீ கூழாங்கல்; அவர் வைரக்கல்' என்று மதிப்பீடு செய்கிறார்கள். ஆனால் வைரமும் ஒரு கல்வகைதானே.

உனக்கும் புத்தருக்குமிடையே வேறுபாடு உண்டு. அந்த வேறுபாடு உள் (அக) வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்டது. வெளி வாழ்க்கையில் பேதமில்லை. உன் வெளிவாழ்க்கை எத்தன்மையதோ அதேபோல்தான் மற்றவர்களின் வெளிவாழ்க்கையும் அமைந்துள்ளது. அக வாழ்க்கையில் உனக்கும் இன்னொருவருக்கும் உள்ள வித்தியாசம் சட்டென்று புரியாது. உள்ளே சற்றாவது ஞான ஒளி வீசினால்தான் இந்த ஒப்பீடு சாத்தியப்படும்.

ஒருவன் எந்த நிலையை அடைகிறானோ அந்த அளவிற்கான ஞான ஒளி வீசப்பெறுகிறான். நீ கிருஷ்ணன் அளவிற்குப் பக்குவம் பெற்றால் பகவத்கீதையைப் புரிந்துகொள்வாய், நீ புத்தர் அளவிற்கு ஞானம் பெற்றால் தம்மபதம் சாஸ்திரத்தைப் புரிந்துகொள்வாய். ஆனால் பள்ளிப்பிள்ளைகள் பாடங்களை நெட்டுரு செய்வதுபோல், நீ புனிதநூல்களை மனப்பாடம் மட்டுமே செய்தால் பலனில்லை. பயிற்சி மற்றும் அனுபவத்தின் மூலம் உள்மனம் பக்குவமடைந்தால் புனித நூல்களின் உண்மையான அர்த்தம் புரியத் தொடங்கும்.

காதல் அனுபவம் பெற்றவன்தான் இன்னொரு காதலனின் உள்ளத்தில் எத்தகைய உணர்ச்சிகள் எழுகின்றன என்பதைப் புரிந்துகொள்வான். இதுவரை காதலிக்காதவன் (லைலா-மஜ்னு காதல் கதையில்) மஜ்னுவைப் புரிந்துகொள்ள இயலாது. அவன் மஜ்னுவைப் பைத்தியம் என்று நினைப்பான். மஜ்னு மீது கல்லெறிவான். 'உனக்கு மூளை கெட்டுவிட்டது' என்று காதலனை இகழ்வான். காதல் அனுபவம் உள்ளவன் மஜ்னுவின் மனநிலையை ஊகித்துவிடுவான்.

இதேபோல், பக்தி ரசத்தைச் சுவைத்தவன் மீராபாயைப் புரிந்துகொள்வான். பக்தி இல்லாதவன் மீராவைப் புரிந்துகொள்ள மாட்டான்; அல்லது தவறாகப் புரிந்துகொள்வான். ஸிக்மண்ட் ஃப்ராய்டுக்கு[1] மீராபற்றி தெரியாது. தெரிந்திருந்தால், மீராவைப் புரிந்துகொள்ள முடியாமல், கீழ்த்தரமாக விமர்சித்திருப்பார். அப்படித்தான் அவர் செயின்ட் தெரஸாவை[2] மதிப்பிட்டார். செயின்ட் தெரஸா, இயேசு பிரானே! நான் உமது இல்லக்கிழத்தி (மனைவி) என்று உணர்ச்சிப் பெருக்கில் கூறியதற்கு ஃப்ராய்டு காம உணர்வின் வெளிப்பாடு என்று அர்த்தம் எடுத்துக்கொண்டார்.

**யூ**த யுவதி ஒருத்தி கிறிஸ்தவ மதத்திற்கு மாறிவிட்டாள். மேற்கொண்டு அவள் கன்னிகா ஸ்திரீயாகவும் (பெண்துறவியாக) மடத்தில் சேர்ந்துவிட்டாள். இந்த இரண்டு செயல்களும் அவள் தந்தைக்கு மிகுந்த கோபத்தையும் மனக்கசப்பையும் விளைவித்தன. அவர் பிறகு அவளைச் சந்திக்கவே இல்லை.

மூன்றாண்டுகள் கழித்து அவருக்கு அந்த மடத்திலிருந்து 'போன்' வந்தது. 'உங்கள் மகள் இறந்துவிட்டாள். அவளை எந்த முறையில் புதைக்க வேண்டும் என்று தெரிவியுங்கள்' என்று மடத்தலைவி பேசினார்.

''கிறிஸ்தவப் பெண் துறவிகள் தங்களை இயேசு கிறிஸ்துவின் மனைவிகள் என்று கூறிக்கொள்வது உண்மையா?'' என்று தந்தை கேட்டார்.

மடத்துத் தலைவி சாதாரணமாகச் சொன்னாள்; ''ஆம், அது உண்மையே. பெண் துறவியர் இயேசு கிறிஸ்துவின் மனைவியாகவே கருதப்படுகின்றனர். நாங்கள் எங்களது எல்லாவற்றையும் அவருக்கே அர்ப்பணிக்கிறோம். அவரே எமது கணவர், அவருடன்தான் உறவு

---

1. **Sigmund Freud (1856-1939)** ஆஸ்திரிய நாட்டு மனத்தத்துவ நிபுணர். உளவியல் பகுப்பாய்வு (**Psycho analysis**) முறையை நிறுவியவர். கனவுகளை விரிவாக ஆராய்ந்தவர். மக்களின் செயல்களைக் காம உணர்வின் வெவ்வேறு விதமான வெளிப்பாடு என்று கருதியவர். அவருடைய கருத்துகளை எதிர்க்க முடிகிறதே தவிர, புறக்கணிக்க முடிவதில்லை.
2. **Saint Therese (1873-1897)** பிரான்ஸ் நாட்டு கிறிஸ்தவப் பெண்துறவி. சரணாகதியே கடவுளை அடையும் வழி என்றவர். எழுதிய நூல் **Story of a Soul.**

உடையவர்களாகக் கடவோம் அவருக்கு மட்டுமே ஏவல்செய்யக் கடவோம்.''

யூதத் தந்தை அலட்டிக்கொள்ளவில்லை.''ஓஹோ. அப்படியா விஷயம்? இயேசுநாதரா என் மாப்பிள்ளை? பெண் மீது தந்தையைவிட மாப்பிள்ளைக்குத்தானே அதிக உரிமை? ஆகவே என் மாப்பிள்ளையிடமே நீங்கள் விசாரித்து அதற்கேற்றபடி என் பெண்ணை அடக்கம் செய்யுங்கள்,'' என்று அவர் பதிலளித்தார்.

ஃப்ராய்டு எல்லாவற்றையும் காமத்தின் வெளிப்பாடெனக் கணிக்கிறார். பாசம்-அன்பு-நேசம்-பக்தி போன்றவற்றை அவர் சரிவர அறிந்திராதவர்போல் தோன்றுகிறார். அவரைச் சந்தித்தவர்களெல்லாம் மனநோயாளிகளாகவே இருந்ததால்அவரது கண்ணோட்டமும் கோணலான போக்குடையதாகிவிட்டது.

நல்லவேளையாக அவருக்கு கபீர்தாசரைப் பற்றி தெரிந்திருக் காது. கபீரின் ஒரு பாட்டில், 'நான் கடவுளின் மனைவி' என்று ஒரு வரி வருகிறது. இதை அறிந்திருந்தால் ஃப்ராய்டு கபீரை மனநோயாளி என்று முடிவுகட்டியிருப்பார். ஒரு பெண் தன்னைக் கடவுளின் காதலி என்று கூறுவதேகூட மனக்கோளாறு என்று கருதிய ஃப்ராய்டு, கபீர் போன்ற ஆண் தன்னைக் கடவுளின் காதலி/மனைவி என அறிவித்ததைப் பைத்தியம் முற்றிவிட்டதன் அடையாளம் என்றே நினைத்திருப்பார்.

இந்த அடிப்படையில் கபீரைப் புரிந்துகொள்ள முடியாது. இந்து ஆன்மிகவெளியில் கடவுள் மட்டுமே ஆண் (புருஷோத்தமன்), எல்லா ஆண் பக்தர்களும் கூட கடவுளின் எதிரில் பெண்கள்தாம். ஆத்மா என்னும் சொல்லே இலக்கணத்தில் பெண்பாலாகக் கருதப்படுகிறது

ஆண்களையும் பெண்களையும் உடலளவில் பார்ப்பது ஒரு கண்ணோட்டம். அவர்களை உள்மன அமைப்பின் அடிப்படையில் காண்பது இன்னொரு வகையான கண்ணோட்டம். உள்மனத்தின் அடிப்படையில் ஆராய்ந்தால் கடவுள் ஒருவரே கொடுப்பவர் (ஆண்); மற்றவர்கள் ஆண்-பெண் எல்லோரும் பெறுபவர்கள் (பெண்கள்). கடவுள் கொடுக்கிறார்; பக்தர் பெறுகிறார். ஆண் கொடுத்துப் பெண் கர்ப்பத்தில் ஏற்கிறாள். பரமாத்மா தன்னையே கொடுத்து பக்தனின் மனமாகிய கர்ப்பத்தில் பிரவேசிக்கிறார்.

சுய அனுபவமில்லாமல் இந்த நுணுக்கங்களைப் புரிந்துகொள்ள முடியாது. உனக்குள்ளே பரவியிருக்கும் இருட்டில் இறைவனின் கிரணம் இறங்கியிருந்தால்தான் இது புரியும். 'நான் கடவுளின் காதலி' என்பதன் அர்த்தம் விளங்கும். இல்லாவிடில் நீ சொற்களின் அகராதி அர்த்தத்தை எடுத்துக்கொண்டு தடுமாறுவாய். ஏனெனில் ஒருவன் எத்தகையவனோ, அவனது நிலை எத்தகையதோ அந்த அளவிற்கே அவன் விஷயங்களை அறிந்திருப்பான்.

நீ சராசரி மனிதன். உன் உடல் சாப்பாடு கேட்கிறது. காம சுகத்திற்காகத் துடிக்கிறது. உனக்குத் தாகமெடுக்கிறது. இரவு தூங்கினாய், காலையில் விழித்தாய். மறுபடியும் வேலை-வேலை என்று நாள் முழுதும் ஓட்டம். நீ புத்தரும் இப்படித்தான் என்று தீர்மானிக்கிறாய். அவ்வளவுதான் உன் அறிவின் எல்லை. உனக்குள்ளே இருக்கும் நிஜமானவன் இன்னும் விழிப்புப் பெறவில்லை. உனக்குள்ளே ஞானவிளக்கு ஏற்றப்படவில்லை. உனக்குள்ளே இருள் சூழ்ந்திருக் கிறது. ஆகவே, புத்தர் தமக்குள்ளே விவேக;ம என்னும் விளக்கு சுடர்விடுகிறது என்று சொன்னதை உன்னால் எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? கபீர்தாசர் தமக்குள்ளே ஆயிரம் சூரியன்கள் இறங்கியிருப்பதாகக் கூறியதை நீ எப்படி ஒப்புக்கொள்வாய்?

நீ கண்ணை மூடிக்கொண்டால் இருட்டாகத் தெரிகிறது. கண்களைத் திறந்துவைத்திருந்தால் வெளிச்சத்தை உணர்கிறாய். இந்த வெளிப்புற வெளிச்சம் உனக்குப் பழக்கமானதுதான். அகவெளிச்சம் தான் இன்னும் தோன்றவில்லை. ஏனெனில் உள்ளேயிருக்கும் கண்கள் மூடியநிலையிலேயே உள்ளன. இதனால் உள்ளே அடர்ந்த இருட்டு நிலவுகிறது. ஆகவே கபீர்தாசர் கூறியபடி உள்ளேயும் சூரியன் பிரகாசிக்க முடியுமென்பதை நீ ஏற்பது சிரமம்தான். உள்ளே ஒளிபுக முடியாதபடி எண்ணங்களும் ஆசைகளும் நெருக்கமான ஒட்டடைபோல் பின்னிக்கிடக்கின்றன.

**டே**விட் ஹியூம்* தன் மனத்தை ஆராய்கையில் உள்ளே எண்ணங்களையும் சிந்தனைகளையும் தவிர வேறெதுவும்

---

* **David Hume ( 1711-1776)** ஸ்காட்லாந்து தத்துவ அறிஞர். மனத்தில் எண்ணங்கள் திரளுவதைப் பற்றி ஆராய்ந்தவர். காரணங்களின் அடிப்படையில் காரியங்கள் நிகழ்வதில்லை என வாதிட்டார். ஆத்மா என்பதும் ஓர் எண்ணம்தான். தனியாக அப்படிக் கிடையாதென்றார். **We have no knowledge of the self.**

கண்டதில்லை என்கிறார். ஞானிகள் சொல்வதுபோல் உள்ளே ஆத்மா என ஒன்றிருப்பதாக அவர் உணரவில்லையாம்.

மனத்தில் எண்ணங்கள்தாம் நிறைந்துள்ளன என்றால், யாருக்குக் கிடைக்கின்றன அந்த எண்ணங்கள்? அவன் யார்? எண்ணங்களைப் பெறுகின்றவன் தானும் ஓர் எண்ணமில்லையே. ஹியூம், 'நான் மனத்தின் உள்ளே பிரவேசிக்கும்போது அங்கு எண்ணங்களையே கண்டேன்' என்னும்போது ஒரு விஷயம் உறுதியாகத் தெரிகிறது. நீ எண்ணங்கள் இல்லை; நீ வேறு அவை வேறு என்பது தெளிவாகிறது. எண்ணங்கள் ஓடுவதையும் நீ காண்கிறாய். இப்படி யாரும் அவருக்குச் சுட்டிக்காட்டியதாகத் தெரியவில்லை.

ஹியூம் ஒரு நூலில் எழுதுகிறார்: 'சாக்ரடீசும் உபநிஷதங்களும் உள்ளே ஆத்மா வீற்றிருக்கிறது என்று கூறுவதைப் படித்துள்ளேன். நான் எத்தனையோ பரிசோதனைகள் செய்துபார்த்தேன். ஆனால் நமக்குள்ளே எண்ணங்களைத் தவிர வேறெதுவும் கிடையாது.'

ஆனால் வேறு யார் அப்படி உள்ளே பார்த்தவர் உள்ளார்? உள்ளே எண்ணங்கள் மட்டுமே உண்டு என்று யார் வலியுறுத்து கிறார்கள்?

நீ அறைக்குள் சென்றுவந்து 'நான் என்னை அங்கு காணமுடியவில்லை. நாற்காலி-மேஜை-கட்டில்களைத்தான் பார்த்தேன்' என்று சொல்கிறாய். உன்னால் சுயமாக அறைக்குள் போய்வர இயன்றதால் நீ நாற்காலி போன்ற தளவாடமல்ல என்பது தெளிவு. நீ தளவாடங்களைப் பார்த்தவன் என்பதும் தெளிவு. ஏனெனில் ஒரு நாற்காலி இன்னொரு நாற்காலியையோ, ஒரு சுவர் இன்னொரு சுவரையோ பார்க்காது. நீ பார்ப்பவன். உன் சூழ்நிலைக்கு ஏற்றபடி உன் அனுபவம் அமையும்.

சுதந்திரமான செயல்பாடு உடையவன் என்னும் சொல்லின் சமஸ்கிருத மூலச்சொல்லான 'ஸ்வச்சந்த' அர்த்தம் பொதிந்தது. தனது யாப்பில் (own rhythm) லயித்தவன், தன்னில் லயித்தவன் என்று பொருள். அவன் தன் சுபாவத்திற்கு இயற்கையான முறையில் நடந்துகொள்வான். அகராதி அர்த்தம் வேறாக இருக்கும். கட்டுப்பாடுகளை உடைப்பவன், மரியாதையற்றவன், நேர்மை

தவறியவன், இஷ்டப்படி ஆட்டம்போடுபவன் என்றெல்லாம் அகராதி கூறும். ஆன்மிக உலகில் இச்சொல் தனது சுபாவத்திற்கு உரிய முறையில் நடப்பவனைக் குறிக்கும். அவன் சகஜமாக இருப்பான். சுதந்திரம் என்னும் சொல்லைவிட ஸ்வச்சந்த என்னும் சொல் உயர்ந்த பொருள் தருகிறது.

மனிதர்களின் நடத்தையில் மூன்று வகைகளைக் காணலாம். பரதந்த்ர என்பது முதல் வகை. இதன் பொருள், பிறர் விருப்பப்படியே ஒருவன் நடந்துகொள்ளுதல் என்பதாகும். அவனைப் பிறர் பின்னாலிருந்து இயக்குகிறார்கள். அவர்கள் ‘எழுந்திரு’ என்றால் எழுந்து நிற்பான். அவர்கள் ‘உட்காரு’ என்றால் அப்படியே உட்கார்ந்துவிடுவான்.

‘ஸ்வதந்த்ர’ (சுதந்திர) என்பது இரண்டாம் வகை மனிதன் அவன் தானே யோசித்து, தானே விரும்பி எழுந்திருக்கிறான். தானே விரும்பும்போது உட்காருகிறான். அவனுக்கென்று ஒரு வாழ்க்கை முறை இருக்கும். அவன் தனக்கென்று சில கட்டுப்பாடுகளைக் கொண்டிருப்பான்.

‘ஸ்வச்சந்த’ வகை மனிதன், நீ எழுந்திருக்கச் சொல்வதால் எழுந்து நிற்பவன் அல்லன். தானாகவே, தனக்காகவே எழுந்து நிற்பவனும் அல்லன். கடவுள் அவனைத் தூக்கி நிறுத்தினால் எழுந்து நிற்பான். கடவுள் அவனை உட்காரவைத்தால் உட்கார்ந்துவிடுவான். அவன் பிறரைப் பற்றியும் அலட்டிக்கொள்வதில்லை; தன்னையும் லட்சியப்படுத்துவதில்லை. ‘என்னை யாராவது வந்து இயக்கட்டும்’ என்று அவன் வெளியில் எட்டிப்பார்ப்பதில்லை. தான் இயங்கத் தனக்குள்ளேயும் எந்த ஏற்பாடும் செய்துகொள்வதில்லை. முன்கூட்டியே அவன் திட்டம் தயாரிப்பதில்லை என்ன நடக்கிறதோ நடக்கட்டும், எப்படி நடக்கிறதோ நடக்கட்டும் என்று அவன் சகஜமாக, இயற்கையாக இருப்பான். ஏனெனில் கடவுளின் விருப்பமே தன் வாழ்க்கையை இயக்குவதால் அதன் போக்கில் செல்வதே தனக்கு நன்மை என்று விட்டுக்கொடுப்பான்.

ஜனகர் சொல்கிறார்-சூழ்நிலை எப்படி அமைகிறதோ அதன்படியே செய்வோம். கடவுள் நம் மூலமாகச் செய்ய விரும்புவதைச் செய்துமுடிப்போம்.

'ஸ்வச்சந்த' என்னும் வகை மனிதன் தனது சுபாவத்தில் கலந்து கரைந்துபோய் விடுவதால் அவன் முன்கூட்டியே தயாரிப்புச் செய்துகொள்வதில்லை. ஒவ்வொரு கணமும் உருவாகும் சூழ்நிலையில் உள்ளுணர்வு கூறியபடி நடக்கிறான். அவன் பின்னால் திரும்பி, நடந்ததற்கு வருந்துவதில்லை. அவன் முன்னால் நோக்கித் திட்டம் தயாரிப்பதில்லை.

**பேச்சின் உச்சநிலை பேசமுடியா நிலை**
**பாதையின் லட்சியம் பாதையின்றிப் போவது**

நம் பேச்சு அற்ப விஷயங்களிலிருந்து தொடங்கி மிக உயர்ந்த பொருட்கள்வரை போகிறது. ஆனால் 'பேசாப்பொருளை' பேச முயலும்போது பேசமுடியாமல் போகிறது. அதற்கான முயற்சியின் இறுதிக் கட்டமே பேச்சின் உச்சநிலை.

நிறையப் பாதைகள். ஏனெனில் ஒரு கட்டத்தில் ஒரு பாதையும் இல்லாமல் போய்விடும். மேலே சொன்ன மூன்று வகையினரில் பரதந்திரன் என்பவன் பிறர் போட்ட பாதையில் செல்வான். சுதந்திரன் தான் போட்ட பாதையில் நடப்பான். சுவச்சந்தன் என்பவன் பாதை யில்லாப் பாதையில்-கடவுள் போட்ட பாதையில்- முன்னேறுவான். என்றாவது ஒருநாள் மனிதன் பாதையில்லாப் பாதையில் அடியெடுத்து வைக்கவேண்டுமென்பதற்காகவே இத்தனை பாதைகள் முதலில் உள்ளன.

**புதிய ஆண்டு, புதிய உல்லாசம்,**
**வாழ்வில் புது முன்னேற்றம்**
**புதிய உற்சாகம், புதிய அலை , வாழ்வில் புது நிகழ்ச்சிகள்**
**புதிய நடை, புதிய வழி, வாழ்வில் புது பிரவாகம்**
**புதிய கீதம், புதிய அன்பு, வாழ்வில் புதிய முறை**
**வாழ்வில் புதிய கொள்கை, வாழ்வில் புதிய வெற்றி**

எல்லாமே புதிது. ஒவ்வொரு கணமும் புதுமை. தனது லயத்தில் வாழும் ஸ்வச்சந்த மனிதனுக்கு எதுவும் பழைமையாக ஆகிவிடாது. கடந்த காலம் போய்விட்டது. எதிர்காலம் இன்னும் வரவில்லை. நிகழ்கால கணங்களே எதிரில் உள்ளன. இந்த கணத்தில் எது நடக்கிறதோ அது மட்டுமே உள்ளது. வேறெதுவும் கிடையாது. இதனால் ஏதோ ஒன்றைச் செய்யமுடியாமல் போனதற்காக வருத்தம்

இல்லை. ஞான விழிப்புப்பெற்றவன் எதுவும் அப்படியே தெரிகின்ற கண்ணாடி போன்றவன்;

சாட்சியாக எதையும் பார்க்கிறான். அவன் தன்னை கர்த்தாவாகக் கருதுவதில்லை. தான் செய்த தவிர்க்க முடியாத கடமைகள் ஒரு பிரவாகம்போல் ஓடுவதைப் பார்க்கும் பார்வையாளனாக மட்டும் இருப்பான்.

கண்ணாடி எப்பொழுதும் சுத்தமாக இருக்கும். அழுக்கு ஆடை அணிந்தவன் எதிரே நின்றால், பிரதிபிம்பமும் அவ்வாறே தெரியும். ஆனால் கண்ணாடி அந்த பிரதிபிம்பத்தினால் அழுக்காகிவிடாது.

சாட்சி மனிதனும் எப்போதும் தூய்மையாக விளங்குவான். இந்த நிலையை நாம் பரமஹம்ஸ நிலை என்கிறோம். ஹம்ஸப்பறவை (அன்னம்) வெண்மையாக, சுத்தமாக, மானஸரோவரம் ஏரியில் நீந்துவதுபோல், மனமென்னும் கடலில் சாட்சி - மனிதன் பரமஹம்ஸமாகத் திளைத்தபடி இருப்பான்.

**நிர்மலமான வெண்ணிற மலையில்**
**மேகங்கள் வந்து சூழ்ந்திடக் கண்டேன்**

**சின்னஞ்சிறிய நல் முத்துகள் போல**
**குளிர்ந்த மழைத் தூறல் துளிகள்**
**மானஸரோவர ஏரியில் மலர்ந்த**
**கமலங்கள் மீது வீழ்வது கண்டேன்**

**உயர்ந்த இமயத்தின் தோளைத் தழுவி**
**பலப்பல அருவிகள் வீழ்ந்து பரவிய**
**கரிய குளிர்ந்த தூய நீர் ஏரியில்**
**கோடையின் புழுக்கம் தாங்காமல்**
**சமதள நாடுகளை விட்டுவந்து**
**இரையைத்தேடி நீந்துகின்ற**
**அழகிய அன்னப் பறவைகள் கண்டேன்**

தொலைதூர. நாடுகளிலிருந்து பறந்துவந்து அன்னப்பறவைகள் மா்னஸரோவர் ஏரியை அடைந்தன. ஆனந்த்மாக, கம்பீரமாக, நீரை மாசுபடுத்தாமல் நீந்தின. சாட்சி இயல்பு பெற்றவனும் இப்படித்தான் தூய மனநிலையில் வாழ்கிறான். விழிப்புப்பெற்றால் அந்த நிலையை

அடையலாம். அந்த சலனமற்ற மனநிலை நமக்கு அமையப் பெறுவதுதான் முக்கியம். அது வாய்க்கப்பெறாமல் மீதி உலகப் பொருட்கள் எல்லாம் கிடைத்தும் பயனில்லை. அமைதியான நிலையே செல்வத்துள் எல்லாந் தலை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் புனித நூல்களை ஓதுவதன் மகிமையை ஒருமுறை கூறியிருக்கிறீர்கள். பகவத்கீதை, ராமாயணம் போன்றவற்றை மனப்பாடம். செய்துள்ள சிலரைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் அவர்களின் வாழ்வில் அந்த நூல்களின் தாக்கமேதும் பிரதிபலிப்பாகவில்லை. ஆகவே வெவ்வேறு வகையான பாராயணங்கள் (ஓதல் முறைகள்) உள்ளனவா? பரிபூரணமான பாராயணம் என்று எதைச் சொல்வீர்கள்?**

**ஆ**ம், பாராயண (ஓதும்) முறைகளில் நிச்சயமாக வேறுபாடு உண்டு. இயந்திரம்போலப் படிப்பது அல்லது திருப்பிச் சொல்வது பாராயணமாகி விடாது. மனப்பாடமாக்கிக் கொள்வதிலும் பெருமைப்படுவதற்கு ஒன்றுமில்லை. துதிப்பாடலின் பொருள் இதயம்வரை போய்ச்சேர வேண்டும். அதற்கு மிகுந்த கவனத்துடன் பொருளுணர்ந்து ஓதவேண்டும்.

ஒரு பணியில் அனுபவம் பெற்று அதைச் செய்வதில் நீ திறமை பெற்றுவிட்டால் பிறகு அதிக விழிப்புடன் இருப்பது தேவைப்படாது. புதிதாக சைக்கிள் அல்லது கார் ஓட்டுவதோ, நீச்சல் பயிற்சியோ கற்கும்போது மிகுந்த எச்சரிக்கையுடன் இருப்பது தேவைப்படுகிறது. கொஞ்சம் தவறினாலும் ஆபத்து. அடிபடும். சிகிச்சை செய்ய நேரிடும். ஆனால் இவ்வாறு கற்கும் பயிற்சியில் தேர்ச்சிபெற்று வண்டி ஓட்டுவது அல்லது நீந்துவது பழக்கமாகிவிட்டபின் நாம் கவனமாக இருக்க வேண்டிய தேவையும் குறைந்துவிடும்.

பிறகு கார் ஓட்டுகையில் பாட்டுக் கேட்டாலும் பாடினாலும், சிகரெட் பிடித்தாலும், ரேடியோ கேட்டாலும், பக்கத்திலுள்ளவர்களுடன் பேசியபடி இருந்தாலும் ஆபத்தில்லை. ஒரு விநாடி கண்ணை மூடினாலும் பிரச்சினை வராது. ஆனால் அதிகாலை 3 மணி முதல் 4 மணிவரை ஆபத்தான நேரம். அப்பொழுதுதான் தூக்கம் கண்ணை அதிகமாக அழுத்தும். கனவுபோல் ஏதோ பாதை தெரியும். இந்தக் குழப்பத்தால் விபத்து விளைகிறது.

ஆகவேதான் நான் உங்களது ஞாபகசக்தியின் திறமையை வெளிப்படுத்துவதற்காக எதையும் மனப்பாடம் செய்யாதீர்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். அந்தத் திறமைக்காக மட்டும் நம் நாடு பெருமைப்பட்டதால்தான் நமக்குச் சரிவு ஏற்பட்டது. நம் நாட்டில் வேதங்களை மனப்பாடம் செய்த சாதனையாளர்கள் உள்ளனர். ஆனால் அவர்களது வாழ்க்கையில் எந்த வேதமும் மலரவில்லை. மணம் பரப்பவில்லை, பிரதிபலிப்பாகவில்லை.

சிகந்தர் (அலெக்ஸாந்தர்) வேதநூலை கிரேக்க நாட்டிற்குக் கொண்டு செல்ல விரும்பினார். அவர் படையெடுப்பின்போது பஞ்சாப்பில் ஒரு கிராமத்தில் வேதநூல் இருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கே சென்றார். வயோதிக பிராமணர் ஒருவரிடம் ரிக்வேதத்தின் பிரதி இருந்தது. அவரிடம் சிகந்தர் வேதநூலைத் தன்னிடம் கொடுக்குமாறு வற்புறுத்தினார். தராவிடில் அவர் வீட்டிற்குத் தீவைக்கப்பட்டு வீடு, அவர் வேதம் எல்லாம் எரிந்துபோக நேரிடும் என்று மிரட்டினார்.

அதற்கு பிராமணர், ''பதற்றப்பட வேண்டாம். நாளை காலை வேதத்தை உங்களிடம் ஒப்படைத்துவிடுகிறேன். நான் ஓடிப்போவேன் என நீங்கள் நினைத்தால் இந்த வீட்டு வாசலில் காவல்போடுங்கள்,'' என்றார்.

''எதற்காக ஓர் இரவு அவகாசம் கேட்கிறீர்கள்?'' சிகந்தர் கேட்டார்.

''நான் இன்றிரவு ஒரு பூஜைசெய்ய விரும்புகிறேன். தலைமுறைகளாக வேதத்தின் இந்தப் பிரதி எங்கள் குடும்பத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இதற்கு உரிய மரியாதையுடன் விடை

கொடுத்து அனுப்புவது எனது கடமை. இதற்காக இரவு முழுதும் நாங்கள் பூஜைசெய்ய விரும்புகிறோம்,'' என்று பிராமணர் விளக்கினார்.

சிகந்தருக்கு ஆட்சேபணை எதுவும் இருக்கவில்லை. மேலும், அந்த வீட்டை கிரேக்க, வீரர்கள் சூழ்ந்திருந்தனர். காவலை மீறி அந்த பிராமணர் தப்பியோட வாய்ப்பில்லை. சிகந்தர் அகன்றதும் வேள்வித் தீ மூட்டப்பட்டது. ரிக்வேதத்தை பாராயணம் செய்வது காதில் விழுந்தது.

மறுநாள் காலை சிகந்தர் வந்தபோது பிராமணர் கையில் ரிக்வேதத்தின் கடைசிப் பாடலின் ஓலைச்சுவடி இருந்தது. மற்ற பக்கங்கள் நெருப்பில் போடப்பட்டுச் சாம்பலாகியிருந்தன. பிராமணர் நிதானமாகப் பாடலைக்கூற, அவர் மகன் அருகிலமர்ந்து கவனத்துடன் அதைக் கேட்டபடி இருந்தான்.

சிகந்தரைப் பார்த்ததும் வேதியர் சொன்னார்: ''என் புதல்வனை உங்களிடம் ஒப்படைக்கிறேன். இவனை அழைத்துச்செல்லுங்கள். அவன் ஒரே இரவில் ரிக்வேதத்தை நான் சொல்லச் சொல்ல, அவன் மனத்தில் ஏற்றிக்கொண்டு விட்டான். வேதம் புனித நூலாதலால் அந்த ஓலைச்சுவடிகளை யாருக்கும் தாக்கூடாது என்று என் குருநாதர் தடைபோட்டுள்ளார். ஆனால் என் மகனைக் கொடுப்பதில் எந்த பிரச்சினையும் இல்லை.''

ஒரே இரவில் ரிக்வேதத்தை ஒருமுறை திருப்பிச்சொல்லி ஒருவனால் மனப்பாடம் செய்யமுடியும் என்பதை சிகந்தரால் நம்பமுடியவில்லை. கிராமத்திலிருந்த வேதமறிந்த சாஸ்திரிகள் சிலரை அழைத்து அந்தப பையனுக்கு தேர்வு நடத்தச் சொன்னார். அவர்கள் அவனைச் சோதித்து அவனை வேதமறிந்தவன் என்று அறிவித்தனர்.

வேதங்களைக் குறிப்பிட்ட விதத்தில் முறைசெய்து மனப்பாடமாக்கிக் கொள்ள நம் நாட்டில் எத்தனையோ உபாயங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஆகவேதான் பல தலைமுறைகள்வரை அவை எழுத்தில் வடிக்கப்படவில்லை. தேவையும் எழவில்லை. அனுமதியும் தரப்படவில்லை. நம் முன்னோர்கள் மனிதமனத்தின் ஆற்றலை அறிந்திருந்தார்கள். 'அதை நெறிப்படுத்தி, அதன அடுக்குகளில்

ஆன்மிகம்-அறிவியல்-வரலாறு என்று எதையும் பதிவுசெய்து வைத்தார்கள்.

மனம் சாதாரணமான அவயவம் அன்று. உலகின் மாபெரும் இயந்திரம் மனித மூளைதான். உலக விஷயங்கள் அனைத்தையும் நமது சிறிய மூளையில் நிரப்பிக்கொண்டுவிடலாம். ஒருவனுக்கு வசதியும் நேரமும் இருந்தால் ஒரு நூலகத்திலுள்ள ஏராளமான விஷயங்களைப் படித்து மனத்தில் அடக்கிவிடலாம். நம்மில் பெரும்பான்மையோர் நமது மூளையின் ஆற்றலைச் சிறிதுதான் பயன்படுத்திக் கொள்கிறோம். தலைசிறந்த தத்துவ அறிஞர்கள், சிந்தனையாளர்கள், சான்றோர்கள், அறிவியல் நிபுணர்கள் ஆகியோர் கூட தமது மூளையின் ஆற்றலில் 10-15 சதவிகிதமே உபயோகிக் கின்றனர். மீதி சுமார் 85 சதவிகித ஆற்றல் வீணாகக் கிடக்கிறது.

முன்னாளில் இந்தியாவில் முழுமனத்தையும் சீரான கட்டமைப்பின்கீழ் கொண்டுவரும் வழிமுறைகள் இருந்தன. மனத்தின் முழு ஆற்றலையும் பயன்படுத்தும் கலையையும் பண்டைக் காலத்தில் இந்தியர்கள் அறிந்திருந்தனர். இதை ஸ்மிருதி (நினைவாற்றல்) என்னும் பெயரால் அறிவியலாக வளர்த்தனர். ஒலிநாடாவின் மீது ஒலி பதிவு செய்யப்படுவதுபோல் ஸ்மிருதியில் வேதத்தைப் பதிவுசெய்யலாம். இதனால் வேதம் மனப்பாடமாகிவிடும் ஆனால் வேதத்தை மனப்பாடமாக அறிந்திருப்பதால் மட்டும் ஒருவன் ஞானியாகிவிட முடியாது. மனிதன் ஒலிநாடாக் கருவிபோல் திருப்பிச் சொல்ல முடியும் என்பதைத் தவிர ஆன்மிகப் பலன் கிடையாது. சொல்லிக்கொடுத்தால் கிளிப்பிள்ளை திருப்பிச்சொல்வதுபோல்தான் இதுவும்.

**உ**பநிடத நிகழ்ச்சி ஒன்று. உத்தாலகர் என்பவர் குருகுலத்தில் சேரப்புறப்பட்டுக்கொண்டிருந்த மகன் சுவேதகேதுவுக்கு ஒரு கட்டளையிட்டார். ''மகனே! நீ ஒரு விஷயம் நினைவில் கொள். நீ குருவினிடம் படிக்கச் செல்கிறாய். எதை அறிந்துகொண்டால் எல்லாவற்றையும் அறிந்து கொண்டதாக ஆகுமோ, அதை அறிந்த பின்பே திரும்பிவா,'' என்றார். 'சரி'யென்று தலையாட்டிவிட்டு மகன் குருகுலத்திற்குச் சென்றான்.

குருகுலத்தில் சுவேதகேது வேதங்களையும் சாஸ்திரங்களையும் கற்று குருவினால் பாராட்டப்பட்ட அறிஞனானான். ஆனால் தந்தை

இட்ட கட்டளைப்படியான சிறப்பறிவைப் பெற்றுவிட்டதாக அவன் உணரவில்லை. குருகுலத்திலேயே அவன் பல்லாண்டுகள் தொடர்ந்து வசித்ததால் தந்தை தமது கட்டளையை மறந்திருப்பாரென எதிர்பார்த்தான்.

படிப்பு முடிந்து, வீடு திரும்பி, அவன் தந்தையிடம் தனது குருகுல வாழ்க்கையை விவரித்தான். குருவுக்குத் தெரிந்த அனைத்து சாஸ்திரங்களையும் தானும் கற்றுக்கொண்டு விட்டதாகவும், வேண்டுமானால் தந்தை தன்னைக் கேள்விகேட்க பரீட்சித்துப் பார்க்கலாம் என்றான்.

தந்தை கேட்டார், ''நான் சொன்னது நினைவிலுள்ளதா? எதை அறிந்து கொண்டால் எல்லாவற்றையும் அறிந்துகொண்டதாக ஆகுமோ அதையும் அறிந்துவந்துள்ளாயா?''

எவ்வளவு முயன்றும் அவர் குறிப்பிட்ட விஷயத்தைத் தன்னால் அறிந்து கொள்ள முடியாமல் போய்விட்டது என்று சுவேதகேது ஒப்புக்கொண்டான்.

தந்தை கோபித்துக்கொண்டார். ''நீ மறுபடியும் குருவிடம் சென்று மேற்கொண்டு படி. நமது குடும்ப பரம்பரையில் இதுவரை உண்மையான பிராமணர்களே தோன்றியிருக்கின்றனர். நாம் பெயரளவில் மட்டும் பிராமணர்கள் அல்லர். பிரமத்தை அறிந்தவன்தான், அறிந்ததனால்தான் அவன் பிராமணன் எனப்படுகிறான், பெயரளவிலான பிராமணன் வேதத்தை மனப்பாடமாக அறிந்திருப்பான், அவ்வளவுதான். அவன் பிரம்மத்தை அறிந்திருக்கமாட்டான். பிரம்மத்தை அறியாமல் வேத அறிவு மட்டும் பெற்றிருப்பதற்கு அர்த்தமில்லை. நீ கொண்டுவந்துள்ளவை எல்லாம் குப்பை கூளம் மட்டுமே. திரும்பி உன் குருவிடமே செல். எதை அறிவதால் எல்லாவற்றையும் அறிய முடியுமோ அதை அறிந்துவா,'' என்று மகனைத் தங்கவிடாமல் குருகுலத்திற்குத் திருப்பியனுப்பி விட்டார்!

மனப்பாடம் செய்வது தனி விஷயம். அதில் சிறப்பொன்றும் இல்லை. விழிப்புப் பெறுவதுதான் முக்கியமானது. மனப்பாடம் செய்வதால் உன்னிடமுள்ள தகவல் குவியலின் அளவுதான் அதிகரிக்கிறது. விழிப்புப் பெற்றால்தான் உனது உள்மனத்தில் புரட்சி

நிகழும். விழிப்பதால் உள்ளே ஞானதீபம் சுடர்விடும். இதனால் உள் உலகில் ஒளி பரவும். நீ புத்தரைப்போல் ஆகிறாய். விழிப்புப்பெற்ற நீ வேதத்தை மனப்பாடம் செய்யாதவனாக இருந்தாலும், நீ சொல்வதே வேதமாகிவிடும். உன் சொற்கள் மந்திரமாகிவிடும். நிறைமொழி மாந்தர் சொல் மறைமொழி என்பர்.

ஆனால் லயிப்பின்றி கீதை போன்ற புனித நூல்களை தினமும் ஓதிவந்தால் அது உள்ளத்தில் அழுத்தமான கோடுபோல் படியுமே தவிர, பலன் ஒன்றும் தராது.

**தாம்புக் கயிறு வந்தபோவதால்**
**தடம் பதிகிறது கிணற்று மேடையிலும்**

என்றபடி, தினசரி பாராயணத்தால் உனது ஞாபகசக்தி உறுதிப் படுகிறது, அவ்வளவே.

ஆனால் நினைவாற்றலும் ஞானமும் ஒன்றல்ல. தினமும் ஓதுவதன் மூலம் ஞானம் பெறும் வழியென்ன? உதாரணமாக, வேதத்தை தினமும் ஓதுகின்றபோது அது மீண்டும் மீண்டும் சொல்லப் படுவதுபோல் உனக்குத் தோன்றக்கூடாது. அது மறுவாசிப்புப்போல் தெரியக்கூடாது. ஒவ்வொரு முறையும் ஓதும்போது இப்போதுதான் முதல் முறையாக ஓதுவதுபோல், இன்றுதான் புதிதாகப் படிப்பதுபோல் நீ உணரவேண்டும். இதற்குமுன் நீ படித்ததே இல்லை போல் புதிய ஆர்வத்துடன், விசேஷகவனத்துடன் படிக்க வேண்டும். நேற்றுவரை படித்ததால் ஞானம் கிடைக்கவில்லை. இன்று படிப்பதால் ஞானம் கிடைக்கவுள்ளது என்ற பரபரப்பான எதிர்பார்ப்புடன் படிக்க வேண்டும். மனப்பாடம் ஆகிவிட்ட நிலையில், வாய் துதிகளைச் சொல்லிக்கொண்டிருக்க, மனம் வேறெங்கோ போயிருக்கும். நீ ஓதுகிறாய் என்பது உனக்கே ஞாபகமிராது. அவ்வாறின்றி நீ சாட்சிபோல் ஆகி, நீ ஓதுவதை நீயே கண்காணிக்க வேண்டும். அப்போது நீ முழுக்கவனத்துடன் ஓதுவதைத் தவிர வேறு வழியில்லை.

டேப்ரிகார்டர்போல் திருப்பிச் சொல்வதால் ஞானம் பெறமுடியாது. படிப்பது ஒரு சாக்குதான். நீ ஓதுவதைக் கவனித்தபடி பின்னால் நிற்பவன் விழிப்புடன் இருந்தால் ஞானம் கிடைத்துவிடும். ஆகவே நீ வேதம் அல்லது வேறு புனித நூல்தான் ஓதவேண்டுமென்ற கட்டாயமுமில்லை. தினந்தோறும் விடியலில் பறவைகளின்

அருள்மொழி போன்ற இன்னொலியை லயிப்புடன் கேட்டுவந்தால் அதுவும் பாராயணம்தான். தினமும் அருவி விழும் ஓசையைக் கவனமாகக் கேட்டுவந்தால் அதுவும் பாராயணம்தான்.

வேதத்தை அப்படியே படித்துக்கொண்டே போவதால் ஞானம் கிடைத்துவிடாது. படிப்பது ஓர் ஊன்றுகோல் மட்டும்தான். ஏதாவது ஒன்று ஊன்றுகோலாக, சான்றாக, சாக்காக அமைவதை ஆரம்பத்தில் தவிர்க்க முடியாது. உன்னுள் இருக்கும் சாட்சியைத் தட்டியெழுப்பும் முயற்சிதான் இந்த பாராயணம். இதற்கு வேதத்தைவிட நல்ல தூண்டுகோல் வேறு எதுவாக இருக்க முடியும்? வேதம், குரான் போன்றவை ஞானம் பெற்றவர்களின் ஆழ்மனத்திலிருந்து சுரந்த அமிர்த வசனங்களாகும். அவர்கள் அனுபவித்த ஆன்மிகச் சுவை அந்த வசனங்களில் கலந்திருக்கிறது. ஆதிகால முனிவர்களின் ஆழ்மனத்திலிருந்து வெளிவந்த சங்கீதம்தான் வேதம் என்பது. கங்கை அதிகபட்சத் தூய்மையுடன் விளங்குவது அதன் உற்பத்தி ஸ்தலமாகிய கங்கோத்திரியில்தானே.

புனித நூல்கள் நல்ல கருவிகள். ஆனால் அவை கருவிகள் மட்டுமே என்பதை நினைவில் வைக்கவும். உண்மையான வேலை ஞான விழிப்புப் பெறுவது. வேதம் போன்றவற்றையும் தினமும் முறையாக இசைத்தபடி இரு. பின்னால் நிற்கும் சாட்சியையும் கவனி. பாராயண ஒலியில் மூழ்கிவிடாதே. சந்தத்தின் அழகில் சொக்கி விடாதே. இல்லாவிடில் பாராயணம் வெறும் மனப்பாட அளவில் நின்றுவிடும். நினைவாற்றலுக்கு மட்டுமே சான்றாக நிற்கும். நீ புத்தகத்தைப் பிரிக்காமல் ஒப்பிக்கும் நிலையை அடைந்துவிடுவாய். ஆனால் உன் வாழ்க்கையில் ஆன்மிகப் புரட்சி நிகழாது.

இவ்வாறாக ஓதுதல் இருவகைப் படுகிறது. இயந்திரம்போல் எதையும் உணராமல் ஒருவிதமான ஆவேச மயக்கத்தில் சொல்லிக்கொண்டே போவது ஒருவகை. விழிப்புடன் பாராயணத்தை உள்வாங்கி ஒவ்வொருநாளும் அன்றுதான் முதல் தடவை சொல்வதுபோல் குறுகுறுப்புடன் ஓதுதல் இரண்டாம் வகையாகும்.

கபீர்தாசர் 'உட்காருவேன், எழுவேன், அதுவே கோயிலை வலம்வந்தாகும்' என்கிறார். கோயிலுக்குச் சென்று வலம் வரும் அவசியம் ஞானம் பெற்றவனுக்குக் கிடையாது என்பது இதன்

பொருள். கோயிலுக்குச் சென்று படையல் சமர்ப்பிக்க வேண்டிய தேவையுமில்லை. 'நான் சாப்பிட்டு, நான் பருகினாலே அதுவும் கடவுளுக்குச் செய்யும் சேவை' என்னும் நிலை தோன்றும். ஞான விழிப்புடன் உண்டால்-பருகினால் அது பரமாத்மாவிற்குப் படைக்கப்பட்டதாகவே அர்த்தமாகும். ஏனெனில் உலகில் கடவுளைத் தவிர வேறுயாரும் எதுவும் இல்லை. ஞான விழிப்புடன் பார்த்தால் நமது ஒவ்வொரு செய்கையுமே பூஜை மாதிரிதான். மனத்தில் எழுப்பும் ஒவ்வோர் எண்ண அலையும் கடவுளின் பாதங்களிலேயே சமர்ப்பணமாகிறது. எல்லாமே அவருக்கு நைவேத்தியம் (படையல்) ஆகிறது. மொத்த வாழ்க்கையுமே பிரார்த்தனையாக மாறுகிறது. ஞான விழிப்பு இல்லாவிடில் நமது ஒவ்வொரு நாள் வாழ்க்கையும் வீணாகக் கரைகிறது.

**ஆயுளில் ஒருநாள் கழிந்தது மேலும்**
**ஞான விழிப்புப் பெறவில்லை**
**நாம்தான் தோற்றோம், காலம் வென்றது**
**உதடுகளின் சோகத் துடிப்பெல்லாம்**
**கண்களில் வந்து நிறைந்து நின்றது**
**மேலும் ஒருமுடி நரைத்துப் போனது**
**கனவின் கரல்களில்**
**மேலும் ஒருமுள் பதிந்து விட்டது**
**சீதை பூமியில் மறைந்து விட்டாள்**
**ராமன் கண்ணீர் பெருக நின்றார்**
**ராமாயணம் நடந்து முடிந்தது**
**கீதை படிக்கத் தொடங்குக இனி**

ராமாயணம் முடிந்துவிட்டாலும் சரி, கீதையை ஆரம்பித்து விட்டாலும் சரி, தூக்கக் கலக்கத்துடனேயே இயங்கினால் எல்லாமே வீணான முயற்சியாகிவிடும். தூங்குபவன் இழப்பான், விழித்தவன் பெறுவான்.

பாராயணம் (ஓதுதல்) பற்றி நான் கூறுகையில், உன் முழு வாழ்க்கையுமே பாராயணம்போல் அமைய வேண்டுமென எதிர்பார்க்கிறேன். எந்த புனித நூலையுமே சில மணி நேரத்தில் படித்துவிடலாம். ஆனால் வாழ்க்கையோ எங்கும்-என்றும் நிற்காத பிரவாகம் (நீரோட்டம்). புனித நூல் பாராயணத்தை ஒரு மணியில்

முடித்துவிட்டு, மீதி விழித்திருக்கும் நேரமெல்லாம் பயனற்ற செயல்களில் விரயமானால் அந்த பாராயணமும் வீண் என்றே கூறலாம். இது வீட்டின் ஒரு மூலையை மட்டும் தூய்மைப் பகுதியாக ஒதுக்கிவைத்துவிட்டு, மற்ற பகுதிகளை அசுத்தமாக, குப்பையாக வைத்திருப்பதுபோலாகும். காற்று வீச்சால் மற்ற மூலைகளின் குப்பை பரவி தூய்மைப் பகுதியும் அசுத்தமாகிவிடும். இது உடல் முழுவதையும் அழுக்காக வைத்துக்கொண்டு, முகத்தை மட்டும் சோப் போட்டுக் கழுவிவைத்துக் கொள்வதுபோலாகும். உன் முகத்தின் ஒப்பனை கண்டு பிறர் ஏமாறலாம். ஆனால் நீ உன்னையே ஏமாற்றிக்கொள்ள முடியாது.

ஆன்மிக வாழ்க்கை என்பது தங்கு தடையற்ற பிரவாகமாகும். எல்லாச் செயல்களும் ஞான விழிப்புடன் தொடர்புடையதாக இருக்கும். காலையில் விழித்தெழல், குளியல், பூஜை, பாராயணம், கடை அல்லது அலுவலகப் பணி, இரவு தூக்கம் என வாழ்க்கையின் முடிவுவரை ஞானமே அதன் அடிப்படையாக இருக்கும். எல்லாப் பணிகளும் விழிப்புடன் கடவுளுக்காகச் செய்வதுபோல் தோன்றும்.

ஆரம்பக்கட்டத்தில் சாதகனால் நீண்ட நேரம் ஞான விழிப்புடன் இருக்க முடியாது. இடையிடையே உலக இயல்பு மீண்டெழுந்து அவனைப் பாதிக்கும். ஞான விழிப்பை நீண்ட நேரம் பிடித்துவைத்திருப்பது சிரமமாக இருக்கும்; அது கைக்குள் அடங்காது. பாதரசம்போல் சிதறிவிடும் கவலைவேண்டாம் காலப்போக்கில் எல்லாம் சரியாகிவிடும். காலையில் விழிக்கும்போது ஞான விழிப்பும் சேர்ந்தே வரும். ஆனால் அதிசயம் என்னவென்றால், தூக்க நிலையிலும் நீ ஞான விழிப்புடன் இருப்பாய் என்பதுதான். அந்த நிலையில் விவரிக்க முடியாத ஆனந்தம் தோன்றும். கிருஷ்ணனின் புல்லாங்குழல் இசை கேட்கும். வைகுண்டத்தின் சொர்க்க வாசல் கதவுகள் திறக்கும். சுவர்க்கம் உனக்குச் சொந்தமாகிவிடும். இரவில் நீ தூங்க, உடல் அசைவின்றிக்கிடக்க, மனம் களைத்துப்போயிருக்க, ஆத்மா அப்போதும் விழிப்புடன இருந்துவிட்டால், ஆன்மிக உலகில் நீ செய்ய எதுவும் மிஞ்சியிருக்காது. நீ வலம் (பிரதட்சிணம்) வருவது முழுமைபெற்றதாகிவிடும். மற்றவர்கள் விழித்த நிலையிலும் தூங்குபவர்களாயிருப்பர். நீயோ உறக்கத்திலும் விழிப்புடன் விளங்குபவனாக இருப்பாய்.

**மனமே, உன்னிடம் ஒரு வேண்டுகோள்**
**அமைதியாக அடங்கிப்போ**
**நீ தோன்றிய இடத்திலேயே**
**இறங்கிவிடு, அடங்கி உறங்கிவிடு**
**சாட்சியாய் மாறி, புதிய பார்வைபெறு**
**இயற்கையாய் உடலை இயங்கவிடு**
**தங்கத்தை அதன் போக்கில் உருகவிடு**
**தானே அது உருவம் பெறவிடு**
**நீ சேரவேண்டிய இடந்தன்னை**
**அடைந்தவர்கள் அரிதினும் அரிதாவர்**

ஆனால் எங்கும் போகவேண்டியதில்லை. யார்-எப்போழுது போய்ச்சேர்ந்துள்ளனர்? நீ இயற்கையாகவே சாட்சி மனப்பான்மையை ஏற்படுத்திக்கொண்டால், தங்கம் தானாகவே பக்குவப்பட்டு நகையாக உருவாகிறது. கடவுள் தாமாகவே உருகி உனக்குள் இறங்குவார். நீ தெய்வீக மனிதனாகி விடுவாய். நீ புத்தருக்கு இணையாகிவிடுவாய்.

நீ தோன்றிய இடம் உனது ஆழ்மனம். அங்குதான் உனக்கு ஞான விழிப்பு ஏற்படுகிறது.

ஸாக்கீ (சாட்சி), ஸகீ (சகி) என்னும் கொற்களிடையே ஒரு மாத்திரை தான் வித்தியாசம். இவை ஆன்மிகத்தில் இரண்டு வழிகள். ஒன்று, நீ சகி (கடவுளுடன் தோழமை) ஆகிவிடு. இது அன்பு அல்லது பக்தி மார்க்கம். அல்லது, நீ ஸாக்கி-சாட்சி-ஆகிவிடு. இது ஞான வழி. இந்த இரண்டு வழிகளினிடையே பெரியதாக வித்தியாசம் கிடையாது.

என்னைப் பொறுத்தவரை, நீ சாட்சி மார்க்கத்தைப் பின்பற்று என்று சொல்வேன். அப்போது உனக்கு ஆச்சரியம் தோன்றும். அப்போது உனக்கு யாருடனும் தகராறு இராது. யார் எந்த புனிதநூலை வேண்டுமானாலும் - கீதை, பைபிள், திருக்குர்ஆன்-ஓதட்டும் என்று விட்டுவிடுவாய். ஆனால் அவர்களும் சாட்சி மனப்பான்மையை மேற்கொண்டால் சமூகத்தில் மதச் சண்டையே வராது. அந்த நூல்களை இயந்திர ரீதியில் படிப்பதால் மட்டும் ஞானம் வராது. சாட்சி மனப்பான்மையுடன் ஓதவேண்டும். ஓதுபவனாகிய உனக்குப் பின்புறம் நீ சாட்சியாக நிற்பதுபோல் தோன்ற வேண்டும்.

உலகப் புகழ் பெற்ற தத்துவமேதையான ஜே.கிருஷ்ணமூர்த்தி துப்பறியும் நாவல்கள் தவிர வேறெந்த புத்தகமும் படிக்கமாட்டாராம். ஏனெனில் இவற்றை நீயும் ஒரு பாத்திரமாகிவிடாமல், காட்சி மனப்பான்மையுடன் படிக்க முடியும். தத்துவமேதையும் துப்பறியும் நாவல்களும் எப்படி ஜோடி சேர முடியுமென நீ நினைக்கலாம். ஆனால் அவரே சொல்கிறார், 'நான் அதிர்ஷ்டசாலி. நான் கீதை, குர்ஆன், பைபிள் படிக்கவில்லை!' இவற்றையெல்லாம் படித்தவர்கள், தினசரிகூட ஓதுபவர்கள், ஞான விழிப்புப் பெறாமல், சராசரி வாழ்க்கையிலேயே சிக்கிக்கிடக்கிறார்கள். கண்கள் திறந்த நிலையிலும் உறங்கிக்கிடக்கிறார்கள். கடவுள் உன் வீட்டுக் கதவைத் தட்டிப்பார்த்து விட்டு, திறக்காததால் திரும்பிச் சென்று விடுகிறார். என்னவோ சப்தம் என்று நினைத்து நீ சும்மா இருந்துவிடுகிறாய்.

**பெருந்தன்மையுடன் பரமாத்மா**
**பலமுறை வந்தார் உன் இல்லம்**
**ஆனால் திரும்பினார் ஏமாற்றத்துடன்**
**மொட்டுகள் அனுமதிக்காவிடில்**
**உதய சூரிய கிரணங்கள்**
**பின்வாங்கி விடுவதைப்போல்**
**உன் இல்லம் வந்த கடவுள்**
**மூடிய கதவு கண்டு திகைத்தார்**
**தட்டி, தாமதித்தும் திறக்கவில்லை**
**மௌனமாய்த் திரும்பினார் தம் உலகிற்கு**
**சூரியனும் மேற்கில் மறைந்துபோனான்**

கடவுள் ஒவ்வொரு விநாடியும் உன்னை நோக்கி வருகிறார். நீ பேருறக்கத்தில் ஆழ்ந்துள்ளாய். ஆகவே அவருடன் சந்திப்பு நிகழ்வதில்லை. ஒவ்வொரு மூச்சிலும், ஒவ்வோர் இதயத்துடிப்பிலும் உன்னை நோக்கி அவர் வருகிறார். நீ அதைக் கவனிக்கவில்லை. உதாரணமாக, நான் உன் வீட்டிற்கு வருகிறேன். நீயோ குறட்டை ஒலியுடன் ஆழ்ந்து தூங்குகிறாய். பிறகு உன்னைச் சந்திப்பது எப்படி?

கடவுளுடன் சந்திப்பு நிகழ வேண்டுமானால் அவர் விழித்திருப்பதுபோல் நீயும் விழிப்புநிலையில் இருக்கவேண்டும். தூங்கும் இருவரிடையே சந்திப்பு நிகழாது. ஒருவர் தூங்கி மற்றவர்

விழித்திருந்தாலும் சந்திப்பு நிகழாது. இருவர் சந்திக்க இருவரும் விழித்திருப்பது அவசியமாகும்.

## இரண்டாம் கேள்வி

**மனித வாழ்க்கையில் சிறிய பொய்யிலிருந்து, பலாத்காரம், கொலைவரை விதம்–விதமான குற்றங்கள் நிறைந்து காணப்படுகின்றன. தொன்றுதொட்டே ஞானிகளாகிய மாமனிதர்கள் மனிதன் நற்செயல்களே புரியவேண்டுமெனத் தங்கள் அறிவுரைகள் மூலமாகத் தூண்டுதல் தந்துள்ளனர். மனித மனம் விகாரப்பட்டுக் குற்றங்கள் இழைப்பதை அறிவுஜீவிகளான இக்கால மக்கள் தடுப்பது எப்படி என்று தங்களால் ஆலோசனை வழங்கமுடியுமா?**

மக்கள் என்று நாம் கூறுவது கூட்டத்தைத்தான். கூட்டத்திற்கென தனியான மனோவிஞ்ஞானம் (மனவியல் Mob psychology) உள்ளது. கூட்டத்தின் மன இயல்பு என்றும் மாறாது. நீ இதில் சிக்கிக்கொள்ளாதே. வாழ்க்கையின் தலைசிறந்த உண்மைகளெல்லாம் தனி மனிதர்களுக்குத்தான் கிடைத்துள்ளன. அவை ஒட்டுமொத்தமாகக் கூட்டத்திற்குக் கிடைத்ததில்லை. கூட்டம் என்பது சுயசிந்தனையற்ற மயக்கத்தில் உள்ளதுபோன்று மக்கள் திரள் மட்டுமேயாகும். மதத்தின் பெயரால் பாவச்செயல் புரிவதற்கும் கூட்டம் தயங்காது. ஒரு கூட்டத்தின் முழக்கங்கள் உயர்ந்தவையாக இருந்தபோதிலும் முடிவு கொலையாகக்கூட இருக்கும். ஒரு மதத்தினரின் கூட்டம் இன்னொரு மதத்தினரை தர்மயுத்தம் என்ற பெயரில் வெட்டி வீழ்த்துவது. அவ்வப்போது நடைபெறுகிறது. புனிதத் தலங்களும் மடங்களும் தீக்கிரையாக்கப்பட்டுள்ளன. புத்தமதமும் ஜைனமதமும் பெரும்பான்மை இந்துக் கூட்டத்தின் தாக்குதலால் சுருங்கிவிட்டன. இப்போது இந்தக் கருத்தை வெளிப்படையாகச் சொன்னாலே புதிய பிரச்சினைகள் தலைதூக்கும்.

மதத்தின் பெயரைச் சொல்லித்தான் மனிதர்கள் அதிகபட்சமான பாவம் செய்திருக்கிறார்கள். அரசியல் உலகில்கூட இவ்வளவு பாவம்

செய்யப்படவில்லை. நாட்டுக்காக உயிரிழந்தவர்களைவிட மதத்தின் பெயரால் கொல்லப்பட்டோரின் எண்ணிக்கை அதிகம். எத்தகைய பாவம் என்ற அடிப்படையில் ஒப்பிட்டால்கூட அரசியல் உலகத்துப் பாவம் பரவலானதோ, பாரமானதோ அன்று. மதத்தின் பெயரால் நிகழ்ந்த பாவச்செயல்கள் பயங்கரமானவை. சாதுக்கள், மகாத்மாக்கள் என்று நம்மால் வணங்கப்படுவோர்தான் அப்பாவி மக்களை அழிவுச் செயல்களில் ஈடுபடத் தூண்டுகிறார்கள். போராட்டத்தில் மடிந்தாலும் வீரசுவர்க்கம் கிடைக்கும் என்று போலியான வாக்குறுதி தருகிறார்கள்.

உதாரணமாக, சீக்கிய மத குரு ஏதாவது ஒரு குருத்வாரா (கோயில்) ஆபத்தில் உள்ளது என்று அறிவித்தால் போதும். ஏராளமான சீக்கியர்கள் வாளுடன் கோயிலைக் காக்கத் திரளுவார்கள். அவர்களின் ஆவேசத்தைப் பார்த்தால், கோயிலைக் காக்கவே அவர்கள் பிறவி எடுத்தார்களோ என்று நினைக்கத் தோன்றும்.

ஒரு நாத்திகன் எங்கோ ஒரு பிள்ளையார் சிலையை உடைத்தான் என்று வைத்துக்கொள்வோம். அவ்வளவுதான். மொத்த இந்து மதத்திற்கே ஆபத்து வந்துவிட்டதைப்போல் பரபரப்பு ஏற்பட்டுவிடும். கலவரம் மூண்டு, இந்தக் கற்சிலைக்குப் பதிலாக, எத்தனை நிஜமான கணேசர்கள் (மக்கள்) கொல்லப்படுவார்கள் என்று கூறமுடியாது. இதில் வேடிக்கை என்னவென்றால் சிலையான கணேசர் உன்னைப் பாதுகாப்பார் என்று நீ அவரை வழிபட்டுவந்தாய் ஆனால் இப்போது அவரைப் பாதுகாப்பது உனது பொறுப்பாகிவிட்டது!

நீ மதத்தைக் காப்பாற்ற வேண்டிய நிலையிலா அது உள்ளது? அப்படியாயின் அது மதத்திற்கே இழுக்கு. மதம் என்பது நீ பரப்பியது தான்; உனது மனத்தில் பின்னப்பட்ட வலைதான். வேண்டாதவருடன் போரிட, அவர்களைக் கொல்ல மதம் ஒரு சாக்காகிவிட்டது. இந்தக் கொலைவெறிக்கு தர்மயுத்தம் என்று பெயரிடப்பட்டு, இதில் இறந்தவர்களுக்கு விண்ணரசில் உயர் இடம் என்று ஆசை காட்டப்படுகிறது. கடவுளுக்காக உயிரை விட்டவன் கடவுளுக்கு பிரியமானவன் என்று சுட்டிக்காட்டப்படுகிறது. இதையெல்லாம் சுவர்க்கத்திலிருந்து திரும்பிவந்து நிரூபிக்க யாரால் முடியும்?

அன்பு வழியைக் கடைப்பிடிப்பவன்தானே கடவுளின் அன்பனாக ஆக முடியும். கடவுளே உயிர் தருபவர் என்னும்

நிலையில் உயிரை எடுப்பவன் எப்படிக் கடவுளை நெருங்க முடியும்? எல்லா உயிரையும் பாதுகாத்து வளர்ப்பவனையே கடவுளும் விரும்புவார். ஏனெனில் அவரது பணியும் அதுவேதான். அழிப்பதை அறவே ஒழித்து, ஆக்குவதற்கே ஒருவன் எத்துணை பாடுபடுகிறானோ அந்த அளவிற்கு அவன் உண்மையான மதத்தினன் ஆவான்.

கூட்டம் எப்பொழுதும் உபத்திரவம்தான் தரும். உபத்திரவம் செய்வதே கூட்டத்தின் இயல்பு. கூட்டம் ஒரு விதமான மயக்க நிலையிலேயே இருக்கும் என்றும், அதனால்தான் முன்யோசனையின்றி வெட்டு-குத்து என்று இறங்குவதாகவும் மன இயல் அறிஞர்கள் கூறுகின்றனர். இவ்வாறு செய்ய ஏதேனும் அற்ப காரணம் போதும்.

சுதந்திரத்திற்கு முன்பு இந்து-முஸ்லிம் மதக் கலவரங்கள் காரணமாக நாட்டைப் பிரிப்பதே நல்லது என்று முடிவுசெய்தனர். ஆனால் கூட்டத்தின் இயல்பு மாறுவதில்லை. இப்போது இந்தியாவில் வசிக்கும் இந்துக்கள் தமக்குள்ளும், பாகிஸ்தானியர் தமக்குள்ளும் வெட்டு-குத்து-தீவைப்பு-கொலையில் ஈடுபட்டுக்கொண்டுதானே இருக்கின்றனர். குறிப்பிட்ட மாவட்டம் எந்த மாநிலத்தில் இருப்பது என்று மராட்டியர்களும் கன்னட மக்களும் பரஸ்பரம் தாக்கிக்கொள்கிறார்கள். மும்பை யாருக்குச் சொந்தம் என்று குஜராத்தியினருக்கும் மராட்டியர்களுக்கும் மத்தியில் கலவரம் வெடித்ததல்லவா? தனி மனிதன் மாறுவதுண்டு ஆனால் மனிதர்கள் சேர்ந்தால் அந்தக் கூட்டத்தின் இயல்பு என்றும் ஒன்றுதான். இதனால்தான், மாநிலங்களுக்கிடையே பிரச்சினை தீர்ந்தாலும், ஒரு மாநிலத்தில் வசிப்பவர்கள் தமக்குள் அடித்துக்கொள்வது இயல்பாகிவிட்டது.

**வி**னோபா பாவேயிடம், 'நீங்கள் மராட்டிய பிராமணரா, கொங்கண பிராமணரா? ' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர் 'நான் ஸ்வஸ்த்த (ஆரோக்கியமான) பிராமணன்' என்று பதிலளித்தார். கேள்வியின் பின்னணியான குறுகிய மனப்பான்மை என்னும் நோயின்றி நான் நலமாக உள்ளேன் என்பதுதான் அவரது பதிலின் அர்த்தம். வினோபா ஓர் ஆன்மிகவாதியாதலால் நாம் மேற்கொண்டு ஓர் ஆழமான அர்த்தமும் பெறலாம். ஸ்வ+ஸ்த்த=ஸ்வ+ஸ்தித=தன்னில் லயித்தவன், தன்னில் நிலைத்தவன் என்றும் பொருள். ஆனால்

'பிராமணன்' என்று சேர்க்க வேண்டியதில்லை. தன்னில் - தன் ஆத்மாவில் -லயிப்பவர்கள் வேரூன்றியவர்கள் அனைவருமே பிராமணர்கள் (பிரம்மத்தை அறிந்தவர்கள்). மற்ற பிராமணர்கள் சமூகத்தில் ஜாதி அடிப்படையில் மட்டுமே அப்பெயர் தாங்கி உள்ளவர்கள். தன்னில் லயிப்பது தனித்தனி மனிதர்களுக்கே சாத்தியம்; கூட்டத்திற்கு சாத்தியமில்லை.

**கூட்டம் பலவகை பார்த்துள்ளோம்**
**கட்டுப்பாடெனும் சுமையைத் தாங்கி,**
**அர்த்தமற்ற முழக்கங்கள் எழுப்பி,**
**தலைவருக்காகப் போராட்டம் நடத்தி**
**தொண்டர்கள் தமக்கே தோண்டுகின்றனர்**
**ஆழமான புதைகுழிகளை**

**தனிமனிதனின் மனத்தில் பூக்கும்**
**ஆன்ம அனுபவ பாரிஜாத மலரை**
**கூட்டமாய்த் திரளுவோர் கைப்பற்றியதாக**
**என்றும் நாம் கேள்விப்பட்டதில்லை.**

தனி மனிதனின் மனத்தில் மலரும் ஞானமலரை எந்தக் கூட்டமும் பறிக்க முடியாது. கூட்டத்து மக்கள் புத்தர்களாக முடியாது. தனி மனிதன்தான் புத்தராகலாம்.

என்னிடம் வருபவர்களில் சிலர், ''நீங்கள் சமூகத்திற்கென்று ஏதாவது ஏன் செய்யக்கூடாது?'' என்று கேட்கிறார்கள். எந்த சேவையும் தனி மனிதனுக்குத்தான் செய்ய முடியும். சமூகத்திற்கு என்னால் எதுவும் செய்ய இயலாது. நாம் சமூகத்திற்கு ஏதாவது செய்ய முயன்றால் நம்மை அறியாமல் அரசியலில் நுழைந்தவர்களாகிறோம்; மதம் தனி மனிதனுடன் சம்பந்தப்பட்டது. சமூகம் அரசியல் சூழ்நிலையுடன் தொடர்புள்ளது. மதம் மனிதனை மையமாகக் கொண்டது. ஒவ்வொரு மனிதனும் தனித்தன்மை வாய்ந்தவன், சுதந்திரமானவன் என்று மதம் கருதுகிறது.

மனித வாழ்க்கையில் அற்பப் பொய்யிலிருந்து பலாத்காரம், கொலைவரையிலான குற்றங்கள் நிறைந்து கிடக்கின்றனவே என்று கவலை தெரிவிக்கப்பட்டது. ஆனால் இத்தகைய குற்றங்கள் என்றும் இருந்தன; இனியும் நிகழத்தான் போகின்றன. மருத்துவமனையில்

சயரோகம், புற்றுநோய் என்று விதம்விதமான நோய்கள் இருக்கின்றனவே என்று வருத்தப்பட முடியுமா? மருத்துவமனை என்றாலே அப்படித்தானே இருக்கும்; இருக்க வேண்டும். மருத்துவமனை ஏற்பட்டுள்ளதே நோய்களுக்காகத்தானே ஆரோக்கிய மானவர்கள் அங்கே செல்லமாட்டார்களே. நோயாளிகளுக்குத்தான் அது புகலிடமாக உள்ளது. இதையே கிழக்கத்திய நாட்டு ஞானிகள் வேறுவிதமாகச் சொல்வார்கள். பாவங்கள் செய்தவர்கள்-பாவத்தால் பீடிக்கப்பட்டவர்கள்-இந்த உலகத்தில் சேர்க்கைக்காக (அட்மிஷன்) அனுப்பப்படுகிறார்கள். நோயாளிகளில் குணமாகின்றவர்கள் மருத்துவமனையை விட்டு வெளியேறுவதுபோல், பாவிகளில் மனம் திருந்தியவர்கள், கூட்டத்திலிருந்து பிரிந்து தனியாகிறார்கள். தண்ணீர் ஒட்டாத தாமரைபோல் பற்றறுக்கிறார்கள் அவர்கள் மீண்டும் உலகிற்குத் திரும்புவதில்லை. அடுத்த பிறவி என்று தள்ளப்படுவ தில்லை.

இந்த உலகத்தைப் பாவிகளின் மருத்துவமனை என்று கூறலாம். ஆகவே இந்தியாவில் மக்கள் (இந்துக்கள்) மீண்டும் பிறவா வேண்டும் என்று கேட்பது வழக்கமாக உள்ளது. 'குலாலரான கடவுளே!* உமது சக்கரத்தில் சுற்றிச்சுற்று வந்து நாங்கள் களைத்துவிட்டோம். போதும் எங்களை விட்டுவிடு' என்று மக்கள் கெஞ்சுகிறார்கள்.

மோட்சம் கேட்பதன் பின்னால் உள்ள வேண்டுகோள் இதுவே: 'போதும், போதும், எல்லாம் அனுபவித்தாகிவிட்டது. இங்கு எல்லா இடத்திலும் நோய்களே பரவியுள்ளன. இக்கரையில் நோய்களே வளர்கின்றன. எனவே எங்களை அக்கரைக்கு அழைத்துக் கொள்,' என்று இறைவனிடம் பிரார்த்திக்கிறோம்.

இம்மாதிரியான உணர்வு-அகத் தூண்டுதல்-தனி மனிதனுக்கே வாய்க்கிறது. கூட்டத்திற்கோ நின்று நிதானித்துச் சிந்திக்க நேரமே இல்லை. கூட்டம் தொடர்ந்து ஓடுகிறது. குறிக்கோளின்றி ஓடுகிறது. பேராசையால் முடுக்கிவிடப்பட்டு ஓடுகிறது. பணத்தின் பின்னால், பதவியின் பின்னால், சமூக அந்தஸ்தின் பின்னால் துரத்தியபடி

---

* சாதுர்வர்ண்யம் குலாலேப்ய: கர்மாரேப்ய ச வோ நமோ நம-குயவர்களாகவும் கருமார்களாகவும் இருக்கும் பரமேசுவரனான உமக்கு நமஸ்காரம் என்றொரு (ஸ்ரீருத்ரம்) துதி உள்ளது.

ஓடுகிறது. இந்தக் கூட்டத்திலிருந்து ஓரிருவர் அதிசயமாக விலகி நின்றுவிடுகிறார்கள். நின்றுவிடுகிறார்கள். ஏன் அதிசயம் என்றால், கூட்டம் என்னும் வலை வலுவானது. வலையிலிருந்து யாரும் நழுவி விடாதபடி எச்சரிக்கையாக உள்ளது. கூட்டம் நமது நெஞ்சின்மேல் ஏறி அழுத்துகிறது; கழுத்தைப் பிடித்து இறுக்குகிறது.

ஒரு நண்பர் என்னிடம் ஒரு சந்தேகம் கேட்டார். "நீங்கள் எங்களை அவரவர் சுபாவப்படியும், சகஜமாகவும், சுதந்திரமாகவும் வாழச் சொல்கிறீர்கள். ஆனால் அப்படி வாழ முயன்றால் பல பிரச்சினைகள் எழுமே. சமூகம் சும்மா இருக்குமா? அரசாங்கம் வேடிக்கை பார்க்குமா?" என்றார்.

நல்ல கேள்வி. இந்த எதிர்ப்புகளை சமாளிக்கும் முயற்சிதான் தவம் எனப்படும். நம்மால் முடிந்த அளவிற்கு நமது ஆத்மாவின் சுபாவப்படி (ஆத்மா கூறுவதுபோல்) வாழவேண்டும். எந்த சூழ்நிலையில் அப்படி வாழ்வது இயலாமல் போய்விடுமோ அப்போது சமூகத்துடன், கூட்டத்துடன், ஒத்துப்போக வேண்டும்.

ஏனெனில் நாம் கூட்டத்துடன் சேர்ந்துதான் வாழவேண்டியுள்ளது. நாம் கூட்டத்திலிருந்து தப்பி ஓடமுடியாது. அப்படி எங்கே நாம் ஓடிவிட முடியும்? ஒளிந்து வாழ, காடுகளும் குகைகளும் மிஞ்சியருக்கவில்லையே. கூட்டம் உள்ள இடத்தில் உபத்திரவமும் உண்டாகும். தனியாக, தனிமையில் இருந்தால் தொல்லை இல்லை என்று நினைக்க வேண்டாம். ஏனெனில், கூட்டம் என்பது வெளியில்தான் இருந்தால், நீ இமயமலைக்கு ஓடிவிடலாம். தொல்லையும் நீங்கிவிடும் எனலாம். ஆனால் கூட்டம்தான் ஏற்கெனவே உன் மனத்திற்குள் பிரவேசித்துவிட்டதே. நீ காட்டுக்குப் போனாலும் உன் மனத்தில் பதிந்துவிட்ட கூட்டமனப்பான்மையின் தாக்கத்திலிருந்து தப்பிக்க இயலாது.

எனவே நீ முழுமையாக சமூகத்தைத் தவிர்க்க வேண்டியதில்லை. நீ தொண்ணூறு சதவிகிதம் உன் சுபாவப்படி வாழ முடியும். மீதியுள்ளதற்குத்தான் நீ சமூகத்தோடு ஒத்துப்போக நேரும். அந்த சமரசத்தை நடிப்பு அல்லது விளையாட்டாகக் கருது. நீ சாலையில் நடுப்பகுதியிலே நடந்து செல்ல விரும்பினாலும், சமூகத்திற்காக நீ இடப்பக்க ஓரமாகவே நட. எல்லோரும் சாலையின் நடுவில் நடக்க

ஆரம்பித்தால் பெருங்குழப்பம்தான் விளையும். இடப்பக்கமாக நடப்பதையும் உன் சுபாவத்தின் அங்கமாக்கிவிடு.

கூட்டத்துடன் சேர்ந்து இருப்பதற்காக நீ அளிக்கும் விலையாக சாலை விதிகளுக்கு மதிப்புக் கொடு. இதை அறிவுபூர்வமாக உணர்ந்தே கொடு. மீதி தொண்ணூறு சதவிகித வாழ்க்கையைக் கடவுளுக்கு அர்ப்பணித்து உன் சுதந்திரமான தனித்தன்மையைப் பாதுகாத்துக்கொள்.

வாழ்க்கையில் நாம் பெறும் ஒவ்வொன்றிற்கும் விலை கொடுத்துத் தான் ஆக வேண்டியுள்ளது. இலவசமாக எதுவும் கிடைப்பதில்லை*. ஆனால் அறவாழ்க்கை-ஆன்மவாழ்க்கை-கூட்டத்துடன் தொடர்புடையதன்று. அவ்வாழ்க்கை சுபாவமான தன்மையுடன் சம்பந்தப்பட்டதாகும். ஆத்மா என்பது தனிமனிதனிடம்தான் உண்டு. கூட்டத்திற்கு ஆத்மா கிடையாது.

முற்காலத்தில் மாமனிதர்களாகக் கருதப்பட்ட நல்லோர்கள் மக்கள் நற்செயல்களே புரியவேண்டும் என்று தூண்டுதல் கொடுத்தார்கள். ஆனால் இவர்களில் பலரை ஞானிகளின் வரிசையில் சேர்க்க முடியாது. நூறு நல்ல மனிதர்களில் ஞானம் பெற்றவர்கள் ஓரிருவரே இருப்பார்கள். மற்றவர்கள் கூட்டத்தின் அங்கமே ஆவர். அவர்களை ஆன்மிகத்துடன் சம்பந்தப்படுத்த முடியாது. அவர்களை நல்ல நடத்தையுள்ளவர்கள் என்று பாராட்டுகிறோம். இதன் பொருள் என்ன? இதற்கு சமூகத்தை மதித்து வாழ்பவர், சமூகம் ஏற்படுத்தியுள்ள விதிகளுக்கு மரியாதை தருபவர் என்று அர்த்தம் கொளளப்படுகிறது.

இதனால்தான் இந்துக் கடவுளர்களில் ராமபிரானுக்கு மிகவுயர்ந்த இடம் தரப்படுகிறது. கிருஷ்ணரையும் மக்கள் வழிபட்டாலும் மனத்தில் சிறிது சந்தேகம் இருக்கிறது. கிருஷ்ணரின் வாழ்க்கையில் ஏதாவது ஒரு கட்டத்தை மட்டும் தேர்ந்தெடுத்து, அந்தக் கோணத்திலேயே வழிபடுகிறார்கள். ராமர் விஷயத்தில் பக்தர்கள் அவரது முழுவாழ்க்கையிலும் லயிக்கிறார்கள். இந்தியில் தலைசிறந்த பக்திக் கவிஞரான சூர்தாசர் கிருஷ்ணரின் பால லீலைகளையே அதிகமாகப் பாடல்களாக்கியிருக்கிறார். அவரது இளமைப் பருவத்தை பாட சூர்தாசர் தயங்குவதுபோல் தெரிகிறது. பாலகிருஷ்ணராக

---

* There's no such thing as a free lunch.

வெண்ணெய்த் தாழிகளை உடைத்தபடி இருந்தவரையிலும் கவிஞருக்குப் பிரச்சினை இல்லை. ஆனால் கிருஷ்ணர் வளர்ந்து, கோபிகைக்ளின் சேலைகளைக் கவர்ந்து, மரத்தின்மேல் ஏறி உட்கார்ந்ததைப் பாடுவது பக்திரசக் கவிஞருக்கு சங்கடமளிக்கும் விடியம்தானே?

பெரும்பாலான பக்தர்களுக்கு கிருஷ்ணரின் கீதோபதேச வடிவை வணங்குவது சௌகரியமாக உள்ளது. ஆனால் ஸ்ரீமத் பாகவதம் கொஞ்சம் ஆபத்தானது. ராமாயணத்தை முழுமையாக ஏற்க முடியும். ஆனால் பாகவதத்தில் சில அத்தியாயங்கள் சங்கடப்படுத்தும். ராமனை 'மர்யாதா புருஷோத்தம்' (மரியாதைக்குரியவர், மனிதர்களில் உத்தமர்), லோகரட்சக் (உலகைக் காப்பவர்) என்பார்கள். ஆனால் கிருஷ்ணர் 'லோக ரஞ்சக்' (உலகை மகிழ்விப்பவர்) மட்டுமே. மனிதன் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு ஆதர்சமாக விளங்கியவர் ராமர். இவ்விஷயத்தில் கிருஷ்ணரை முழுமையாக நம்பிப் பின்பற்ற முடியாது. கிருஷ்ணர் எதற்கும் கட்டுப்படாமல் சுதந்திரமாக இயங்கியவர்.

இங்கே ஒரு சுவையான விஷயம். திருமாலின் அம்சம் ஒவ்வோர் அவதாரத்திலும் வெவ்வேறு அளவில் வெளிப்பட்டிருக்கிறது. ராமரையும் கிருஷ்ணரையும் ஒப்பிட்டு, ராமரை அம்சாவதாரம் (partial) என்றும் கிருஷ்ணரை பூர்ணாவதாராம் (full fledged) என்றும் கூறுவது வழக்கம். இது நான் முன்பு சொன்ன கருத்துகளுடன் முரண்படுவதாகத் தெரிகிறதல்லவா? இதைப் புரிந்துகொள்ள நுணுக்கமான சிந்தனை தேவை.

இதன் விளக்கம் என்னவென்றால்-ராமர் கடவுளின் முழு அம்சமானவரில்லை. கிருஷ்ணர் கடவுளின் பதினாறு கலைகளும் பொருந்தியவராதலால் முழுக்கடவுள். ஏனெனில் அவரிடம் சுதந்திரமான உணர்வு முழுமையாகக் காணப்படுகிறது. ராமர் ஒரு மகாநதிதான். கிருஷ்ணரோ கங்கை நதி. கிருஷ்ணரை ஏற்பதற்குத் தனியான, நுணுக்கமான புரிதல் தேவை.

இரண்டாம் கேள்வியில் குறிப்பிடப்பட்ட மாமனிதர்கள், பொதுவாக, சமூகம் ஏற்கெனவே வரையறுத்துள்ள ஒழுக்கநெறிகளைப் பின்பற்றுபவர்களாகவே இருப்பார்கள். உதாரணமாக, ஜைன

முனிவர்கள் எனப்படுபவர்கள் இரவில் அல்லது இருட்டியபின் சாப்பிடமாட்டார்கள்; தண்ணீரை வடிகட்டியே பருகுவார்கள், தினமும் ஒருமுறைதான் சாப்பிடுவார்கள். ஆனால் இந்தக் கட்டுப்பாடுகளை இந்துமதச் சான்றோர்கள் பின்பற்றுவதில்லை. ஜைனத் துறவிகளில் திகம்பரர் எனப்படுவோர் முழுமையாக ஆடையின்றி இருப்பார்கள். புத்தர் ஆடையுடன் உள்ளதால் ஜைனர்கள் அவரைக் கடவுள் என்று சொல்லாமல் 'மகாத்மா' என்னும் நிலைவரைக்கும் மட்டுமே உயர்த்துகிறார்கள். முழுமையான கடவுட்தன்மையை நிர்வாணம் என அவர்கள் கருதுவதால், அவ்வாறே திகம்பரராக நிற்கின்ற மகாவீரரைத்தான் அவர்கள் 'பகவான்' என்று வணங்குகிறார்கள்.*

ஜைனர்கள் கிருஷ்ணரை மகாத்மா என்னும் நிலைக்குக்கூட உயர்த்திப் பேசுவதில்லை. அவரை நரகங்களில் ஏழாவதில் தள்ளிவிட்டனர். ஏனெனில் அவர் போரைத் தூண்டிவிட்டவர். மகாபாரதப் போரில் நிகழும் அனைத்து இம்சைச் செயல்களுக்கும் கிருஷ்ணர்தான் பொறுப்பு. ஓட யத்தனித்த அர்ஜுனனைப் பிடித்து நிறுத்திப் போரிடச் செய்தவர் அவர்தானே. பிறகு நடந்த கொலைகளுக்கெல்லாம் காரணம் அவர்தானே. நீதிமன்றம் கூட கிருஷ்ணர்தான் குற்றவாளி என்று தீர்ப்புக்கூறும். அர்ஜுனனை உடந்தை மட்டுமே என்றும், கட்டாயப்படுத்தப்பட்ட, வேறுவழியில்லாத உடந்தை என்றும் மன்னித்துவிடும்.

ஆனால் இந்தியாவில் ஜைனர்களின் எண்ணிக்கை குறைவு. ஆகவே பெரும்பான்மையோராகிய இந்து மதத்தினரை விரோதித்துக் கொள்வதை அவர்கள் விரும்பவில்லை. ஆகவே ஸ்ரீகிருஷ்ணர் ஹிம்சையைத் தூண்டியமைக்காகச் சிறிது காலம் நரகத்தில் இருந்தபின், தீர்த்தங்கரராகப் பிறந்து ஜைனர்களாலும் வணங்கப்படுவார் என்றும் ஜைனமத நூல்கள் அறிவிக்கின்றன. எனவே ஒரு மதத்தினரால் புனிதர், மகான், அவதாரம் என்றெல்லாம் போற்றப்படுபவர் மற்ற மதங்களினால் அவ்வாறு ஏற்கப்படுவதில்லை.

இயேசுநாதரைச் சிலுவையில் அறைந்தார்கள். அதற்கு ஜைனர்கள் என்ன விளக்கம் சொல்வார்கள் தெரியுமா? அவர்

---

* அவருக்கு முற்பட்ட 23 தீர்த்தங்கரர்கள் ஆடை அணிந்திருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

முற்பிறவியில் செய்த பாவம் காரணமாக அத்தகைய தண்டனைக்கு உள்ளானார் என்பார்கள். அவர்கள் மகாவீரரைக் கடவுளாக வணங்குவதால், அவர் செல்லும் பாதையில் முள்ளிருந்தால் தானாக மடங்கிவிடும்; அவர் காலைக் குத்தாது என்பார்கள். அவர் கழுத்தில் தூக்குக்கயிறு மாட்டினாலும் மாலையாக மாறிவிடும் என்பார்கள்.

ஆகவே நாம் உலக மகான்கள் நூறு பேர் என்று பட்டியல் தயாரித்தால் ஒவ்வொரு பிரிவினரும் அம்மகான்களில் தமக்குப்பிடித்த ஓரிருவரையே உண்மையில் மகான்கள் என்று ஒப்புக்கொள்வார்கள். மகாத்மா யார்? பரமாத்மாவின் கையில் தன் கையைக் கோத்து வைத்திருப்பவர்தான் மகாத்மா. ஆனால் மதக்கண்ணோட்டத்துடன் பார்த்தால் கடவுளின் கையைப் பிடித்துள்ள மகாத்மாக்கள் யார்-யார் என்று பாரபட்சமில்லாமல் தேர்ந்தெடுக்க முடியாது. நாம் தயார்செய்த பட்டியலிலுள்ள நூறு பேரிலும் 90க்கும் மேற்பட்டவர்கள் அரசியல்வாதிகளைப் போலவே நடந்துகொள்கிறார்கள். சமூகத்திற்குத் தொண்டாற்றுவதாகச் சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் போலீஸ்காரர்கள் போல்தான் செயல்படுகிறார்கள். இதன் மூலம் அவர்கள் சமூகத்தைத் தாங்கிப் பிடிப்பதாக நினைக்கிறார்கள். ஒரு நீதிபதியின் வேலையையும் அவர்கள் சேர்த்துச் செய்கிறார்கள். ‘இவனைச் சிறையில் தள்ளுங்கள்’ என்பார் நீதிபதி. ‘நீ நரகத்துக்குத்தான் போவாய்’ என்று சபிப்பார் மகாத்மா எனப்படும் மடத்தலைவர்.

கிறிஸ்தவர்கள் சொல்லக்கூடும்- இயேசுநாதர் மரத்தடியில் அல்லது குகையில் அமர்ந்து தனது மோட்சத்துக்காக தியானம் செய்தவரல்லர். அவர் சாமான்ய மனிதர்களின் சுகத்துக்காகப் பாடுபட்டவர். அனைவரது மோட்சத்திற்காகவும் அவர் சிலுவைத் தண்டனையை ஏற்றவர் என்பார்கள்.

ஆகவே உண்மையில் எல்லோரும் ஏற்கக்கூடிய மகான்கள் யார் யார் என்பதையே உறுதிசெய்ய முடியவில்லை. அவர்கள் ‘நல்லது செய்’ என உபதேசிக்கையில் ‘தீயதைச் செய்யாதே’ என்பதும் அதில் மறைந்து நிற்கிறது. உண்மையான மகான் உன்னை எத்தகைய கருமத்திலும் ஈடுபடுத்தமாட்டார். அவர் உன்னை கர்மம் செய்யாதவனாக இரு என்பார். அஷ்டாவக்ரரின் உபதேசமும் அதுவே.

'நல்லதைச் செய், தீயது செய்யாதே' என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. அவர் சொல்வது –'நீ எதுவும் செய்யாதவனாக இரு. கருமம் நீ செய்யவில்லை. கருமம் நடப்பதைப் பார்க்கும் சாட்சி மட்டுமே ஆகிவிடு.'

உண்மையான மகானாயின் 'கருமம் நிகழ்வது கடவுளைச் சேர்ந்தது. அது உன்னுடன் சம்பந்தப்பட்டதில்லை' என்பதைச் சுட்டிக்காட்டுவார். நீ கருவி மட்டுமே, கருமம் நடப்பதற்கான சாக்கு மட்டுமே ஆவாய். இயற்கையும் கடவுளும் சேர்ந்து நடத்தும் லீலையைத் தொடரவிடு. நீ விழித்தபடி அந்த விளையாட்டுகளைப் பார். இது பிடித்துள்ளது – அது பிடிக்கவில்லை என்று பாரபட்சம் வேண்டாம். நடப்பது, நடக்கட்டும். நீ சலனப்படாமல் எல்லாவற்றையும் பார்த்தபடி இரு.

உண்மையான மகான் கருமம் புரியாதவன் என்னும் உயர்ந்த நிலைக்கு உன்னைத் தூக்கிவிடுவார். ஆனால் நீ மகான்கள் என்று நினைப்பவர்கள் 'நல்லதே செய்' என்று சராசரி அறிவுரைதான் கூறுவார்கள். அவர்களின் கண்ணோட்டத்தில் 'நல்லது' என்பது எது? சமூகம் ஏற்கெனவே நிச்சயித்து வைத்துள்ள சட்டங்களும், கட்டளைகளும், பயமுறுத்தல்களும்தானே. அவை அனைத்தும் அடிப்படையிலும் நல்லவை என்று எப்படிச் சொல்ல முடியும்.

**சீ**ன ஞானி லாவேத்ஸுவிடம் பயிற்சி பெற்ற சீடர் ஒருவரை சீன சக்கரவர்த்தி ஓர் ஊரில் நீதிபதியாக நியமித்தார், முதல் வழக்காக அவர் முன் ஒரு திருடன் கொண்டுவரப்பட்டான் . அவன் தன் வீட்டில் நுழைந்து திருடிவிட்டான் என்று ஒரு பணக்காரர் புகார்செய்தார். நீதிபதி திருடனுக்கு ஆறு மாதம் சிறை தண்டனை வழங்கினார். அதனுடன் நில்லாமல் பணக்காரருக்கும் ஆறு மாதம் சிறை தண்டனை விதித்துவிட்டார். இதென்ன அநியாயமான தீர்ப்பாக இருக்கிறதே என்று கொதித்துப்போன பணக்காரர் அரசரிடம் முறையீடு செய்தார்.

அரசரும் திகைத்துப்போனார். ஒரு ஞானியின் அறிவாளியான சீடர் என்பதாலேயே நீதிபதியாக நியமிக்கப்பட்டவர் இப்படி கேலிக் குரிய தீர்ப்பளித்திருக்கிறாரே என்று குழப்பமடைந்தார். அவர் நீதிபதியை வரவழைத்து, அவரது விசித்திரமான தீர்ப்புக்கு விளக்கம் கேட்டார்.

நீதிபதி கூறினார். ''இந்தப் பணக்காரர் அளவுக்கு மீறிச் சம்பாதித்து விட்டார். பிறகு அவரது வீட்டில் எப்படி திருட்டு நடக்காமல் இருக்கும்? திருடர்கள் தோன்றுவதற்கு இம்மாதிரிப் பணக்காரர்கள்தான் காரணம். இவர் மக்களைச் சுரண்டி ஏராளமாகச் செல்வம் குவித்துவிட்ட சூழ்நிலையில் திருடனை மட்டும் எப்படிப் பொறுப்பாக்குவது? மக்கள் உணவின்றி மடிகிறார்கள். போதுமான உடைகளின்றித் தவிக்கிறார்கள். ஆனால் சமூகத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இந்த மனிதர் சொத்து சேர்ப்பதிலேயே குறியாக இருந்திருக்கிறார். ஆகவே இவர் வீட்டில் திருடுவது பாவம் ஆகிவிடாது.

''ஒரு செயலை தண்டனைக்குரிய குற்றம் என்று கூறுவது சூழ்நிலையைப் பொறுத்தது. ஏழை வீட்டில் திருடுவது குற்றம் மட்டுமல்லாமல் பாவமும் ஆகும். பணக்காரர் வீட்டில் திருடுவதில் தவறென்ன இருக்கிறது? இந்தப் பணக்காரரே ஒருவகையில் திருடர்தான். அவரால் இவ்வளவு பணம் எப்படிச் சம்பாதிக்க முடிந்தது? இவர் அளவுக்கு மீறி பணம் சம்பாதிக்காமல் போயிருந்தால் அந்த மனிதன் திருடியிருக்கவும் மாட்டான். சுரண்டல் இன்றேல் திருடனும் இல்லை.''

மகான்கள் என்ன அறிவுறுத்துகிறார்கள்? 'திருடாதே ' என்று தானே? அதாவது அவர்கள் பணக்காரர்களுக்கு வக்காலத்து வாங்குகிறார்கள்.

மகான்களின் இந்தக் கட்டளை பணக்காரர்களுக்கு சாதகமாக உள்ளது. இதனால் அவர்களது செல்வம் பாதுகாப்பாக இருக்கிறது. ஆகவேதான் மகான்களைச் சூழ்ந்திருப்பவர்கள் வசதி படைத்தவர் களாகவே உள்ளனர். மகான்களின் நிறுவனங்களுக்கு நன்கொடை கிடைப்பதால் அவர்கள் பணக்காரர்களை ஆசீர்வதிக்கத் தவறுவதில்லை. 'உன் செல்வம் மேலும் பன்மடங்காகுக!' என்று வாழ்த்துகிறார்கள். சொற்பொழிவு செய்கையில், சென்ற பிறவியில் பாவம் செய்தவன் இப்பிறவியில் ஏழையாகவும், முன்பு புண்ணியம் செய்தவன் இப்போது பணக்காரனாகவும் பிறக்கிறான் என்று நியாயப்படுத்துகிறார்கள். அவர்கள் 'புண்ணியம்' என்னும்போது சமூகசேவை என்று அர்த்தமில்லை. மதச்சடங்குகளைச் செய்வதைத்தான் அப்படிக் குறிப்பிடுகிறார்கள்.

இதற்கு வேடிக்கையான விளக்கமும் கிடைக்கிறது. புண்ணியம் செய்ததால் பணக்காரன் ஆனவன் இப்போது செய்வது சுரண்டல் என்னும் பாவமென்று ஏன் நினைப்பதில்லை. இது அடுத்த பிறவியைப் பாதிக்காதா?

இன்னொரு விஷயம். முற்பிறவிகளைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. முற்பிறவி என்பது வெறும் கட்டுக்கதை. முற்பிறவிக் கோட்பாடு என்ற பெயரில் சமூகத்தில் பித்தலாட்டம் நடைபெறுகிறது. மதம் என்பது ஏழைகளுக்குக் கஞ்சா போன்றது என்று மார்க்ஸ் கூறியது சரியென்றே படுகிறது.* போதை காரணமாக ஏழைகள் தங்கள் வறுமையை முற்பிறவியில் பலன் என நினைத்து, புரட்சிசெய்யாமல் அடங்கியிருக்கிறார்கள்.

இன்னொரு பிரச்சினை -தற்சமயம் நேர்மையைக் கைவிட்டு, பிறரை ஏமாற்றியோ, வஞ்சித்தோ பணக்காரர் ஆனவர்கள் சிரமப்படாமல் வாழ்கிறார்கள். நேர்மையாக வாழ்பவர்கள் போதுமான உணவுகூட இல்லாமல் அல்லல்படுகிறார்கள். ஆனால் மகான் போலியான ஆறுதல் கூறுகிறார்: ''பொறுமை காத்திடு. கடவுள் நடப்பது எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார். ஆகவே அடுத்த பிறவியில் அந்த மோசடிப் பேர்வழிகள் நோயால் கஷ்டப்பட்டு உடல் அழுகிச் சாகுமாறு தண்டனை கொடுப்பார்.'' நெருப்பில் தவறுதலாக விரல் பட்டாலும் கடவுள் உடனே தண்டித்துவிடுகிறார். ஆனால் தெரிந்தே நீண்ட காலம் மக்களை ஒருவன் சுரண்டினாலும் அடுத்த பிறவியில்தான் தண்டிப்பாராம். இதேபோல், நேர்மையாக இப்பிறவியில் வாழ்ந்து துன்புறுபவனுக்கும் அடுத்த பிறவியில்தான் பரிசாம். மதத்தலைவர்கள் இவ்வாறு முன்வைக்கும் வாதமேகூட ஒரு மோசடியாக அல்லவா தெரிகிறது! இதுவே ஒருவகையான சுரண்டல்வாதம் தானே?

பெரும்பான்மையான மதத் தலைவர்களின் வேர், சுரண்டல்வாதத்தில்தான் ஊன்றியுள்ளது. சமூகத்தில் மலிந்திருக்கும் சுரண்டலைக் கண்டும் காணாதவர்கள் போல் உள்ளனர். அவர்கள் சொல்லும் நீதிமொழியெல்லாம், கொந்தளிப்பு எழாமல் சமூகம் அப்படியே நீடிப்பதற்கான உபாயங்கள்தாம். அதேபோல் அவர்கள்

---

* Religion is the opium of the people. (Karl Marx)

எதெல்லாம் செய்யக்கூடாது என்று தடுக்கிறார்களோ, அவை சமூகத்தில் சலசலப்பு ஏற்படுவதைத் தடுப்பதற்குத்தான். இதனால்தான் சேட்டுகளுக்கும் சந்நியாசிகளுக்குமிடையே நல்ல உறவு உள்ளது.

இந்தியாவில் மற்ற நாடுகளில் ஏற்பட்டதுபோல் புரட்சி மூள வாய்ப்பில்லை. புரட்சி நடைபெறாமலிருப்பதற்கான தந்திரங்களை மதத்தலைவர்கள் இங்கே நிலைநாட்டிவிட்டனர். புரட்சிக்கு எதிரான வாதங்களெல்லாம் திரட்டப்பட்டு நல்லுபதேசங்களாக மக்களுக்கு போதிக்கப்பட்டுள்ளன.

மகாத்மாக்களின் சில அறிவுரைகள் நமது உடலின் இயற்கைக்கும் மனத்தின் சுபாவத்திற்கும் ஏற்புடையதாக இல்லை. ஆனால் ஏதாவது அறிவுரையைப் பின்பற்ற முடியாமல் போனால் குற்ற உணர்வுக்கு ஆளாகிறோம். பசியெடுப்பது உடலின் இயற்கை. ஆனால் மடாதிபதி பட்டினியை (உபவாசத்தைப்) புண்ணியம் என்றும், சாப்பாட்டு ஆசையை அடக்க வேண்டும் என்றும் உபதேசிக்கிறார். ஆனால் சாப்பிடுவது பாவமுமில்லை, விரதத்தால் புண்ணியமும் இல்லை. விரதம் இருந்தாலும் வயிற்றில் பசி எழுவதைத் தடுக்க முடியாது. 'ஐயோ, நான் பெரிய பாவியாகிவிட்டேனே' என்று, உனக்குக் குற்ற உணர்வு மேலிடும். விரதமிருந்தும் பயனில்லாமல் போய்விடும்.

மதத்தலைவர்கள் விடுக்கும் இன்னோர் எச்சரிக்கை-காமஉணர்வு பாவமாகும். ஆனால் அவர்களும் நீயும் பிறந்ததே காமத்தின் விளைவு தானே. வாழ்க்கை முழுவதும் நாம் காமத்தின் தாக்கத்திலிருந்து தப்ப முடியாது.

என்னைச் சந்திக்க வரும் இளைஞர்கள் தங்கள் மனத்தில் மிகவும் கெட்ட எண்ணங்கள் தோன்றுவதாகக் கவலையுடன் தெரிவிக்கிறார்கள். நான் என்ன வகையான கெட்ட எண்ணங்கள் என்று கேட்டால், 'எப்பொழுதும் பெண்களைப் பற்றிய சிந்தனையே தூக்கலாக இருக்கிறது' என்கிறார்கள். இதில் தப்பு என்ன? உன் அப்பாவிற்குப் பெண் சிந்தனை ஏற்படாதிருந்தால் நீ பிறந்திருக்க மாட்டாயே.

ஆண் -பெண் கவர்ச்சி இயற்கையானது. காமத்தைக் கடப்பது நிச்சயமாக மகிமை வாய்ந்தது. ஆனால் காமம் தப்பில்லை.

பாவமில்லை. அது இயற்கையான உணர்வு. இயற்கையின் இழுப்பைத் தவிர்ப்பது பெரிய விஷயம். ஆகவே பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்க முடிந்தவன் பாராட்டிற்குரியவன். ஆனால் பிரம்மசரியத்தைப் பின்பற்றாதவன் இகழ்ச்சிக்குரியவன் அல்லன்.

காமம் இயற்கையானது. ஆரோக்கியமானது. அது ஒரு சாதாரண விஷயம். அது நிந்தனைக்கு உரியதன்று. வாழ்க்கையில் இயற்கையாக நடைபெறும் செயல்களில் அதுவும் ஒன்று. ஆனால் ஒருவர் காமத்தின் வசப்படாமல் அதைக் கடந்துவிட்டால், அது ஒரு பெரிய சாதனை. பிரபஞ்ச அமைப்பில் ஏதோ ஓர் உயர்வான சக்தி அவரது வாழ்க்கையை இயக்கிவருகிறது என்று அர்த்தமாகும். இது சுபமானது, வரவேற்கத்தக்கது. ஆனால் ஓர் ஏணியில் நம்மை மேலே இட்டுச்செல்லும் படிகளைப் பாராட்டுகின்ற சமயம் கீழே உள்ள படிகளை இகழக்கூடாது. கீழ்ப்படிகள் இல்லாமல் மேற்படிகள் இருக்க முடியாது.

நீ காம உணர்வை இயற்கையானதாக ஏற்றுக்கொண்டால் நீ ஒரு கட்டத்தில் அதன் பாதிப்பிலிருந்து கடந்து செல்ல இயலும். காமத்தையும் சாட்சியாகப் பார் அழுது புலம்பாதே. கூக்குரலிடாதே. அதை ஏசாதே. கடவுள் காமத்தைப் படைத்தார் எனில் அதற்கு ஒரு பிரயோஜனம் இருக்கும். உபயோகமில்லாத எதுவும் அவர் படைப்பில் கிடையாது. அவர் விதிவிலக்கின்றி எல்லா மனிதர்களின் உள்ளத்திலும் மற்ற உணர்ச்சிகளுடன் சேர்த்து காமத்தையும்ம நிரப்பியிருக்கிறார்.

ஆணுமில்லாத பெண்ணுமில்லாத (திருநங்கை, அரவாணி) யாராவது ஞானியாக, புத்தராக ஆகியிருப்பதாகக் கேள்விப் பட்டுள்ளாயா? இல்லை. ஏனெனில் முதலில் காம சக்தியாக எழுவதுதான பக்குவப்பட்டு, நெறிப்படுத்தப்பட்டு புத்த சக்தியாக மாறுகிறது. காம சக்திதான் காலப்போக்கில் முற்றிலும் நீங்கி ராம சக்தியாக பரிணமிக்கிறது.

தங்கம் சுரங்கத்தில் மண்ணுடன் கலந்திருக்கிறது. அதை எடுத்து சுத்தம் செய்ய வேண்டும் என்பதும் உண்மையே. ஆனால் மண்ணுடன் கலந்திருக்கும் நிலையில் அதை யாரும் நிந்திப்பதில்லை. ஏனெனில் இதுதான் ஆரம்பக்கட்டம். சுரங்கத்திலிருந்துதான் அதை வெட்டியெடுக்கிறோம். இந்த நிலையில் குப்பை கூளம் கலந்து மிக

அசுத்தமான நிலையில்தான் தங்கம் வெளியே வரும். பிறகு நெருப்பில் புடம் போடும் சமயம் எல்லா குப்பையும் அசுத்தமும் நீங்கிவிடும்.

வாழ்க்கையெனும் பெருநெருப்பின் ஊடாக ஒருவன் சாட்சி மனோபாவத்துடன் முன்னேறினால், அவனிடமும் அவனைச் சுற்றிலுமுள்ள தவறானவை எல்லாம் தாமாகவே கரைந்து மறைந்துவிடும். அவற்றுடன் அவன் போராட வேண்டியிராது.

ஆனால் நம்முடைய சாது-மகாத்மாக்கள் நம்மை மிகவும் பயமுறுத்தியிருக்கிறார்கள். எல்லாவற்றிலும் குறை காணுகிறார்கள்; பாவம் கலந்திருப்பதாகக் கூறுகிறார்கள். ஆகவே நீ உன்னையே மிகவும் கேவலமாகத் திட்டிக்கொள்கிறாய்; கடையேன், நாயேன் என்றெல்லாம் தாழ்த்திக்கொள்கிறாய். 'என்னைப் போல் பாவி உண்டா?' என்ற சோகத்தால் நிரம்பியுள்ளாய். இந்த சோக இருட்டில் தன்னம்பிக்கையென்னும் சூரியன் பிரகாசிப்பதில்லை.

வாழ்க்கையை ஏற்றுக்கொள். வாழ்க்கை, கடவுள் கொடுத்தது. அவர் கொடுத்த விதமாகவே சுவீகரி. இந்த சமரசம் காரணமாக, நீ பார்த்துக்கொண்டிருக்கும்போதே உன் மனம் பக்குவப்படத் தொடங்கிவிடும். நீ உன்னை நம்பு. சாது-மகாத்மாக்கள் கூறும் முறையில் நீ உன்னை பரீட்சித்தால், வாழ்க்கை முழுதும் உன்னைக் குற்றவாளிபோல் உணர்வாய். நீ மனைவியை நேசித்து வரும்போது அந்தக் காம உணர்வு உன்னை நரகத்தில் தள்ளிவிடுமோ என்றும் பயப்படுவாய். அவளைத் தழுவும்போதே தப்புசெய்வதாகத் தடுமாறுவாய். நீ அவளை முழுமனத்துடன் தழுவ முடியாதபடி சாது-மகாத்மாக்கள் குறுக்கே நிற்கிறார்களே! மனைவியை எந்தக் குற்ற உணர்வும் இல்லாமல் முழுமையாக நேசிக்க வேண்டும் அல்லது பெண்கள் மீதான நாட்டத்தை முழுமையாகக் கை விடவேண்டும். இரண்டும் கெட்டான் நிலையில் வாழ்க்கையில் திருப்தி கிடைக்காது.

ஞானத்தால் நமக்கு முக்தி வாய்க்கிறது. எதை அறிந்துகொண்டு விடுகிறோமோ அதன் பாதிப்பிலிருந்து நாம் விடுதலை பெறுகிறோம். அறிவதற்கு அடிப்படையாக அனுபவம் தேவைப்படுகிறது. அனுபவத்தில் எத்துணை ஆழமாகச் செல்ல முடியுமோ அந்த

அளவிற்கு இறங்கு. அனுபவத்தை முழுமையாகப் பெறு. இவ்வாறு மேற்கொண்டு அறிவதற்கு எதுவும் இல்லாத நிலை ஏற்பட்டதும் நீ முக்தி பெற்றுவிடுவாய்.

சாது-மகாத்மாக்களின் பயமுறுத்தல் காரணமாக நீ காமத்தை வெல்ல முடியாத நிலையில் உள்ளாய். மேலும் பல விஷயங்களின் பாதிப்பிலிருந்தும் உன்னால் விடுதலை பெறமுடியவில்லை. ஏனெனில் அவர்கள் எந்த விஷயம் பற்றியும் உண்மையான நிலவரத்தை நீ அறிய விடுவதில்லை. அவர்கள் உன்னைச் சிக்கல்களிலேயே நீடிக்கச் செய்கிறார்கள். உன்னை வழி தவறச்செய்கிறார்கள்.

'நல்லதைச் செய்' என்று சொல்கின்ற புனிதர்களைவிட, நம்மை சாட்சியாக இருக்கச் செய்கிறவர்களையே நாம் வணங்க வேண்டும் என்பது என் கருத்து. ஏன்? 'நல்லதைச் செய்' எனறு சொல்கையில், கெட்டது என ஒன்று உண்டென்றும் அதைச் செய்யக்கூடாது என்பது போன்றும் எண்ணம் மறைந்து நிற்கிறது. நல்லதில், ஒரு நிந்தனை ஒளிந்து நிற்கிறது.

அஷ்டாவக்ரர் உண்மையான புனிதர். ஜனக மகாராஜாவும் அப்படியே. அவர்கள் எது நல்லது-எது கெட்டது என்றெல்லம் வகைப்படுத்திக் கூறவில்லை. அவர்கள் சொல்வது என்னவென்றால்-எதுவாய் இருந்தாலும், அது எப்படி இருந்தாலும், விழிப்புடன் அதை நோக்கு. அதை மேலோட்டமாக அணுகாதே.

**நான் சொல்வதைத் தவறாய் நினைக்காதே**
**இளமை இனியது உண்மைதான்**
**அது வாழ்க்கையில் பரவும் தங்கநிழல்**
**அது ஒரு கனவு, மாயம், மயக்கநிலை**
**நீரில் பரவி மறையும் வளையம்**
**உலகம் காணும் வேடிக்கை**
**அது குறுகுறுப்பு, அது ஒரு நோய்**
**மனத்தைக் குழப்பும், உடலையும் அரிக்கும்**
**நில்லா உடலில் நில்லா இளமை.**

இளமை இனிமையானது; தங்கம் போன்றது; ஆனாலும் அது நிழல்தான். இவ்வாறு சொல்வதில் இகழ்ச்சி எதுவும் கிடையாது. மேலும், இளமை என்பது நீர்ப்பரப்பில் தோன்றி மறையும் வளை

யங்கள் போன்றது. கோடு இழுத்ததும் காணாமல் போய்விடுகிறது. மூடிய கண்களில் தோன்றி மறையும் கனவு போன்றது இளமை.

இளமை மட்டும்தானா கனவு? நமது முழு வாழ்க்கையும் கனவுதானே. அந்தப் பெரிய கனவில் மரத்தின் கிளைகள்போல் சிறு-சிறு கனவுகள். பதவிக்கனவு, பணக்கனவு, காம இன்பக் கனவு எனப் பற்பல கனவுகள். இவ்வாறு கனவுகள் தோன்றுவதும் கடவுளின் லீலை. இவற்றின் பின்னணியில் நாம் கற்கவேண்டிய பாடம் ஏதாவது இருக்கும்; ஏதாவது முக்கியமான செய்தி இருக்கும்.

நான் கனவுகள் தோன்றுவதை, கனவுகளாக வாழ்க்கை நடைபெறுவதைச் சரியென்றும் சொல்லவில்லை. தவறென்றும் சொல்லவில்லை. நீ இவையெல்லாம் கனவு என்பதை ஞாபகம் வைத்தால் போதும். நீ ஞான விழிப்புப் பெற்றால் இந்தக் கனவெல்லாம் கலையும்.

ஒரு கனவு. அதில் நீ திருடனாக வருகிறாய். ஒரு மகான் அப்போது வந்து 'திருடுவது பாவம், சந்நியாசி ஆகிவிடு' என்கிறார். ஆனால் கனவில் நீ திருடனாக இருந்தாலென்ன, துறவியாக இருந்தாலென்ன? என்ன வித்தியாசம்? தூங்கி எழுந்தபின் எதுவும் மிஞ்சியிருக்கப்போவதில்லை. நீ தண்ணீரில் பஜனைப் பாட்டு எழுதினாலும் சரி, வசவுகள் எழுதினாலும் சரி, இரண்டும் நீடிக்கப் போவதில்லை. எழுதும்போதே அவை அழிந்தும் போகின்றன. தண்ணீரில் ராமநாமம் எழுதினாலும் நிலைக்காது. சுபம்-அசுபம் எது எழுதினாலும் நீர்மேல் எழுத்து நிற்காது.

உலகில் நல்லவை-கெட்டவை எல்லாம் சமம். இதுதான் உச்சபட்ச அறிவிப்பு. இந்த அறிவிப்பைச் செய்பவர் உண்மையான மகானாக இருப்பார்.

ஒரு மகான் ''நல்ல செயல்களே செய்; பிளாக் மார்க்கட் வியாபாரம் செய்யாதே; திருடாதே; வரி ஏய்ப்புச் செய்யாதே; குறித்த காலத்தில் வரி கட்டிவிடு'' என்றெல்லாம் உபதேசித்தால், அவர் அரசியலுடன் சம்பந்தமுள்ளவராக இருப்பார். அவர் அரசாங்கத்தின் ஏஜன்ட்! குடிமக்கள் எப்படி இருக்க வேண்டும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறதோ அவ்வாறே ஒழுகும்படித்தானே மதத்தலைவர்களும்

கேட்டுக்கொள்கிறார்கள். நான் உன்னை பிளாக்மார்க்கட்டில் ஈடுபடச் சொல்லவில்லை. வரிகட்டாதே என்றும் தடுக்கவில்லை. நான் சொல்வது, இந்த விஷயங்களெல்லாம் துறவறத்துடன் சம்பந்தப்பட வில்லை. இவை அரசியல் சார்ந்தவை.

அதனால்தான் ஒவ்வொரு அரசியல்வாதியும் மடத்தலைவர், யோகி, ஸத்குரு என்றறியப்படுபவருடன் தொடர்பு வைத்திருக்கிறார். தன்னை ஆதரிக்கும் துறவியை அவ்வப்பொழுது சந்திக்கச் செல்கிறார். அந்த அரசியல்வாதியின் செல்வாக்கு நீடிப்பதற்காக துறவியும் 'நாட்டு மக்கள் கட்டுப்பாட்டுடன் வாழவேண்டும்' என்று அறிக்கைவிட்டு, அரசியல் மாற்றம் வரமுடியாதபடி தடுக்கிறார். அதிகாரத்தில் உள்ளவர்கள் ஆன்மிகவாதிகளிடம் செல்வதற்குக் காரணம் தாங்கள் அரசியலில் நீடிப்பதற்காகத்தான்.

ஆட்சி அதிகாரத்தில் இல்லாத அரசியல்வாதியும் ஆட்சியைப் பிடிப்பதற்காக வேறுவகையான துறவிகளிடம் செல்கிறான். அனால் புரட்சியை ஆதரிக்கும் சந்நியாசிகள் குறைவு. ஏனெனில் புரட்சி சந்நியாசிகளையும் பாதிக்கும். புரட்சியின் மூலம் ஆட்சியைப் பிடிப்பவனும் பிறகு தனது அதிகாரம் நீடிக்க, கட்டுப்பாடுகளை வலியுறுத்துகின்ற சாமியார்களின் ஆதரவையே வேண்டுவான். இன்னொரு புரட்சி தோன்றித் தன்னைக் கவிழ்ப்பதை அவன் விரும்புவதில்லை.

சில மகான்கள் அணு விரதம் என்ற பெயரில் அன்றாட வாழ்வில் கடைப்பிடிக்குமாறு சில சிறிய விஷயங்களைக் கூறுகின்றனர். எப்படி உண்ண-உடுக்க-உறங்க-வாழ வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள். இவர்களாலும் பயனில்லை. இவை சமூக இயல் சார்ந்த கட்டளைகளே தவிர, ஆன்மிகத்துக்கு இட்டுச்செல்பவை அல்ல. உண்மையான மகான் நீ என்ன செய்யவேண்டுமென்றுகூட கட்டளையிடமாட்டார். அவர் அதிகபட்சமாகச் சொல்வது 'நீயார் என்று உன்னை அறிந்துகொள். அவ்வாறு அறிந்துவிட்டால் எது நடக்கிறதோ அது சரியானதே என்று புரிந்துகொள்வாய்.'

என்னிடம் வருவோரில் சிலர் தாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று அறிவுறுத்துமாறு என்னைக் கேட்டுக்கொள்வதுண்டு. நான் அவர்களுக்குச் சொல்வது - நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது

எனக்கு சம்பந்தமில்லாதது. ஞான விழிப்பு எப்படிப் பெறுவது என்பதை மட்டுமே நான் உங்களுக்குச் சொல்ல முடியும். 'நீ யார்?' என்பதை எப்படித் தெரிந்து-கொள்வது என்பதையும் நான் சொல்லித்தர முடியும். இதன் மூலம் உனக்கு உன் உள்மனத்துடன் சந்திப்பு நிகழும். இந்த ஆத்ம உணர்வின் ருசி உனக்குக் கிடைத்தபின் நீ எதைச் செய்கிறாயோ அது சரியானதாகவே இருக்கும். உன்மூலம் தப்பான காரியம் எதுவும் நிகழாது. ஏனெனில் தப்பு ஏதும் செய்வதற்கு நீ மாயையால் ஏற்படும் மயக்கநிலையில் இருக்க வேண்டும்.

இதுவரை உனக்குச் சொல்லப்பட்டது. என்ன? 'நீ நல்லவையே செய், மகான் ஆகிவிடுவாய்' என்பதுதானே. நான் சொல்வது - 'நீ முதலில் மகான் ஆகு. பிறகு நீ செய்வதெல்லாம் நல்லதாகவே இருக்கும்.' இதேபோல், நீ நல்ல நடத்தையை மேற்கொண்டால் சாது ஆகிவிடுவாய் என்று கூறக்கேட்டிருக்கிறாய். நான் சொல்வது என்னவெனில், 'நீ முதலில் சாது ஆகிவிடு பிறகு உனது நடத்தை தானாகவே நல்லதாக அமையும்.' நன்னடத்தை வெளியுலகத்துடன் சம்பந்தமுடையது. சாதுத் தன்மை உள்ளுலகத்துடன் சம்பந்தப்பட்டது. உள்ளேயிருப்பதை முதலில் கவனிக்க வேண்டும். உள்ளே மாற்றம் விளைந்தால் வெளிநடத்தையும் மாறுகிறது. நீ ஆத்ம சுதந்திரம் பெற்றவனாகிவிடுவாய். பிறகு உன்னால் யாருக்கும் தீங்கு நேராது. நீ உன் சொந்த அலைவரிசையில் இயங்குவாய். உனக்கென ஒரு ராகம், உன்னுடையதென்று ஒரு பாடல், உன்னுடையதான தனி இசைஒலி (ட்யூன்) அமையும். உன் தனித்தன்மை பிறருக்குத் தொந்தரவாக இராது.

அறிவு ஜீவிகளின் வர்க்கம் மனித வாழ்வில் பாவச் சிந்தனையால் உண்டாகும் பிரச்சினைகளை எப்படிச் சமாளிக்க வேண்டும் என்றும் கேள்வியில் சேர்த்துக் கேட்கப்பட்டது.

நீ அறிவுஜீவி அல்லது அறிஞன் என்று யாரைச் சொல்கிறாய்? பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றவரையா? பத்திரிகைகளில் கட்டுரை எழுதுபவர்களையா? தர்க்கத்தை அடிப்படையாக வைத்துச் சொற்பொழிவு செய்பவர்களையா? ஆசிரியர்கள்-பேராசிரியர்களையா?

அறிஞன் வேறு, அறிந்தவன் (ஞானி) வேறு. அறிந்தவன் விழிப்புப் பெற்று புத்தரைப்போலிருப்பான், அவனது உள்ளத்தில் ஞான தீபம் சுடர்வீசும். அதுவே ஆத்ம ஒளி என்பது.

ஞானம் பெறுவதுதான் நமது முழு முயற்சியாக இருக்க வேண்டும். ஏட்டுப் படிப்பால் ஒருவன் ஞானியாகிவிடுவதில்லை. முடிவுகளெடுக்கையில் புத்திக்கே முதலிடம் தருபவனும் ஞானியாவதில்லை. வாத விவாதத் திறமையும் ஒருவனை ஞானியாக்காது. சாட்சி மனப்பான்மையை வளர்த்துக்கொள்பவன்தான் அறிஞனாகிறான். இந்த மனப்பான்மை உதித்தபின் பிரச்சினைகள் தாமாகவே தீர்ந்துவிடுவது தெரியவரும். அந்த மனப்பான்மை உடையவன் மற்றவர்களிடமும் சாட்சி மனப்பான்மை பிறக்கச் செய்ய வேண்டும். இதனால் அவர்கள் சந்திக்கும் பிரச்சினைகளும் அவர்களுக்குப் பாதிப்பு விளைவிக்காது. வர்த்தமான மகாவீரரும் கௌதம புத்தரும் இதைத்தான் பல்லாண்டுகளாகச் செய்து மக்களின் மனத்தைப் பக்குவப்படுத்துவதில் ஈடுபட்டனர். அவர்கள் மக்களுக்கு என்ன கற்றுக்கொடுத்தார்கள்? 'நாங்கள் விழித்துக்கொண்டோம். நீங்களும் விழித்தெழுங்கள். இந்த விழிப்பில்தான் எல்லா பிரச்சினைகளுக்கான சமாதானமும் அடங்கியிருக்கிறது.' என்றார்கள்.

அதே பணியைத்தான் நானும் செய்துவருகிறேன். நீ எப்படிப்பட்ட நடத்தையை அமைத்துக்கொள்ள வேண்டும் என்று சிறிதுகூட உன்னிடம் நான் சொல்வதில்லை. துறவி மற்றவர்களின் நடத்தையைச் சீராக்க வேண்டும் என எதிர்பார்ப்பது அர்த்தமில்லாத விஷயம். ஞான விழிப்புப் பெற்றால் சீரான நடத்தை தானாகவே அமையும். அவ்வாறின்றி நீ ஒரு பிரச்சினையைத் தீர்க்க முயன்றால் இன்னொரு பிரச்சினை அங்கே தோன்றிவிடும். நீ ஞான விழிப்புப் பெற்றாலே பிரச்சினைகள் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். பிறகு நீ மற்றவர்களையும் விழிக்கச் செய்தால் மேலும் பல பிரச்சினைகள் நீங்கிவிடும்.

**பு**த்தரிடம் ஒருவன் வந்தான். ''சுவாமி! நான் மக்களுக்கு சேவைசெய்ய ஆசைப்படுகிறேன். அதற்கான வழிமுறையைச் சொல்லித்தாருங்கள்'' என வேண்டினான். இதைக் கேட்டதும் புத்தர் கண்ணீர்விட்டார்! இவ்வாறு அவருடைய கண்களில் நீர் ததும்பியதே கிடையாது. வந்தவன் பயந்து பதறிப்போனான். ''சுவாமி! இதென்ன? ஏன் கண்ணீர் வடிக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

புத்தர் அவனைப் பார்த்து, ''உன்மீது எனக்கு இரக்கம் ஏற்படுகிறது. நீமுதலில் உனக்கே சேவை செய்துகொள்ளவில்லை. நீ எப்படி மற்றவர்களுக்கு சேவை செய்ய முடியும்?'' என்று கேட்டார்.

இது உண்மைதான். நாம் அவ்வப்பொழுது பார்க்கின்றபடி, தங்களுடைய பிரச்சினைகளின் பாதிப்பிலிருந்து தப்பிக்கத்தான் பலர் சமூகசேவையில் இறங்குகிறார்கள். அப்படியும் அவர்கள் மன அமைதி பெறுவதில்லை. அத்தகைய பலரை எனக்குத் தெரியும். மற்றவர்களுக்கு மன அமைதி பெற்றுத் தரும் முயற்சியில் ஈடுபடும் இந்த சமூகத் தொண்டர்கள். நிலைமையை மேலும் மோசமாக்கிவிடுவது உண்டு. தங்களைக் கேட்காமல் வற்புறுத்திச் செய்யப்படும் சேவையை மக்கள் விரும்புவதில்லை. இதனால் அந்த சேவையின் பயனும் நீடிப்பதில்லை.

**சா**ரணர் இயக்கப் பயிற்சி ஆசிரியர் பள்ளியில் மாணவர்களுக்குப் பயிற்சி தரும்போது, ''நீங்கள் ஒவ்வொரு மாணவரும் தினமும் குறைந்தபட்சம் ஒரு நற்செயலாவது புரியவேண்டும். நீங்கள் இன்று செய்யக்கூடிய நற்செயலை நாளைய வகுப்பில் சொல்லுங்கள்.'' என்று அறிவித்தார்.

மறுநாள் ஆசிரியர், ''நேற்று நல்ல காரியம் செய்தவர்கள் தங்கள் சேவை பற்றி கூறுங்கள், '' என அழைத்தார். மூன்று மாணவர்கள்தான் எழுந்து நின்றார்கள். அவர்கள் செய்த தொண்டை மற்றவர்களுக்குக் கூறுமாறு கட்டளையிட்டார்.

முதல் மாணவன்-நான் நேற்று ஒரு கிழவி சாலையைக் கடக்க உதவினேன்.

இரண்டாம் மாணவன்-நானும் ஒரு கிழவி சாலையைக் கடக்க உதவினேன்.

மூன்றாம் மாணவன்-நானும்கூட ஒரு கிழவி சாலையைக் கடக்க உதவினேன்.

ஆசிரியருக்குத் தூக்கிவாரிப்போட்டது. ''நீங்கள் மூன்று பேரும் மூன்று கிழவிகள் சாலையைக் கடப்பதற்கே உதவியது விசித்திரமாக உள்ளதே'' என்று தெரிவித்தார். ''நீங்கள் உதவியது ஒரே இடத்திலா; ஒரே நேரத்திலா?'' என்று விசாரித்தார்.

''சார், கிழவிகள் மூன்றுபேர் இல்லை. நேற்று பள்ளியிலிருந்து வீட்டிற்குத் திரும்பும்போது ஒரு கிழவி சாலையில் நின்றபடி இருபுறமும் கவனிப்பதைப் பார்த்தோம். எங்களில் ஒருவன் கிழவியின் கையைப் பிடித்து சாலையின் எதிர்ப்புறம் கொண்டுபோய்விட்டான். அதை அவள் விரும்பவில்லைபோல் தோன்றியதால்,இரண்டாமவன் சென்று அவளை சாலையைக் கடக்கவைத்து பழைய இடத்திற்கே அழைத்துவந்து விட்டான். மூன்றாமவன் சேவை செய்யும் வாய்ப்பை இழக்க விரும்பாததால் கிழவியை இழுத்துச் சென்று சாலையின் எதிர்ப்புறத்தில் விட்டுவிட்டான்.'' என்று ஒரு மாணவன் விளக்கினான். இதேபோல் சமூகசேவகர்கள் நீ விரும்பாவிடிலும் தங்கள் சேவையை உன் தலையில் சுமத்தியே தீருவர்.

**ஒ**ரு நண்பர்-சமூக சேவகர்-என்னைச் சந்திக்க வந்தார். காட்டுப்புறங்களில் வசிக்கும் ஆதிவாசிகளிடையே கல்வியைப் பரப்பும் சேவை செய்துவருபவர். அவர்களுக்காகப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தியிருக்கிறார். அவருக்கு ராஷ்டிரபதி, பிரதமரிலிருந்து தொடங்கி ஏராளமான பிரமுகர்கள் அவரது சேவைகளைப் பாராட்டி வழங்கிய சர்டிபிகேட்டுகளின் பெரிய கோப்பு தயாரித்து வைத்துள்ளார். என்னிடமிருந்தும் அவரது சேவையைப் பாராட்டி நற்சான்றிதழ் பெறுவதற்காகவே என்னைச் சந்திக்க வந்திருந்தார்.

நான் நற்சான்றிதழ் தர மறுத்து அவரிடம் இரண்டு கேள்விகள் கேட்டேன்.

1) ஆதிவாசிகள் எழுதப் படிக்க, கல்வி கற்க விரும்புகிறார்களா என்று விசாரித்து, அவர்கள் சம்மதம் தெரிவித்த பிறகே நீங்கள் கல்வி சேவை மேற்கொண்டீர்களா?

2. ஏற்கெனவே படித்தவர்களிடம் கல்வியினால் அவர்கள் பெற்ற பயனென்ன என்று விசாரித்தது உண்டா? அவர்களது வாழ்க்கை மலர்ச்சோலையாகிவிட்டதா?

நண்பர் முணுமுணுத்தார், 'நான் இந்த அடிப்படையில் யோசிக்கவில்லை.'

''எத்தனை காலமாக சேவை செய்கிறீர்கள்?''

''இப்போது எனக்கு எழுபது வயது. நாற்பது ஆண்டுகளாக கல்வி சேவை புரிகிறேன்.''

''அதாவது முன் பின் யோசியாமல், பலனை ஆராயாமல் சேவை செய்துவருகிறீர்கள். அமெரிக்காவிலோ எல்லா வகையான கல்வியையும் சிறிது காலத்திற்கு நிறுத்திவைக்குமாறு கல்வித்துறை நிபுணர்களே கூற ஆரம்பித்துவிட்டனர்.''

'ஒரு நூறு வருஷத்திற்குப் பள்ளிக்கூடங்களையும் பல்கலைக் கழகங்களையும் இழுத்து மூடிவிட்டால் சமூகத்தில் காணப்படும் தொண்ணூறு சதவிகிதத் தொல்லைகள் மறைந்துபோகும்' என்கிறார் டி.எச். லாரன்ஸ்.[1]

இவான் இலிச் ஒரு புதிய இயக்கம். **De-schooling society** என்ற பெயரில் தொடங்கினார். 'பள்ளிக்கூடங்களை மூடுங்கள். பள்ளிக்கூடங்களின் பாதிப்பிலிருந்து சமூகத்தை விடுவியுங்கள்' என்று அவர் முழங்கினார்.

நான் நண்பரிடம் பேச்சைத் தொடர்ந்தேன். ''நீங்கள் இத்தனை ஆண்டுகளாக சேவை செய்தபோதிலும் கல்வி மூலம் நீங்கள் ஆதிவாசிகளுக்கு என்ன கொடுக்கப்போகிறோம் என்பதை யோசியாமல் இருந்துவிட்டீர்களே. ஆதிவாசிகள் உங்களைவிட மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். தங்கள் சந்தோஷங்களில் திளைத்துள்ளார்கள். இயற்கையின் சௌந்தரியத்துக்கு மிக அருகில் வசிக்கிறார்கள். உங்களைப்போல் போலியான செயற்கை வாழ்க்கை வாழவில்லை. அவர்கள் சாப்பிடுவது சாதாரணமான, சரியாகச் சமைக்காத இயற்கை உணவு. மாலையானதும் ஆடிப் பாடி கொண்டாடுகிறார்கள். இரவில் ஆழ்ந்து தூங்கிவிடுகிறார்கள்.''

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்[2] இது பற்றிக் கூறுகையில், 'நான் முதல் முறையாக ஒரு காட்டில் ஆதிவாசிகளின் நடனம் பார்த்தேன்.

1. **D.H. Lawrence (1885-1930)** ஆங்கில நாவலாசிரியர், சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள் எழுதியவர். இவருடைய பல படைப்புகள் நீண்ட காலம் தடைசெய்யப்பட்டிருந்தன. (உ-ம்) **Lady Chatterley's Lover.**
2. **Bertrand Russell (1872-1970)** ஆங்கில அரசியல் தலைவர், கணித அறிஞர், தத்துவமேதை. உலக சமாதானம், அணு ஆயுத எதிர்ப்பிற்காகப் பாடுபட்டவர். இலக்கியத்திற்காக நோபல் பரிசு வாங்கியவர்.

அவர்களைப்போல் என்னால் சுதந்திரமாக நடனமாட முடிய வில்லையே என்று என் மனத்தில் பொறாமை சூழ்ந்தது. இவர்களைப் போலவே நானும் காலில் சலங்கை கட்டி ஆட முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்,' என்று ஏங்குகிறார்.

தன்னைச் சரியாக ஆக்கிக்கொண்டபின் பிறருக்கு சேவை செய்யப் புறப்படலாம் முதலில் உன் வீட்டில் விளக்கு எரியட்டும். பிறகு கோயிலில் விளக்கேற்றப் போகலாம். மறந்தும்கூட மற்றவர்களுக்கு உபதேசம் செய்யாதே. மற்றவர்களுக்கு மருந்து கொடுக்கக் கிளம்பாதே. உன் மருந்து நோயை தீவிரமாக்கிவிடக்கூடும்.

இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட சிந்தனையாளர்களின் நூல்களைப் பார்த்தால், அவர்கள் கல்வி வளர்ச்சி மூலம் உலகில் அமைதியையும் சமாதானத்தையும் நிலைநாட்ட முடியுமென நம்பினார்கள். ஐரோப்பாவில் கல்வி வளர்ச்சி முழுமை பெற்றுவிடினும் போர்கள் குறையாததைக் கண்டு ஏமாற்றமடைந்தனர். நிரம்பப் படித்தவர்களின் நாடுகள்தானே இரண்டு உலகப் போர்களுக்கு காரணமாக இருந்தன. இவர்கள் இரண்டாகப் பிரிந்துகொண்டு ஒன்று அழிவிலும், மற்றொன்று ஆக்கத்திலும் மாறி-மாறி ஈடுபடுகிறார்கள்.

ஒரு மனிதன் இரவில் ஊருக்குள் செல்வான். மக்கள் தூங்குகையில் வீட்டு சன்னல்கள் மீது தார் வீசுவான். இரண்டு-மூன்று நாள் கழித்து அவனது கூட்டாளி ஒருவன் வருவான். எங்காவது தார்க் கரை இருந்தால் அதை நீக்கி சுத்தம் செய்வதாகக் கத்தியபடியே செல்வான். மக்களும் வேறு வழியின்றி கூலி கொடுத்து சுத்தம் செய்ய அழைப்பார்கள். இந்த இரண்டு பேரும் கூட்டாளிகள் என்று ஊர் மக்களுக்குத் தெரியாது. மக்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒருவன் ஓர் ஊரில் சுத்தம் செய்கையில் மற்றவன் இன்னோர் ஊரில் தார் பூசிக்கொண்டிருப்பான்.

அறிவாளிகள்தாம் பிரச்சினைகளை உண்டாக்குகிறார்கள். பிறகு அறிவாளிகளின் இன்னொரு குழுவினர் வந்து அவற்றைத் தீர்த்துவைக்கிறார்கள். ஆனால் உண்மையான அறிஞர்கள் குழுவாக இருக்க வாய்ப்பில்லை. சிங்கங்களுக்கு மந்தை கிடையாது. உண்மையான துறவி தனியாளாக இருப்பார். எத்தனையோ கோடி மக்கள் நடுவில் ஒருவர்தான் புத்தராக முடிந்தது. அந்த ஒருவரால் கோடிக் கணக்கான ஞானதீபங்கள் ஏற்றப்படுகின்றன. ஆகவே நீ

இன்னொருவனின் உள்ளத்தில் ஞான விளக்கை ஏற்றுவதற்கு முன்னால் உன் உள்ளத்தில் அது எரிகின்றதா என்று பார். இந்த ஞான விழிப்பை உனக்கு ஏற்படுத்தவே நான் முழு கவனத்தையும், முழு முயற்சியையும் மேற்கொள்ளுகிறேன். தியானத்தை வலியுறுத்துகிறேன்.

மக்கள் என்னிடம் வந்து, ''நம்மை இவ்வளவு பிரச்சினைகள் சூழ்ந்திருக்க, நீங்கள் தியானத்தையே அழுத்திக் கூறுகிறீர்கள். சமூகம் சிக்கல்களில் மாட்டிக்கொண்டுள்ளது. அவற்றை நீக்கிவையுங்கள். '' என்று கேட்டுக்கொள்கிறார்கள்.

நான் அவர்களுக்குச் சொல்லும் பதில் இதுவே: தியானம் பரவாத வரையிலும் சமூக பிரச்சினைகள் நீங்கா. தியானம் பரவினால் சிக்கல்களுக்கு சமாதானம் ஏற்பட வழி கிடைக்கும்.

தியானம் செய். மற்றவர்களையும் தியானம் செய்யவை.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ, அவர்களே! என்னைவிட மூத்தவரான ஒருவர் எனக்கு நண்பர். மத சம்பந்தமான விஷயங்களில் ஆழ்ந்த ஈடுபாடுள்ளவர். அவர் உங்களுடனும் சிறிது காலம் வசித்திருக்கிறார். அவரைச் சந்திக்கும் பொழுதெல்லாம அவர் துளசிதாசரின் வசனம் ஒன்றைக் கூறுவார். 'பிரம்மாவே வந்து கற்பித்தாலும் முட்டாளுக்கு மூளையில் எதுவும் ஏறாது' என்பது அந்த வரி. அவர் என்னைத்தான் குறிப்பிடுவது போலுள்ளது. நீங்கள் எனக்குக் குருவாகக் கிடைத்தும் நான் முட்டாளாகவே இருக்கிறேன். இந்த நிலையிலிருந்து நான் எப்படித் தப்புவது?**

**மு**ட்டாள்நிலையிலிருந்து வெளியேறுவதற்கு முதல் கட்டமாக 'நான் அறிவிலி' என்று நீ பணிவுடன் ஒப்புக்கொள்ள வேண்டும். அவ்வாறு நீ மனமார ஒப்புக்கொண்டபின் ஞான கிரணம் உனக்குள்ளே பிரவேசிக்க ஆரம்பிக்கிறது. உன் அறியாமையை நீ ஒப்புக்கொள்வது ஞானத்தை நோக்கி முன்னேறுவதற்கான முதல் தேவையாகும். அது கட்டாயமான தேவையுமாகும்.

'நானா முட்டாள்?' என்று உன் மனம் ஏற்காவிடில் நீ செய்வதெல்லாம் தப்பாக முடியும். எங்கிருந்தோ, அரைகுறை ஞானத்தைத் திரட்டி, தனது அறியாமையை மறைப்பது, தனது அழகற்ற உடலை அழகிய வஸ்திரங்களால் மூடுவது போலாகும்.

ஆனால் ஒப்பீட்டு முறையில் உன்னை நீ முட்டாளென்றும் மற்றவர்கள் ஞானிகள் என்றும் மதிப்பிடாதே. உலகில் உண்மையான ஞானிகள் அரிதினும் அரிதாகவே உள்ளனர். உலக மக்கள் இருவகைப்படுகின்றனர்—தமக்கு அறிவு போதாது என்பதை அறிந்தவர்கள் ஒருவகை; அதை அறியாதவர்கள் மற்றொரு வகை. தனக்கு அறிவு போதாது என்பதை அறிந்துள்ளவன் ஞானி; தனது அறியாமை பற்றி அறிந்திராதவன் அக்ஞானி (அறிவிலி).

சாக்ரடீஸ் சொல்கிறார் - 'நான் ஒன்றும் அறிந்திருக்கவில்லை என்பதை எப்பொழுது அறிந்துகொண்டேனோ அக்கணமே நான் ஞானம் பெற்றுவிட்டேன்.'

உபநிஷதம் சொல்கிறது - 'எனக்குத் தெரியும்' என்று சொல்பவன் எதுவும் அறிந்திருக்கமாட்டான். 'எனக்குத் தெரியாது' என்று சொல்பவனைச் சற்றுப் பின்பற்றிப் பார். அவன் ஓரளவு அறிந்திருக்கக் கூடும்.

நீ உன் அறியாமையை ஒப்புக்கொள். அது உண்மைதானே? நமக்கு ஒன்றுமே தெரிந்திருக்கவில்லை. நாம் எங்கிருந்து வருகிறோம்; எங்கே போகிறோம்; நாம் யார்-என்னும் கேள்விகளுக்கு நம்மிடம் பதிலில்லை.

நீ சாலையில் செல்லும்போது நான்கு தெருக்கள் சந்திக்குமிடத்தில் ஒருவன் நின்றபடி நாற்புறமும் பார்க்கிறான். உனக்கு அனுதாபம் ஏற்பட்டு அவனிடம் சென்று கேட்கிறாய், "நீ எங்கே இருந்தப்பா வருகிறாய்?"

"தெரியாதுங்க."

இது எப்படி சாத்தியம் என்று உனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. "சரி, நீ எங்கே போகிறாய்?"

"தெரியாதுங்க."

அவனது மனநிலை பற்றி உனக்கு சந்தேகம் எழுகிறது. ''நீ யார் என்றாவது சொல்லேன்,'' என அவனைத் தூண்டுகிறாய்.

"தெரியாதுங்க."

"சரி, உன் பெயர் என்ன உன் ஊர் எது என்றாவது சொல்லித் தொலை."

"ஐயா, என் பெயர் எனக்குத் தெரியாது. என் ஊர் எது என்றும் தெரியாதுங்க."

'இவன் ஒரு பைத்தியக்காரன் அல்லது மோசடிக்காரன்' என்று நீ மனத்துக்குள் முணுமுணுத்துக்கொள்கிறாய்.

நமது நிலைமை என்ன? வாழ்க்கையின் நாற்சந்தியில் நாம் நிற்கிறோம். நாம் நிற்குமிடத்திலிருந்து நாலு பாதைகளல்ல, நூற்றுக் கணக்கான பாதைகள் பிரிகின்றன. ஒருவர் உன்னிடம், ''நீ எங்கேயிருந்து வருகிறாய்?'' என்று கேட்கிறார். பொய்யான பதில் கூறக்கூடாது. காதால் கேட்ட தகவல்களைத் திருப்பிச்சொல்லக் கூடாது. ''நான் கீதையில் இதுபற்றி படித்திருப்பது என்ன வென்றால்...'' என்று ஆரம்பிக்காதே. உனக்குத் தெரிந்தால் சொல்லு போதும் கீதையை ஏன் சாட்சிக்கு அழைக்கிறாய்? ஆன்மிக நூல்கள் படித்ததனால் நீ இறைவனின் இல்லத்திலிருந்து வந்ததாகச் சொல்லாதே. உனக்குக் கடவுளைப் பற்றியும் தெரியாது; அவரது வீடு இருக்குமிடமும் தெரியாது.

ஆனால் மனிதன் தலைக்கனம் பிடித்தவனாக இருக்கிறான். இதனால்தான் அவன் தனது அறியாமையை ஒப்புக்கொள்வதில்லை. அகங்காரம்தான் ஆன்மிகத்தில் பெரிய தடையாக உள்ளது. உன்னிடம் அகங்காரம் உள்ளதை நீ உணர்ந்தால் அது உடனே வலிமை இழந்துவிடும். சாவில் பெரிய சாவு அகங்காரம் மடிவதுதான். அகங்காரம் மடிந்தபின் நீ உடலாலும், உள்ளத்தாலும் இலேசாக ஆகிவிட்டதுபோல் உணர்வாய்.

'பொய் பேசுதல் கூடாது' என்று மக்கள் ஒருவருக்கொருவர் உபதேசிக்கிறார்கள். இதனால் எல்லோரும் உண்மையே பேசுகிறார்களா? ''உலகத்தைப் படைத்தது யார்?'' என்று சிலரிடம் கேட்டுப்பார். ''பகவான்'' என்று பதிலளிப்பார்கள். இவர்கள் அந்த

சமயம் பகவான் பக்கத்திலா இருந்தார்கள்? சிலர் சிறிய அளவில் பொய் சொல்கிறார்கள். கையில் ஆயிரம் ரூபாய் மட்டுமே உள்ள ஒருவன் தன்னிடம் பத்தாயிரம் உள்ளதாகக் கூறுகிறான். இது பெரிய பொய்யில்லை. பத்து சதவிகிதமாவது இது உண்மைதான்.

வீட்டிற்கு விருந்தாளிகள் வருகிறார்கள். பக்கத்து வீடுகளிலிருந்து சோபா, நாற்காலி, தரை விரிப்பு முதலியவை இரவலாகப் பெற்று அவர்களை வரவேற்கிறோம். இவற்றை அவர்கள் பாராட்டும்போதுஅவையெல்லாம் நமக்குச் சொந்தமானவைபோல் நடந்துகொள்கிறோம்.

முல்லா நஸ்ருத்தீன் புதிதாகக் கடை திறந்தார். கடையில் அலங்காரமாகப் பொருட்கள் அடுக்கிவைத்தார். ஒரு நண்பரிடம் உபரியாக இருந்த டெலிபோன் கருவியை வாங்கி ஜம்பமாகத் தனது மேஜை மேல் வைத்துக்கொண்டார். முதல் வாடிக்கையாளராக ஒருவன் வந்தான். அவனை ஒரு பெஞ்சில் உட்காரச் சொன்னார் முல்லா. ''அவசரமாக ஒரு போன் செய்ய வேண்டியுள்ளது. காத்திரு,'' என்று சொல்லிவிட்டு, போனை எடுத்து சத்தமாகப் பேச ஆரம்பித்தார்' ''ஆமாம், ஆமாம், லட்ச ரூபாய்க்கு சரக்கு அனுப்பிவிடுங்கள். ' பிறகு போனை வைத்துவிட்டுத் திமிராகத் திரும்பி ''நீங்கள் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று அலட்சியமாகக் கேட்டார்.

அவன் சொன்னான், ''நான் டெலிபோன் கம்பெனியிலிருந்து வந்திருக்கேன். உங்கள் பக்கத்து வீட்டுக்காரர் நீங்க போன் மட்டும் எடுத்துக்கிட்டு போனதா தெரிவிச்சாரு. நான் அந்த போனுக்கு கனெக்ஷன் கொடுக்கிறதுக்காக வந்திருக்கேன், '' என்றான்.

இம்மாதிரியான ஜம்பப் பேச்சுகள் பெரிய பொய்யல்ல. இவற்றை மன்னித்துவிடலாம். இவை நமக்கு சுவாரசியமாகவும் உள்ளன. இவற்றால் பெரிய தொந்தரவும் கிடையாது.

சிறுவனான உன் மகன் உன்னிடம், ''அப்பா, இந்த உலகத்தைப் படைச்சது யார்?'' என்று கேட்கிறான். ''பகவான் படைத்தார்,'' என்று நீ சட்டெனப் பதிலளிக்கிறாய். நீ பேசியது எவ்வளவு பெரிய பொய்! உனக்கு எப்படித் தெரியும் என்று யோசித்தாயா? பாவம், அப்பாவியான அந்தச் சிறுவன் உன்னிடம் மிகுந்த நம்பிக்கை வைத்தல்லவா அப்படிக் கேட்டான். நீ பொய் சொல்லுவாய் என்று

அவன் கற்பனைகூடச் செய்திருக்கமாட்டான். அவனை நீ இந்த அளவுக்கு ஏமாற்றலாமா?

உன் மகன் வளர்ந்து பெரியவனானபின் உன் பேச்சை நம்புவதை நிறுத்தினால் புலம்பாதே. உலகம் எப்படித் தோன்றியது என்று உன் அப்பாவுக்குத் தெரியாது; உன் அம்மாவுக்குத் தெரியாது; அவர்களின் குருவுக்கும் தெரியாது. ஏன், யாருக்குமே தெரியாது. ஆனால் படைப்பு ரகசியம் தங்களுக்குத் தெரியும்போல் வாதம் புரிகிறார்கள். ஆகவே உன் மகன் உன் மீது நம்பிக்கை இழந்தால் அதற்கு நீதான் பொறுப்பு. நீ பேசியது மாபெரும் பொய். அதற்கு உன்னால் ஆதாரம் எதுவும் காட்ட முடியவில்லை.

நீ என்ன செய்திருக்கலாம்? ''மகனே, எனக்குப் பதில் தெரியாது,'' என்று உண்மையைச் சொல்ல ஏன் கூச்சப்பட வேண்டும்? மேற்கொண்டு, ''உலகப் படைப்பு பற்றி எனக்குத் தெரியாதப்பா. நீ இது குறித்து ஆராய்ந்து பார். நானும் விபரம் தேடி பார்க்கிறேன். உனக்குப் பதில் கிடைத்தால் எனக்குத் தெரிவி. எனக்குத் தெரியவந்தால் உன்னிடம் சொல்கிறேன். உலகம் தானாகத் தோன்றியதா அல்லது படைக்கப்பட்டதா என்றுகூட நான் அறிந்திருக்கவில்லை. கடவுள் என்று ஒருவர் இருந்து படைத்தாரா என்றும் தெரியவில்லை,'' என்று கூறியிருக்கலாம்.

மகன் தன் கேள்விக்குப் பதில் கிடைக்காவிடிலும், அவன் வளர்ந்தபின் தன் தந்தைமீது மிகுந்த மரியாதை கொள்வான். தன் அறியாமையை ஒப்புக்கொண்டு உண்மையே பேசுபவர் தன் தந்தை என்று பெருமிதம் கொள்வான். அவன் நடுத்தர வயதை அடைந்தபின், ஒருவன் தனது அறியாமையை ஒப்புக்கொள்வது எத்துணை கடினமான விஷயம் என்று அவன் புரிந்துகொள்வான். ஏனெனில் அகங்காரம் ஒருவன் தனது பலகீனத்தை வெளிப்படுத்துவதைத் தடுக்கிறது. ''இதையும் மீறி என் அப்பா தன் அறியாமையை ஒப்புக்கொண்டார்'' என்று மகன் பெருமிதம் அடைவான்.

மதத்தின் பெயரால் பெரிய பொய்கள் பரவியுள்ளன. இந்தப் பொய்களை வீழ்த்துவதுதான் மதநம்பிக்கை உடையவனின் அடையாளமாகும். மதநம்பிக்கை உள்ளவன் இந்து, முஸ்லிம், ஜைனன், பௌத்தன் முதலிய எல்லைகளுக்குள் அடங்கமாட்டான்.

அவன் எளிமையானவனாக இருப்பான். அவனிடம் போலித்தனம் இருக்காது. தான் அறிந்துள்ளதை மட்டுமே வெளியே சொல்வான். அதையும்கூட தயக்கத்துடன்தான் சொல்லுவான். தான் அறிந்திராத விஷயம் பற்றி வாய் திறக்க மாட்டான். தான் அறிந்துள்ளதையும் 'இவ்வளவுதான் எனக்குத் தெரியும்' என்று பணிவுடன் கூறுவான்.

பொய் பேசாதீர்கள். எது எப்படியோ அப்படியே பேசுங்கள். எவ்வளவு தெரியுமோ அவ்வளவே சொல்லுங்கள். சிறிதும் மிகைப்படுத்தாதீர்கள். அலங்கார வார்த்தைகள் சேர்க்காதீர்கள். இப்படிக் கறாராக உண்மை பேசுபவனுக்கு ஒருநாள் பேருண்மை (மகாசத்தியம்) வசப்பட்டாலும் ஆச்சரியமில்லை.

நீ சொல்வது பொய்யில்லை என்று ஓர் அங்குலம் கூட வாதம் செய்யாதே. அகங்காரம் பிடித்தவன்தான் பொய்யை மெய்யென வாதம் செய்வான். பொய்மேல் பொய்யாகச் சொல்வதுதான் அகங்காரத்துக்கு உணவாக அமைகிறது. அதனால்தான் உன் பொய்யை யாராவது எதிர்த்தால் உனக்குக் கோபம் மூள்கிறது.

உதாரணமாக, நீ மகனிடம் சொல்கிறாய், ''உலகத்தைக் கடவுள் படைத்தார்.'' ஆனால் பையன் அத்துடன் உன்னை விடவில்லை. அவன் உன்னிடம், "கடவுளைப் படைத்தது யார்?" என்று கேட்கிறான். உனக்குக் கோபம் வருகிறது. "வயசுக்கு மீறிய கேள்விகளைக் கேட்காதே. நீ பெரியவனாக வளர்ந்ததும் நீயே புரிந்துகொள்வாய்," என்று மிரட்டி அடக்குகிறாய். ஆனால் நீயும் இப்போது வளர்ந்து நடுத்தர வயதைக் கடந்தவன்தானே. உனக்கு மட்டும் பதில் தெரிந்துவிட்டதா? இம்மாதிரியான பொய் தலைமுறைகளாகத் தொடர்ந்து வாழ்க்கையைப் போலியாக்குகிறது. ஏனெனில் உன் மகன் தன் மகனுக்கு நீ சொன்ன பதிலையேதான் சொல்வான்.

அறியாமை அவமானத்திற்குரிய விஷயமில்லை. உலகப் படைப்பு, கடவுளின் இருப்பு ஆகியவை பற்றி உண்மையிலேயே நாம் அறியோம். இது தப்பில்லை. வாழ்க்கை அத்துணை ரகசியமானது. வாழ்க்கையெனும் புதிரை விடுவிக்க முடியாது. முதல் கட்டமாக, அகங்காரத்தைக் கைவிட்டு, அறியாமையை ஒத்துக்கொள்பவன் வாழ்க்கையின் ரகசியத்தைப் புரிந்துகொள்ளும் சாமர்த்தியம் பெறுகிறான்.

கடவுளும் ரகசியமானவர். அவரை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் புரிதல் என்னும் எல்லையினுள் வருபவர் இல்லை. அவர் நமது அறிவின் ஆற்றலுக்கு அப்பாற்பட்டவர். தர்க்கம் செய்து அவரது இருப்பை நிரூபிக்க முடியாது. அவர் நமது சிந்தனையைக் கடந்தவர். அவரைப் பற்றி சிந்திக்க-சிந்திக்க நாம்தான் களைத்துப் போவோம்.

நீ ஏதேனும் மரத்தைப் பார்த்து வியந்து நின்றதுண்டா? அதன் வாழ்க்கை எத்துணை ரகசியமானதாக உள்ளது! எத்துணை சிறிய விதை படிப்படியாக வளர்ந்து பிரம்மாண்டமான மரமாக நிற்கிறதே! இந்த வளர்ச்சியைப் பார்த்து உனக்குத் துள்ளிக் குதிக்கத் தோன்றவில்லையா? தினமும் காலையில் சூரியன் உதிக்கிறது. ஆகாயத்தில் கோடிக் கணக்கில் நட்சத்திரங்கள் உலவுகின்றன. வகை-வகையான பறவைகள், விலங்குகள், வாழ்க்கை பரந்து விரிந்து கிடக்கிறது. படைக்கப்பட்டுள்ள ஒவ்வொன்றிலும் ஏதோ ரகசியம் நிறைந்துள்ளது.

அறிவியல் தனக்கு எல்லாம் தெரியும் என்கிறது. தண்ணீர் என்றால் என்ன என்று கேட்டால், அறிவியல் அது ஹைட்ரஜனும் ஆக்ஸிஜனும் குறிப்பிட்ட விகிதத்தில் கலக்கும்போது உண்டாகும் திரவம் என்று கூறும். சரி, ஹைட்ரஜன் என்றால் என்ன? பதில் சொல்ல முடியாது. அது ஒரு வேதியல் தத்துவம். அது இன்னொன்றுடன் சேர்ந்து ஒரு பொருளைத் தோற்றுவிக்கிறது. அதன் இரண்டு பங்கு ஆக்சிஜன் ஒரு பங்குடன் சேர்ந்து தண்ணீர் உருவாகிறது ($H_2O$)

ஆனால் ஹைட்ரஜன் என்றால் என்ன? சரி, மஞ்சள் நிறம் என்றால் என்ன? அறிவியலாலும் இம்மாதிரியான கேள்விகளுக்கு விடையளிக்க முடிவதில்லை. சாஸ்திரங்கள் அறிவெனும் பாதையில் கணிசமான தொலைவு செல்கின்றன. ஆனால் ஏதோ ஓர் இடத்தில் தடுக்கிவிட்டதுபோல் நின்றுவிடுகின்றன. மனிதனின் ஆற்றலுக்கு எல்லையுண்டு. வாழ்க்கையோ எல்லையற்றது. ஆகவே கல்லாதது உலகளவு என ஒப்புக்கொள்பவன், அக்குறையை உணர்ந்த காரணத்தால் முயன்று கற்று ஒருகாலத்தில் ஞானியாக ஆவதற்கு சந்தர்ப்பம் உண்டு.

விலை வைக்கப்பட்டவற்றிலிருந்து
விடுவித்து என்னை
விலை மதிக்க முடியாத ஒன்றிற்கு
இட்டுச் செல்.
சந்தேகம்-சமாதானம் இரண்டும் சங்கடம்
வெற்றியும் வளர்ச்சியும் இவற்றிற்கு அப்பால்
அடிவானம் ஒரு கானல்நீர்
ஆயினும் அதுவே எல்லை ஆகாயத்தின்
காலை மாலை என்னும் இரண்டும்
கண்கள் காட்டும் ஏமாற்றுவேலை
ஆழ்மனத்தின் ஆன்மிக மொழியை
எம்மொழியால் கட்டிப் போடுவது?
குடத்தை நீர்மட்டம் வரைதான்
கயிறு இட்டுச் செல்லும்

விலை நிச்சயிக்கப்பட்ட பொருட்கள் மனிதன் தயாரித்தவையாக இருக்கும். விலை ஸ்வக்க முடியாதது கடவுள் மட்டுமே. எல்லா வகையான தராசுகளும் உலகப் பொருட்களை அளக்க உதவும். பரமாத்மாவை அளக்க, எடை காண முடியாது.

நாம் அறியக்கூடிய விஷயங்களுக்கு எல்லை ஏற்பட்டு விடுகிறது. அவை அறியப்பட்டதாலேயே சுருங்கிய எல்லை உடையனவாக ஆகிவிட்டன. அற்ப விஷயங்களே அறியப்படக் கூடியவை. மிகு விசாலமானவை அறியப்படக்கூடியவை அல்ல.

ஆழ்மனத்தில் உண்டாகும் ஞான விழிப்பை சொற்களால், மொழியால், வரையறுக்கப்பட்ட சித்தாந்தங்களால் வர்ணிக்க முடியாது.

தாம்புக்கயிறு குடத்தைக் கிணற்றின் நீர்ப்பரப்பின் மேற்புறம் வரை கொண்டு செல்லும். அதற்குமேல் அதனால் எதுவும் செய்ய இயலாது. கயிறுக்கு முடிவு உண்டு தருக்க வாதங்கள், சிந்தனைகள், அறிவு ஆகியவை கடவுள்வரை கொண்டு செல்லும். அவற்றால் அடுத்த கட்டத்திற்கு நம்மை இட்டுச்செல்ல இயலாது. புத்தி என்னும் தாம்புக்கயிறு முடிவுறும் இடத்தில் கடவுள் என்னும் நீர்ப்பரப்புத் தொடங்குகிறது.

நமது அறியாமை என்பது கடவுள் ஒரு ரகசியம் என்பதற்குச் சான்றாக விளங்குகிறது. ஞானம் என்பது கடவுள் ரகசியம் அல்ல

என்பதற்கும். புத்தகம் போல் அவரையும் அவருடைய செயல் களையும் படிக்க முடியும் என்பதற்கும் சான்றாக விளங்குகிறது. அவரது திருமாளிகையில் பிரவேசிக்க மட்டும் முடியும். கடவுள் என்னும் சமுத்திரத்தில் முழுக மட்டும் முடியும். மீண்டு வெளியேவர முடியாது.

**ரா**மகிருஷ்ணரின் கதை ஒன்று. உப்பால் வடிவமைக்கப்பட்ட இரண்டு பொம்மைகள் கடற்கரைத் திருவிழாவிற்குச் சென்றன. கூடியிருந்த மக்கள் கடலின் ஆழம் பற்றி விவாதித்துக் கொண்டிருந் தனர். ஆனால் யாரும் கடலின் தரைமட்டம் வரை சென்றதில்லை. கடல் ஆழம் காண முடியாதது என்று மட்டும் பேசிக் கொண்டனர்.

இதையெல்லாம் கேட்ட உப்பு பொம்மைகள் மக்களிடம், ''நாங்கள் கடலில் இறங்கிப் பார்க்கிறோம். எவ்வளவு ஆழம் என்று கண்டுபிடித்துச் சொல்கிறோம்.'' என்று கூறிவிட்டு அவை கடலினுள் குதித்தன. அவை கடல்நீரால்தானே உருவாகியவை. அவை ஆழத்தில் செல்லச் செல்ல உருகிக் கரைந்து விட்டன. அவை கடலின் தரைமட்டத்தையும் தொட்டிருக்கும். ஆனால் திரும்பி மேலே வர வாய்ப்பில்லையே.

மகாஞானிகளின் நிலைமையும் இதேமாதிரிதான். கடவுளிட மிருந்து தான் அவர்கள் தோன்றியவர்கள். அவர்கள் கடவுளிடம் மேன்மேலும் லயித்து, கடவுளிலேயே ஆழ்ந்து விடுகிறார்கள். அவர்கள் தனியொரு நபராகத் தங்கள் இருப்பை மறந்தபின் எப்படி மீள வரமுடியும்?

யாராவது, எப்பொழுதாவது கடவுளிடமிருந்து திரும்பி வந்ததுண்டா? திரும்பிவர உபாயமும் கிடையாது. ஆகவே மேற்கண்ட கேள்விக்குப் பதில் கிடைக்காது. வானத்திடமும் பதிலில்லை. வாழ்க்கையிடமும் பதிலில்லை. பதில் கிடைக்க முடியாத இச்சூழ்நிலையில் நீ மௌனமாகித் தலைவணங்கு. பணிந்து வணங்கு. உன் அறியாமையை ஒப்புக்கொண்டு வணங்கு. அப்போது கடவுளின் ஒளிக்கிரணம் உன்னை நோக்கி இறங்கும். நீ ஒளிமயமானவனாகி விடுவாய். 'நீ' என்பது மறைந்ததும் அங்கே கடவுள் தோன்றுவார். 'நீ' என்பவன் இல்லையேல் பிறகு தடையேதுவுமில்லை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்

யதாததோபதேஸேன க்ருதார்த்த; ஸத்த்வபுத்திமான்|
ஆஜீவமபி ஜிக்ஞாஸு; பரஸ்தத்ர விமுஹ்யதி|| (126)

மோக்ஷோ விஷயவைரஸ்யம் பந்தோ வைஷயிகோ ரஸ:|
ஏதாவதேவ விஞ்ஞானம் யதேச்சஸி ததா குரு|| (127)

வாக்மிப்ராக்ஞமஹோத்யோகம் ஜனம் மூகஜடாலஸம்|
கரோதி தத்த்வபோதோ அயமதஸ்த்யக்தோ புபுஷிபி:||(128)

ந த்வம் தேஹோ ந தே தேஹோ போக்தா கர்த்தா ந வா பவான்|
சித்ரூபோ அஸி ஸதா ஸாட்சி நிரபேக்ஷ: ஸுகம் சர|| (129)

ராகத்வேஷௌ மனோதர்மீ ந மனஸ்தே கதாசன|
நிர்விகல்போஅஸி போதாத்மா நிர்விகார: ஸுகம் சர|| (130)

ஸர்வபூதேஷு சாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி|
விக்ஞாய நிரஹங்காரோ நிர்மமஸ்த்வம் ஸுகீ பவ|| (131)

விஸ்வம் ஸ்புரதி யத்ரேதம் தரங்கா இவ ஸாகரே|
தத்த்வமேவ ந ஸந்தேகஸ்சின்மூர்த்தே விஜ்வரோ பவ|| (132)

**கீ**ழக்கத்திய நாடுகளில் தோன்றிய சாஸ்திரங்கள் கடல் அலைகள் போன்றவை. அலை மேல் அலையாக வந்து பரவியும் கடல் ஒருபொழுதும் களைப்படைந்ததில்லை.

ஐரோப்பாவில் நம் சாஸ்திரங்கள் மொழிபெயர்க்கப்பட்டபோது, ஐரோப்பியச் சிந்தனையாளர்கள் இந்த சாஸ்திரங்களில் பல விஷயங்கள் மீண்டும்-மீண்டும் ஏன் கூறப்படுகின்றன என்று

திகைப்படைந்தனர். சிறிதளவே வித்தியாசம், சொற்களில் சில மாறுதல்கள். ஒரே சத்தியம் பலவிதமாகக் கூறப்படுகிறது.

ஐரோப்பாவில் நூல்கள் எழுதப்படும் விதம் வேறானது. எதையும் சுருக்கமாக எழுதுவதைத்தான் அங்கே ஆதரிக்கிறார்கள். ஒரு விஷயத்தை ஐரோப்பிய எழுத்தாளர்கள் ஒருமுறைதான் சொல்வர்.

கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே உள்ள இந்த வித்தியாசத் திற்குக் காரணம் உண்டு. கிழக்கில், சொல்லுபவன் முக்கியமில்லை, கேட்பவன்தான் (படிப்பவன்தான்) கவனத்தில் எடுத்து கொள்ளப் படுகிறான். கேட்பவர்கள் (படிப்பவர்கள்) ஆன்மிக விஷயங்களைப் பொறுத்தவரையில் மயக்கமடைந்தவர்கள் போலிருக்கிறார்கள். மீண்டும்-மீண்டும் சொல்லி அவனை எழுப்ப வேண்டியுள்ளது. மேலும், கூறப்படும் ஆன்மிக சத்தியம் மிகவும் நுணுக்கமானது. ஒரு தடவை சொன்னால் புரிந்துகொண்டுவிட முடியாது. சொல்லும் விதத்திலும் சொற்களிலும் மட்டும் மாற்றம் செய்து ஒரே சத்தியம் ஏராளமான முறை கூறப்படுகிறது.

இன்னொரு காரணமும் கூறலாம். ஒரு வகுப்பறையில் பலவிதமான மாணவர்கள் தென்படுவர். அறிவு அல்லது கிரகிக்கும் சக்தியின் அடிப்படையில் மேதாவி மாணவர்கள்-நடுத்தர புத்தியுள்ள மாணவர்கள்-நத்தை வேகத்தில் புரிந்துகொள்ளும் மாணவர்கள் என்றெல்லாம் இருப்பர். லட்சியவாதியான ஆசிரியர் அறிவின் கடைசிப் படிகளில் நிற்கும் மாணவர்களைக் கருத்தில்கொண்டே கற்பிப்பார். அப்போது மற்றவர்களும் பாடத்தைப் புரிந்து கொள்வர்.

ஆன்மிக வகுப்பிலும் குரு மேற்கொள்ளும் முறை இதுவே. ஆன்மிக உணர்வும், ஆன்மிக அறிவும் குறைவாக உடையவர்களை மனத்தில்கொண்டு அவர் உபதேசம் செய்கிறார். அவர் பரம சத்தியத்தையே திருப்பித் திருப்பி விளக்கினாலும் சுற்றிவரும் வண்ண விளக்குபோல், ஒவ்வொரு விளக்கத்தின்போதும் சத்தியத்தின் வெவ்வேறு முகப்பு தென்படும்.

கடற்கரையில் உட்கார்ந்து கவனி. கரையில் எத்தனையோ அலைகள் வந்துவீழ்கின்றன. அவை எல்லாம் ஒரேமாதிரித்

தெரிகின்றன. ஆனால் உற்றுப் பார்த்தால் ஓர் அலை இன்னொன்றுபோல் இல்லையென்பது தெரியவரும். மனிதர்களின் கையொப்பம்போல் ஒவ்வோர் அலையும் தனித்தன்மை உடையவை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதம். ஒவ்வொன்றின் பாணி தனி, உருவம் தனி, ஓசை தனி. மேலோட்டமாகப் பார்க்கையில் நம் எல்லோருடைய கை கட்டைவிரலும் ஒரே மாதிரித் தெரியும். ஆனால் பூதக் கண்ணாடியில் பார்த்தால் அவற்றின் வேறுபாடு புரியும். கட்டைவிரலால் காகிதத்தில் முத்திரை பதிக்கும்போது எந்த இரண்டு பேருடைய கட்டைவிரல் முத்திரைகளும் ஒன்றுபோல் இருக்காது.

அஷ்டாவக்ர கீதையில் கூறியது கூறல் எனப்படுவது அடிக்கடி வரும். அவ்வாறு நீ நினைத்தால் உன்னிடம் பூதக்கண்ணாடி இல்லை என்று அர்த்தமாகும். சத்தியம் என்பது என்றும் ஒன்றுதான். ஒரே சத்தியத்தை அடிக்கடி சொல்ல வேண்டும். தொடர்ந்து சொல்ல வேண்டும். சாஸ்திரீய சங்கீதம் கேட்டிருப்பாயே. இசை நிகழ்ச்சிகளில் பாட்டின் ஒவ்வொரு வரியையும் பல முறை பாடுகிறார்கள். ஆனால் இசை நுணுக்கம் அறிந்தவன், இசை ரசிகன், ஒவ்வொரு முறையும் அந்த வரி புதுப்புது முறையில் பாடப்படுவதை அறிகிறான். ஒவ்வொரு முறையும் வெவ்வேறு சொல்லின்மீது அழுத்தம் தரப்படுகிறது. வரி ஒன்றே; அழுத்தம் வெவ்வேறு இடத்தில். ஆரோஹணம்-அவரோஹணம் (ஏற்றம்-இறக்கம்) வேறுபடுகிறது ஆனால் இசை தெரியாதவனுக்கு சலிப்பு ஏற்படும். சிறிது நேரம் அரங்கத்தைவிட்டு வெளியே சென்றுவரத் தோன்றும்.

அஷ்டாவக்ரர் என் சொன்னதையே சொல்கிறார் என நீயோசிக்கலாம். உண்மையில் அவர் கூறியது கூறவில்லை. ஏதோ புதிய அம்சத்தை அறிமுகப்படுத்த அவர் அவ்வாறு செய்கிறார்.

நீங்கள் எல்லோரும் மேற்கத்திய முறையில் கல்வி கற்றவர்கள் என்பதையும் நினைவில்கொள்ளுங்கள். கிழக்கு நாடுகளும் இப்போது மேற்கு நாடுகள்போல் மாறிவிட்டன. உனது படிப்பு முறை மேற்கத்திய நிபுணர்களால் நிச்சயிக்கப்படுகிறது. ஆகவே கிழக்கத்திய மனிதனும் கூறியது கூறல் என நினைக்கிறான்.

கிழக்கு நாடுகளின் வாழ்க்கை அமைப்பு வண்டிச் சக்கர உருவிலானது. மேற்கு நாடுகளின் வாழ்க்கை அமைப்பு

நேர்கோடானது. அது ஒரே திசையில் நேராகப் போய்க்கொண்டே இருக்கிறது. அது திரும்பிவராது. கிழக்கத்திய தத்துவம் 'இது சாத்தியமில்லை-நேர்கோடு என்பதே கிடையாது' என்கிறது. நீ யூக்ளிட்டின்[1] வரைகணிதம் மட்டும் படித்திருந்தால், மாற்றுக் கருத்துகளை அறியாமல் போயிருந்தால், நீயும் நேர்கோடு என உண்டெனவே நினைத்திருப்பாய். இதற்கு எதிராக வளர்ந்த வரைகணித முடிவுகளின்படி எந்தக் கோடும் நேரானதாக இருக்க முடியாது.[2] இது கிழக்கத்தியக் கண்ணோட்டத்துடன் ஒத்துச்செல்கிறது.

பூமி உருண்டையானது. நீ பூமியின்மீது ஒரு நேர்கோடு இழுத்துக்கொண்டே சென்றால் அது கடைசியில் வட்டமாக அமை வதைக் காணலாம் எல்லை உடைய காகிதத்தில் கோடு போடுகையில் அது நேராகத் தெரிகிறது. ஆனால் உலகில் எதுவும் நேராக இயங்குவதில்லை. வெயில், மழை, குளிர், மீண்டும் வெயில் என பருவகாலங்கள் வட்டமாக வருகின்றன. நட்சத்திரங்கள், சூரியன், சந்திரன் எல்லாம் வட்டப்பாதையில் சுழலுகின்றன.

வாழ்க்கையில் எல்லாம் வட்ட வடிவத்துடன் சம்பந்தப்பட்டவை. மாட்டு வண்டியில் உட்கார்ந்து போகிறோம். சக்கரம் வட்டமாகச் சுழல்கிறது. புதிய-புதிய நிலப்பகுதியைக் கடக்கிறோம். நீ சக்கரத்தையே கவனித்தால் ஒரேமாதிரிச் சுழல்வதாக உணர்வாய். ஆனால் நாலா பக்கமும் திரும்பிப் பார்த்தால், பாதையோர மரங்கள் மாறிவிட்டன; மண்ணின் நிறம் மாறிவிட்டது; மேடு-பள்ளமாக இருந்த சாலை சமதளமாகிவிட்டது; சூரியனின் திசைமாறி விட்டது; மாலையாக இருந்தது இரவுப் பொழுதாகிவிட்டது; நிர்மலமான வானில் சந்திரனும் நட்சத்திரங்களும் வந்துவிட்டன. இப்படி எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்துவிடுகின்றன.

ஒரே சக்கரம்தான். அது ஒரேமாதிரியே சுழல்கிறது. ஆனால் அது சுழலச் சுழல எல்லாம் புதுவடிவம் எடுக்கின்றன.

---

1. கிரேக்க கணித அறிஞர் (கி.மு.300) Euclidean Geometry=study of points, lines, angles, surfaces and solids.
2. During the 19th century, rejection of some of Euclid's postulates resulted in two non-Euclidean Geometries that proved just as valid and consistent.

'சத்வ உன்னத புத்தி உள்ள மனிதன் சிறிதளவு உபதேசம் கேட்டும் எப்படியாவது விழிப்புப் பெறுகிறான். சிறிய தாக்கமும் அவனைப் பாதிக்கும். சாதாரண சராசரி இயல்பு உள்ளவன் வாழ்க்கை முழுவதும் முயன்றாலும் மோகத்திலேயே மூழ்கிக்கிடப்பான். **(சுலோகம் 126)'**

ஒருவனிடம் சிறிதளவாவது விழிப்புப்பெற்ற புத்தி இருக்கு மாயின் அவனைச் சிறிதளவு தட்டினால் போதும். சிறிதளவு உபதேசம் கேட்டாலும் அவன் முழுமையாக விழித்துக் கொண்டு விடுவான். உறங்கிக் கிடக்கும் புத்தியுள்ளவனை நீ எத்தனை முறை தட்டினாலும் புரண்டு படுப்பானேயொழிய விழிக்க மாட்டான்.

**பு**த்தரை தரிசிக்க ஒருவன் வந்தான். அவருடைய திருவடிகளில் வணங்கினான். அவரிடம் ஒரு வேண்டுதல் செய்தான். ''வார்த்தைகளால் தாங்கள் எதுவும் சொல்ல வேண்டாம். ஏராளமான உபதேச வார்த்தைகளை நான் ஏற்கெனவே சேகரித்துவிட்டேன். எல்லா அறநூல்களையும் படித்திருக்கிறேன். எனக்கு சூனியம் மூலம் உபதேசியுங்கள். மௌனத்தின் மூலம் கற்பியுங்கள். நான் புரிந்துகொள்வேன். என்னிடம் நம்பிக்கை வைக்கலாம்.'' என்றான்.

புத்தர் அவனை உற்றுப் பார்த்தார். கண்களை மூடிக்கொண்டார். வந்த மனிதனும் கண்களை மூடிக்கொண்டான். அமைதியாக அவர் எதிரில் உட்கார்ந்தான். புத்தருடைய சீடர்கள் இக்காட்சியைக் கண்டு திகைத்தனர். இது என்ன நாடகம் நடக்கிறது என்று குழம்பினர்.

வந்தவன் கூறிய விண்ணப்பமே விசித்திரமாக இருந்தது. 'பேச்சின்றி உபதேசியுங்கள். தேவையான எல்லாம் கேட்டாகிவிட்டது. படித்தாகிவிட்டது. ஆனால் எதை அறிய வேண்டுமோ அது கேட்டலுக்கும் படித்தலுக்கும் அப்பால்தான் உள்ளதுபோல் தெரிகிறதே. ஞானம் வேண்டி இங்கே வரவில்லை. விழிப்பு என்னும் பிட்சையை யாசித்து வந்திருக்கிறேன்,' என்றெல்லாம் அல்லவா விண்ணப்பிக் கிறான் என சீடர்கள் நினைத்தனர். அவர்கள் நடுவில் தலையிட விரும்பவில்லை.

புத்தரும் வந்தவனும் எதிரெதிரே கண்கள் மூடிய நிலையில் அமர்ந்திருந்தனர். மௌனத்தின் ஊடே அவர்களிடையே ஏதோ

கைமாற்று நிகழ்ந்தது: கொடுக்கல்-வாங்கல் நடைபெற்றது. புத்தரிடமிருந்து ஏதோ ஒன்று இடம் பெயர்ந்து அவனை அடைந்தது. ஒரு மணி நேரம் இந்நிலை நீடித்தது. கண்கள் மூடிய நிலையிலேயே அம்மனிதன் திடீரெனப் புன்னகை செய்தான். அவனது முகத்தில் ஒளி பரவியது. மீண்டும் குனிந்து வணங்கி அவன் புத்தருக்கு நன்றி தெரிவித்தான். ''என் மீது பெருங்கருணை காட்டி அருளியுள்ளீர்கள். நான் நாடி வந்தது எனக்குக் கிடைத்துவிட்டது.'' இவ்வாறு கூறி, அவன் சென்றுவிட்டான்.

பிரதம சீடன் ஆனந்தன் புத்தரைப் பார்த்து, ''இது என்ன தமாஷ்? உங்கள் இருவரிடையே என்ன பரிவர்த்தனை நிகழ்ந்தது? எங்கள் எல்லோருக்கும் ஒரு மண்ணாங்கட்டியும் புரியவில்லை. சொற்களின் மூலம் உபதேசம்தான் எங்களுக்குப் பிடிபடும். சொல்வழி உபதேசம்வரைதான் எங்கள் புத்தி சென்றடையும். நீங்கள் இருவரும் நிகழ்த்திய மௌன நாடகம் மூலம் என்ன நடைபெற்றது? சொற்கள் மூலமாக எங்களுக்கு விளக்குங்கள், '' என்று கேட்டுக் கொண்டார்.

புத்தர் விளக்கம் தந்தார்: ''ஆனந்தா, நீ இளமையில் குதிரை சவாரியில் புகழ்பெற்று விளங்கினாய். குதிரைகளைப் பற்றிய அசுவசாஸ்திரத்தில் நீ தேர்ச்சி பெற்றவன். அவை வகை-வகையானவை என நீ அறிவாய். அடித்தாலும் நகராத குதிரைகள் சில. இவற்றைக் கோவேறுக் கழுதை என்கிறோம். சிலவற்றை அடித்து அடித்துத்தான் கிளப்ப வேண்டும். சில அடித்ததும் கிளம்பிவிடும். சில குதிரைகள் சவுக்கைச் சொடுக்கினாலே புறப்பட்டுவிடும். சில கையில் சவுக்கை ஏந்தியதுமே ஓட ஆரம்பிக்கும். சில குதிரைகள் சவுக்கின் நிழல் தெரிந்தாலேகூட எச்சரிக்கையாகிவிடும். இப்போது வந்த மனிதன் அந்த வகையினன்தான். நிழல் மூலம் நிஜத்தை அறிந்து கொள்ளக்கூடிய நுணுக்கமான ஆற்றல் பெற்றவன்.''

சொற்களின் துணையின்றியே எதையும் புரிந்துகொள்ளும் ஆற்றலை ஸத்வபுத்தி என்கிறோம். அந்த ஆற்றலை உடையவன் சத்தியத்தை நேராகப் புரிந்துகொள்ள சித்தமாக இருப்பான். அவன் தனது கவனம் சிதறிப்போக விடமாட்டான். சத்தியத்தை நேருக்கு நேர் பார்க்கக்கூடியவன் சத்வ புத்தி உடையவனாக இருப்பான்.

உன்னதத்தையே தேடிக் காணும் நடவடிக்கை எப்படிப் பழக்கமாகிறது? மனிதன் சத்வபுத்தி உடையவனாக ஆவது எப்படி? உனக்கு அத்தகைய உத்தமபுத்தி அமையப் பெறாவிடில் நீ கவலைப்படாதே.

நம்முடைய சாஸ்திரங்களை விளக்கி எழுதியவர்கள் கடவுள் இரண்டு விதமான புத்தி உடையவர்களைப் படைத்துவிட்டதுபோல் பிரமையைத் தோற்றுவித்துவிட்டார்கள் சத்வ (உத்தம) புத்தி உடையவர்கள், சராசரி (சாதாரண) புத்தி உள்ளவர்கள் எனப் பிரித்துவிட்டார்கள். அப்படியானால் தப்பு கடவுளுடையதுதானே தவிர உன்னைக் குறைசொல்ல முடியாது. உனக்கு சாமான்ய புத்திதான் அவர் கொடுத்துள்ளார் எனில் உன் கையில் என்ன இருக்கிறது? இந்த அடிமைத்தன மனப்பான்மையை நான் தகர்த்தெறிய விரும்புகிறேன்.

நீ குறிப்பிட்ட விதமான புத்தி எதையும் எடுத்துக்கொண்டு இவ்வுலகிற்கு வரவில்லை. இங்கே வந்தபின் உனக்கு ஏற்படும் அனுபவங்கள் காரணமாகத்தான் உனக்கு சத்வ புத்தி உண்டாகிறது அல்லது உண்டாவதில்லை சத்வபுத்தி நிலையை அடைபவன் அனுபவங்களைத் தவிர்த்து அவற்றிடமிருந்து தப்புவதில்லை. அவன் அனுபவங்களில் முழுமையாக நனைகிறான். வாழ்க்கையின் உண்மைகளை ஏற்று வாழ்க்கையின் யதார்த்தத்தை நேரில் காண்பவன் சத்துவத்தை அறியும் உரிமை பெறுகிறான். வாழ்க்கையின் அடிப்படையை அறிந்துகொள்வதால் சத்தியத்தை அறியும் உரிமை கைவரப் பெறுகிறது. அந்த நிலையை அடைந்தவனின் புத்தி சத்வபுத்தி ஆகிறது.

ஓர் இளைஞன் என்னிடம் வந்து, ''சுவாமி! காம இச்சையி லிருந்து தப்பிக்க எனக்கு வழிகாட்டுங்கள்,'' என வேண்டுகிறான். உண்மையில் அவன் காம அனுபவம் பெற்றவனில்லை. காம இச்சையும் ஆரம்ப நிலையில்தான் இருந்தது. வேறு யாரோ சொன்னதைக் கேட்டு பயந்துபோய் என்னிடம் வந்திருக்கிறான். அவனது உணர்வு கடன்வாங்கப்பட்ட உணர்வு. யாராவது மகாத்மாவின் பேச்சை, பிரம்மசரியத்தைப் போற்றிப் பேசுவதைக் கேட்டிருப்பான். அவனுக்கும் பிரம்மசரியத்தால் விளையும் நன்மைகளை அனுபவிக்க வேண்டுமென்ற பேராசை ஏற்பட்டிருக்கும்.

தர்க்கத்தின் அடிப்படையில் பிரம்மசர்யத்தின் நன்மைகளை அவன் கண்டான். ஆனால் சாட்சிபோல் அவனுக்கு அனுபவம் அமையவில்லையே. கணக்குப் பாடம்போல் அவன் பிரம்மசரியம் பற்றி அறிந்திருந்தானேயொழிய, அனுபவம் என்னும் சாட்சியின் துணையுடன் அதை அவன் அறியவில்லை

ஒரு மனிதன். இன்னும் வாழ்க்கைப் பாதையில் ஓட ஆரம்பிக்கவில்லை. ஆனால் அவன் 'என்னை இந்த ஓட்டப் பந்தயத்திலிருந்து காப்பாற்றுங்கள்' என அலறுகிறான். இத்தனைக்கும் அவன் வாழ்க்கையின் பரபரப்பை அறிந்திருக்கவில்லை. வாழ்க்கையில் ஓடி-அலைந்து களைத்துப்போன மற்றவர்களின் பேச்சைக் கேட்டு இவன் திருப்பிச்சொல்கிறான். களைத்துப் போனதாகக் கூறுபவர்கள் அனுபவத்தின் அடிப்படையில்தான் அவ்வாறு சொல்கிறார்கள். இவனோ அனுபவம் பெற்றுக் களைத்துப் போனவனில்லை. இச்சமயம் அவனது உடலும் மனமும் சக்தி நிறைந்து விளங்குகின்றன. சாதிக்க வேண்டிய உலகம் இனிமேல்தான் இவன் கண்முன் விரியப்போகிறது. அதை அவன் முயன்று தடுக்கிறான். நேரடி அனுபவம் கிடைத்தால்தான் ஒருவன் சத்வநிலையை அடைகிறான்.

ஆகவே உன் மனத்தில் காம உணர்வு தோன்றினால் அவசரப்பட்டு பயந்து ஓடிவிடாதே. பழம் பழுத்தால் தானாக விழும். அந்தப் பழம் சத்வநிலையை அடைந்து விட்டதாகக் கூறலாம். காய்நிலையில் வலிந்து பறித்தால் அது அழுகிவிடும். மரத்திற்கு ரணமும் ஏற்படும். பழுத்த பழத்தின் நறுமணமோ, ருசியோ அதில் இருக்காது. அது கசப்பாக அல்லது புளிப்பாக இருக்கும். இந்நிலையில் அது மரத்திற்குத் தேவைப்படுகிறது. அதன் தேவை காய் பழமாகும்போது நீங்குவதால் பழத்தைக் கீழே தள்ளிவிடுகிறது. மரத்திலிருந்து பழத்திற்குக் கிடைக்க வேண்டிய மொத்த ரசமும் கிடைத்தபின், பழத்திற்கும் மரத்தின் தேவை நீங்கிவிடுகிறது. பழம் முழுப்பலனை, முழுமையை அடைந்து விட்டது. அது யாத்திரைக்கு புறப்படும் (கீழே வீழ்வதற்கான) நேரம் நெருங்கிவிட்டது. மரம் அதற்கு விடைகொடுத்து அனுப்பும். அப்போதுதான் அது தன்னிடமுள்ள ரசத்தை வேறொரு காயில் நிரப்ப ஆரம்பிக்க முடியும்.

வாழ்க்கையின் அனுபவங்கள் மூலமாகவே உனக்கென்ற தனியான வாழ்க்கைப் பணி உருவானால் நீ சிறிது -சிறிதாக சத்வ புத்தியைப் பெற்றுவிடுவாய். நீ பிறகு குரு அல்லது மகாத்மாவிடம் உபதேசம் கேட்கவந்தால் உடனடியாக அதை உள்வாங்கிவிடுவாய். உத்தம லட்சணம் பொருந்திய சாதிக்குதிரை சவுக்கின் நிழல் தெரிந்தாலே கூட நடைபோடும். சவுக்கையே பார்த்திராத குதிரை, சவுக்கால் யாரும் அடிக்காத குதிரை, சவுக்கடி வலியின் அனுபவமில்லாத குதிரை சவுக்கின் நிழல் கண்ட மாத்திரத்தில் நடைபோடாது. சவுக்கால் அடித்தாலும் அது நகராமல் சண்டித்தனம் செய்யும்.

எந்த விஷயம் குறித்து வாழ்க்கையில் நேரடியாக அனுபவம் இல்லையோ, அதைப் புரிந்துகொள்வதோ, அதனுடன் ஒத்துப் போவதோ சிரமம்.

சத்வ புத்தி கிடைக்கப்பெற்றவன் மேலோட்டமான சிறு உபதேசத்தின் மூலம்கூட முழுப்பயன் அடைகிறான். உதாரணமாக, புத்தரின் உபதேசங்களில் ஒன்றில் லயித்தாலும் அதுவே போதும். அவ்வளவு ஏன், புத்தரின் தரிசனமே அந்த மனிதனுக்குப் போதும். அப்போது நிகழும் நயன நாடகத்திலேயே அவனுக்கு எல்லாம் கிடைத்துவிடும். ஞான விழிப்புப் பெற்றவருடன் சேர்ந்து மௌனமாக இரண்டு மணி நேரம் நடந்தாலே போதும். நிபந்தனை என்னவெனில், அவனது வாழ்க்கை அனுபவத்துடன் அந்த மகானின் நெருக்கம் ஒத்துப்போக வேண்டும்.

ஒரு கற்பனை சித்திரம். புத்தர் மரத்தடியில் விழிகளை மூடி, சலனமில்லாமல் உட்கார்ந்திருக்கிறார்கள். நீ சிறுவர்-சிறுமியர் சிலரை அங்கு அழைத்துப்போ. அவர்களின் மீது புத்தரின் தாக்கம் சிறிதும் படியாது. அவர் தான் மகாத்மா புத்தர் என்று சொன்னாலும் அவர்களுக்குப் புரியாது. அவர்கள் அவரைப் பார்த்துச் சிரிப்பார்கள். இந்த ஆள் பொம்மை மாதிரி உட்கார்ந்திருக்கிறாரே என்று கேலி செய்வார்கள். அவர் விசித்திரமாக இருக்கிறார் என்பது தவிர வேறெதுவும் அவர்களுக்குத் தோன்றாது. அவரிடம் கேள்வி எதுவும் கேட்கவும் தோன்றாது. அவர்களது இதுவரையிலான அற்பகால வாழ்க்கையில் புத்தரிடம் கேட்குமளவு கேள்வி எதுவும் கிடையாது; பிரச்சினை எதுவும் எழுந்ததில்லை; சிக்கல் எதுவும் தோன்றியதில்லை;

கஷ்டப்பட்டதில்லை; முள் குத்தியதில்லை. என்ன கேள்வி கேட்பது? எதை அறிந்துகொள்வது?

ஆனால் வாழ்க்கையில் பழுத்தவன், வாழ்க்கையில் களைத்தவன், வாழ்க்கையில் அனுபவங்களின் வழியாகப் பயணித்தவன், வாழ்க்கையின் அர்த்தமற்ற தன்மையை உணர்ந்தவன், அதில் சாரமில்லை என்பதை அறிந்தவன், வாழ்க்கையின் நெருப்பணைந்து சாம்பலைப் பார்த்துள்ளவன்—புத்தர் மொழிந்ததைப் புரிந்துகொள்வான்.

ஒவ்வொரு விஷயத்தையும் புரிந்துகொள்ள சரியானதொரு தருணம் உண்டு. சரியாக அந்த நேரத்தைப் பயன்படுத்தாவிடில் பிறகு அந்த விஷயம் பிடிபடாது. உன் எதிரே வான் காக்கின்* தலைசிறந்த ஓவியம் ஒன்று வைக்கப்பட்டால், அதே சமயம் கலைப்படைப்புகளில் உனக்கு ஈடுபாடு இல்லையெனில், நீ அவர் வரைந்த ஓவியத்தின்மீது பார்வைகூட வீசமாட்டாய்.

உன் எதிரில் ஒருவர் இனிமையாகப் பாடினால், அதேசமயம் உனக்கு இசையில் நாட்டம் இல்லையெனில்; ஒருவர் வீணை மீட்ட உன் உயிரில் துடிப்பு இல்லையெனில், உன்னிடம் இசை எந்த நற்பயனையும் விளைவிக்காது. உள்ளே தயாரிப்பு இருந்தால்தான் வெளியுலகின் பாதிப்பு பிரதிபலிப்பாகும்.

கடல் என்பதை அறிய, அலைகளின் சில திவலைகள் உன் கையில் பட்டால் போதும். சில சமயம் ஒரு தகவல் கேட்டதும் நீ ஆளே மாறிப்போகிறாய். இது திடீரென நடப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் உன்னை அறியாமல் உனக்குள் ஏற்கெனவே தயாரிப்பு, இருந்திருக்கிறது. ஒரு பொறி படுவதற்காகக் காத்திருக்கும் நேரம். கடைசி இணைப்பு மட்டுமே தேவை. யாராவது அல்லது ஏதாவது சம்பவம் 'ஸ்விச்சை ஆன்' செய்தால் போதும். ஞான விழிப்பிலும் கேட்டபிறகு மெதுவாக விழிப்பு ஏற்படுவதில்லை. கேட்கையிலேயே விழிப்பும் சேர்ந்தே நிகழ்கிறது. இதுதான் தலைசிறந்த சாதகனின் நிலை. இதுவே சத்வ புத்தியுடைய சாதகனின் நிலை. அத்தகையவன் புத்தர்.

---

* **Van Gogh (1853-1890)** தலைசிறந்த டச் நாட்டு ஓவியர் அவர் ஆயிரத்துக்கும் மேல் ஓவியப் படங்கள் தீட்டியிருந்தும் அவரது வாழ்க்கைக் காலத்தில் ஓர் ஓவியத்தைதான் விற்க முடிந்தது!

மகாவீரர், கிருஷ்ணர், அஷ்டாவக்ரர் போன்றவர்களின் உபதேசம் கேட்ட பிறகு, சுவாமி! தங்கள் உபதேசத்தை நான் புரிந்துகொண்டேன். அதை வாழ்க்கையில் செயல்படுத்துவது எப்படி?'' என்று கேட்டுக்கொண்டிருக்க மாட்டான். உபதேசம் கேட்கையிலேயே மாற்றம் நிகழ்ந்துவிட்டது. இனி கேட்பதற்கு ஒன்றுமில்லை.

இதோ வாசல் கதவு என்று உனக்குக் காட்டிவிட்டேன். வெளியே போவதானால் இவ்வழியே போ. அதோ தெரிவது சுவர். அதன் வழியே போகாதே. தலை இடித்துக் காயம் படும்.

நீ சொல்வாய், ''சுவாமி! உங்கள் அறிவுரை எனக்குப் புரிகிறது. ஆனால் மனம் என்னவோ சுவர் வழியே தான் வெளியேற விரும்புகிறது! இதிலிருந்து எப்படித் தப்புவது? வாசல் கதவைப் பயன் படுத்த மனம் விரும்பவில்லை. மனத்தை எப்படி வழிக்குக் கொண்டுவருவது?''

அப்படியானால் நீ என் உபதேசத்தைப் புரிந்துகொண்டதாகக் கூறுவது தவறு. அறிவின் மூலம் மட்டுமே அதை நீ புரிந்து கொண்டிருக்கிறாய். என் பேச்சு உன் உயிர்வரை போய்ச்சேரவில்லை. அதற்கு வசதியாக நீ உன்னைத் தளர்த்திக்கொள்ளவில்லை. தற்சமயம் உனக்குச் சுவரில் கதவு இருப்பதுபோல் பிரமை உள்ளது. ஆகவே உன் மனம் சுவர் வழியே வெளியேறமெண்டுமென விழைகிறது. ஆனால் சுவரில் ஏற்கெனவே பலமுறை மோதி அனுபவப்பட்டவன் வாசல் கதவு, சுவர் ஆகிய சொற்களைக் கேட்டதுமே விழிப்புப் பெற்று விடுவான். 'எப்படி, எப்படி' என்று கேட்டுக்கொண்டிருக்கமாட்டான். அனுபவஸ்தன் (சத்வபுத்தி உள்ளவன்) உபதேசத்தைக் கேட்கும்போதே உள்வாங்கிவிடுவான்.

ஓர் ஆச்சரியமான விஷயம், சத்வ புத்தி உள்ளவன் ஞானத்தினால் விடுதலையும், பிறகு அந்த ஞானத்திலிருந்தே விடுதலையும் பெறுகிறான். சாமான்ய புத்தி உள்ளவன் ஞானத்தையே மோகிக்கிறான். இத்தகையவர்கள்தான் இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள் என்றெல்லாம் பல வகைகளாகப் பிரிந்தார்கள். கிறிஸ்தவர்களுக்கு இயேசுவிடமிருந்து முக்தி கிடைக்கவில்லை. மாறாக இயேசுவையே மதத்தலைவராகக் கட்டிப்போட்டுவிட்டார்கள்; கைகளில் விலங்குகள் பூட்டிவிட்டார்கள்.

இந்துக்களுக்கு ராமனிடமிருந்து முக்தி கிடைக்கவில்லை. அவர் முக்தி அளித்திருக்க முடியும். ஆனால் நீ விடுபட்டு வெளியேற விரும்பவில்லை. நீயும் மற்றவர்களும் ராமனையும் சங்கிலியால் கட்டிவிட்டு, அவரது வீச்சைக் குறைத்து, மதத்தில் சுருக்கி உங்களை இந்துக்கள் என்று அழைத்துக்கொண்டீர்கள். சிலர் ஜைனர்களானார்கள் புத்தராக வேண்டியவர்கள் பௌத்தர்களானார்கள், புத்தர் ஆகியிருந்தால் முக்தி கிடைத்திருக்கும். இதனால் மந்திரங்களின், சாஸ்திரங்களின், சித்தாந்தங்களின் பெரியவலைபோல் விரிக்கப்பட்டது. பிறகு என் மதம் சரி, அடுத்தவன் மதம் பொய்யானது என்று மக்கள் தமக்குள் வாதவிவாதம் செய்வார்கள்; சண்டையிட்டுக்கொள்வார்கள். உன் வாழ்க்கை மணக்காது. நீ கூறும் சத்தியத்திற்கு நீயே சான்றாக விளங்கும் தகுதியை நீ அடையவில்லை. உன் மதத்தின் சாஸ்திர நூல்கள்கூறும் வழிமுறைகளைப் பின்பற்றினால் போதும், மோட்சம் கிடைத்துவிடும் என்கிறாய். அப்படி முக்தி கிட்டாது என்பதற்கு நீயே உதாரணமாக விளங்குகிறாய்!

**கி**றிஸ்தவ பாதரி ஒருவர் என்னைச் சந்திக்க வந்தார். இயேசுநாதர் குறித்து நான் கூறியவற்றை அவர் படித்திருக்கிறார். முதலில் என்னை ஒரு கிறிஸ்தவர் என்றே நினைத்திருக்கிறார். அவ்வாறில்லாவிடினும் இயேசுவை நேசிப்பவர் என்று என்னை மதிப்பிட்டு, பார்த்துப் பேச வந்தார். வந்ததுமே அவர், ''நீங்கள் இயேசுநாதரைப் பற்றி நன்கு அறிந்திருக்கிறீர்கள். அவர் மீது மிகுந்த அன்பு செலுத்துகிறீர்கள். இந்நிலையில் நீங்கள் ஏன் கிறிஸ்தவர் ஆகக்கூடாது? உங்களை எது தடுக்கிறது?'' என்று கேட்டார்.

''ஆனால் நான் இயேசு ஆகிவிட்டேனே. இயேசுவாக ஆக முடியாதவர்கள் தாம் கிறிஸ்தவர்கள் ஆகிறார்கள். அந்த நிலைவரைதான் அவர்களால் உயர முடிகிறது.''

அவர் திகைத்துப்போனார். அவரது மனம் சற்றுப் புண்பட்டது போல் தோன்றியது. அவர் சொன்னார்; ''இது நடைபெறவே முடியாத விஷயம். இயேசுநாதர் என்று ஒருவர்தான் உண்டு மற்றவர்கள் அவராக ஆக முடியாது.''

''ஓஹோ, நீங்கள் கார்பன் பிரதியாக ஆவது மட்டும்தான் மிஞ்சியதா? உங்களால் மூல பிரதி ஆக முடியாதா? நீங்கள் இரவல்

வாங்கிய நிலையிலேயேவா தொடர்வது? இயேசு ஆக முடியவில்லையா? சரி. இயேசுவை பூஜை செய்வோம். புத்தராக முடியவில்லை. சரி. புத்தரை பூஜை செய்வோம். ஆனால் நீங்களும் தன்னைப்போல் இயேசுநாதராக ஆக வேண்டுமென்பதுதான் அவரது முயற்சியாக இருந்தது. புத்தரின் அனைத்து முயற்சிகளும் நாம் புத்தநிலையை அடையவேண்டும். என்பதற்காகத்தான் அமைந்தன,'' என்று விளக்கினேன்.

அந்த கிறிஸ்தவ பாதரி கண்ணியமானவர். மேற்கொண்டு வாதம் செய்யாமல் நாகரிகமாக விடைபெற்றார். அப்போது சொன்னார்; ''உங்கள் கருத்து விசித்திரமாக இருப்பினும் நல்ல பணி செய்து வருகிறீர்கள். இயேசுநாதரின் பெயர் பரவ நீங்களும் ஒரு கருவியாக உள்ளீர்கள். நாங்களும் இதைத்தான் செய்கிறோம்.''

அவர் பஸ்தர் பகுதியில் (ஜார்கண்ட்) வசிக்கும் ஆதிவாசிகளை கிறிஸ்தவராக மதம் மாற்றும் முயற்சியைத்தான் குறிப்பிட்டார். ஆகவே அவருக்கு உடனே விடை கொடுத்தனுப்பாமல் நான் தொடர்ந்தேன். ''உங்களுடன் பழகியதில் நீங்கள் மெத்தப்படித்தவர், கண்ணியமானவர் என்றெல்லாம். எனக்கு நிரூபணமானது. நீங்கள் கிறிஸ்தவ சாஸ்திரங்களை முறையாகப் பயின்றவர் என்பதும் புலனாகிறது. ஆனால் உங்களை முன்மாதிரியாகப் பார்த்தால் இயேசுநாதர் அல்லது அவர் கூறியது சரியென்று தோன்றவில்லை. நீங்கள் மற்றவர்களின் மதத்தை, மனத்தை மாற்றும் முயற்சியில் ஈடுபட்டுள்ளீர்கள். ஆனால் நீங்கள் முதலில் உங்களை மாற்றிக்கொண்டீர்களா?''

அவர் ஒரு கணம் தடுமாறிவிட்டார். பிறகு, ''நான் மாறவேண்டிய அவசியம் இல்லை. அப்பொறுப்பை நான் இயேசுநாதரிடம் விட்டுவிட்டேன். அவர்தான் நற்கதி (முக்தி) தருபவர். அவர் என்னை மாற்றுவார். அவரே என் சாட்சி, என் ஆதாரம். உலகின் இறுதிநாளன்று பரமபிதாவின் முன்னிலையில் நான் நிறுத்தப்படும் போது, இயேசு என் சாட்சியாக வந்து, 'இவன் சரியானவன்தான். என் வேலையைத்தான், என் கட்டளைப்படிதான், உலகில் இவன் செய்துகொண்டிருந்தான்' என்று சாதகமாகப் பேசுவார்,'' என்று சமாளித்தார்.

நான் விடவில்லை. ''நீங்கள் இயேசுவின் பணியைத்தான் செய்வதாகச் சொல்கிறீர்கள். ஆனால் அவரைப் போலவே ஆனால்தான் அவரது பணியை அவர் செய்ததுபோலவே நீங்களும் புரிவது சாத்தியப்படும். வேறு ஏதும் வழி கிடையாது. உங்களிடம் நல்ல பாட்டுகள் இருக்கலாம் ஆனால் உங்கள் குரலும் அல்லவா அருமையாக இருக்க வேண்டும். அப்படி அமைந்திருந்தால் நீங்கள் சாதாரணப் பேச்சாகப் பேசினாலும் அது பாட்டுப்போல் இனிமையாக உணரப்படும். இயேசு உங்களுக்கு வாழ்க்கை பந்தங்களிலிருந்து விடுதலைப் பெற்றுத்தருவார் என்கிறீர்கள். தற்சமயம் மற்றவர்களுக்கு முக்தி பெற்றுத் தரும் முயற்சியில் ஈடுபட்டுள்ளீர்கள். நீங்கள் முக்தி பெற்றவரா, இல்லயா?''

அந்த பாதிரி நேர்மையானர். ''தற்சமயம் நான் முக்திநிலையை அடையவில்லை. மற்ற மனிதர்களுக்கு உள்ளதுபோல் எனக்கும் நிறையச் சிக்கல்களும் தொல்லைகளும் உள்ளன,'' என்று ஒப்புக் கொண்டார்.

அவருக்கு விடைகொடுத்து அனுப்புகையில் சொன்னேன். ''இயேசுநாதர் மீது உங்களுக்குள்ள பக்தியால், நீங்கள் சுதந்திரமானவராக ஆகிவிட்டதாக நிரூபியுங்கள். பிறகு, விருப்பம் உள்ளவர்கள் தாமாகவே உங்களிடம் வந்து கிறிஸ்தவராக மதமாற்றம் செய்யும்படி கேட்டுக்கொள்வார்கள். நீங்கள் ஊர் ஊராக அலைந்து, பிரச்சாரம் செய்து, மதமாற்றம் செய்யவேண்டியிராது. கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை கூடி இயேசுநாதர் இனிமேல்தான் மேன்மையடைய வேண்டும் என்ற நிலையில்லை.''

இந்துக்களும் விடுதலை பெறுவதற்காக புனித நூல்களைப் படிக்காமல் அவை தங்களை மேலும் கட்டிப்போட வைக்கிறார்கள். பகவத்கீதையைச் சரியாகப் புரிந்துகொண்டால் வாழ்க்கைப் பிரச்சினைகளிலிருந்து முக்தி பெறலாம். ஆனால் இந்துக்கள் அதை சாஸ்திரமாக ஆக்கி, ஒவ்வொரு சுலோகத்தையும் செங்கல்போல் ஆக்கி, தங்களைச் சுற்றிலும் ஒரு சிறைச்சாலையை நிர்மாணித்து விட்டனர்.

உண்மையாக அறநெறிப்படி வாழ்பவன் (தார்மிகன் எனப்படுபவன்)' எந்த சம்பிரதாயத்துக்கும் உட்பட்டிருக்கமாட்டான்.

அவன் எல்லா வகையான மதக்கோட்பாடுகளிலிருந்தும் விடுதலையடைந்திருப்பான். அவன் சுதந்திர புருஷனாக இருப்பான். தனது உள் லயத்தை உணர்ந்திருப்பான். உள்ளேயிருந்து பெருகும் இசையை ரசிப்பான். உள்ளே ஒலிக்கும் கடவுளின் குரலைக்கேட்டு வாழ்பவனாக இருப்பான். அவனைப் புரிந்து கொள்ள முடியாததால் வெளியுலகில் அவனுக்கு யாரும் ஆதரவாளர் கிடையாது. வெளி ஆதரவு இல்லாதவனுக்குக் கடவுளே உதவிக்கரம் நீட்டுவார்.

சராசரியான, ஆன்மிகம் அறியாதவனான மனிதன் மோகத்தில் ஆழ்ந்திருப்பது இயற்கைதான். ஏனெனில் அவன் ஞானம் பெறுவதற்கு இச்சமயம் உரியவனாகவில்லை. அதற்கான விருப்பத்தை அவன் இன்னமும் வளர்த்துக்கொள்ளவில்லை.

ஒருவன் பணத்தைத் துரத்திக்கொண்டு ஓடுகிறான். பணம் திரட்டிச் சேமித்து வைத்துக்கொள்ள ஆசைப்படுகிறான். சேமிப்பு பாதுகாப்புத் தரும் என நம்புகிறான். நடுவில் மனம் மாறிவிடுகிறது. அவனால் அதிகமாகப் பணம் ஈட்ட முடியவில்லை. சரி, ஞானத்தைத் திரட்டலாமெனச் செயல்படுகிறான். எதன் பின்னால் மனிதன் ஓடுகிறான் என்பது முக்கியமில்லை. எதையாவது துரத்திக்கொண்டு, அதைச் சம்பாதித்துச் சேகரிப்பதற்காகச் சராசரி மனிதன் வாழ்நாள் முழுதும் ஓடிக்கொண்டே இருக்கிறான் என்பதைத்தான் கருத்தில் கொள்ளவேண்டும்.

ஞானம் பெறுவது மிகவும் கஷ்டமானது, அரிதானது என்பது புரிந்ததும் அவன் அரசியலில் பிரவேசித்தான். தான் சேர்ந்துள்ள கட்சிதான் நாட்டிற்கு நல்லது செய்யக்கூடியது, அமைதியை நிலைநாட்டக்கூடியது என்று பிரசாரம் செய்வதில் ஓடி அலைந்தான். தனது உழைப்பிற்கேற்ற மதிப்போ, பலனோ கிடைக்காமல் போனதால் அவன் அரசியலைவிட்டுப் பாதியிலேயே விலகினான்.

அடுத்து அவன் மதபிரச்சாரத்தில் தீவிரமாக ஈடுபட்டான். இந்துதர்ம பிரசாரகர் ஆனான். 'இந்துமதம்தான் உலகிற்கே முக்தி தர வல்லது' என்று அவன் எங்கும் முழங்கினான். இதுவும் ஒருவகை அரசியலாகிவிட்டதால் அவன் பிரச்சாரத்தைப் பாதியில் கைவிட்டான்.

நீ எந்தெந்தத் துறையில் இருந்துவிட்டுத் திரும்பிவிடுகிறாயோ, அதன் தாக்கம் உன் மீது படிந்திருக்கும். அது உன் வாழ்க்கையில்

ஒருவிதமான கோணலை உண்டாக்கியிருக்கும். ஆகவே எதையும் பாதியில் விட்டுவருதல் சரியில்லை. பாவமும் ஓர் அனுபவம். அதன் மூலம் புண்ணியம் எது என்று அறிந்துகொள்கிறோம். உலக அனுபவம் கட்டாயம் தேவை. நாம் வாழ்க்கையில் வலி, வேதனை என்றெல்லாம் துன்ப நெருப்பில் கஷ்டப்பட நேரிடுகிறது. நெருப்பில் புடம்போட்ட பின்தான் தங்கம் ஒளிர்கிறது; அழுக்கு நீங்கி சுத்தமாகிறது. ஆகவே ஒரு துறையில் பிரவேசித்தால் அவசரப்பட்டுத் திரும்பிவராதே. எல்லாவற்றையும் பாதியில் நிறுத்திவிடுபவன் வீட்டிலும் இல்லாத, காட்டிலும் இல்லாத நிலையை அடைவான். அவன் உலகத்திலும் வெற்றி அடையாமல், கடவுள் அறிவும் பெறாமல் திரிசங்கு நிலையில் இருப்பான்.

நிறையப் பேர் ஒரே சமயம் இரண்டு படகுகளில் சவாரி செய்ய முயல்வதை நான் பார்த்துள்ளேன். உலக வாழ்க்கையும் வாழ ஆசை. ஏனெனில் உலக இன்பங்களிலிருந்து மனம் விடுபடவில்லை. அதற்காகக் கடவுளையும் விட தயாராக இல்லை. ஏனெனில் கடவுளிடம் பயம். சிறுவயதிலிருந்தே நீ கடவுளை பற்றி பயமுறுத்தப் பட்டிருக்கிறாய். உனக்குப் பேராசை காட்டப்பட்டிருக்கிறது. சுவர்க்கம் பற்றிய பேராசை, நரகம் குறித்து பயம் ஆகிய இரண்டும் உன்னைக் கட்டிப்போட்டுள்ளது. எனவே நீ ஊசலாடுகிறாய்.

நீ இந்தத் தடுமாற்றத்தைக் கைவிடு. உலகிலிருந்து விடுபட உலகில் முழுமையாக மூழ்கு! மயக்க நிலையில் அல்ல, உலகைச் சரியான முறையில் அனுபவி. நினைவை இழக்காமல் பெறும் அனுபவம் உலகைக் கனவென்று புரியவைக்கும். பிறகு உனக்கு சத்வ புத்தி உண்டாகும். உலகம் கனவென அறிவதே சத்வ புத்தி தோன்றியதன் அடையாளம்தான். அடுத்த கட்டமாக நீ பரமசத்யத்தை அறிந்துகொள்வதற்கான தயார் நிலைக்கு வருகிறாய். உன் சுயமான அனுபவத்தினால் உலகம் கனவென அறிந்ததும் ஒரு ஸத்குரு கூறும் சிறு உபதேசமும் உன்னை அதிரவைத்து முழு விழிப்புப் பெறச் செய்யும். இதற்கெல்லாம் தயாராக இல்லாதவன் உலகத்திலேயே சிக்கிக்கிடப்பான்.

**மாலையில் சூரியன் மறைந்ததுமே**
**மேய்ச்சல் நிலத்திலிருந்து என்னை**
**வீட்டிற்குத் திரும்ப இழுக்காதீர்கள்**

மாலைநேரம் ஆனதும் இடையர் பசுவைத் திரும்ப ஊருக்கு இட்டுச்செல்ல முயலும்போது அது இவ்வாறு அவனிடம் கெஞ்சுகிற தாம். அது மேய்ச்சல் காட்டிலிருந்து வெளியேற இஷ்டப்படவில்லை. காட்டில் பசும்புல் எங்கும் படர்ந்திருக்கிறது. மற்ற காட்சிகளும் கவர்ந்திழுக்கின்றன.

**விரிந்த வானின் கீழ், பரந்த பூமியில்**
**சுதந்திரமாக உலவித் திரியவும்,**
**தடையற்ற காற்றை சுவாசித்தபடி**
**தங்க வெயிலில் உடல் குளிக்கவும்,**
**நீலமணி அலைகளில் நுழைந்து**
**தாகம் தணித்துக் கொள்ளவும்,**
**அடர்ந்த மரத்தின் குளிர் நிழலில்**
**கண்களைப் பாதியாய் மூடியபடி**
**கனவு படைக்கும் சுகத்திலிருந்து**
**மனதைத் திருப்பி ஊர் திரும்ப**
**மனம் வரவில்லை எனக்கு**

மனம் பாதிதான் நிரம்பியுள்ளது. ஏதோ கயிறு கட்டிப் போடுகிறது. கனவின் சுவை இன்னும் மிஞ்சியுள்ளது. உலகின் சாரம் மிஞ்சியிருக்கிறது. உலகில் ஏதோ இருக்கத்தான் செய்கிறது. இல்லாவிட்டால் இத்தனை பேர் பணத்தின் பின்னால், பதவியின் பின்னால், பலவகையான இன்பங்களின் பின்னால் ஓடுவார்களா? ஒருவேளை அவர்களின் கண்ணோட்டம் சரியாகத்தான் இருக்குமோ? ஆனால் துறவும் இன்பமயமானது. நான் காட்டைத் துறந்து வீட்டிற்கு ஏன் திரும்பிச் செல்லவேண்டும்?

1976இல் ஒரு சம்பவம். ஒரு பெண்மணி ஒரு பஸ்ஸில் ஏறினாள். அவள் கண்டக்டரிடம் எட்டணா நாணயம் கொடுத்தாள். கண்டக்டர் அதை உற்றுப் பார்த்தபின் செல்லாத நாணயம் என்று திருப்பித் தந்துவிட்டார். அப்பெண்மணி கண்ணாடி அணிந்துகொண்டு நாணயத்தை ஆராய்ந்தாள். "இது செல்லாக் காசாக இருக்க முடியாதே" என்றாள். "எந்த அடிப்படையில் அப்படிச் சொல் கிறீர்கள்?" என்று கண்டக்டர் கேட்டார்.

அவள் சொன்னாள், "நல்லா பாருங்க. இந்தக் காசில் 1976 என்று போட்டிருக்கிறது அல்லவா? அப்படியானால் இது 1900லிருந்தே

செல்லுபடியாகக்கூடிய காசு என்றுதானே அர்த்தம். இப்போது 76 வருஷமாகிறது. செல்லாக் காசாக இருந்தால் 76 வருஷமாகப் புழக்கத்திலிருந்திருக்க முடியுமா?''

பாவம், கண்டக்டர் எத்தகைய அதிர்ச்சியை அடைந்திருப்பார் என நாம் ஊகிக்களம்.

இதுபோன்ற கருத்து உலகம் பற்றியும் கூறப்படுகிறது.

உலகம் தொடர்ந்து இயங்கிவருகிறது. அது பொய்யாக இருந்தால் இத்தனை ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நீடிக்க முடியுமா? எண்ணமுடியாத கோடிக் கணக்கான மக்கள் வசித்திருக்க முடியுமா? எல்லோரும் ஓட்டமாக ஓடி வாழ்க்கையை முடித்துக் கொண்டிருக்கிறார்கள். மகான்கள் சொல்வதை யார் காதில் போட்டுக் கொள்கிறார்கள்? மகான்களில் சிலர் பைத்தியமாகக் கூட இகழப்பட்டிருக்கிறார்கள். கோடி-கோடி மக்களில் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவுதான் தோன்றியுள்ள இந்த மகான்கள்தாம் உலகைப் பெருங்கனவு என்கிறார்கள். கோடி-கோடி மக்கள் தப்புக் கணக்குப் போடுவார்களா? இந்தச் சில மகான்கள் கூறுவதுதான் தப்பாக இருக்கும்.

இப்படி மதிப்பீடு செய்வது தர்க்கத்திற்குப் பொருந்திவருகிறது. துல்லியமாகவும் உள்ளது.

இதுவோ ஜனநாயக யுகம். இந்த யுகத்தில் கோடிக் கணக்கானவர்கள் சொல்வது-கருதுவது தவறாக இருக்காது. அவர்களுக்கு எதிராக ஒற்றைமகான் கூறுவது எடுபடுமா? ஜனநாயக யுகத்தில் எண்ணிக்கைதான் எது உண்மை என்பதைத் தீர்மானிக்கிறது. தனிமனிதனுக்குப் பதிலாக மந்தை மந்தையான கூட்டம்தான் உண்மையை முடிவுசெய்கிறது. எத்தனை தலைகள் ஆமோதிக்கின்றன என்பதைவிட எத்தனை கைகள் உயர்கின்றன என்பதே கவனிக்கப்படுகிறது.

ஜனநாயக யுகத்தில் நடக்கும் தேர்தல் ஒன்றில் புத்தரை நிறுத்திப்பார். அவருக்கு டெபாசிட்கூட திருப்பிக் கிடைக்காது. புத்தரின் பிரச்சாரத்தை யார் கேட்டு நம்புவார்கள்? அவர் எங்குமில்லாத கற்பனை உலகம் ஒன்றைப் பற்றி அல்லவா பேசுகிறார் எனத்

தோன்றுகிறது. கற்பனையான இந்த உலகம் மக்களுக்கு நிஜம்போல் காட்சி தருகிறது. எனவேதான் புத்தர் காட்டும் நிஜமான உலகத்தை மக்கள் கற்பனைப் படைப்பென நினைத்துவிடுகிறார்கள். போலியான உலகைவிட்டு புத்தர் காட்டும் நிஜ உலகிற்கு மக்களால் வரமுடியவில்லை. நாம் தொடர்ந்து துன்பங்களுக்கு ஆளானாலும் நாளடைவில் அவை பழக்கப்பட்டுப் போய்விடுகின்றன. அவற்றுடன் நமக்கு நட்புகூட ஏற்பட்டுவிடுகிறது!

நீ பார்த்திருப்பாயே, நீண்ட காலமாக நோயில் படுத்திருப் பவருக்கு படுக்கையைக் கைவிட மனம் வருவதில்லை. முதலில் நோயால் வருந்தியவர் அது பழக்கப்பட்டபின் நோயிலும் சுகம் காண ஆரம்பிக்கிறார். படுக்கையைச் சரிப்படுத்திக்கொண்டு அதில் அவர் அதிகாரமாய்ச் சாய்ந்திருக்கிறார். வேலைக்குப் போகவேண்டியதில்லை. பொருட்கள் வாங்கக் கடைத்தெருவில் அலைய வேண்டியதில்லை. என்றும் அடங்காத மனைவி காலைப்பிடித்து உருவிவிடுகிறாள்! மகன்-மகள் சொன்ன பேச்சைக் கேட்கிறார்கள். சிறு குழந்தைகள் சத்தம் போடுவதில்லை. ஓசை எழுப்பாமல் நடக்கிறார்கள். அலட்சியப் படுத்திய நண்பர்களும் உறவினர்களும் பார்க்கவருகிறார்கள். அவர் மீது அன்புமழை பொழிகிறது. அவர் திடீரென முக்கியமான மனிதராகி விடுகிறார்.

டாக்டர்களுக்கு இந்த விஷயம் தெரியும். சுமார் இரண்டு ஆண்டுகள் ஒருவர் நோய்ப்படுக்கையில் நீடித்தால், பிறகு வியாதி குணமாகி உடல் சாதாரண நிலைக்கு வந்தாலும் மனம் நோயாளியாக நீடிப்பதில் சுகம் காண்கிறது. இது ஆபத்தான விஷயம். மனத்தின் தூண்டுதலால் நீ உனக்கு வேறு பல நோய்கள் வந்துவிட்டதாகக் கூறத் தொடங்குவாய். நீ தொடர்ந்து நோயாளியாகவே இருந்து குடும்பத்தினரின் கவனிப்பையும் அனுதாபத்தையும் தொடர்ந்து பெறவே விரும்புவாய். நோய் உனது சுயநல விழைவிற்குத் திருப்தி தருகிறது. துன்பமும் சுகம் கொடுக்கிறது. முள்ளும் மலராகச் சூடப்படுகிறது. நீண்ட காலம் துன்பத்திலேயே ஆழ்ந்தால் துன்பமே உனக்குத் தோழனாகிவிடுகிறது. நோயின் காரணமாக நீ தனிமைப் படுத்தப்பட்டதாக உணரமாட்டாய். நோயுடனேயே கற்பனையில் பேசிக் களிப்பாய். மற்றவர்களுடன் பேசுவதற்கு விஷயம் கிடைத்து விடுகிறது.

ஒரு பெண்மணி ஒரு டாக்டரைச் சந்தித்தாள். ''எனக்கு ஏதாவது ஆபரேஷன் செய்யுங்கள்,'' என்றாள். டாக்டர் திகைத்தார்.

"ஏதாவது ஆபரேஷனா? என்ன ஆபரேஷன்? உங்களுக்கு என்ன உடம்பு?"

"உடம்புக்கு ஒன்றுமில்லை. ஆகவே உங்களுக்கு இஷ்டமான ஆபரேஷன் எதுவேண்டுமானாலும் செய்யலாம், டாக்டர்."

"என்னம்மா இப்படிச் சொல்றீங்க? ஆபரேஷன் செய்யறதுக்கு ஏதாவது காரணம் வேண்டாமா?"

"டாக்டர், அக்கம்பக்கத்துப் பெண்களோடு நான் பேசும்போது யார் யாருக்கு என்னென்ன ஆபரேஷன் நடந்திருக்குன்னு பெருமை அடிச்சுக்கிறாங்க. ஒருத்தி டான்சில் எடுத்தாச்சு என்கிறாள். இன்னொருத்தி அப்பெண்டிக்ஸ் எடுத்தாச்சு என்கிறாள். என் உடம்பிலேந்து இதுவரை எதுவும் எடுக்கலை. அவங்க கிட்ட பேசறதுக்கு வசதியா எதையாவது ஆபரேஷன் செஞ்சு வெளில எடுத்துப்போடுங்க. அது மட்டுமில்ல, எனக்கு ஆபரேஷன் நடந்தா அக்கம் பக்கத்துக்காரங்க வந்து அனுதாபம் காட்டுவாங்க. நான் பெரிதாக எதையோ சாதித்துவிட்டதுபோல் விசாரித்துப் பாராட்டுவாங்க,'' என்று அவள் கூறி முடித்தாள்.

நீ பார்த்திருப்பாயே கஷ்டத்தைச் சொல்லும்போது அவர்களின் கண்ணில் ஆவலும் எதிர்பார்ப்பும் தென்படும். அவர்களின் கஷ்டத்தைக் கூறும்போது நீ பராக்கு பார்த்துக்கொண்டிருந்தால் அவர்களுக்குச் சினம் மூளும். காரணம், ஒருவர் துன்பத்தைக் கூறுகையில் கதைச் சுவையுடன் தான் வர்ணிப்பார். அதை மிகைப்படுத்துவார். சிறிய அளவிலான துன்பமானால் அதைக் கேட்கும் ஆர்வம் யாருக்கும் எழாது. அவ்வாறு அவர்கள் பெரிதுபடுத்திக் கூறுகையில் நீ எந்த அளவுக்குக் கலவரப்படுகிறாய், உன் முகம் எப்படியெல்லாம் மாறுகிறது என்றும் கவனிப்பார்கள்.

இப்படி துன்பத்தை நேசிப்பது முரண்பாடில்லையா? ஆச்சரியமில்லையா? சிரங்கைச் சொறிவதில் பெறும் குறுகுறுப்புப் போன்றது. அதில் ஒரு சுகம், ஒரு திருப்தி கிடைக்கிறது. தவிரவும், துன்பம் நாம் உளதாயிருத்தலை **(exist)** நிருபிக்கிறது. துன்பம் நாம்

இருக்கிறோம் என்பதை நமக்கும் உலகுக்கும் உணர்த்துகிறது. தலைவலி தோன்றும் பொழுதுதான் நமக்கு தலை இருப்பது நினைவுக்கு வருகிறது. இதுபோல், துன்பம் காரணமாக, ஏதோ நாமும் இருக்கிறோம் என்னும் உணர்வு மேலிடுகிறது. துன்பம் இல்லாவிடில் நமது வாழ்க்கை நிஜமா அல்லது கனவா என்றுகூட பிரிக்க முடியாது. முள் குத்தாவிடில் காலிருப்பதே தெரிவதில்லை.

துன்பம் நம்மை வாழ்க்கையின் யதார்த்தத்துடன் இணைக்கிறது. இதை என் சீடர்கள் மூலம் அறிய எனக்குப் பல வாய்ப்புகள் கிடைத்திருக்கின்றன. இங்கே தியானம் பயிலச் சிலர் வருகிறார்கள். மூன்று-நாலு மாதம் தொடர்ந்து பயிற்சி செய்தால் தியானத்தில் ஆழமாக இறங்க முடிகிறது. ஒரு கட்டத்தில் அபூர்வமான சுக உணர்வு அலை அலையாக மனத்தில் பரவும். அவர்கள் என்னிடம் வந்து 'இது என்ன அனுபவம்-கனவா, கற்பனையா?' என்று கேட்கிறார்கள்.

நான் அவர்களிடம் சொன்னேன், "நீங்கள் இதுவரையிலான வாழ்க்கையில் தொடர்ந்து துன்பங்கள் அனுபவித்திருக்கிறீர்கள். ஆனால் அவற்றை நீங்கள் கனவாக இருக்குமோ, கற்பனையாக இருக்குமோ என்று சொன்னதில்லையே! முதல்முறையாக தியானம் மூலம் உண்மையான சுகத்தை நீங்கள் அனுபவிக்கையில் அது கற்பனையோ என்று உங்களுக்கு ஐயம் எழுகிறது. அந்த சுகம் உண்மையாக இருக்கும் என்பதை நம்ப மனம் தயங்குகிறது. அதைப் பொய்யென ஒதுக்கிவிடலாமா என்று விருப்பம் தோன்றுகிறது. மாறாக, துன்பத்தை ஒப்புக்கொள்ளுதல் இயற்கையாகத் தெரிகிறது. அது நீண்டகாலமாக நம் இணைபிரியாத் தோழன். துன்பத்துடன் உனக்கு நல்ல அறிமுகம் உண்டு. சுகத்துடன்தான் உனக்குச் சரியான பரிச்சயம் இல்லை. உனக்கு சுகம் என்றால் என்ன? என்பது தெரியாது. ஆகவே முதல் தடவையாக சுகம் எதிர்ப்படும்போது நீ தடுமாறுகிறாய்.

இன்னொரு விஷயம் நினைவில் வை. நீ சுகமாக இருக்கும் தருணத்தில் உன் அகங்கார உணர்வு நீங்கி விடுகிறது. அகங்கார மின்மைதான் சுகத்தின் அடையாளம். அகங்காரம் மிஞ்சியிருந்தால் உன் சுகமும் ஒருவகையான துக்கம்தான். துன்பம் அகங்காரத்தைப் பாதுகாக்கிறது. சுகம் அதைச் சிதறடிக்கிறது. சுகம் அனுபவிப்பவன் அகங்காரமற்றவனாகிவிடுகிறான். சுகம் மனிதனை ஒருவிதமான

மயக்கத்தில் ஆழ்த்துவதால் தன்னை மறக்கிறான். அப்போது அவனது அகங்காரம் காணாமல் போய்விடுகிறது. தியானத்தின் மூலம் கிடைத்த சுகத்தின் விளைவென்ன? முன்பு துன்பமயமாக இருந்த உன் வாழ்க்கையும், துன்பத்தை அணு அணுவாக உணர்ந்ததால் உனக்கு மேலிட்ட 'நான்' என்னும் அகங்கார உணர்வும் ஆகிய இரண்டும் கழிந்துபோகின்றன. தியான சுகம் உன்னை அலைபோல் வேறு கரைக்குக் கொண்டு சென்றுவிட்டதால், பழைய, பழக்கமான கரையைக் காணோமே என்று குழம்புகிறாய்.

புதிய சுகம்-தியான சுகம்- கிடைக்கத் தொடங்கிவிட்டதல்லவா? துக்க உணர்வைக் கைவிடு. நான் சொல்வது வேடிக்கையாகத் தோன்றலாம். என்னைச் சந்திக்க வருவோரும், ''துக்கப்படுவதைக் கைவிடவே நாங்களும் விரும்புகிறோம்,'' என்கிறார்கள். அவர்களது விருப்பம் உள்ளத்தின் ஆழத்திலிருந்து சுரப்பதாக நான் காணவில்லை துன்பத்தை நீ பிடித்துக்கொண்டிராவிடில் அது நீடிக்க முடியாது. நீ அதைப் பாதுகாக்காவிடில் அது மிஞ்சியிருக்க முடியாது. உண்மையிலேயே உனக்குத் துன்பத்தைக் கைவிடுவது சம்மதம்தானா? அது ஒரு புரட்சிகரமான நடவடிக்கையாயிற்றே. உன்னால் அதை மேற்கொள்ள இயலுமா? துன்பம் நீங்கினால் அதை ரசித்து அனுபவித்த நீ-உன் அகங்காரம்-இருக்க முடியாது. சம்மதமா? உன் துன்பங்களின் கூட்டுத்தொகைதான் உன் அகங்காரம் என்பது.

இப்படியும் சொல்லலாம். உனக்கு வயிற்றில் பசித்துன்பம் அல்லது வலி இருக்கும் போதுதான் உனக்கு வயிறு இருப்பதே ஞாபகம் வருகிறது. தலைவலிக்கும்போது தலை இருப்பதை உணர்கிறாய். நீ உன்னை உடலென்று நினைத்தபோதிலும் வலிக்கும்போதுதான் சம்பந்தப்பட்ட உறுப்பு உனக்கு இருப்பதை நினைவு கூருகிறாய். அதாவது, ஞானிகள் கூறுவதுபோல், நீ வலியை உணரும்போது நீ என்று ஒருவன் இருப்பதையும் உணருகிறாய். ஒரு துயரமும் வேதனையும் இல்லாத நிலையில் நீ இருப்பதை நீயே உணர்வதில்லை. அந்த நிலை பயமூட்டுகிறது. உருவம் என நீ உன்னை நினைக்கையில் நீ அருவமாகிப்போனால் திடுக்கிடுகிறாய். நீ இருப்பதை மீண்டும் நிலைநாட்டிக்கொள்ள நீ வேண்டுமென்றே துன்பங்களைப் பிடித்துவைத்துக் கொள்கிறாய். இக்கரையிலேயே- துன்பக் கரையிலேயே - நீடிக்க விரும்புகிறாய்.

துன்பம் பற்றி இத்தனை ஆழமாக அலசி ஆராய்ந்தால்தான் 'நானே ஒரு துன்பம் தான்; நான் இருப்பது துன்பத்தால் நிரூபிக்கப்படுகிறது; துன்பம் இல்லையேல் நான் என்னும் உணர்வு நீங்கி நானே காணாமல் போய்விடுவேன்!' என்று தெளிவாகிறது.

இந்தத் தெளிவு உண்டானபின் ஒருவன் சத்குருவை நாடினால் அவர் மேலோட்டமாக உபதேசித்தாலே போதும். அவனது உள்ளத்தில் ஆன்மிகப் புரட்சி மூளுகிறது.

**உரிய காலம் வரும் போது**
**எல்லாம் பொய்யெனப் புரிந்துவிடும்**
**எல்லாம் போலியெனத் தெரிந்து விடும்**
**எல்லாம் வெற்றிடமாய்க் காட்சி தரும்**
**இதுவரை பார்த்த எல்லாமும்**
**மாயமோ, மந்திரமோ என மனம் மருளும்**
**இதுவரை கேட்டவை எல்லாமும்**
**கனவொலியோயென மனம் குழம்பும்**

இந்த நிலைக்கு நீ வந்துவிட்டால் நீ சத்குருவை நாடும் பக்குவம் பெற்றுவிட்டதாக அர்த்தம். அதற்குமுன் நீ கேட்டது எல்லாம், புரிந்துகொண்டது எல்லாம் புத்தியில் அடிப்படையில்தான். அந்த அறிவு உன்னை ஞானத்திற்கு இட்டுச்செல்லாது.

சத்குருவிடம் நீ வந்துசேர்ந்தமை அர்த்தமுள்ளது. முடிவில்லாத நெடும் பயணத்துக்கு நீ தயாராகிவிட்டாய் என்பது அதன் பொருள். ஓர் எல்லைக்குள் இதுவரை அடைந்திருந்து நீ சலித்துவிட்டாய். அந்த எல்லை எது என்பது உனக்குத் தெரிந்துவிட்டது. வெளியுலகம் அலுத்துப்போனது. வெளியே எதுவும் இல்லை. உன் கையில் எதுவும் மிஞ்சவில்லை. இனி உள்முக யாத்திரைக்கே வாய்ப்புள்ளது. இந்த உலகிலிருந்து எதையும் எடுத்துச்செல்ல முடியாது என்பதை உணர்த்தவே அலெக்ஸாந்தர் தான் இறந்தபின் சவப்பெட்டிக்கு வெளியே தன் கைகளை விரித்த நிலையில் வைக்கச் சொல்லியிருந்தார். வெளியுலகில் எதையெல்லாம் பார்க்க முடியுமோ, பார்க்க வேண்டுமோ, பார்த்தாகிவிட்டது. பார்க்காத பொருள் உள்ளே மறைந்திருக்கிறது. அதைப் பார்க்க வேண்டுமென்று ஆவல் மேலிடுகிறது. வாழ்கையின் சாரமும் ரகசியமும் அதில்தான்

பொதிந்திருக்கிறது. என நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் மனத்தில் வெளியுலகக் கவர்ச்சி ஒரு பருக்கையளவு ஒட்டியிருந்தாலும் மனம் உள்ளே யாத்திரையைக் கைவிட்டு உலகிற்குத் திரும்பிவிடும்.

ஒரு வேடிக்கை. மற்ற சமயங்களைவிட தியான நேரத்தில் மனம் அதிகமாகக் குரங்காட்டம் போடுகிறது. தியானம் செய்யக் கண்களை மூடு. உடனே மனம் ஒடுங்காமல் வெளியுலகத்திற்கு ஓடிவிடும். உணவை நாடி, பணத்தைத் தேடி, பெண்களை விரும்பி, அல்லது வேறு ஏதாவது ஒன்றைத் துரத்தியபடி மனம் வாழ்க்கை காலத்தைக் கழிக்கிறது. கண்களைத் திறந்துவைத்திருக்கையில் மனம் இவ்வளவு அதிகம் சலனப்படுவதில்லை. கண்ணில் படும் பொருட்கள் கவனத்தைக் கவர்வதால் புலனாசைகள் நினைவில் இருப்பதில்லை. தியானத்தைத் தொடங்கியதும்தான் மனம் ஓட ஆரம்பித்துவிடுகிறது. எல்லா திசைகளிலும் ஓடுகிறது. இதுவரை மறந்து போயிருந்த எண்ணங்களும் நிகழ்ச்சிகளும் மீண்டும் நினைவிற்கு வருகின்றன. முடிந்துபோன பழைய கதைகள் என நீ நினைத்தவை மீண்டும் உயிர் பெறுகின்றன. தியான நேரத்திலும் உன் எண்ணமெல்லாம் உலகப் பொருட்களிலேயே ஈடுபடுகிறது.

**உறங்கும் விழியை விசாலமாய் விரி**
**நீ பொகும் இடமோ வெகு தொலைவு**
**அசையாத இமயத் தொடரில்**
**பூகம்பமே ஏற்பட்டாலும்,**
**பிரளய வெள்ளக் கண்ணீருடன்**
**வானத்து நீரும் வந்து கலந்தாலும்,**
**கருமேகத்தின் அடர் இருட்டு**
**ஒளி முழுதும் குடித்துவிட்டாலும்,**
**மின்னல்கள் வீசி, இடிகள் முழங்கினும்,**
**இவையெல்லாம் உன்னைக் கட்டுப்படுத்தா**
**மெழுகால் எதையும் கட்ட முடியுமா?**
**வண்ணத்துப் பூச்சிகளின் வண்ணச் சிறகுகள்**
**பாதையில் போவதைத் தடுக்க முடியுமா?**
**வண்டின் மதுர ரீங்காரத்தில்**
**உலகின் அழுகை ஒலி மறையுமா?**
**பனி படர்ந்த பூவின் இதழ்களால்**
**உன்னை வீழ்த்தி நசுக்க முடியுமா?**

**உன் நிழலையே நீ சிறையாக்கி**
**உன்னை அதற்குள் பூட்டாதே**
**உறங்கும் விழிகளை விசாலமாய் விரி**
**நீ போகும் இடமோ வெகு தொலைவு**

உள்நோக்கிய பயணம் மிக நீண்டதாகும். சந்திரனைக்கூட சென்றடையலாம். உள்முகப் பயணத்தின் முடிவிடத்தை அடைவது அதைவிடக் கடினம். இமயமலையில் கைலாச சிகரத்தை அடைவதுகூட அத்துணை கடினமன்று.

உள்முகப் பயணம் ஏன் கடினமென்றால் மனம் வெளிநோக்கிய பயணத்தில் ஈடுபட்டுள்ளது. வெளியுலகில் மிஞ்சியுள்ள நூற்றுக் கணக்கான வேலைகள் நினைவில் எழுகின்றன. வெளிக் கவர்ச்சிகள் பலவற்றில் மனம் சிக்கிக்கொண்டுள்ளது. உலக இன்பங்களின் சுவை இன்னும் திகட்டவில்லை. பிறகு சிந்தனை நதி உள்முகமாக எப்படிப் பாயும்? வெளியுலகத் தொடர்புகள் யாவும் அனுபவம் மூலம் அர்த்தமற்றவை என்று தெரிந்துகொண்டபின் சிந்தா நதி உள்முகமாகத் திரும்பும்.

இன்பம் அனுபவி. சரியான, உரிய முறையில் அனுபவித்தால் நீ யோகி ஆகாமல் இருக்க முடியாது. போகத்தின் (அனுபவங்களின்) கடைசிக் கட்டம் யோகம். ஆகவே நான் அவற்றை பரஸ்பரம் முரணானவை என்று கூறுவதில்லை. போகத்தை யோகத்திற்கான தயாரிப்பு என்று கூறலாம்.

இதேபோல் நாத்திகமும் ஆத்திகமும் ஒன்றிற்கொன்று எதிரியென்று நான் கூறுவதில்லை. ஆத்திகத்தின் உச்சியை அடைய உதவும் படிக்கட்டு என நாத்திகத்தைக் கருதலாம். நாத்திகம் 'இல்லை' என்று சொல்லும். அவ்வாறு சொல்வதனால் விளையும் துன்பங்களை அனுபவி. அவ்வாறு சொன்னதால் உயிரில் முள்போல் குத்தினால் வலியை அனுபவி. அழு. துடி. அப்போது உன் உள்ளேயிருந்து 'உண்டு' என்ற உணர்வு மேலிடும்; ஆத்திகம் தலைதூக்கும். அவசரம் ஏதுமில்லை. இந்த மாறுதல்கள் சட்டென ஏற்படுபவையும் அல்ல. உன் மனம் எதில் லயிக்கிறதோ அதை அதில் செல்ல விட்டுவிடு. அந்த இன்பச் சுவை வாந்தி எடுக்குமளவு திகட்டிப் போகும்வரை அதிலேயே நீடித்திரு. இவ்வளவு துணிந்து முயன்றால்தான் சத்வபுத்தி பிறக்கும்.

குர்ஜியேஃப் ஒரு நூலில் தன் வாழ்க்கை சம்பவம் ஒன்றை எழுதியுள்ளார். 'சிறுவயதில் குறிப்பிட்ட வகையானதொரு பழம் எனக்குப் பிடிக்கும். அதில் நிறையச் சாறு இருக்கும். ஆனால் அதைச் சாப்பிட்டால் வயிற்றுவலி உண்டாகும். சிறுவர்களென்ன, வளர்ந்தவர்களும் ஆசையை அடக்க முடியாமல் அதைச் சாப்பிடுவார்கள். பிறகு வயிற்றுவலியால் துடிப்பார்கள். என் தந்தை என்னை எவ்வளவோ தடுத்துப் பார்த்தார். நான் வழிக்குவரவில்லை. நான் திருட்டுத்தனமாகவும் அந்தப் பழத்தைச் சாப்பிடுவதுண்டு.

'ஒருநாள் என் தந்தை ஒரு சிறு கூடையில் அந்தப் பழங்களை நிரப்பி என் எதிரில் வைத்தார். கையில் ஒரு தடியும் வைத்துக்கொண்டு, "உம், சாப்பிடு. கூடை பழத்தையும் சாப்பிட்டாக வேண்டும். நடுவில் நிறுத்தினால் பலத்த அடி விழும்," என்று அதட்டினார்.

'முதலில் சில பழங்களை சந்தோஷமாக ரசித்தும் சாப்பிட்டேன் பிறகு வயிற்றில் வலி எடுத்தது. வாந்தி எடுத்தேன். வயிற்றுப்போக்கு ஏற்பட்டது. பதினைந்து நாள் நோயாளியாக இருந்தேன். அத்துடன் அந்தப் பழத்தின் மேலான ஆசையிலிருந்து விடுபட்டேன். பிறகு அந்தப் பழம் மரத்தில் தொங்குவதைப் பார்த்தாலும் வயிறு வலித்தது. கடைத்தெருவில் பார்க்க நேர்ந்தால் கண்களை மூடிக்கொண்டேன். முன்பு எவ்வளவு விருப்பம் இருந்ததோ அந்த அளவிற்கு வெறுப்பு உண்டானது.

பாதி போகம், பாதி யோகம் சாத்தியமில்லை. எனது பயிற்சி முறையில் சீடர்களை அவர்கள் இருக்கும் நிலையிலிருந்து அவசரமாக வெளியே இழுக்க நான் ஆசைப்படுவதில்லை. நீ இல்லறத்தில் இருக்கிறாயா? அப்படியே இரு. இன்பத்தில் ஆழ்ந்துள்ளாயா? அதைத் தொடரு. ஒன்றை நினைவில் வை. நீ எந்த நிலையில் உள்ளாயோ அது தொடர்பான அனுபவத்தை முடிந்த அளவிற்கு ஆழமாக அனுபவி. ஒரு கட்டத்தில், ஒருநாள், அந்த அனுபவம் திகட்டிப்போய் உனக்குள் ஆன்மிகப் புரட்சியைத் தூண்டிவிடும். அப்போது பின்வருமாறு பாடத் தோன்றும்:

**ஒவ்வொரு நாளும் புத்தம் புது நாள்**
**படகும் புதிது - ஆனால்**
**கடல் பழையது, கரை பழையது**

**ஒவ்வொரு நாளும் புது-புதுப் பருவம்**
**ஆனால் வலி பழையது,**
**கண்ணீர் பழையது**

**மொத்த நெருப்பையும்**
**ஒரே தடவையில் மூட்டிவிடு**
**தினம்-தினம் சிறிதளவாய்**
**ஏன் கருகச் செய்கிறாய்?**

**நொடியில் மொத்தமாய்**
**உருகும் பனியை**
**சொட்டுச் சொட்டாய் விழச்செய்து**
**ஏன் எரிச்சலூட்டுகிறாய்?**

'என்னை மொத்தமாக ஒரே தவணையில் ஏற்று அருள்' என்று பிரார்த்தனை செய்யும்போது சந்நியாசம் சித்திக்கிறது. சத்புத்தி வாய்த்துவிட்டது என்பதே சந்நியாசம் தெரிவிக்கும் அறிவிப்பு

'உலக விஷயங்களில் சுவையிழத்தல் மோட்சநிலையாகும். மாறாக, உலக விஷயங்களில் நாட்டம் ஆத்மாவைக் கட்டிப்போடும். இதுதான் விசேஷ அறிவின் அடையாளம். நீ எப்படி விரும்புகிறாயோ அப்படியே செய்.' **(சுலோகம் 127)**

**உ**லக நாட்டம் தானாக, படிப்படியாகக் குறையவேண்டும். மனத்தை அதட்டி, அடக்கி, பலவந்தமாக அதை உலக விஷயங்களில் சுவையிழக்கச் செய்ய முடியாது. மனத்தை வலிந்து அடக்கினால் அது திமிறிக்கொண்டு உலக இன்பங்களில் கூடுதலாக ஆழ்ந்துவிடும். ஆகவேதான் இல்லறம் நடத்துபவன் பெண்ணின் கவர்ச்சியில் ஓரளவுதான் மயங்குகிறான். ஆனால் முனிவர்கள் மிக எளிதாகப் பெண் மோகம் கொண்டதாகக் கேள்விப்பட்டுள்ளோம். இன்னொரு உதாரணம்: நீ ஒழுங்காக உணவு உண்டபின் உனக்கு அன்று உணவின் ஞாபகம் வராது. உபவாச நாள் முழுதும் நீ உணவையே நினைத்தபடி இருப்பாய்.

அடக்கினால் ஆசை அதிகமாகிறது, குறைவதில்லை. தடுப்பதால் நீ மீறுகிறாய். எனவே மறந்தும் பலவந்தமாக அடக்காதே. ஐம்புலன்களையும் அடக்கு என்பார்கள் சாது மகாத்மாக்கள். இது நடக்கிற காரியமன்று. நீ வலிந்து உணர்வுகளை அடக்காமல், உனக்குக்

கிடைத்துவருகிற அனுபவத்தில் தொடர்ந்து, நீடித்தால், ஒரு காலத்தில் நீ அவற்றின் கவர்ச்சியிலிருந்து விடுபடுவாய். அனுபவம் பெறுவதால் யாரும் ஒருபொழுதும் தோற்பதில்லை. அனுபவம் என்பதே ஒரு வெற்றிதான்.

சுவையிழத்தல் என்பது தானாக ஏற்படாது. நாம்தான் தவம் மூலம் முயலவேண்டும் என்பார்கள். இதற்கு எதிரான கருத்து என்னுடையது. உலகக் கவர்ச்சிகள் தாமாகத்தான் அர்த்தமிழக்க வேண்டும். அது அனுபவத்தின் மூலம் நடைபெற வேண்டும். அப்போதுதான் மனத்தில் வைராக்கியம் நிரந்தரமாகக் குடியேறும்.

குழந்தை பொம்மையை வைத்துக்கொண்டு ஆனந்தமாக விளையாடுகிறது. அதனிடமிருந்து பொம்மையைப் பிடுங்க முடியாது தூங்கும் போதும் கையில் பிடித்திருக்கும். குழந்தை வளரும்போது பொம்மை மீதான ஆர்வம் தானாகத் தணியத் தொடங்குகிறது. பள்ளிக்குச் செல்லும் வயதானதும் அந்தச் சிறுவனிடம் பொம்மையையும் ஸ்கூலுக்குக் கொண்டுபோ என்றால் கோபப் படுவான். “மாட்டேன், மற்ற பையன்கள் என்னைக் கேலிசெய்வார்கள்” என்பான். ஒருநாள் அவன் தானாகவே பொம்மையைக் குப்பையில் எறிந்துவிடுவான். இதை வைத்துச் சிறுவயதில் விளையாடினோமே என்று வெட்கப்படுவான்.

பிறகு பக்குவம் வருகிறது; அறிவு தோன்றுகிறது; அனுபவம் வளர்கிறது. பொம்மைக்கு உயிர் கிடையாது என்பது தெரிகிறது. அது பழையதாக ஆகும்போது உள்ளே வெறும் காகிதம், வைக்கோல், கந்தல் துணி காட்சி வெளிப்படுகிறது. இந்த நிலையை அடைகையில் பொம்மை மீதான பிடிப்பு முழுவதுமாக விலகுகிறது.

குழந்தைகள் அடிக்கடி பொம்மைகளை உடைத்துப் போடுவதை நீ பார்த்திருப்பாய். அவர்களைத் தடுக்காதே. பொம்மைக்குள்ளே என்ன இருக்கிறது என்பதைக் குழந்தை கண்டுபிடிக்க ஆசைப்படுகிறது. கடிகாரத்தைக் கொடுத்தால் கூட கீழேபோட்டு உடைக்கும். இந்தக் குழந்தை இந்த வயதிலேயே இவ்வளவு முரடாக இருக்கிறதே என்று நீ கவலைப்படுவாய். குழந்தை வெளிப்படுத்துவது முரட்டுத்தனம் இல்லை. அது ஆராய்ச்சி மனப்பான்மை கொண்டுள்ளது. எதனுள்ளும் என்ன இருக்கிறது என்று தேடுகிறது. இது பாராட்டிற்குரியது.

பொருளின் உள்ளே இருப்பது தெரிந்தால்தான் அதன் மீதான ஆசை விலக வாய்ப்புள்ளது.

குழந்தைகள் புழு-பூச்சிகளை நசுக்குகின்றன. அவர்களிடம் இம்சை உணர்வு உள்ளதற்காக நீ வருந்துவாய். அது இம்சை உணர்வில்லை, ஆய்வு வேட்கை. பூச்சியை உள்ளேயிருந்து இயக்குவது ஏது என்று அவர்கள் கண்டுபிடிக்க விரும்புகின்றனர். வண்ணத்துப் பூச்சி இறக்கைகளால் பறப்பது கண்டு இறக்கையைத் தூண்டுவது எது என்று அறிய அதைப் பிய்த்துப்போடுகின்றன. இந்த ஆர்வமே பிற்காலத்தில் வாழ்க்கையில் பல தேடல்களுக்குப் பின்புலமாக அமைகிறது. தேடல்கள் அனுபவங்களாக மாறி, உலக வாழ்க்கையின் ஆழத்தில் ஒன்றுமில்லை என்பது தெரிந்துவிடும். அந்நிலையில் வைராக்கியம் பிறக்கும்.

உலகம் என்பது வெளியில் இல்லை. நீ இன்பமென நினைக்கும் பொருட்களில் உள்ளது. மோட்சம் என்பது வெளியில் இல்லை; ஆகாயத்தில் இல்லை. அது நீ பெறும் வைராக்கிய உணர்வில் தொக்கியுள்ளது. வேதம் கூறுகிறது **மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:|** அதாவது, கட்டப்படுவதற்கும், விடுதலை (மோட்சம்) அடையவும் மனமே காரணமாக அமைகிறது. மனம் ஒன்றில் ஈடுபட்டால் அதில் சுவை காண்கிறது. சுவை நீடிக்கும்வரை நாம் அதன் மீது ஆசையால் கட்டப்படுகிறோம். மாறாக, மனம் எங்கேயும், தங்காமல், தேங்காமல் இருந்துவிட்டால், இன்பங்களின் சுவை வறண்டுவிட்டால், மனம் ஒரு பறவைபோல் எங்கும் உட்காராமல் தனக்குள்ளேயே திரும்பிவிடும். அதுவே மோட்சம்.

**பந்தாய விஷயாஸக்தம் முக்தயைர்நிர்விஷயே ஸ்ம்ருநம்** - கட்டிப்போடுவதும் மனம், விடுவிப்பதும் மனமே. பறவை பறந்து திரிந்து ஆங்காங்கே உட்காருகிறது. நாமும் இன்பங்களை மாற்றிக்கொண்டே இருக்கிறோம். எந்த ஒன்றிலும் முழுச்சுவை காண்பதில்லை. நமது சுவை நாட்டம் இடம் மாறியபடியே இருக்கிறது.

**மு**ல்லா நஸ்ருத்தீன் ஒருநாள் புத்தம் புதிய குடை பிடித்துச் செல்வதை நண்பர் பார்த்தார். அவர் முல்லாவைத் தடுத்து, "இவ்வளவு அழகான குடை உங்களுக்கு எங்கிருந்து கிடைத்தது? மிகவும்

புதியதாய்த் தெரிகிறதே. இப்போதுதான் வாங்கினீர்களா?'' என்று விசாரித்தார்.

''இது சமீபத்தில் வாங்கியதில்லை. இருபது வருஷம் பழைய குடை.'' என்றார் முல்லா.

நண்பர் திகைத்துப்போனார். இருபது வருஷம் பழைய குடைபோல் அதில் அடையாளம் எதுவும் தெரியவில்லை. ஆகவே அவர், ''நஸ்ருத்தீன், கொஞ்சம் விளக்கமாகச் சொன்னால் புரிந்து கொள்வது சுலபமாக இருக்கும். இந்தக் குடை இருபது வருஷம் பழையதாகத் தெரியவில்லையே. எல்லாக் குடைகளும் இரண்டு - மூன்று வருஷத்திற்குமேல் தாக்குப் பிடிப்பதில்லை,'' என்று அவர் சந்தேகத்தைச் சொன்னார்.

முல்லா விளக்கினார். ''என் குடை உண்மையிலேயே இருபது வருஷம் பழையது. நம்பினால் நம்புங்கள், இல்லாவிட்டால் விடுங்கள். இதுவரை பத்து தடவையாவது இதைப் பழுது பார்த்திருக்கிறேன். ஐந்து - ஆறு தடவை மற்றவர்களின் குடையுடன் பரிமாற்றம் செய்திருக் கிறேன். ஆகவே என் குடை பழையதிலும் பழையது; புதியதிலும் புதியது!'' என்றார்.

இப்படி புது-புது குடை கிடைத்தால் குடை என்றும் புதியதாகவே இருக்கும்.

நீ ஏதாவது ஓர் இன்பச் சுவையிலேயே தொடர்ந்து ஈடுபடுவதில்லை. தாவித் தாவி இடம் மாறுகிறாய். ஆகவே எப்போதும் புதிய சுவையாக உணர்கிறாய். முதலில் பணத்தைத் துரத்தியபடி ஓடினாய். அந்த இன்பம் கிடைக்காததாலோ, பணம் திருப்தி தராததாலோ பதவிகளைத் துரத்தினாய். அதேபோல் பதவி சுகம் நாடி நீண்ட வரிசை இருப்பதைக் கண்டு பின்வாங்கினாய். இப்படி வெவ்வேறு திசையில் பாதை மாற்றி ஓடினாயே தவிர, ஒரே திசையில் கடைசிவரை ஓடி, குறிப்பிட்ட சுவையின் கடைசித் துளிவரை நீ அனுபவித்ததில்லை.

பாதியில் திரும்பிவிடுபவர்கள் எதிரே வரும் உன்னைப் பார்த்து, ''எங்கே போகிறாய்?'' என்று வினவுகிறார்கள். அவர்களில் சிலர் ஞானிகள். அவர்கள் உன்னை வேகமாகப் போகச் சொல்கிறார்கள்.

"நாங்கள் அனுபவித்துவிட்டோம். நீயும் சென்றடைந்து அனுபவித்துவிட்டு வா," என்கிறார்கள்.

முயற்சியைப் பாதியில் கைவிட்டுத் திரும்பி வருபவர்கள், "இதற்குமேல் போகாதே, திரும்பிவிடு. இனிக்கும் என நீ தேடிப் போகும் திராட்சைப் பழங்கள் புளிப்பானவை," என்று எச்சரிக்கின்றனர்.

நான் பார்த்த சந்நியாசிகள் பலர் மந்தபுத்திக்காரர்கள். சுயமாகச் சிந்திக்கத் தெரியாதவர்கள். கும்பமேளா சமயம் அலகாபாத் திரிவேணியில் திரளும் சந்நியாசிக் கூட்டத்தை ஒருமுறை சென்றுபார். சிலர் உடம்பு முழுதும் விபூதி (சாம்பல்) பூசிக்கொண்டு, நெருப்பை மூட்டி, அருகில் உட்கார்ந்திருப்பதைக் காணலாம். இதற்கு சாதாரண அறிவுகூட தேவையில்லையே. சிலர் நீண்ட நேரம் தலைகீழாக நிற்கிறார்கள் (சிரஸாசனம்); வேறு சிலர் ஆணிப் படுக்கையில் கிடக்கிறார்கள் (ஹடயோகம்). இச்செயல்களைப் பயிற்சியால் சாதிக்கிறார்கள். இவை கடவுளுடன் சம்பந்தப்பட்டவை அல்ல. இதற்கெல்லாம் அறிவு தேவையில்லை. இவர்களால் ஒரு கடையை லாபகரமாக நடத்த முடியாது. ஓர் அலுவலகத்தில் பியூனாக வேலை செய்யத்தான் இவர்கள் லாயக்கு.

இதைவிட விநோதம் மக்களின் செயல். சாம்பலில் புரண்டு உடல் முழுதும் வெள்ளையாக்கிக்கொள்ளும் இவர்களின் கால்களில் மக்கள் பயபக்தியுடன் விழுந்து வணங்குகிறார்கள். இவர்களுக்கு அமைச்சர்கள் கூட அடிபணிகிறார்கள். இந்த சந்நியாசிகளின் ஆசி கிடைத்தால் அடுத்த தேர்தலிலும் வென்று அமைச்சராகலாம் என நம்புகிறார்கள். இவர்களை 'குரு மகாராஜ்' என்று போற்றுகிறார்கள்.

ஒரு திருடனைக் காவலர்கள் துரத்திக்கொண்டு வந்தார்கள். மிகவும் முன்னேறிவிட்ட திருடன் ஓர் ஆற்றங்கரைக்கு வந்ததும் திகைத்தான். ஏனெனில் அவனுக்கு நீந்தத் தெரியாது. சற்றுத் தொலைவில் உடலில் சாம்பல் பூசிக்கொண்டு ஒரு சாமியார் கண்களை மூடியபடி உட்கார்ந்திருப்பதைத் திருடன் பார்த்தான். சட்டென்று அவன் ஆற்றில் குளித்து, கரை மண்ணில் புரண்டான். உடல் முழுதும் மண் அப்பிய நிலையில் அவன் ஓரிடத்தில் அமர்ந்து, கண்களைமூடி,

தியானம் செய்வதுபோல் நடித்தான். துரத்திய காவலர்கள் அவனைப் பார்த்து அருகில் வந்து அவன் காலடிகளைத் தொட்டு வணங்கினர்.

காவலர்கள் அவனிடம் தாங்கள் துரத்திவந்த திருடனை அவர் பார்த்தாரா என விசாரித்தார்கள். பிறகு மிக்க மரியாதையுடன் அவரது பின்னணி பற்றியும் கேட்டனர். திருடனால் என்ன பதில் சொல்ல முடியும்? காவலர்கள் அவனை மௌனி பாபா (மௌனச் சாமியார்) என்று நினைத்துவிட்டார்கள் - ஊருக்குத் திரும்பியபின் அவர்கள் மௌனி பாபாவின் விஜயம் பற்றி செய்தி பரப்பிவிட்டார்கள். பிறகென்ன? மக்கள் மௌனி பாபாவை தரிசிக்க வந்து விட்டார்கள். உணவுவகைகளும், பழங்களும், காணிக்கையும் கொண்டுவந்து சமர்ப்பித்தார்கள். ஆகவே திருடன் மௌனி பாபாவாகவே நீடித்து வாழலாம் என்று முடிவெடுத்தான்.

ஆனால் அந்த நாட்டு அரசனே திருடன் காலைத் தொட்டு வணங்கியதும் திருடனால் அதற்குமேல் தாங்க முடியாமல் போனது. அவன் அரசனின் அரண்மனையிலும் திருடியிருக்கிறான். அவன் அரசனைத் தடுத்து, மௌனத்தைக் கலைத்துப் பேசினான்.

"வேந்தே! என் கால்களைத் தொடாதீர்கள். உண்மையில் நான் ஒரு திருடன். ஆனால் இனிமேல் நான் திருடமாட்டேன். உணவும், உடையும், பணமும் சம்பாதிப்பதற்கான சுலபமான வழியைக் கண்டுபிடித்துவிட்டேன். சாமியாராக இருப்பதுதான் அவ்வழி. இனி திருடப்போக வேண்டிய அவசியமில்லை. ஆனால் ஒரு வருத்தமுண்டு. போலிச் சாமியாராக இருக்கும்போதே எனக்கு இவ்வளவு மரியாதை கிடைக்கிறதெனில் நான் நிஜ சாமியாராகவே இருந்திருக்கக்கூடாதா என்று ஏக்கம் பிறக்கிறது.

'விஞ்ஞானம் என்னும் சொல் இந்த சுலோகத்தில் (127) வருவதைக் கவனிக்கலாம். இது அண்மைக்காலச் சொல் இல்லை. மிகவும் பழைமையானது. இதன் பொருள் 'விசேஷ ஞானம்' என்பதாகும். ஞானம் என்பது பிறரிடமிருந்து நமக்குக் கிடைக்கிறது. விஞ்ஞானம் என்பது நமக்கு சொந்த அனுபவம் மூலமே வாய்க்கவல்லது. இன்னொருவரால் சொல்லப்பட்டால் அது ஞானம். தானே உண்டானால் விஞ்ஞானம். இக்கால நோக்கில், விஞ்ஞானம் பரிசோதனைகளின் அடிப்படையிலானது. அனுபவத்தை ஆதாரமாகக்

கொண்டது. அது வெட்டிப்பேச்சல்ல. பரிசோதனைக் கூடத்தில் அது நிரூபிக்கப்படுகிறது. ஆன்மிகத்தையும் நாம் விஞ்ஞானம் எனலாம். அது உன் உள் உலக பரிசோதனைக் கூடத்தில் நிரூபணமாகிறது. கேள்விப்படுவது ஞானம். அறியப்படுவது விஞ்ஞானம்.

அஷ்டாவக்ரர் சொல்கிறார் - இன்பச் சுவையில் ஆழ்ந்து விட்டால் அது கட்டிப்போடும். அந்தச் சுவை நீங்கிவிட்டால் விடுதலை (மோட்சம்) கிடைக்கும். இதை அறிவதே விசேஷ-ஞானம். இந்த விஞ்ஞான அறிவு கிடைத்துவிட்டால் உன் இஷ்டப்படி செய். உன்னை எதுவும் கட்டுப்படுத்தாது. நீ சுதந்திரமானவன் ஆகிவிடுவாய். நீ தேர்ந்தெடுத்த லயப்படியே வாழ்க்கை நடத்த முடியும். உன் சுபாவப்படி இயங்கலாம். உன்னை வெளியிலிருந்தோ, உள்ளே இருந்தோ எந்த சக்தியும் தடுக்காது. பற்றாசை இருந்து நீ காட்டில் முனிவராக வசித்தாலும் பயனில்லை. ஆசை இல்லாவிடில் நீ அரண்மனையில் வாழ்ந்தாலும் உன் மீது அதன் பிடிப்பு இருக்காது.

**மு**ல்லா நஸ்ருத்தீனின் மனைவி அவரிடம் ஒரு சந்தேகம் கேட்டாள், "நீங்கள் எவ்வளவு அழகாயிருக்கிறீர்கள்! ஆனால் மூளை ஏன் வெற்றிடமாக உள்ளது? உங்களை அழகனாகப் படைத்த கடவுள் உங்களுக்கு அறிவு ஏன் வைக்காமல் போய்விட்டார்? இதன் காரணம் என்ன?"

நஸ்ருத்தீன் கோபப்படவில்லை. அவர் சொன்னார். "காரணம் தெளிவாகத் தெரிகிறதே. நீ என்னை மணந்துகொள்ள ஆசைப்பட வேண்டும் என்பதற்காகக் கடவுள் எனக்குப் பேரழகு கொடுத்தார். அதே சமயம் நான் உன்னைத் திருமணம் செய்துகொள்வதற்காகக் கடவுள் என் மூளையை காலியாக வைத்துவிட்டார்!"

உன் மூளையும் காலியாகத்தான் உள்ளது. ஆகவே உலகத்துடன் உனக்குத் திருமண உறவுபோல் நெருக்கம் இருப்பது வியப்பிற்குரிய விஷயமில்லை. நீ எங்கே ஓடினாலும் உலக பந்தத்திலிருந்து தப்ப முடியாது. வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு கட்டங்களில், வெவ்வேறு விதமாக உலகம் உன்னைப் பிடித்துக் கொண்டுவிடும். மூளையைச் சரியாக நிரப்பி உலகத்திலிருந்து தப்பிக்க ஆன்மிக அனுபவம் பெறவேண்டும்.

உன் அனுபவ அளவிற்கு ஏற்ப உனக்கு சுபம் விளையும். தவறுகள் ஏற்பட்டால் பயப்படாதே. தவறு ஏற்படுமோ எனச் செயலைத் தவிர்த்தால் அனுபவம் பெறும் வாய்ப்பிருக்காது. தவறு செய்ததற்காக குற்ற உணர்வு கொள்ளாதே. ஒரு நிபந்தனை—ஒரு தடவை செய்த தவற்றை மீண்டும் செய்யாதே. ஒருமுறை நீ கோபத்தை முழுமையாக வெளிப்படுத்திவிட்டால் பிறகு கோபப்பட தேவையிராது. கோபத்தின் தீமையை நீ அறிந்து கொண்டுவிடுவாய். இதுபோல் கடவுளையும் நீ தீவிரமான அனுபவத்தின் மூலமே பெறமுடியும். உபதேசம் கேட்டு, சாஸ்திரம் படித்துக் கடவுளை அடைய முடியாது. வாழ்க்கையில் என்னென்ன அனுபவம் கிடைக்க முடியுமோ அவை எல்லாம் உனக்கு முழுமையாகக் கிடைத்த பிறகே, வாழ்க்கையை முழுதுமாக அனுபவித்த பிறகே, பிறவி எடுப்பதிலிருந்து உனக்கு விடுதலை கிடைக்கும். இதையே பிறவிதோறும் கருமங்கள் கழிந்த பிறகு முக்தி கிடைக்கிறது என்று மாற்றியும் சொல்வதுண்டு.

'இந்த தத்துவ ஞானம் பேச்சாற்றல் மிக்கவனை, அறிஞனை, கடும் உழைப்பாளியை முறையே ஊமை, ஜடம், சோம்பேறி நிலையை அடையச்செய்வதுபோல் வலுவாகத் தாக்கும். ஆகவே உலக இன்பங்களில் பற்று உள்ளவர்களுக்கு இந்த உயர்ந்த தத்துவ ஞானம் ஒத்துவராது.' **(சுலோகம் 128)**

**அ**ஷ்டாவக்ரர் விளக்கும் இந்த தத்துவஞானம் உலகச் சுவையிலிருந்து விரக்திகொள்ளச் செய்கிறது. மோட்ச இன்பத்தின் ருசியை அறிமுகப்படுத்துகிறது; சாதகனை சுதந்திர புருஷனாக்குகிறது. இந்த விஞ்ஞானத்தின், இந்தச் சிறப்பறிவின், தாக்கம் வலுவானதும் இதன் முன்னிலையில் நிறையப் பேசுபவனுக்கும் வாயடைத்துவிடும்; அறிஞனின் புத்தியும் வேலைசெய்யாது; உழைப்பாளியையும் திகைக்கவைத்து இயங்க முடியாதபடி செய்யும். ஆகவே உலக இன்பங்களை விரும்புவோர் ஆன்ம ஞானம் தங்களை நெருங்கிவிடாதபடிக்கு விலகியே இருப்பார்கள். புத்தர் போல் ஞானம் பெற்றவர்களை இவர்கள் தவிர்த்து விடுவார்கள். அந்த ஞானிகளின் நிழல்பட்டால்கூட ஆபத்து என்பார்கள்.

உனக்குப் பேரறிவு இருப்பதாக நீ நினைக்கலாம். ஆனால் அது உலகியலான அறிவு மட்டுமே. ஆன்மிக உலகில் உன் அறிவு தகவல்

தொகுப்பாக மாத்திரமே கருதப்படும். எந்த வகை புத்தியால் மோட்சம் கிடைக்கவில்லையோ, சுதந்திரம் வாய்க்கவில்லையோ, சத்-சித்-ஆனந்தம் என்னும் நிலை உருவாகவில்லையோ அத்தகைய புத்தி உபயோகமற்றது. நீ பாராட்டிக்கொள்ளும் உன் புத்தியைப் பிறரை ஏமாற்றி வாழ்வதற்காகத்தானே பயன்படுத்துகிறாய். ஆகவே உலகியலான அறிவை உயர் அறிவு என்று கூறமுடியாது.

உலகியலான அறிவு மட்டும் பெற்றவர்கள் ஆன்ம அறிவைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. புத்தரைப் போற்றுபவர்களும் மனத்திற்குள் அவரைப் 'பிழைக்கத் தெரியாத மனிதன்' என்றே பெருமூச்சுவிட்டிருப்பார்கள். அரண்மனை இருந்தது. அழகிய மனைவி இருந்தாள். ஆசைக்கு மகனும் இருந்தான்; செல்வ சுகங்களுக்குக் குறைச்சலில்லை. வாழ்க்கையில் எந்தத் தோல்வியுமில்லை. பிறகு எல்லாவற்றையும் 'அனுபவி ராஜா' என்று அனுபவிக்காமல் அப்படியே விட்டு ஏன் ஓடவேண்டும்?

ஜென் துறவி லாவோத்சு சொன்னார் - 'என்னைக் காட்டிலும் மற்றவர்கள் புத்திசாலிகளாகத் தெரிகிறார்கள். என்னால் அவர்களைப் போல் சிந்திக்க முடியவில்லை. என்னைக் காட்டிலும் மற்றவர்கள் சுறுசுறுப்பாகத் தெரிகிறார்கள். எல்லோரும் எங்கேயோ, எதற்காகவோ ஓடியபடி இருக்கிறார்கள். நானோ சும்மா உட்கார்ந்திருக்கிறேன்.'

மனநோயாளிகளின் மருத்துவமனையில் நீ மாட்டிக்கொள்ள நேர்ந்தால், மற்ற பைத்தியங்கள் உன்னைத்தான் பைத்தியம் பிடித்தவன் என நினைப்பார்கள். ஏனெனில் அவர்களின் நடவடிக்கைகள் உன்னிடம் தென்படுவதில்லை. அவர்கள் ஓடுவார்கள், கத்துவார்கள், அலறுவார்கள், . ஒருவரை ஒருவர் அடிப்பார்கள். நீயோ அவ்வாறெதுவும் செய்யாமல் அமைதியாக இருக்கிறாய். உனக்குத்தான் மூளைக் கோளாறென அவர்கள் நினைப்பார்கள்.

உலகத்தின் கண்ணோட்டமும் இதுவே. ஆடை அணியாதவர்களின் உலகில் ஆடையணிந்தவன்தான் நிர்வாணமாகக் கருதப்படுவான்! மற்றவர்கள் வாழ்வதுபோல் வாழவேண்டும்; செய்வதுபோல் செய்யவேண்டும். மற்றவர்களின் நடவடிக்கைகளையே பின்பற்ற வேண்டும் என்றே உலகம் ஒவ்வொருவரிடமும் எதிர்பார்க்கிறது.

காமம் முதலிய இன்பங்களில் ஆழ்ந்துபோனவன் ஆன்ம ஞானம் என்றாலே அலறி ஓடுவான். ஆன்மஞானத்தைத் தனது வழக்கமான வாழ்விற்கு எதிரி என அவன் நினைக்கிறான். ஆன்மஞானம் பிறந்தால் ஆசைகள் நீங்கிவிடுமே என அஞ்சுகிறான். கண் எதிரே வைரக்கல்லே கிடந்தாலும் ஞானி அதை அலட்சியம் செய்துவிடுவார் கையில் எடுத்துக்கூட பார்க்கமாட்டார். மற்றவர்கள் அவர் சோம்பேறியோ என்று சந்தேகப்படுவார்கள். ஆனால் ஞானி வைரத்தை ஒருவகைக் கல் மாத்திரமே என்று நினைப்பார். மற்றவர்களுக்கு சோம்பேறிகளின் கதை ஒன்று நினைவிற்கு வரும்.

ஒரு நாவல் மரத்தடியில் இரண்டு சோம்பேறிகள் படுத் திருந்தனர். ஒருவன், "கடவுளே, ஒரு நாவல் பழமாவது நேரடியாக என் வாயில் விழச்செய்," என்று வேண்டினான். சட்டென ஒரு பழம் விழுந்தது. ஆனால் தரையில் விழுந்தது. பிரார்த்தனை செய்தவன் பக்கத்தில் படுத்திருந்த இன்னொரு சோம்பேறியிடம், "இந்தாப்பா, கீழே கிடக்கிற பழத்தை எடுத்து என் வாயிலே போடு." என்றான். அதற்கு இரண்டாவது சோம்பேறி, "நான் ஏன் பழத்தை எடுத்து உன் வாயில் போடவேண்டும்? சில நிமிஷம் முன் என் காதருகே ஒரு நாய் சிறுநீர் கழித்தபோது நீ விரட்டாமல் வேடிக்கை பார்த்தாய் அல்லவா?" என்றான்.

இவர்கள் நிஜமாகவே சோம்பேறிகள். ஆத்மஞானி சோம்பேறி அல்லர். மற்றவர்கள்தாம் அவ்வாறு நினைக்கக்கூடும். ஞானி வாழ்க்கையை முற்றிலுமாக அனுபவித்த பிறகு, வாழ்க்கையில் அர்த்தம் இல்லை என்பதை அறிந்து, ஒதுங்கி, அமைதியாக இருந்துவிடுகிறார். இதற்கு பர்த்ருஹரியை உதாரணமாகச் சொல்லலாம்.

**ம**ன்னரான பர்த்ருஹரி அனைத்தையும் துறந்து வெளியேறி, காட்டிற்குச் சென்று, ஒரு மரத்தின் கீழ் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந் தார். அவரது வாழ்க்கையில் அது ஒரு சரியான திருப்புமுனைதான். ஏனெனின் அவருக்கு வாழ்க்கை வெறுத்து மனம் இறுகிப் போயிருந்தது.

பர்த்ருஹரி பிறவிக் கவிஞரும்கூட. முதலில் அவர் 'சிருங்கார சதகம்' என்னும் தலைப்பில் உடல் காதலை விரிவாக வர்ணிக்கும் நூறு சுலோகங்கள் கொண்ட தொகுப்பை இயற்றினார். ஆகவே அவர் சரீர

இன்பத்தை முழுமையாக அனுபவித்திருக்கிறார் என்பது தெளிவு. ஒருநாள் எல்லாம் கசந்துபோனது. அந்த் போகத்தின் எல்லையில் யோகம் துளிர்த்தது.

இதன் விளைவாக பர்த்ருஹரி இன்னொரு நூலும் எழுதினார். நூறு சுலோகங்கள் கொண்ட அந்நூலின் பெயர் வைராக்கிய சதகம். வைராக்கியத்தைப் போற்றி வருணிக்கும் இந்நூலைப் போல் வேறு நூல் எதுவும் கிடையாது. ஒரே மனிதனே இப்படி எதிரும் புதிருமான நூல்கள் எழுத முடியுமா என்னும் கேள்வி எழலாம். ஆம், உண்மையில் ஒரே மனிதனால்தான் அப்படி எழுத முடியும். அழகியல் அறிந்தவனாய், உடல்வழி இன்பங்களை அனுபவித்தவனாய் உள்ள ஒருவனால்தான் அவை கசந்துபோனதும் வைராக்கியத்தில் ஆழமாக இறங்க முடியும். உடல் இன்பம் என்பது அர்த்தமில்லாதது, வீணானது, அக்கரைப் பச்சை போன்றது, கானல் நீர்போல் ஏமாற்றுவது என்றெல்லாம் அனுபவித்தவனால்தான் முடிவுக்கு வரமுடியும்.

ஆகவே பர்த்ருஹரி ஒரு மரத்தடியில் அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டார். நடுவில் கண் திறந்து பார்த்தார். மரங்களின் ஊடாக வந்த சூரியக் கதிர்கள் பட்டு ஓரிடத்தில் அதிகமாக ஒளிவீசுவதைக் கவனித்தார். பாதையில் ஒரு வைரக்கல் கிடந்தது. அதன் மீது கிரணங்கள் ஒளி பாய்ச்சிக்கொண்டிருந்தன. முன்பு மன்னராக இருந்த காரணத்தால் அவர் அது அபூர்வமான வைரம் என்று மதிப்பிட்டார். அம்மாதிரியான வைரம் அவரது பொக்கிஷத்திலும் இருந்ததில்லை. ஆனால் வாழ்க்கையை பற்றிய அவருடைய மதிப்பீடுகள் மாறிப்போயிருந்தன. இப்போது அவரது நோக்கில் அது ஒரு கல் மட்டும்; சற்றுக் கூடுதலான பளபளப்புடைய கல்.

அந்த சமயம் குதிரைவீரர்கள் இருவர் அவ்வழியே வருவதை பர்த்ருஹரி பார்த்தார். அவர்களின் பார்வையும் வைரக்கல் மீது பட்டது. யார் அதை எடுத்துக்கொள்வது என்று அவர்களிடையே வாத விவாதம் மூண்டது. உரிமையை நிலைநாட்ட இருவருமே கத்தியை உருவினர். மூன்றாவது நபர் ஒருவர் அருகிலுள்ள மரத்தடியில் அமர்ந்து ஒரு மணி நேரம் அக்கல்லைப் பார்த்திருக்கிறார் என்று அந்த வீரர்களுக்குத் தெரிந்திருந்தால் அவர்கள் என்ன பேசியிருப் பார்கள்?

'இந்த ஆள் யார்? படுசோம்பேறியாக இருப்பான் போலிருக்கிறதே. பக்கத்தில் கிடக்கும் வைரத்தை ஏன் கைநீட்டி எடுத்துக் கொள்ளவில்லை? நாம் வருவதற்கு முன்பே ஏன் பதுக்கிவைக்காமல் போனான்? இவனுக்கு மூளைக்கோளாறாக இருக்குமோ? அல்லது இவன் முடக்குவாத நோயாளியா? மயக்கத்திலிருக்கிறானா? அளவு மீறிக் குடித்துவிட்டானா?'

ஆனால் வைரத்திலேயே கவனம் காரணமாக அந்த வீரர்கள் பர்த்ருஹரியைப் பார்க்கவில்லை. அவர்களுக்குள் சண்டை அதிகமாகி, ஒருவரையொருவர் வாளால் தாக்கினார்கள். சில நிமிடங்களில் அங்கே இரண்டு சடலங்கள் கிடந்தன. அருகில் கிடந்த வைரக்கல்லின் தகதகப்பு அவர்களைப் பார்த்துச் சிரிப்பதுபோலிருந்தது. உலகப் பொருள் மீதான பற்று உயிரையே பறித்துவிட்டதைப் பற்றிச் சிந்தித்தபடி பர்த்ருஹரி தியானத்தில் ஆழ்ந்தார்.

உலக இன்பங்களில் விருப்பமுள்ளவர்கள் ஆன்ம அறிவு என்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்திலேயே வெகுதூரம் ஓடிப்போய் விடுவார்கள். புத்தரைப் போன்ற ஞானி அவர்களது ஊருக்கு வருகை தந்தால் அவர்கள் வேறு ஊருக்குப் போய்விடுவார்கள். ஞானி பக்கத்திலேயே வந்துவிட்டால் அவர்கள் முதுகைக் காட்டி நிற்பார்கள். ஞானி உபதேசிக்கத் தொடங்கினால் காதைப் பொத்திக்கொள்வார்கள். அவர்களைப் பொறுத்தவரையில் இதெல்லாம் சரியே. ஏனெனில் இவர்களின் வழக்கமாகச் செல்லும் பாதைக்கு நேர் எதிராக ஞானி காட்டும் பாதை தெரிகிறது.

'நீ உடல் இல்லை. உடல் உன்னுடையது அன்று. நீ அனுபவிப்பவனும் இல்லை; செயல்புரிபவனும் (கர்த்தா) இல்லை. நீ ஆத்மசொரூபமானவன். நிரந்தர சாட்சியாக உள்ளவன். எதையும் சார்ந்திருக்காதவன். நீ சுகமாக இயங்குவாயாக!' **(சுலோகம் 129)**

**மது மண்பானையிலும் இருக்கலாம்**
**பொன் பாத்திரத்திலும் இருக்கலாம்**
**கண்ணால் தெரியும் இவ்வேறுபாடு**
**மதுவின் ருசியை மாற்றிட இயலுமோ?**

இரட்டை நிலை (துவைதம்) புத்தியை மட்டுமே ஏமாற்ற முடிகிறது. அனுபவத்தை அது மாற்றியமைக்க முடியாது. மது

வைத்துள்ள பாத்திரம் மண்ணாலானதா, பொன்னாலானதா என்று நீ பார்க்கமாட்டாய். மதுவின் ருசியை அடிப்படையாகக் கொண்டுதான் அதை நீ அனுபவிப்பாய்.

உலகில் மக்கள் ஓடுவது பாத்திரங்கள் வரைதான்; வெளித்தோற்றம் வரைதான். பெண்ணின் அழகிய உடலைப் பார்த்து மனிதன் மயங்குகிறான். ஆனால் அப்பெண்ணின் உள்ளம் விஷத்தால் நிரம்பியதுபோல் குரூரமாக இருக்கும். உயர்ந்த பதவியிலிருப்பவரைப் பார்த்து நாம் பொறாமைப்படுகிறோம். அவரோ முள் ஆசனத்தில் உட்கார நேர்ந்ததுபோல் தவித்துக்கொண்டிருக்கலாம். அவரது மனம் படும் வேதனையை நீ அறிந்திருக்க மாட்டாய். அவரது உள்மனத்தில் நிலவும் தடுமாற்றத்தை நீ அறிந்திருக்கமாட்டாய். அவரால் விழித்திருக்கவும் முடியவில்லை, தூங்கவும் முடியவில்லை. பதவி நாற்காலியைக் கெட்டியாகப் பிடித்தபடி அவர் உட்கார்ந்திருக்கிறார். ஒருவன் அவருடைய கால்களைப் பிடித்திழுக்கிறான். இன்னொருவன் முதுகுப்புறத்திலிருந்து அவரை இழுக்கிறான். மூன்றாமவன் அவர் மேல் ஏற முயல்கிறான். நான்காமவன் நாற்காலியைக் கவிழ்க்கப் பார்க்கிறான். அவர் செய்தித்தாள்களில் வெளியாகும் படங்களில் தனது ஆசனத்தில் கம்பீரமாக உட்கார்ந்திருப்பதுபோல் தெரிவார். உண்மை நிலவரம் உனக்குத் தெரியாது. மக்கள் நடுவே அவர் சிரித்த முகத்துடன் காணப்படுவார். இடத்திற்குத் தகுந்தபடி முகமூடி அணிவதுபோல் முகபாவனையை மாற்றிக் கொள்கிறார். முகமூடியை முகமென நம்பி ஏமாறாதே. மதுவின் சுவை பாத்திரத்திற்கு வெளியே இல்லை. பாத்திரம் எதுவானாலும் சுவை மதுவுடன்தான் - உள்ளே இருப்பதுடன்தான் — சம்பந்தப்பட்டது.

மக்கள் மேன்மேலும் தங்களை பிரமையில் ஆழ்த்திக் கொள்கிறார்கள். தாங்களே வலை பின்னி அதில் சிக்கிக்கொள்கிறார்கள். தங்கள் கருத்தைத் தாங்களே ஆமோதித்து தங்களுக்கு சமாதானம் சொல்லிக் கொள்கிறார்கள். வெளியிலிருந்து ஞான கிரணம் படர்ந்தால் தங்களை மறைத்துக்கொள்வார்கள். ஆசைகளைக் கைவிட்டவன்தான் உனக்கு ஆசையின் சாரத்தை, (சாரமின்மையைச்) சொல்ல முடியும். வாழ்க்கையில் காம இச்சை நீங்கியவன் காமத்தின் சாரமின்மையையும், பிரம்மசரியத்தின் மேன்மையையும் விளக்க முடியும்.

'விருப்பும் வெறுப்பும் மனத்தின் சுபாவம். மனம் உனக்குச் சொந்தமானதன்று. நீ மாற்றுகளற்றவன்; மாற்றங்கள் அற்றவன்; ஞானமயமானவன். ஆகவே நீ ஆனந்தமானவன்.' **(சுலோகம் 130)**

மனம் ஆத்மாவிற்கு மிக அருகிலுள்ளது. கண்ணாடி அருகிலுள்ள பொருள் அதில் பிரதிபலிப்பதுபோல் ஆத்மாவில் மனம் பிரதிபலிப்பாகிறது. உயிரின் எல்லா நடவடிக்கைகளும் மனம் காட்டும் விளையாட்டுதான். மனம் அகன்றதும் கண்ணாடி வெறுமையாகிவிடும். சுத்தமாகிவிடும் அந்த வெறுமையுடன் அறிமுகம் செய்து கொள்வது தான் பிரம்மஞானம். அதுவே விஞ்ஞானம்.

மனம் ஆத்மாவிற்கு மிக அருகில் உள்ளது. மனத்தில் இடைவிடாமல் உணர்ச்சி அலைகள் எழுந்தவண்ணமாக உள்ளன. அந்த் அலைகளின் நிழல் ஆத்மா மீது படிவதைத் தவிர்க்க முடியாது. சாட்சி மனப்பான்மை உதயமாகும்வரை மன அலைகள் ஆத்மாவை (நம்மைப்) பாதிக்கவே செய்யும்.

சாட்சி மனப்பான்மையை இன்னொரு முறை விளக்குகிறேன். மனத்தில் காம உணர்வு எழுகிறது. அது கெடுதலான உணர்வு என்று நீ சொன்னால் உன்னிடம் சாட்சி மனப்பான்மை இல்லை என்று அர்த்தம். ஏனெனில் நீ அதை மதிப்பீடு செய்துவிட்டாய். நீ காம உணர்வை நல்லதென்று மதிப்பீட்டால் அப்போதும் நீ சாட்சி மனப்பான்மையைக் கைவிட்டதாக அர்த்தமாகும். காமத்தை நீ நல்லதென்றும் சொல்லாமல், கெடுதல் என்றும் சொல்லாமல், நீ எந்த மதிப்பீடும் செய்யாமலிருந்தால், எப்பக்கமும் சேராமல் நீ நடுநிலைப் பார்வையாளனாக மட்டும் இருந்தால், உனக்கு சாட்சி சுபாவம் வந்துவிட்டதெனலாம். பற்றும் இல்லாமல், வெறுப்பும் இன்றி, ஆதரவும் தராமல், எதிர்ப்பும் காட்டாமல் உன்னால் இருக்க முடியும் என்றால், உனக்கு சாட்சி மனப்பான்மை வந்து விட்டதெனலாம். அப்போது காமம் போன்ற உணர்வுகள் புகைபோல் எழுந்து, காணாமல் போய்விடும். அப்படி உணர்ச்சிகள் நீங்கிய நிலையில், உணர்ச்சிகளால் பாதிக்கப்படாத நிலையில், உனக்குள் ஒரு சூனியம் பரவும். அப்போது கிடைக்கும் பேரமைதியும், ஆனந்தமும், அமுதம் பருகியதுபோன்ற உணர்வும் அபூர்வமாக இருக்கும்.

நாம் மனத்தின் தூண்டுதலின் அடிப்படையில் வாழ்கிறோம். ஆனால் மனம் இயங்கும் விதத்தின் பின்னணி காரணங்கள் வெளிப்படையாகத் தெரிவதில்லை.

ஒரு விதவை சமீபத்தில்தான் காலமான கணவனின் காப்பீட்டு (இன்ஷுரன்ஸ்) தொகையை பெறுவதற்காக சம்பந்தப்பட்ட மேலாளரைச் சந்தித்தாள். அவளை நாற்காலியில் அமரச் சொன்ன பிறகு மேலாளர் மரியாதை நிமித்தம் வழக்கமான ஆறுதல் சொற்களுடன் பேச்சைத் தொடங்கினார். “மேடம், தங்களுக்கு எதிர்பாராமல் ஏற்பட்ட பேரிழப்பிற்காக நாங்கள் மிகவும் வருந்துகிறோம்,” என்று ஆரம்பித்ததும் அப்பெண்மணி அவரைத் தடுத்து, சிடுசிடுப்பான குரலில், “போதும் உங்கள் அனுதாபம். எங்கே போனாலும் இதே கதைதான். பெண்களிடம் நாலு காசு சேரத் தொடங்குகிறது என்றாலே இந்த ஆண்களெல்லாம் அதைப் பறிக்க போலி இரக்கம் காட்ட வந்துவிடுவார்களே” என்று இகழ்ச்சியாகப் பேசினாள்.

பாவம், அந்த அப்பாவி அதிகாரி அவள் கணவன் இறந்து போனது குறித்து முறையாகத்தான் வருத்தம் தெரிவித்தார். அப்பெண்மணிக்கு இப்போது கணவனைப் பற்றிய துக்கம் மேலோங்கியிருக்கவில்லை. அவள் மனம் காப்பீட்டுத் தொகையாக எவ்வளவு லட்சம் கிடைக்கும் என்பது பற்றியே கணக்குப் போட்டுக்கொண்டிருந்தது. அத்தொகையில் என்னென்ன வாங்கலாம் என்று ஒரு பட்டியலும் தயாராகிக் கொண்டிருந்தது. அவள் அதிகாரியின் வார்த்தைக்கு வேறு அர்த்தம் எடுத்துக்கொள்கிறாள். அவள் கணவன் கட்டிய பிரிமியம் தொகையைவிட பல மடங்கு காப்பீட்டுத் தொகை நிறுவனம் தரவேண்டியுள்ளதே என்பதற்காக அவர் வருந்துவதாக நினைக்கிறாள்.

மனம் எப்பொழுதும் உன் நடவடிக்கைகளின் மீது ஆட்சி செலுத்துகிறது. மனத்தின் பாதிப்பின் காரணமாக நீ வாழ்க்கைக்கு என்ன அர்த்தம் கொடுக்கிறாயோ அது சரியாக இருக்காது. உண்மையில் அது மனம் கொடுக்கும் அர்த்தம்.

ஒரு பெண்மணி பத்து குழந்தைகளுடன் ஒரு பஸ்ஸில் ஏறினாள். முல்லா நஸ்ருத்தீனும் அதே பஸ்ஸில் ஏறி சற்று

அருகில்தான் அமர்ந்தார். பஸ் புறப்பட்டதும் ஆனந்தமாக சிகரெட் பிடிக்கலானார். அந்தப் பெண்மணிக்கு இது பிடிக்கவில்லை. அவளுக்குக் கோபம் வந்துவிட்டது. அவள் முல்லாவை நோக்கி, "இந்தாங்க ஐயா, அங்கே என்ன எழுதியிருக்குன்னு பாருங்க. 'பஸ்ஸில் புகைபிடிப்பது தடைசெய்யப்பட்டுள்ளது'ன்னு எழுதியிருக்கா, இல்லையா? அது உங்க மூளையில் ஏறலையா?" என்று கேட்டாள்.

முல்லா பதிலளிக்கையில் "எழுதிவைப்பதால் மட்டும் என்ன பிரயோஜனம்? எத்தனையோ எச்சரிக்கைகள் பஸ்ஸில் எழுதப்பட்டுள்ளன. அதோ என்ன எழுதியிருக்குன்னு பாருங்க. 'நாம் இருவர், நமக்கு இருவர்'னு எழுதியிருக்கு இல்லையா? அப்புறம் உங்களைச் சுற்றி பத்து வந்தது எப்படி?" என்று ஒரு போடுபோட்டார்.

மனிதன் என்ன பேசுகிறானோ, செய்கிறானோ, முடிவெடுக்கிறானோ அதில் அவனது மனத்தின் நிழல் படர்ந்திருக்கும். முல்லாவின் பதில் வேடிக்கையாகத் தெரிந்தாலும் அதில் அவரது மனத்தின் பாதிப்பும் கலந்திருக்கக்கூடும். அவருக்கு நாலைந்து குழந்தைகள் இருந்திருக்கும். அவை கொடுக்கும் தொந்தரவை மறப்பதற்காக சிகரெட் பிடிக்கும் பழக்கத்தை அவர் தொடங்கியிருப்பார்.*

நாம் எதைப் பார்த்தாலும் சரி, மனத்தின் அலைகளின் ஊடாகத்தான் பார்க்கிறோம்.

**க**ணிதப் பேராசிரியரின் மனைவிக்குக் குழந்தை பிறந்தது. இதைக் கொண்டாடப் பேராசிரியர் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். பஃபே முறை விருந்து. ஆகவே விருந்தாளிகள் தாங்களாகவே வேண்டிய உணவை, வேண்டிய அளவு எடுத்துச் சாப்பிடலாம். உணவு வகைகள் வரிசையாக அடுக்கிவைக்கப்பட்டிருந்த மேஜைகளின் அருகில் ஓர் அறிவிப்புப் பலகை தொங்கியது. அதில் 'எல்லா உணவு வகைகளும் சமமான ருசியுடையவை. ஏதேனும் ஐந்தினை மட்டும் எடுத்துச் சாப்பிட்டால் போதுமானது' என்ற தகவல்

---

* சிகரெட்டை நிதானமாக இழுத்துப் பிடிக்கும்போது அது மனத்தை அமைதிப்படுத்துகிறது. **inhaled slowly and deeply, nicotine in cigarette can be a tranquilizer.**

இருந்தது! கணிதப் பேராசிரியர் அல்லவா? கேள்வித்தாள் தயாரிக்கையில், 'ஏதேனும் ஐந்தினுக்கு விடை தருக. அனைத்துக் கேள்விகளும் சமமான மதிப்பெண் உடையவை' என்று குறிப்பிடுவது பழக்கமாகிவிட்டது. கல்லூரிப் பழக்கம் வீட்டிலும் விடவில்லை.

மனிதன் பழக்கத்திற்கு அடிமை. பழகிப்போ".ன விதத்தில்தான் யோசிக்கிறான். பழக்கமான விதத்தில் வாழ்கிறான். எனினும் பழக்கத்தின் வலிமை மனம் வரைதான் செல்லும். மனத்திற்கு அப்பாற்பட்ட பகுதியில் எந்தப் பழக்கமும் இருக்காது. மனத்தைக் கடந்த நிலையில் நீ உணர்ச்சிகளால் பாதிக்கப்படாதவன். பொங்கும் அலைகளெல்லாம் மனம் என்னும் கரையுடன் ஓய்ந்துவிடும்.

விருப்பும் வெறுப்பும் மனத்தின் கோணல்கள். மனம் என்றும் உன்னுடையது அன்று. நீ விகாரமற்றவன். (உணர்ச்சிகளால் சேதமடையாதவன்) நீ மனத்தைச் சார்ந்திருப்பவனும் அல்லன். நீ ஆத்ம சொரூபமானவன். நீ இன்பமாக வாழு. இந்த அறிவுதான் விஞ்ஞானம். இதை அறிவதுதான் வாஸ்தவமான, நிரந்தரமான சுகம்.

ஆத்மா துன்பவசப்படுவதில்லை. நீ துன்பமாக உணர்வது மனத்தளவில்தான். மனத் துன்பம் ஆத்மாவின் துன்பம் அன்று. நீயாகிய ஆத்மா வேறு, மனம் வேறு என்பது புரிந்துவிட்டால், துன்பம் உன் மனத்தைத் தெரட்டுவிட்டுப் போகுமே தவிர, ஆத்மாவை நெருங்க முடியாது.

'நீ எல்லா உயிர்களிலும் ஆத்மா வீற்றிருப்பதையும், எல்லா உயிர்களும் உன் ஆத்மா என்றும் அறிந்துகொள். இந்த அறிவு உன்னை அகங்காரமற்றவனாகவும், பற்றுகள் இல்லாதவனாகவும் ஆக்கிவிடும். இதனால் நீ ஆத்ம சுகத்தை அனுபவிப்பாய்' **(சுலோகம் 131)**

**இ**ந்த ஆத்மாதான் உள்ளே சாட்சியாக இருந்துகொண்டு வெளியே நடப்பவற்றைப் பாதிப்பின்றிப் பார்க்கிறது. இந்த ஆத்மாவாகிய சாட்சி எல்லோருக்கும் ஒன்றுதான். மனத்தைப் பொறுத்தவரையில் ஒவ்வொருவர் மனமும் வெவ்வேறு. ஆத்மா ஒன்று. மனங்கள் பல. வெளியுலகத்தில் நாம் வெவ்வேறான மனிதர்கள். ஆத்ம உலகத்தில் நாம் அனைவரும் ஒருவரே; ஒரே ஆத்மா. மேல்மட்டத்தில்

நாம் வெவ்வேறானவர்கள். ஆழத்தில் நாம் சமம்; நாம் ஒருவரே. ஒருமைப்பாடு உணரப்படும் இடத்தில் 'நான்-எனது' என்னும் உணர்வு எப்படித் தலைகாட்டும்? எல்லோரும் ஒருவரே என்னும்போது யார் யாரிடம் பாசம் காட்டுவது?

'கடலில் அலைகள்போல் யாரிடம் உலகச் சலனம் உள்ளதோ அது நீதான். இதில் சந்தேகமில்லை. ஆத்ம சொரூபியானவனே, மனநோய் அற்றவனாக இரு; சுய பச்சாதாபம் அற்றவனாக இரு; சுகமாக வாழ்க!' **(சுலோகம் 132)**

**இ**ந்தக் கடலில் எண்ணற்ற அலைகள் எழுகின்றன. இந்த அலைகளின் பின்னணியில் இருக்கும் கடல் நீதான். உலகத்தின் அனைத்து அலைகளும் கடவுளுடைய அலைகள்தாம்.

நீ அந்தக் கடவுளின் சொரூபம்தான், என்று அறிந்துகொள். எல்லாம் அவருடைய விளையாட்டுகள்தாம். அந்த மூலமான கடவுளும் நீதான்.

**இரவு மௌனம் பூண்டது**
**கனவுகள் அமைதியில் ஆழ்ந்தன**
**ஆத்மாவின் கதவு தானே திறந்தது**
**வாசலில் தெய்வம் நிற்கிறதுபோலும்**

**நீர்நிலை அமைதியாய் விளங்குவது**
**மனத்தின் அமைதியின் உவமை**
**புறத்து நீரில் சலனம் இன்றேல்**
**நமது முகம் தெளிவாய்த் தெரியும்**

**அசையும் நீரில் பிம்பமும் அசையும்**
**சலனமற்ற நீர்ப்பரப்புபோல்**
**மனம் அமைதியாய் விளங்குகையில்**
**வாழ்க்கையின் ரகசியம் புரிய வரும்**

**ஏமனமே, அலைகளற்ற ஏரியைப்போல்**
**சாந்த நிலையில் ஆழ்ந்துவிடு**
**விழிப்பு நிலையில் நீ ஆடிய ஆட்டம்**
**தப்பான ஆட்டமாய் முடிந்தது**
**எனவே மனமே! அனைத்தையும் மறந்து**
**ஞானத் துயிலில் ஆழ்ந்துவிடு.**

மனம் தூங்கினால் ஆத்ம உணர்வு விழித்துக்கொள்ள வாய்ப்புக் கிடைக்கும். மனம் விழித்திருந்தால் ஆத்ம உணர்வு உறக்கநிலையில் இருக்கும். மனம் விழித்திருப்பதை உனது சுயவிழிப்பாக நினைக்க வேண்டாம். மனத்தின் விழிப்புநிலை உனக்கு உறக்கநிலையாகும். மனம் உறங்கினால், மனத்தின் அலைகள் ஓய்ந்தால், உனது விழிப்பு நடைபெறுகிறது. எல்லாம் மனத்தைப் பொறுத்துள்ளன. மனம் இயங்கினால் உலகம். மனம் மறைந்துவிடில் மோட்சம். இதுவே விசேஷ அறிவு—விஞ்ஞானம். இந்த அறிவின் துணைகொண்டு உன் விருப்பப்படி செயல்படு; சுகமாய் வாழு; கடமை புரி; சுதந்திரமாக உலவு.

**ஹரி ஓம் தத்ஸத்!**

முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! அன்பின் வழிநின்று பரமசத்தியத்தை அடைய முடியும் என்று தாங்கள் சொன்னீர்கள் அல்லவா? இந்த நடவடிக்கைக்குக் கட்டாயமாக தியானம் செய்ய வேண்டுமா?**

**உ**ன் கேள்வி நீ அன்பின் அர்த்தத்தை அறியவில்லை என்பதைக் காட்டுகிறது. அன்பு என்பதற்கு நீ வேறு ஏதோ அர்த்தம் எடுத்துக்கொண்டுள்ளாய். தியானத்தின் உதவியின்றி அன்பு சாத்தியமே இல்லை. அன்புசெய்வதும் தியானத்தின் ஒரு வகைதான். உன் அர்த்தம் சரியாயின் சத்தியம் உனக்கு எப்பொழுதோ வசப்பட்டிருக்கும். நீ உன் மனைவி, பிள்ளைகள், பெற்றோர்கள், நண்பர்களிடம் அன்பு காட்டுவது உண்மைதான். பிறவிதோறும் அத்தகைய அன்பு செலுத்தி வந்திருக்கிறாய். அதுதான் அன்பு என்றால் உனக்கு சத்திய தரிசனம் கிடைத்திருக்கும். இந்தக் கேள்வியைக் கேட்கவேண்டிய அவசியம் உண்டாகியிராதே.

நான் விளக்குகின்ற அன்பு வேறுவகையானது. நீ உடலுடன் சம்பந்தப்பட்ட மொழியைத்தான் புரிந்துகொள்கிறாய். ஆகவே நான் ஏதாவது சொன்னால் நீ அதை உடல்பாஷையில் மொழிபெயர்த்துக் கொள்கிறாய். அங்குதான் தப்பு நடக்கிறது. நான் சொல்லும் அன்பு என்பதன் அர்த்தமும் பிரார்த்தனை என்பதன் அர்த்தமும் ஒன்றே.

**ஜெ**ன் சத்குரு ஒருவரின் தோட்டத்தில் பூசணிக்காய்கள் விளைந்திருந்தன. குரு தினமும் அவற்றைப் பார்வையிடுவது வழக்கம். ஒருநாள் அவர் அவ்வாறு வந்தபோது பூசணிக்காய்கள் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. குரு அவற்றைப் பார்த்து,

"பூசணிக்காய்களே! ஏன் சண்டை போடுகிறீர்கள்? ஒருவரை ஒருவர் நேசியுங்கள்," என்று உபதேசித்தார்.

பூசணிக்காய்கள் மறுத்தன. "எதிரியை நேசிப்பதா? அது எப்படி சாத்தியப்படும்?" என்று கேட்டன.

"அப்படியானால் தியானம் செய்துபாருங்கள்," என குரு ஆலோசனை வழங்கினார்.

"நாங்களோ பூசணிக்காய்கள். எங்களால் எப்படி தியானம் செய்ய முடியும்?" என்று கேட்டு அந்தக் காய்கள் சிரித்தன.

"அதோ அந்த மட வளாகத்தில் புத்தபிட்சுக்கள் வரிசையில் அமர்ந்து தியானம் புரிவதைப் பாருங்கள். எத்தனையோ பூசணிக் காய்கள் தியானம் செய்வதுபோல் அவர்கள் காட்சி தருகிறார்கள் அல்லவா? அவர்களின் மழுங்கச் சிரைத்த தலையுடன் பூசணிக்காய்கள் போலத்தானே தெரிகிறார்கள். நீங்களும் வரிசையாக உட்கார்ந்து தியானத்தில் ஈடுபடுங்கள்," என்று குரு தூண்டினார்.

அவர் சொன்னதைப் பூசணிக்காய்கள் முதலில் ஏற்கவில்லை. பிறகு அவை 'குரு இதுவரை நம்மை இவ்வளவு கேட்டுக் கொண்டதில்லையே. ஒத்துக்கொண்டு கொஞ்ச நேரம் உட்கார்ந்து பார்ப்போமே' என அவை யோசித்தன. அவை காலை மடக்கி, சித்தாசனம் போட்டு, முதுகை நேராக வைத்துக்கொண்டு, கண்களை மூடி தியானம் செய்தன. சிறிது நேரத்தில் அவை பகைமையை மறந்து சாந்தமாகிவிட்டன.

நிற்கும் நிலையைவிட மனிதன் கீழே உட்கார்ந்ததுமே சௌகரியமாக உணர்வதால் சாந்தமாகிறான். ஆகவே ஜென் குருமார்கள் தியானத்தை 'ஜாஜேன்' என்னும் சொல்லால் குறிப்பிடு கிறார்கள். இதன் பொருள் 'காலியாக (சும்மா) உட்கார்ந்திருத்தல், எதுவும் செய்யாமல் சலனமின்றி இருத்தல்' என்பதாகும்.

பூசணிக்காய்கள் சும்மா உட்கார்ந்திருந்த நிலையில் அமைதியை உணர்ந்தன. இத்தகைய அமைதி உணர்வை இதுவரை அனுபவித் திராததால் அவை திகைத்தன, வியந்தன. நாற்புறமும் ஏதோ ஆனந்த உணர்வு பரவுவதுபோல் தோன்றியது. குரு மீண்டும் வந்து சந்தித்தார்.

“இப்போது நீங்கள் இன்னொரு வேலையும் செய்யுங்கள். உங்கள் கைகளைத் தலைமேல் வைக்கவும்.” என்று அவர் கட்டளையிட்டார்.

அவ்வாறே செய்துபார்த்த பூசணிக்காய்கள் மேலும் ஆச்சரிய மடைந்தன. அவை எல்லாமும் ஒரே கொடியில் இணைந்திருந்தன. வியப்புடன் அவை, “நாம் எத்துணை முட்டாள்கள்! நாம் எல்லோரும் ஒரே வஸ்துவிலிருந்தே வளர்ந்தவர்கள். நாம் எல்லோரும் ஒருவரே. ஒரே பிராண ரசம்தான் நம் எல்லோருக்குள்ளும் பாய்கிறது. இது தெரியாமல் நாம் ஒருவரோடு ஒருவர் அடித்துக் கொண்டோமே” என்று கூறி வருந்தின.

குரு வந்தார். “உயிர்கள் அனைத்தும் ஒன்றே என்பதை நீங்கள் புரிந்துகொண்டதால் இனியாவது நீங்கள் பரஸ்பரம் அன்பு காட்டுங்கள். நீங்கள் எல்லோரும் ஒன்றே என்பதால் யாரும் யாருக்கும் அன்னியரில்லை என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள். ஒன்றின் விரிவாக்கமே எல்லாமும்,” என்று கூறிச் சென்றார்.

பூசணிக்காய்கள் தத்தம் உச்சந்தலையைத் தொட்ட இடத்தைதான் யோகிகள் ஏழாவது* சக்கரமாகிய ஸஹஸ்ராரம் என்கிறார்கள். ஆகவே அந்த இடத்தைச் சேதம் வராமல் பாதுகாக்க இந்துக்கள் அங்கே குடுமி வைத்துக்கொள்கிறார்கள். முன்பு எல்லா சாதியினரும் குடுமி வைத்திருந்தனர். அது பூசணிக்காய்கள் ஒரே கொடியில் தொங்குவதை - ஒற்றுமை உணர்வை - ஞாபகப்படுத்துகிறது. ஒரு சமுத்திரம்தான் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பெயர் கொண்டுள்ளது. அதுபோல் பரமாத்மாவும் ஒருவரே, ஒரே மகாசக்தி. உன் அருகிலுள்ள மனிதர் உன்னிடமிருந்து வித்தியாசமானவர் அல்லர். அலைகள் வெவ் வேறாகத் தோன்றினும் ஆழத்தில், அடிப்படையில் அவை இணைந்தே உள்ளன. அதுபோல் மனிதர்களும் அடிப்படையில் இணைந்துள்ளனர்.

நீ ஒரு விஷயம் கவனித்திருக்கிறாயா? மொத்தக் கடலும் சலனமின்றி இருந்து ஒரே ஓர் அலை எழும்புவதைப் பார்த்துள்ளாயா? மொத்த மரமும் மௌனமாக இருந்து ஒரே ஓர் இலை சலசலப்பதைப்

---

* மற்றவை: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞேயம். இவற்றிற்கு முறையே இடம் குதம், அடிவயிறு, நாடி, இதயம், அடிநாக்கு, புருவநடு.

பார்த்தும் கேட்டும் உள்ளாயா? மொத்த மரமும் சேர்ந்துதான் அசையும். எண்ணமுடியாத அலைகளுடன் சேர்ந்துதான் கடல் பொங்கும். ஒரே ஓர் அலை எனத் தனியாகப் பிரிக்கமுடியாது. அதுபோல் உலகில் ஒரே ஒரு மனிதன் மட்டுமே இருக்க முடியாது. நாம் அனைவரும் ஒரே கடலின் அலைகள். வெளிப்பார்வைக்கு மட்டுமே வெவ்வேறாகத் தெரிகிறோம். இந்த அனுபவம் என்று கிடைக்கிறதோ அப்போது நம்மிடையே அன்பு உதயமாகிறது.

அன்பு என்பது நம்மிடையே பிரிவு கிடையாது என்பதை உணர்வதாகும். அன்பு என்பது நாம் இருவரோ, பலரோ அல்லர், ஒருவரே என்பதை உணர்வதாகும். உடல்கள் தனித்தனியாகத்தான் காணப்படுகின்றன. பூசணிக்காய்கள் தனித்தனியாகத்தான் உள்ளன. மேலோட்டமாகப் பார்க்கையில் அலைகள் ஒவ்வொன்றும் வெவ்வேறாகத் தென்படுகின்றன. உள்ளே, ஆழத்தில் ஒரே ஆத்மாதான் உள்ளது.

அன்பு என்பது உனக்கும் இன்னொருவருக்கும் அல்லது பலருக்கும் இடையே உள்ள ஒற்றுமையை உணர்வதாகும். இந்த உணர்வு விசாலப்பட்டு மரம், மலை, ஆறு, ஓடை, மிருகம், பறவை, விண்மீன்கள் எல்லாவற்றின் ஊடே ஒரே அதிர்வே பாய்கிறது என்பதை அறியவைக்கும். அந்த அதிர்வை அனுபவத்தில் உணர்வது அன்பு எனப்படும்.

அன்பு என்பது பிரார்த்தனை. நீ நினைக்கும் அன்பு உடற்பசியுடன் சம்பந்தப்பட்டது. அது அன்பின் பெயரால் நடக்கும் மோசடி. உடலின் தேவை உன்னை வசப்படுத்தி ஏமாற்றுகிறது.

**ஆசைப் பசியுடன் இருக்கும் புலன்கள்**
**பட்டினியால் வாடும் புலன்களிடம்**
**கேட்கின்றன பிச்சை**

நீ யாரிடம் பிச்சை கேட்கிறாய் என்பது பற்றி யோசித்ததுண்டா? அவர்கள் உன்னிடம் பிச்சை கேட்பவர்களாக அல்லவா இருக்கிறார்கள்? ஒரு பிச்சைக்காரன் இன்னொரு பிச்சைக்காரனிடம் பிச்சை கேட்டுத் தட்டை நீட்டினால் எப்படி இருக்கும்! பிறகு பிச்சை கிடைக்காவிடில் - ஆசை நிறைவேறாவிடில்—ஆச்சரியப்பட என்ன

இருக்கிறது? நீ யாரிடம் பிச்சை கேட்கிறாயோ அவர் உன்னிடம் பிச்சை கேட்க வந்திருக்கிறாரே! நீ மனைவியிடம், பிள்ளைகளிடம் யாசிக்கிறாய். அவர்கள் உன்னிடம் யாசிக்கிறார்கள். யாரிடமும் இருப்பு ஏதும் இல்லை. எல்லோர் கையும் காலியாக உள்ளது. எடுத்துக் கொடுப்பதற்கு எதுவும் இல்லாதவர்களாய் உள்ளனர். எல்லோரும் பிச்சை கேட்கின்றனர். அனைவரும் பிச்சைக்காரக் கூட்டம்.

இவர்களை நீ உனக்கு வேண்டியவர்களென நினைத்தாய். இவர்கள் எல்லாம் ஐம்பூதங்களின் கூட்டிணைப்பேயாகும். நீயும் அப்படித்தான் உருவானவன். நிலம்-நீர்-நெருப்பு-காற்று-விண் ஆகியவை உன்னில் கலந்துள்ளன. நீ உன் உடல் என நினைப்பது இவற்றின் கலப்புதான். இது ஒருநாள் சிதறிவிடும். பிறகு என்ன மிஞ்சியிருக்குமென யோசி. அதை அடையாளம் காண். அதில் ஆழ்ந்துவிடு. அங்கிருந்து அன்பு ஊற்றெடுக்கும். அந்த ஆழ்தலின், அமிழ்தலின் பெயர்தான் தியானம். நீ தியானத்தைச் சரியாகப் புரிந்துகொண்டால் அன்பு சுயமாகவே உன் வாழ்க்கையில் வந்து இறங்கும். முதலில் அன்பு ஏற்பட்டிருந்தால் தியானம் தானாக வாய்க்கும். ஒரு விஷயத்தைத்தான் இந்த இரு சொற்களும் சுட்டுகின்றன. தியானத்தின் மூலம் அன்பைப் புரிந்துகொண்டாலும் சரி, அன்பின் மூலம் தியானம் வசமானாலும் சரி, இரண்டும் தனித்தனி அல்ல.

**அ**க்பர் வேட்டையாடச் சென்றார். காட்டில் வழி தவறிவிட்டது. தன்னுடன் வந்தவர்களிடமிருந்து பிரிந்துவிட்டார். மாலை நேரமாகிவிட்டது. துணியை விரித்துப்போட்டுத் தொழுகை (நமாஸ்) செய்ய ஆரம்பித்தார். ஓர் இளம்பெண் வேகமாக ஓடிவந்து, அந்தத் துணியை மிதித்துக்கொண்டு அக்பரைக் கடந்தாள். அவர் அக்பரை உரசியபடி ஓடியதில், மண்டியிட்டிருந்த அவர் கீழே விழுந்துவிட்டார்.

அக்பருக்குக் கடுங்கோபம் வந்தது. பாதுஷா நமாஸ் செய்வதைக் கூட கவனிக்காமல் அப்பெண் அநாகரிகமாகத் தன்னை இடித்துத் தள்ளி ஓடியதை அவர் பெருத்த அவமானமாக நினைத்தார். சீக்கிரமே தொழுகையை முடித்துவிட்டு, குதிரையிலேறி அப்பெண் சென்ற திசையில் சென்றார். சிறிது நேரத்தில் அவள் அவரிடம் மாட்டிக்கொண்டாள்.

அக்பர் அவளிடம் கோபமாக, "இது என்ன அநாகரிகம்! ஒருவர் நமாஸ் படித்தபடி இருக்கையில், பிரார்த்தனை செய்கையில், முரட்டுத்தனமாக நடந்துகொள்கிறாயே. அதுவும் சக்கரவர்த்தியாகிய நான் நமாஸ் செய்கையில் இப்படியா ஒழுங்கீனமாக நடப்பது?" என்று அதட்டினார்.

அவள் பணிவுடன் சொன்னாள்: "பாதுஷா அவர்களே! என்னை மன்னியுங்கள். நான் என் காதலரைச் சந்திக்க அவசரமாகப் போய்க்கொண்டிருந்தேன். அவர் என்னைப் பார்ப்பதற்காகக் காத்துக்கொண்டிருந்தார். உயிரின் நினைவுகூட அற்றவளாக ஓடினேன். வழியில் நீங்கள் இருப்பதோ, நீங்கள் நமாஸ் செய்வதோ என் கண்ணில்படவில்லை. இது தவறுதான். ஆனாலும் ஒரு விஷயம் உங்களிடம் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

"நீங்களோ கடவுள் வழிபாட்டில் ஈடுபட்டிருந்தீர்கள். நான் உரசியது உங்களுக்குத் தெரிந்துபோனது என்றால் இதுதான் பிரார்த்தனை செய்யும் அழகா? பக்தியின் ஆரம்பக்கட்டமான அன்புகூட உங்களுக்கு வசமாகவில்லையே. நீங்கள் பிரார்த்தனையில் லயிக்கவும் காணோமே. கடவுளை வழிபடுகையில் எல்லாம் மறந்துபோயிருக்குமே. அப்போது ஒருவன் உங்கள் கழுத்தில் கத்தியை வைத்தாலும் உணர்ச்சி இருக்காதே. அதுதான் உண்மையான பிரார்த்தனை. நான் அப்படிதான் எல்லாவற்றையும் மறந்து காதலரின் நினைப்பிலேயே லயித்திருந்தேன்."

அக்பர் இந்த சம்பவத்தை சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். 'அவள் சொன்னதிலிருந்த உண்மை எனக்குப் பேரதிர்ச்சி தந்தது. ஆம் எனது பிரார்த்தனை ஒரு சடங்காக மட்டுமே இருந்திருக்கிறது. அதில் அன்பு கலந்திருக்கவில்லை.' என்று அவர் மேலும் எழுதியுள்ளார்.

அன்பின் வளர்ச்சி, உச்சகட்ட வளர்ச்சிதான் பிரார்த்தனை.

நீ வேறு ஒருவரின் உள்ளத்தில் கடவுள் வசிப்பதுபோல் உணர்ந்தால், அல்லது வேறு ஒருவரின் உள்ளத்தில் நீயே பிரதி பலிப்பாவதாக உணர்ந்தால், அங்கே காதல் - அன்பு - பக்தி தோன்றிவிட்டதெனலாம். நீ தற்சமயம் அன்பு என்று கூறுவது வெறும் வாய் வார்த்தைதான். அது மனப்பூர்வமானது இல்லை. அதில்

ஒதுவேண்டும்.

பிரார்த்தனையின் நறுமணம் இல்லை; புலன்களின் அழுகல் நாற்றமே வீசுகிறது.

**அலைகள் எழுவது அழகிற்கன்று**
**அது கடல்படும் வேதனைக் கொந்தளிப்பு**
**பூவின் நறுமணம் அதன் கவர்ச்சிக்கன்று**
**அது பூவினுள் நிகழும் பிழிவின் சாரம்**
**கூவும் குயிலின் இனிய ஒலி**
**அதன் இதய வேதனையின் எதிரொலி**
**பாடகர் பாடுவது தொழிலுக்கன்று**
**அவரது துன்ப வாழ்க்கையின் வெளிப்பாடு**
**வீணையை மீட்டினால் ஒலிக்கும் நாதம்**
**அது எரிச்சலடைந்ததன் அடையாளம்**

தற்போது நீ கூறும் அன்பு என்பது தவிர்க்க முடியாத ஓர் உணர்வு. அது வேதனை நிறைந்தது. நீ துடிக்கிறாய். பசியால் வாடுகிறாய். ஆதரவை நாடுகிறாய். துன்பம் மறக்க போதைப் பொருளுக்கு ஏங்குகிறாய். இதை நான் அன்பு என்று சொல்ல மாட்டேன். அன்பு என்பது வேதனையில்லை; மயக்கநிலை இல்லை. அன்பு என்பது முழுமையான விழிப்பு. அதை தியானம் என்றும் சொல்லலாம்.

அன்பின் மூலம் மகாசத்தியம் வசப்படும் என்றால் தியானம் ஏன் செய்ய வேண்டும் என்று கேள்வி எழலாம். அன்பே தியானத்தின் ஒரு வடிவமாக ஆன பிறகுதான் சத்தியம் வசப்படும். அதற்கு முன்னால் அது கிடைக்காது.

சிலர் வேறு விதமாகக் கேட்கிறார்கள். தியானத்தின் மூலம் சத்தியம் வாய்க்கும் என்றால் அன்பின் தேவையென்ன என்று கேட்கிறார்கள். ஆனால் யாருக்கு தியானம் வசப்படுகிறதோ அவர்களிடம் அன்பும் தோன்றும்.

புத்தர் கூறுகிறார். 'சமாதிநிலை வாய்க்கப் பெற்றவனிடம் கருணையும் உதிக்கும். கருணை என்பது சமாதிநிலையின் நிழல்தான்.'

சைதன்யர் மொழிகிறார்: 'எங்கெல்லாம் அன்பு உள்ளதோ அங்கே பிரார்த்தனை சூழ்நிலையும் இருக்கும். அங்கு தியானமும் வசமாகும்.'

நிழலை உன்னிடமிருந்து பிரிக்கமுடியாது என்பதைப்போல் அன்பையும் தியானத்தையும் பிரிக்கமுடியாது.

சத்தியத்தைத் தேடுவதற்கு இரண்டு வழிமுறைகள் உள்ளன. ஒன்று, தியானத்தில் ஆழ்ந்துவிடு அல்லது அன்பில் லயித்துவிடு. தியானத்தின் மூலம் விழிப்பு ஏற்பட்டு, எல்லாவற்றையும் இழந்து நீ மட்டும் மிஞ்சியிரு. அல்லது அன்பில் நீ கரைந்துபோய் சத்தியம் மட்டும் மிஞ்சட்டும். எப்படியும் ஒன்று மட்டுமே மிஞ்சும் நிலை ஏற்படட்டும். அது போதும். சத்தியம் உன்னைத் தேடி வந்துவிடும். அந்த இலக்கை 'நான்" என்பதை அழிப்பதன் மூலம் போய்ச் சேர்ந்தாயா அல்லது 'நீ' என்பதை அழித்துச் சென்றடைந்தாயா என்பது முக்கியமில்லை. ஏனெனில் அவை இரண்டினிடையே வித்தியாசமில்லை.

மனம் நம்மை ஏமாற்றவே எப்போதும் முயல்கிறது. 'தியானம் செய்' என்று நான் மனத்துக்குக் கட்டளையிட்டால், அது 'அன்பு காட்டினால் போதாதா?' என்று கேட்கும். இது நிஜமான சந்தேகமில்லை. இது தியானம் செய்வதிலிருந்து தப்பிப்பதற்கான சாக்குப்போக்கு மட்டுமேயாகும்.

நான் மனத்திடம் அன்பின் வழியை எடுத்துச்சொன்னால், மனம் 'தியானம் செய்து பாரேன்' என்று மாற்றுவழி சொல்லும். அன்பைத் தவிர்க்கச் சொல்லும். அன்பின் விளைவாக 'நீ' என்னும் உணர்வு அழிவதை யாரும் விரும்புவதில்லை. அப்படித் தன்னையே இழக்காமல் சத்தியத்தை அடைவதற்கு வேறு உபாயமில்லை, வழியில்லை.

நாமும் சாக்ரடீஸைப்போல் சத்தியத்தைத் தேடுபவர்கள்தாம். விஷத்தைக் குடிக்க நேர்வதன் மூலமே சத்திய தரிசனம் கிடைக்குமென்றால் நாம் அதற்குத் தயாராக இருக்கிறோம்.

ஒருவகையில் நீ தியாகி ஆவதற்கு நான் சந்தர்ப்பம் தருகிறேன். 'நீ' என்பதை அழித்து, நீ என்பவன் இறந்துபோக வேண்டும். தியானத்தின் மூலமாக வேண்டுமானாலும் நீ இற அல்லது அன்பின் மூலமாக வேண்டுமானாலும் நீ இற. ஆனால் இறக்க வேண்டும் என்பது கட்டாயம். 'நீ' என்பவன் இருப்பதுதான் தடையாக உள்ளது. நீ 'இறந்தால்' கடவுளுடன் சந்திப்பு ஏற்படும்.

சத்தியத்தைத் தேடுவது பணத்தைத் தேடுவது போன்றதென நினைத்துவிடாதே. நீ அலைந்தாய், பணம் சேகரித்தாய், திரும்பி வந்தாய், பணப்பெட்டிகளை நிரப்பினாய் என்பதுபோல் சத்தியத்தைத் தேடிச்சென்று அடைந்துவிட முடியாது. நீ சத்தியத்தைத் தேடிப் போனால், போனவன் போனவன்தான். நீ (பழைய நீ) என்றும் திரும்பி வரமாட்டாய். சத்தியம் தான் திரும்பிவரும். (சத்தியமாகிப்போன நீதான் திரும்புவாய்). நீ கைநிறைய சத்தியத்தைச் சேகரித்து வந்து பெட்டிகளில் நிரப்ப முடியாது. நீ பணத்திற்கு எஜமானனாக இருப்பதுபோல் சத்தியத்திற்கு எஜமானன் ஆகிவிட முடியாது. சத்தியத்திற்கு யாருமே எஜமானன் ஆக முடியாது. 'நான் உன்னை அடக்கியாள விரும்புகிறேன்' என்று கூறி சத்தியத்தைத் தேடினால் அது கிடைக்காது. நீ அதன் காலடியில் விழத் தயாராகி, 'நான்' என்பவன் இல்லை என அறிவித்து, உன்னைக் கரைத்துக் கொள்ள முன்வந்ததும் உடனே சத்தியம் அங்கு தோன்றும். சத்தியத்தைத் தேடி நீ எங்கும் அலைய வேண்டியதில்லை. 'நீ' என்பது அழிந்தால் சத்தியம் கிடைக்கும். 'நீ' என்னும் உணர்வு இருப்பதுதான் சத்தியம் உனக்குக் கிடைப்பதற்கு இடைஞ்சலாக உள்ளது.

நான் தியானம் பற்றி சொன்னால் நீ அன்பைப் பற்றிப் பேச்செடுக்கிறாய். நான் அன்பை பற்றிப் பேசினால் நீ தியானம் குறித்துக் கேட்கிறாய். இப்படித் தப்பிக்கப் பார்க்காதே. இப்படித்தான் பேச்சை மாற்றி, தியானம் - அன்பு இரண்டையும் தவிர்த்து எத்தனையோ பிறவிகளை வீணில் இழந்தாய்.

என்னிடம் ஆலோசனை கேட்டால் மாட்டிக்கொள்ளத்தான் நேரிடும். புத்தரிடம் கேட்டால் அவர் தியானவழியைச் சொல்வார். நீ 'என் வழிவேறு; அது அன்பு வழி' என்று கூறித் தப்பித்துவிட முடியும். நீ சைதன்யரிடம்* போனால் அவர் அன்புவழியைப் போதிப்பார். நீ 'ஏன் வழி வேறு; அது தியானவழி' என்று கூறித் தப்பிக்கலாம். ஆனால் நீ என்னிடமிருந்து தப்பித்து ஓடமுடியாது. அன்புவழியைப் பின்பற்றி 'நான்' என்பவன் இறப்பேன் என்று நீ சொன்னால் நான் "சரி, போய் இற," என்பேன். தியானம் மூலம் "நான்" என்பவன்

* ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் (1485-1533) வங்காள கிருஷ்ண பக்தர். பக்தியில் ஆவேசமான ஆடலையும் பாடலையும் முக்கியமாக பிரச்சாரம் செய்தவர். கௌடிய சம்பிரதாயத்தை நிறுவியவர்.

இறப்பேன் என்று நீ சொன்னால், அதற்கும் பதற்றப்படாமல் நான் "சரி, போய் இற" என்பேன். 'நான்' என்பது இறப்பதுதான் முக்கியமே தவிர, அது எந்த விதத்தின் மூலம் கைகூடுகிறது என்பதில் எனக்கு அக்கறையில்லை.

ஆகவே நீ என்னிடம் மாட்டிக்கொண்டால் தியாகி ஆவதைத் தவிர வேறு வழியில்லை. அதற்கான நேரம், அதற்கான சூழ்நிலை வந்துவிட்டது. நீ சிறிதளவுதான் தாமதப்படுத்த முடியும். சிறிதளவுதான் அலைக்கழிக்க முடியும். இப்படித் தாமதிப்பதால் உனக்கு எந்த சுகமும் கிடைத்துவிடாது. சத்தியம் முதலில் கிடைத்த பிறகுதான் உண்மையான சுகம் வாய்க்கும். அந்த சுகம்தான் சத்தியத்தின் நறுமணம்; சத்தியத்தின் ஒளி.

## இரண்டாம் கேள்வி

**அறிபவன், அறிதல், அறியும் பொருள் இவை கடந்து தன்னில் [தன் நிஜ சொரூபத்தில்] நிலைக்க வேண்டும் என்கிறீர்கள். அத்தகைய தன்னிலையில் நீடித்து ஒருவர் வாழ்க்கை முழுதும் வாழ முடியுமா?**

**ஏரியின் பரப்பு சில சமயம் சாந்தமாக உள்ளது. சில சமயம் சலனப்படுகிறது. வேறு சில சமயம் புயலால் கொந்தளிக்கிறது. இதேபோல் ஆத்ம ஞானம் பெற்றவனும்கூட உலக சூழ்நிலைகளால் பாதிக்கப்படுவானா?**

உன் கேள்வியின் முதல் பகுதியை எடுத்துக்கொள்வோம். 'வாழ்க்கை முழுதும்' என்னும் சொல்லமைப்பு மனத்தின் பிரமையால் உண்டாகியது. இந்த ஒரு நிமிடம்தானே உன் கையில் உள்ளது. அடுத்த நிமிடம் என்பதுகூட உன் கையில் இல்லையே. பிறகு பெரிதாக 'வாழ்க்கை முழுதும்' என்று சொல்கிறாயே. கையிலுள்ள ஒரு நிமிடம் கூட சட்டென மறைந்துவிடும். ஆகவே புத்தர் தமது வாழ்க்கை சித்தாந்தத்தை க்ஷணவாதம் என்ற பெயரால் அழைக்கிறார். சேர்ந்தாற்போல் இரண்டு கணம் நம் கையில் இருக்க வாய்ப்பில்லையே. ஆகவே அந்த-அந்த கணத்திலேயே வாழ வேண்டும். கிடைத்த ஒரு நிமிடத்தில் சாந்தமடையும் கலை உனக்கு வசப்பட்டால், ஒவ்வொரு

நிமிடமும் அதை நீட்டிக்கொண்டே செல்லலாம். அப்பொழுது 'வாழ்க்கை முழுதும்' என்று சொல்லலாம்.

மனம் சும்மா இருக்காது. உன்னைத் தடுமாற வைக்கும். கேள்விகள் கேட்கும். 'இந்த ஒரு நிமிடம் அமைதியாக இருப்பதால் என்ன பிரயோஜனம்? எப்போதும் இந்த அமைதி நீடிக்குமா? ஏன், நாளையே நீடிக்குமா? நீ இப்போது சாந்தமாக உள்ளாய் என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஒரு மணி நேரம் கழிந்து மறுபடியும் சலனப்படுவாய், எரிச்சல்படுவாய்.' மனம் இப்படியெல்லாம் கேட்டு இப்பொழுதுள்ள அமைதியையும் குலைத்துவிடும். கிடைத்த ஒரு நிமிட சாந்தியையும் அழிப்பதே இந்தக் கேள்விகளுக்கு காரணமாக இருக்கக்கூடும்.

சில சமயம் தியானத்தில் மிக முக்கியக் கட்டமான நேரத்தில் ஒருவித சுகானுபவம் கிடைக்கிறது. அப்போது மனம் குறுக்கிட்டு, 'ஏன் இப்படி பரவசம் அடைகிறாய்? இது நீடிக்கவா போகிறது? இந்த சுகம் ஒரு கனவு மாத்திரமே.' துன்பமான சூழ்நிலையில் மனம் கேள்வி எதுவும் கேட்பதில்லை. மனம் சுகத்தைக் குறை கூறியபடியே இருக்கிறது. 'சுகம் அற்பாயுள் கொண்டது. அதிகமாகத் துள்ளிக் குதிக்காதே. இதோ துக்கம் வரப்போகிறது' என்று எச்சரிக்கிறது. நீ மனம் பேச இடம் கொடுத்தாயானால் துன்பம் வந்தே விட்டது எனலாம். இவ்வாறு மனம் க்ஷணநேர அமைதிகூட நீடிக்கவிடாமல் செய்து உள்ளத்தின் சமநிலையைப் பாதிக்கிறது.

'வாழ்க்கை முழுதும்' என்று நீ சொன்னது உன் பேராசையைத் தான் காட்டுகிறது. ஒரு நிமிடம் போதாதா? உன் கையிலுள்ளது ஒரு நிமிடம்தான். அவ்வளவு குறுகிய நேரத்திலேயே மனம் சாந்தமடையத் தெரிய வேண்டும்.

**ஜெ**ன் குரு லாவோத்ஸு ஒரு கதை சொல்கிறார். ஒரு மனிதன் தீர்த்த யாத்திரை செய்ய விரும்பினான். பல்லாண்டுகளாக அதற்கான திட்டம் தீட்டிவந்தான். ஆனால் மனம் ஏதாவது சாக்குச் சொல்லித் தாமதப்படுத்தியது. பல இடைஞ்சல்கள் குறுக்கிட்டன. அவனால் சட்டென்று கிளம்ப முடியவில்லை. பிறகு ஒருநாள் மனத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு தீர்த்தயாத்திரைக்குக் கிளம்பினான். அவன் போக விரும்பிய கோயில் வெகு'தொலைவில் இல்லை. பத்து

மைல்தான். ஒரு குன்றின் மேலிருந்தது. அவன் அதிகாலை 3 மணிக்கே புறப்பட்டுவிட்டான். அப்பொழுதுதான் வெயில் அதிகமாவதற்கு முன்னால் கோயிலை அடைய முடியுமென நினைத்தான். அப்போது இருளாக இருந்ததால் லாந்தர் விளக்கை எடுத்துக்கொண்டான். கிராமத்துக்கு வெளியே கண்ணுக்கு எட்டியவரை இருள் படர்ந்திருந்தது. அவன் கையிலிருந்து லாந்தர் மூன்று காலடி தூரம்தான் வெளிச்சம் காட்டியது. இவ்வளவு குறைந்த வெளிச்சம் தரும் விளக்கு பத்து மைல் பரவியுள்ள இருட்டை எப்படிப் போக்கும் என்று அவனுக்கு சந்தேகம் தோன்றியது. உடனே அவன் அப்படியே சோகமாக உட்கார்ந்துவிட்டான்.

அப்போது அவனது விளக்கைவிடக் குறைவாக, இரண்டு காலடி தொலைவு மட்டுமே வெளிச்சமும் காட்டிய லாந்தரை எடுத்துக் கொண்டு ஒருவன் அவனைக் கடந்துசெல்ல முயன்றான். அவனை யாத்திரிகன் தடுத்தான். "இந்தாப்பா! எங்கே போகிறாய்? வழியில் தடுமாறுவாய். உன் விளக்கின் வெளிச்சம் என் விளக்கைவிட குறைவாக அல்லவா உள்ளது. உன் லாந்தரும் சிறியது. எங்கும் கும்மிருட்டாக இருக்கிறது. அது மைல் கணக்காகப் பரவியிருக்கிறது. உன் விளக்கு இரண்டு காலடி தூரம்தானே வெளிச்சம் காட்டுகிறது. இதை வைத்துக்கொண்டு நீ பத்து மைல் தூரம்! எப்படிக் கடக்க முடியும்?" என்று கேட்டான்.

புதிதாக வந்தவன் சிரித்துவிட்டான். "ஏனய்யா உங்களுக்குப் பைத்தியமா? என் விளக்கால் இரண்டு காலடி வீதம் ஒவ்வொரு முறையும் வெளிச்சம் முன்னேறும். இவ்வாறு ஒருவன் நூறு மைல்கூட கடக்க முடியும். அதற்கு மேலும் முடியும். எடுத்த எடுப்பிலேயே பத்து மைல் தொலைவு வெளிச்சம் தெரியக்கூடிய பெரிய லாந்தர் உண்டா? அதற்கு ஏற்பாடு செய்தாலும் எடுத்துச்செல்ல முடியுமா? இரண்டு காலடி தொலைவு வெளிச்சம் தெரிந்தால் போதும். இரண்டு காலடி தூரம் கண்ணுக்குத் தெரியும். இப்படிக் கடந்து நாம் போகவேண்டிய இடத்தை அடைந்துவிடலாம், என விளக்கினான்.

'ஒவ்வொரு காலடியாக எடுத்துவைத்து ஓராயிரம் மைல்கூட பயணிக்கு முடியும்' என்று லாவோத்ஸு கதையை முடிக்கிறார்.

ஒருநிமிடமாவது உன் மனம் எந்தச் சலனமும் இல்லாமல் சாந்தமாக இருந்தால் போதும். பிறகு அடுத்த நிமிடம் வரும். ஒரு நிமிடத்தில் சாந்தமாகும் கலை உனக்கு வசப்பட்டுவிட்டால் அடுத்த நிமிடத்திற்கும் அதை உபயோகி. ஒரு பாட்டின் வரியை முணுமுணுக்க ஆரம்பித்ததும் மேற்கொண்டு தொடர்வதுபோல்தான் இதுவும்.

ஒரு நிமிடம் எந்த எண்ண அலையும் எழாமல் ஒருவனால் சாந்தமாக இருக்க முடியுமெனில் அவனால் நீண்ட நேரம் அல்லது நிரந்தரமாக சாந்தமாக இருக்க முடியும் என்றே நான் சொல்வேன். ஒரு நிமிட காலத்தை உன்னால் கட்டுப்படுத்த முடிந்ததால், நீ காலத்தை வெல்ல வல்லவன் என்பது தெளிவாகிவிட்டது. காலம் உன்னைத் தோற்கடிக்க வேண்டுமாயின் ஒரே சமயம் உனக்கு இரண்டு நிமிடம் தரவேண்டும். அப்பொழுது நீ முதல் நிமிடம் சாந்தமாக இருந்து அடுத்த நிமிடம் என்ன செய்வது என்று நீ குழம்புவாய். ஆனால் காலம் உனக்குத் துளித்துளியாகத்தான் கிடைக்கிறது. சேர்த்துக் கிடைப்பதில்லை. அரசனுக்கும் ஆண்டிக்கும் ஒவ்வொரு வினாடியாகத்தான் கால அவகாசம் கிடைக்கும்.

இப்போது கேள்வியின் இரண்டாவது பகுதிக்கு வருவோம். ஏரியின் நீர்ப்பரப்பில் ஏற்படும் மாறுதல்கள்போல் சூழ்நிலை மாற்றங்களால் ஞானி பாதிக்கப்படுவாரா என்பது கேள்வி.

ஆத்ம ஞானம் குறித்து நம்மவர்களிடையே தப்பான கருத்துகள் பல உள்ளன. ஆத்மஞானி என்பதன் அர்த்தம் 'இல்லாமல் போனவன்' என்பதாகும்! அவன் சாந்தமாயிருப்பானா, இல்லையா என்ற ஆராய்ச்சி தேவையில்லை. ஒருவன் நம்மிடம் "அறையில் விளக்கு ஏற்றினேன். இருட்டு எங்கே போனதோ தெரியவில்லை." என்று தெரிவிக்கிறான். நம் பதில் என்ன? 'இருட்டு மிஞ்சியிருக்க வில்லை' என்பதுதான்.

'ஒருவேளை சுருங்கி ஒரு மூலையில் இருட்டு ஒளிந்து கொண்டதா? நாற்காலியின் பின்னால் மறைந்திருக்கிறதா? வாசல் கதவைத் தாண்டி நின்று மீண்டும் உள்ளே வரக் காத்திருக்கிறதா? ஏனெனில் நாம் விளக்கை அணைத்ததும் அது மறுபடி உள்ளே வந்துவிடுகிறதே. எங்கேயோ போய்விட்டு வருவதுபோல் தெரிகிறதே.'

இதெல்லாம் பிரமை. இருட்டு எனப்படும் ஒன்று கிடையவே கிடையாது. வெளிச்சம் இல்லாவிடில் உள்ள சூழ்நிலைக்கு நாம் வைத்திருக்கும். பெயர்தான் இருட்டு.

நான் சொல்வதைப் புரிந்துகொள்ள முயற்சிசெய். நீ இருக்கிறாய். ஏனெனில் அறியாமை (அக்ஞானம்) அவ்வாறு உன்னை நினைக்கவைக்கிறது. ஞானம் பிறந்தால் நீ காணாமல் போய்விடுவாய்! சாந்தமாக இருக்கவோ, சாந்தத்தை இழக்கவோ நீ இருக்கமாட்டாய். 'நீ' (என்னும் உணர்வு) மிஞ்சியிருக்காமல் போனால் அந்த நிலைதான் சாந்தமென்பது. 'நீ' என்பது மிஞ்சியிருந்தால்தான் அமைதியின்மை என்னும் நிலை உருவாகிறது. 'நீ' என்னும் அகங்காரம் இருக்க வேண்டும். என்றும் சாந்தியும் கிடைக்க வேண்டும் என்றும் நீ எதிர்பார்ப்பது நடக்காத காரியம்.

கடலிலிருந்து புயல் உருவாகிப் பலத்த காற்று வீசுகிறது. சிறிது நேரம் கழித்துப் புயல் நீங்கிவிடுகிறது. 'புயல் ஓய்ந்து அமைதியாகி விட்டது' என்று மக்கள் பேசுவார்கள். ஆனால் இது தவறான சொற்பிரயோகம் ஆகும். இதைக் கேட்கும்போது புயல் இன்னமும் இருப்பதுபோலவும், அமைதியாகிவிட்டது போலவும் அர்த்தம் எடுத்துக்கொள்ளத் தோன்றும். அப்படிச் சொல்லாமல், 'புயல் இல்லாமல் போய்விட்டது' என்று சொல்ல வேண்டும். புயல் அமைதியாகிவிட்டது என்பதற்கு புயல் இப்போது இல்லை என்பதுதான் அடிப்படை அர்த்தம். அதுபோல், நீ சாந்தமாகி விட்டாய் என்பதற்கு நீ இப்போது இல்லை என்றுதான் பொருள். யார் சலனமடைவான்? இருத்தல் என்னும் நிலையில்தான் சலனப்படுவதும் நடக்கிறது. நீ சூன்யமாகிப் போனால் பிறகு எந்தச் சலனமுமில்லை, தடுமாற்றமும் இல்லை.

**வெளியே வசந்தம் வராது இனி**
**மனமே! உள்ளே வசந்தம் உண்டாக்கு**
**பறவைகள் பறந்து போய்விட்டன**
**கிளைகள் சூன்யமாகிவிட்டன**
**இதையே நினைத்து தினமும் நீ**
**வருந்தி உருக வேண்டியதில்லை**
**பருவகாலம் எதுவானாலும்**
**மௌனமாய், கவலையற்றிரு**

## வசந்தகால நதியைப்போல எக்காலமும் இயங்கு மென்மையாய்

என்னிடம் வந்து சிலர் 'தியானத்தில் மனத்தை ஊன்றுவது சிரமமாக உள்ளது' என்கிறார்கள். தியானத்தை ஆரம்பித்ததும் மனைவி பாத்திரங்களால் எழுப்பும் ஓசை கேட்கிறது. குழந்தைகள் அலறி ஆர்ப்பாட்டம் செய்கின்றன. ரயில் ஓடும் சத்தம் காதை உறுத்துகிறது. தெருவில் கார்கள் ஹாரன் அடித்தபடி ஓடுகின்றன. வானில் விமானம் உறுமிக்கொண்டு பறக்கிறது.

இவ்வாறு சொல்பவர்கள் தியானம் பற்றி அறிந்திருக்கவில்லை. தியான சமயம் ஓர் ஓசையும் கேட்கக்கூடாது என்று நிபந்தனை எதுவும் கிடையாது. ஓசையே கூடாது என்றால் உலகில் ஒன்றுமே இல்லாமல்போய் நீ மட்டுமே மிஞ்சியிருக்க வேண்டும். விலங்குகளும் பறவைகளும்கூட இருக்கக்கூடாது.

ஒரு மனிதன் ஓசைகளின் நடுவே தியானம் செய்ய முடியாமல்போய் வீட்டைவிட்டு வெளியேறிவிட்டான். மக்கள் நடமாட்டமில்லாத ஓரிடத்திற்குச் சென்று ஒரு மரத்தின்கீழ் வசதியாக உட்கார்ந்தான். தியானத்தை ஆரம்பிக்கக் கண்களை மூடினான். சட்டென்று அவன் தலையில் வந்து விழுந்தது காக்கையின் எச்சம்! அவன் பயங்கரமான எரிச்சலுடன் எழுந்தான். நெற்றியைத் தட்டியபடி, 'எல்லாவற்றிற்கும் எல்லை உண்டு. மனைவியின் பிடுங்கலிலிருந்து தப்பித்தோம் என நினைத்தால், இந்த காகம் எல்லாவற்றையும் குட்டிச்சுவராக்கிவிட்டது. மனைவி விஷயத்தில் நான் அவளுக்கு கஷ்டங்கள் தந்திருக்கிறேன். ஆகவே அவள் தியானத்திற்கு இடைஞ்சலாக இருந்ததில் சற்றாவது நியாயமுண்டு. ஆனால் இந்தக் காக்கையை இன்றுதானே பார்க்கிறேன். காக்கைக்கு நான் ஒரு கெடுதலும் செய்ததில்லையே' என்றெல்லாம் அவன் மனம் குழம்பினான்.

நீ தியானம் செய்யும்போது உலக இயக்கமெல்லாம் நின்றுபோய் ஓர் ஓசையும் கேட்கக்கூடாது என்றால் இது நடக்கிற காரியமல்ல. உலகத்தை நாம் 'ஜகத்' என்று அழைக்கிறோம். சென்றுகொண்டே இருப்பது, ஓடிக்கொண்டே இருப்பதுதான் உலகம் என்பதை அச்சொல்லின் 'கதி' (கத்) என்னும் விகுதி காட்டுகிறது.

உலகினில் எங்கும் கதிமயமாக உள்ளது. ஆறுகள் ஓடுகின்றன. மலைகள் விரிசலடைகின்றன. மேகம் திரள்கிறது. மின்னல் பளிச்சிடுகிறது. மழை பெய்கிறது. இவை எல்லாம் எக்காலத்தும் நடைபெறுபவை. இவற்றிலிருந்து நீ எப்படித் தப்பித்து ஓடுவாய்?

தியானம் என்பதன் அர்த்தம், 'சமையற்கட்டில் பாத்திரங்கள் உருண்டால் ஒலி எழுவதைத் தடுக்க முடியாது. கேள். ஆனால் அது நீடிக்க முடியாத அளவிற்கு நீ சூன்யநிலையை அடை' என்பதாகும். சூன்யமாகக் கிடக்கும் வீட்டிற்கு நீ எப்பொழுதாவது சென்று குரல் கொடுத்துப்பார். என்ன நடக்கிறது. சூன்ய வீட்டில் சிறிது நேரம் அந்த ஒலி கேட்கிறது, பிறகு நீங்கிவிடுகிறது. வீடு மறுபடியும் சூன்யமாகி விடுகிறது. எந்தச் சலசலப்பும் இல்லை.

ஆகவே எல்லாவற்றையும் ஏற்கும் பக்குவத்துடன் நீ தியானம் செய். அப்படிப் பக்குவம் பெறாமல் தியானித்தால் சூழ்நிலை பாதிப்பிற்குள்ளாகும். வீடெங்கும் சாவுக்களை பரவும். அப்பா தியானம் செய்கிறாரென்று குழந்தைகள் சுதந்திரமாக விளையாட முடியாது: சிரித்து சத்தம்போட முடியாது. ஏதாவது இடைஞ்சல் செய்தால் அப்பா கோபப்பட்டு, பூஜை அறையை விட்டு வெளியேறி 'இந்த பாழும் வீட்டில் கொஞ்ச நேரம்கூட நிம்மதியாக தியானம் செய்ய முடிய வில்லை' என்று கூப்பாடு போவார் எனக் குழந்தைகளுக்கு பயம்.

தியானம் எதனாலும் பாதிக்கப்படாது. அப்படிப் பாதிக்கப் பட்டால், நீ முற்றிலும் தியானத்தில் கரையவில்லை என்றால், உன்னிடம் அஹங்காரம் 'நான்' உணர்வு மிஞ்சியிருப்பதாக அர்த்தம். 'நான் இப்போது தியானம் செய்யப்போகிறேன். எல்லோரும் கப்சிப்பென்று இருக்க வேண்டும்' என்று நீ அறிவிக்கும்போதே உன் அஹங்காரம் வெளியாகிவிடுகிறது. அப்போது நீ உண்மையில் தியானம் செய்யவில்லை. உன் அஹங்காரத்தை ரசிக்கிறாய். ஆகவேதான் அதற்கு இடையூறு நேரும்போது உனக்குக் கோபம் வருகிறது.

நீ மட்டுமல்ல, தலைசிறந்த முனிவர்களும் அற்ப விஷயத் திற்குக் கடுங்கோபம் கொண்டிருக்கிறார்கள். துர்வாசர் ஆகியிருக் கிறார்கள். அவர்களின் தியானம் முழுமையானதன்று. 'என்னைச்

சுற்றிலும் என்ன நடந்தாலும் சம்மதமே' என்னும் அடிப்படையில் தியானம் தொடங்க வேண்டும். 'நான்' என்பவன் இல்லை. சுற்றிலும் நடப்பவை நடந்தே தீரும்' என்று அமைதி காத்து தியானம் தொடர வேண்டும். பாத்திரம் விழுந்தது. சத்தம் ஏற்பட்டது. நீ அந்த சத்தத்தை நிச்சயமாகக் கேட்டாய். ஆனால் அது உன்னைப் பாதிக்கவில்லை. 'நான் தியானம் செய்கையில் ஒரு சத்தமும் கேட்கக்கூடாது' என்று நீ எதிர்ப்புக் காட்டவில்லை. பாத்திரம் விழும் ஓசை, குழந்தையின் அழுகை உனக்குக் கேட்டது. அதை நீ தொந்தரவாக நினைத்தால் உன் தியானம் குறைபாடு உடையதாகிவிடும்.

'குழந்தை அழுவதை ஏன் யாரும் தடுக்கவில்லை? தெருவில் ஏன் இவ்வளவு பலமாக ஹார்ன் அடிக்கிறார்கள்? நான் உலகத்தின் நன்மைக்காக தியானமாகிய மாபெரும் செயலில் மூழ்கி யிருக்கும்போது எனக்குத் தொல்லைதரக் கூடாதென மற்றவர்களுக்கு ஏன் தோன்றுவதில்லை? அவர்கள் என்னைப் பற்றிய அக்கறை இல்லாமல் தங்கள் வழியிலேயே போகிறார்களே' என்றெல்லாம் உனக்கு மனத்தாங்கல் ஏற்பட்டால் உன் தியானம் குறைபாடு உடையதாகிவிடும். தியானம் பற்றிய உன் கண்ணோட்டம் தவறாகிவிடும். உண்மையான தியானத்தில் உன்னைச் சுற்றிலும் என்ன நடந்தாலும் நீ அமைதியாகப் பார்த்தபடி இருப்பாய். உன்னைச் சுற்றிலும் நிகழ்கின்றவற்றை நீ மறுக்கவும் மாட்டாய். வெறுக்கவும் மாட்டாய். துளியும் பாதிப்படைய மாட்டாய்.

தியானம் என்பது எல்லாவற்றையும் துறந்து ஏதோ ஒன்றில் மனத்தைக் குவிப்பது அன்று. தியானம் என்பது எல்லாவற்றையும் ஏற்பது (ஸர்வ ஸ்வீகாரம்). பறவைகள் பாடும். தெருவில் மக்கள் பேசியவாறு செல்வார்கள். குழந்தைகள் கைகொட்டிச் சிரிக்கும். ஆனால் அங்கே நீ சூன்யமானவனாக உட்கார்ந்திருப்பாய். தியானத்திலும் நீ செவிப்புலனை இழந்திருக்கமாட்டாய். எல்லா ஒலிகளும் வந்து உன்னை உரசிக்கொண்டு கடக்கும். முன்பைவிட இப்போதுதான் அவை அதிகம் தெளிவாகக் காதில் விழும்! விழித்த நிலையில் உனக்கு வாழ்க்கைச் சிக்கல்களையும் எதிர்கொள்ள நேர்ந்தது. தியான சமயம் அவற்றின் தலையீடு இல்லாததால் உலக ஒலிகள் எல்லாம் உனக்குத் துல்லியமாகக் கேட்கும்.

உனக்கும் சுற்றிலுமுள்ள எல்லாவற்றுக்கும் இடையே போட்டியற்ற, எதிர்ப்பற்ற சமமான உணர்வு - சமரசம்-நிலவுவதுதான் தியானம். 'எது எப்படியோ அது சரிதான். அப்படியே அதை அங்கீகரிக்கிறேன்' என்று முடிவெடுத்து தியானம் செய்தால் அது பாதிப்படையாமல் தொடரும். எதையும் புறக்கணிக்கவில்லை. எதனுடனும் விரோதம் இல்லை. நடப்பதெல்லாம் நன்மைக்கே என நம்புவது ஆத்திகம். இதுவே தியானம். இத்தகைய தியானம் உன்னைப் புதிய அனுபவத்தில் கொண்டுசேர்க்கும். வழக்கம்போல் புயல்கள் வீசும். நீ தியானம் செய்வதால் புயல் வருவது நின்றுவிடாது. தியானம் செய்வதால் உடலுக்கு நோய்கள் வருவது நின்றுபோகாது. தியானம் செய்பவனுக்கும் முள் குத்தினால் வலிக்கும். ரமணருக்குப் புற்றுநோய் வந்தது. ராமகிருஷ்ணருக்கும் அதே நோய்தான்.

ராமகிருஷ்ணருக்குத் தொண்டையில் புற்றுநோய். அவரால் திட உணவோ, திரவ உணவோ ஏற்க முடியவில்லை. விவேகானந்தர் அவரை அணுகி, "சுவாமி, உங்களால் என்னதான் முடியாது? நீங்கள் கடவுளிடம் வேண்டிக்கொண்டால் என்ன? குறைந்தபட்சம் உணவும் தண்ணீருமாவது தொண்டை வழியாக இறங்க உதவுமாறு கேட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் தவிப்பதை எங்களால் பார்த்தபடி இருக்க முடியவில்லை." என்றார்.

ராமகிருஷ்ணர் கூறினார், "அடடே! இது பற்றி கடவுளிடம் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று எனக்குத் தோன்றாமல் போய்விட்டதே. என்னுடைய வேண்டுகோள்கள் எல்லாம் நிறைவேறிவிட்டதால் இனி கேட்பதற்கு எதுவும் இல்லை என்றல்லவா நினைத்தேன்."

விவேகானந்தர் மிகவும் வற்புறுத்தவே ராமகிருஷ்ணர் சிறிது நேரம் கண்களை மூடி தியானம் செய்தார். "சரிப்பா, நீ தொந்தரவு செய்வதால் கடவுளிடம் சொல்லிவிட்டேன். உனக்குத் திருப்திதானே?" என்று கேட்டார்.

"கடவுள் பதில் சொன்னாரா? என்ன சொன்னார்?" என்று ஆர்வமாகக் கேட்டார் விவேகானந்தர்.

"கடவுள் என்ன சொன்னார் தெரியுமா? 'ஏ பைத்தியமே! இந்தத் தொண்டையால்தான் தண்ணீர் குடிக்க வேண்டுமா என்ன? எல்லோர்

தொண்டை வழியாகவும் குடியேன். இந்தத் தொண்டை வழியாகத்தான் உணவு இறங்குமா என்ன? எல்லோருடைய தொண்டை மூலம் இறங்கட்டுமே' என்கிறாரப்பா. இதற்கு என்ன அர்த்தம்? இந்த உடல் உலகைவிட்டு நீங்கும் நேரம் வந்துவிட்டதென நினைக்கிறேன். இனி உன் தொண்டை மூலம் உணவு ஏற்பேன்; உன் தொண்டை மூலம் நீர் பருகுவேன்,'' என்று கூறிமுடித்தார் ராமகிருஷ்ணர்.

ஞானவிழிப்புப் பெற்றவருக்குப் புற்றுநோய் வரக்கூடாது என்று சட்டம் ஏதுமில்லை. ஞானவிழிப்புப் பெறுதல் அல்லது பெறா மலிருத்தலுடன் புற்றுநோய்க்கு சம்பந்தம் கிடையாது. நோய் என்பது உடலின் நிறைகுறைகளின் காரணமாக உடலில் ஏற்படும் மாறுதலாகும். உடலின் பயணமும், ஆத்மாவின் பயணமும் வெவ்வேறு விதமாக நடைபெறுகின்றன. நீ ஞான விழிப்புப் பெற்றவனாயின் உன் பாதத்தில் முள் குத்தாது என்றோ, வலிக்காது என்றோ சொல்ல முடியாது. புயல் வரும்; ஓடுகள் பறக்கும்; ஆனால் உன்னிடம் அதன் பாதிப்புத் தெரியாது. புயலும் உனக்கு ஏற்புடையதே.

மீண்டும் கேள்வியை நினைவூட்டுகிறேன். ''சூழ்நிலைக்கேற்ப ஏரியின் நீர்ப் பரப்பு எப்படி அமைதியாகவோ, சலனத்துடனோ, கொந்தளிப்புடனோ காணப்படுகிறதோ அதுபோல் சமூக சூழ்நிலையால் ஞானி பாதிப்படைவாரா, மாட்டாரா?'

உண்மையான ஆத்மஞானி அரிதிலும் அரிதானவர். எனவே பாதிப்படைதல் அல்லது அடையாமல் இருத்தல் என்னும் கேள்வி எழுவதில்லை. சமூகச் சூழ்நிலையால் தான் பாதிப்படைவதாக ஒருவர் சொன்னால், அவர் ஆத்மஞானி அல்லர். அவ்வாறு பாதிப்படைவ தில்லை என்று ஒருவர் சொன்னாலும் அவர் ஆத்மஞானி இல்லை. இந்த இரண்டு நிலையிலும் 'நான்' அல்லது 'நீ' என்னும் உணர்வு காணப்படுகிறது. அகங்காரம் மிஞ்சியுள்ளது. 'நான் சூழ்நிலையால் பாதிக்கப்படுகிறேன்' என்று ஒருவன் சொன்னால் அவனைப் பாராட்டலாம். அவனிடம் மிருதுத் தன்மை உள்ளது. சூழ்நிலையால் தான் பாதிப்படைவதில்லை என்று சொல்பவன் கடினமானவன், கடுமையானவன், கல்மனசுக்காரன். ஆனால் இந்த இரண்டு நிலையுமே ஆத்மஞான நிலையல்ல.

ஆத்மஞானம் ஏற்பட்டிருந்தால் அந்த நிலையில் 'நீ' என்பவனே இருக்கமாட்டாய். நடைபெறுவது தொடர்ந்து நடைபெறும்.

'நீ' என்பவன் இல்லாமல் போனதால் பாதிக்கப்படுவதற்கு யாருமில்லை; பாதிக்கப்படாமல் இருப்பதற்கும் யாரும் மிஞ்சவில்லை. நீ முற்றிலும் வெறுமையானவனாகிவிடுவாய். சம்பவங்கள் நிகழும். உன்னை ஊடுருவிச் செல்லும். நீ தடுத்துப் பாதிப்படையமாட்டாய்.

தற்போது இது சாத்தியமில்லை என்பதாகத் தெரியும். பாதிக்கப்படாமல் இருப்பது என்னும் இலக்கு மிகுந்த தொலைவில் உள்ளது. அந்த இலக்குடன் நின்றுவிடக்கூடாது. 'அதையும் கடந்து அதற்கு அப்பாலும் செல்' என்று நான் ஆலோசனை வழங்குகிறேன்.

**நடக்காமல் இருந்து விடுகிறேன்**
**நடப்பதை விட வேண்டுமாம்**
**இது என்னால் முடியும்தான்.**
**நடக்கலாம், ஆனால்**
**தரையில் பாதம் படக்கூடாதென்பது**
**நடக்க முடியாத காரியம்!**

**நீரில் படாதபடி இருக்கிறேன்**
**இது என்னால் முடியும்தான்.**
**நீந்தலாம், ஆனால்**
**ஆடை நனையக் கூடாதெனில்**
**இவ்வதிசயச் செயல் யாரால் முடியும்?**

**இதெல்லாம் என் பலகீனம் எனில்**
**இதன் ரகசியம் என்ன?**
**இதெல்லாம் ஒருவகை நோய் என்றால்**
**அதற்கு மாற்று மருந்தென்ன?**

**எனினும் உனது மகிமை அபாரம்**
**நீ விரும்பினால் என் பலகீனம் நீங்கும்**
**அதன் விளைவாய் ஞான வலிமை பிறக்கும்**
**அந்த வலிமையைக் கொண்டுதான் சிலர்**
**தரையைத் தொடாமலே நடக்கின்றனர்**
**நெருப்பின் நடுவில் நின்றாலும்**
**அவர்கள் எரிந்து போவதில்லை.**

ஆத்மஞான விழிப்பு என்பது 'நீ' என்பவனே இல்லாமல் போனால்தான் உனக்கு நேரும். எரிவதற்கு ஆள் இல்லாமல் போகவேண்டும். 'நீ' என்பவன் இருக்கும்வரை எரியத்தான் செய்வாய்.

நீரில் நடந்தால் பாதம் கட்டாயம் நனையும். எனினும், திடீரென ஓர் அதிசயம் நிகழ்ந்து ஆத்மஞானம் ஏற்படலாம். ஆனால் நீ எதையும் முயன்று செய்து இந்த ஞானத்தைப் பெறமுடியாது. 'நீ' என்பவன் அழிந்துவிட்டால் இந்த அதிசயம் நடக்கும்.

சிலர் திருவிழாவில் தீமிதிச் சடங்கில் நெருப்புத் தணல் பரப்பில் நடப்பார்கள். யோகியர் சிலர் நீரின்மேல் நடந்ததாகவும் செய்திகள் உண்டு. நான் கூறுவது அவர்களைப் பற்றி அன்று. நான் குறிப்பிடுவது வாழ்க்கையின் பரம உன்னத நிலையை. அங்கே நீ வாழ்வின் நடுவில் இருப்பாய்; ஆனால் வாழ்வு உன்னைத் தொடாது.* கடைத்தெரு சூழலில் நின்றாலும் நீ கோயிலில் இருப்பதுபோல் உணர்வாய். நீ கடையில் உட்கார்ந்தபடி வாடிக்கையாளர்களுடன் பேசிக் கொண்டிருப்பாய். ஆனால் நிஜமான நீ இருப்பது வேறு உலகில்.

வாழ்க்கையின் நடவடிக்கைகளில் ஈடுபட்டபடி, குடும்பத்தை நிர்வாகித்தபடி, மனைவி குழந்தைகளைப் பாதுகாத்தபடி நீ இருப்பாய். ஆனால் எந்தக் கவலையும் உன்னைத் தொடாதபடி கவனமாக இருப்பாய். தண்ணீர் ஒட்டாத தாமரை இலைபோல் வாழும் அந்த மகா அதிசயம் பற்றிதான் நான் கூறுகிறேன். திருவிழாவில் தணலின் மீது நடப்பது பயிற்சியால் சாத்தியப்படும். புவிஈர்ப்பு சக்தியைத் தடுத்து, விசேஷ காலணி அணிந்து தண்ணீரில் நடப்பதை எதிர்கால அறிவியல் சாத்திய மாக்கலாம். இவையெல்லாம் நான் கூறுவதுடன் சம்பந்தப்பட்டவை அல்ல.

**ஜெ**ன் துறவி போகோஜூ தன் சீடர்களுடன் ஒரு நதிக் கரையை அடைந்தார். சீடர்கள் தங்கள் குருவுடன் சேர்ந்து நதியைக் கடக்க நீண்டநாளாக ஆசைப்பட்டனர். ஏனெனில் போகோஜூ தான் நீரில் இறங்கினால் தண்ணீர் தன் காலைத் தொடாது என்பார். ஆகவே அந்த அதிசயத்தைப் பார்க்கவேண்டும் என்று சீடர்கள் மிகுந்த ஆர்வத்துடன் இருந்தனர்.

போகோஜூ நீரில் இறங்கியதும் கால்கள் ஈரமாயின. தங்கள் கால்களைப் போலவே அவருடைய கால்களும் பாதிக்கப்பட்டிருப் பதைப் பார்த்துச் சீடர்கள் அதிர்ச்சி அடைந்தனர். அவர்கள்

---

* In the world, not of the world (Hazlitt)

போகோஜூவிடம் அவருடைய கால்களைச் சுட்டிக்காட்டி, "குருதேவ்! உங்களுக்கு என்ன ஆயிற்று? தண்ணீரில் நடந்தாலும் அது காலில் படாது என்றீர்களே," என்று அவர் சொன்னதை நினைவூட்டினர்.

போகோஜூ சிரித்தார். "நான் சொன்னதை நீங்கள் புரிந்துகொள்ளவில்லையே. நான் இப்பொழுதுகூட நனையவில்லை. நீங்கள் சொன்ன கால் நனைந்தவன் நான் இல்லை. ஏனெனில் இந்த உடல் நானில்லை. இதைத்தான் நெடுநாளாக உங்களுக்கு போதித்துவருகிறேன். நீங்கள் எப்பொழுதுதான் விழித்துக்கொள்வீர்கள்? நான் நனையவில்லை. என்னை ஈரமாக்க எந்த உபாயமும் இல்லை.* நீங்களும், அதாவது, நிஜமான நீங்களும் நனையவில்லைதான். ஆனால் அதை நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. எனக்கும் உங்களுக்குமிடையே உள்ள வேறுபாடு இதுதான்.

புயல் வீசும்போது வெளிஉடல் நடுங்கத்தான் செய்யும். ஆனால் தனக்கு உள்ளே சூன்யத்தை அனுபவிப்பவனைப் புயல் உள்ளே வந்து தாக்காது. ஏனெனில் சூன்யத்தில் - இல்லாத ஒன்றில் - சலனம் நிகழாது. மறைந்துபோன ஒன்றிற்குப் பாதிப்பு எப்படி ஏற்படும்? ஆகவே நாம் ஞானியை 'உயிருடன் இருந்தும் இல்லாதவர், இறந்தும் இருப்பவர்' என்று கொண்டாடுகிறோம். அவரின் உள்ளே எதுவும் மிஞ்சியிருக்கவில்லை.'

அஷ்டாவக்ரர் சொன்னார், 'பேச்சில் கெட்டிக்காரர்களும் மௌனிகளாகிவிடுவார்கள். கடும் உழைப்பாளிகளும் சோம்பேறிகளாகிவிடுவர்,' அதனுடன் புதிதாக, 'உயிருள்ளவன் பிணம்போல் ஜடம் ஆகிவிடுவான்' என்றும் சேர்க்கலாம். வெளியே எல்லாச் செயல்களும் நடந்துகொண்டிருக்கும். அவனைப் பொறுத்தவரை வெளியே நடப்பதெல்லாம் நாடகம், நடிப்பு. வெளியே நடக்கும் செயல்களைப் புரிபவன் நீ அல்லன் என்பதை அறிந்திருக்கிறாய். நாடகத்தில் ஒரு பாத்திரம்போல் உனக்குரிய கடமைகளை நிறைவேற்றுகிறாய்.

என்னை நடிகர்கள் சந்திக்கவரும்போது தங்கள் நடிப்பிற்கு மேலும் மெருகூட்டுவது குறித்து ஆலோசனை கேட்கிறார்கள். நான் அவர்களிடம் சொல்வது: 'அதற்கொரு வழி உள்ளது. அதாவது, நீங்கள்

* நசைனங் க்லேதயந்த்யாபோ (தண்ணீர் ஆன்மாவை நனைக்காது. கீதை 2:23

நடிக்கிறீர்கள் என்ற உணர்வே இல்லாமல் அந்த பாத்திரமாகவே மாறிவிட வேண்டும். உங்களை கர்த்தா (செயல்புரிவன்) என நினைத்து நிஜமாகவே அந்தச் செயல்களைச் செய்வதாகக் கருதவேண்டும்.

நடிப்பவன் நடிப்பு என்பதை மறந்து தனது பாத்திரத்திற்குரிய பேச்சு, செயல்களில் ஈடுபட வேண்டும். ஆனால் ஞானி எனப்படுபவர் உலக வாழ்க்கையில் தனக்குரிய பங்கைச் செய்தாலும் அது நடிப்பு என்பதை நினைவில்கொள்ள வேண்டும்.

நீ நடிப்புப்போல் ஒன்றைச் செய்துபார். அபூர்வ சுவை பிறக்கும். இன்று வீட்டிற்குப் போனதும் மூன்று மணி நேரம் நடித்துப்பார். மனைவியைக் கண்டதும் தழுவிக்கொள். சாப்பாட்டை வாயாரப் புகழ்ந்து சாப்பிடு. குழந்தைகளைக் கண்டு வழக்கம்போல் எரிச்சல டையாமல் கொஞ்சிக் குலாவு. எல்லாம் நடிப்பு என நினைக்கும்போது குடும்பத்தில் சண்டை-சச்சரவு-கூச்சல் இல்லை. எரிச்சல்-ஏமாற்றம் இல்லை. நடிக்கும் அந்த மூன்று மணி நேரமும் நடிகன் சந்தோஷமாக உணர்கிறான். ஞானியும் தான் நடத்தக் கடமைப்பட்ட குடும்ப வாழ்க்கையை நாடகமாகவும், அதில் தனது பங்கை நடிப்பாக மட்டும் கருதுவதால், சாந்தமாக, சந்தோஷமாக இருக்கிறார்.

ஆகவே இந்துக்கள் உலக நடவடிக்கைகளை லீலை மாத்திரமே என்கிறார்கள். நீயும் இதை விளையாட்டாக நினை. கம்பீரமாகவோ, தீவிரமாகவோ எடுத்துக்கொள்ளாதே.

## மூன்றாம் கேள்வி

**"ஓஷா அவர்களே! சார்வாகர் சொன்ன 'சுகமாக வாழ்' [ஸுகம் ஜீவேத்]* என்பதைப் போலவே அஷ்டாவக்ரரின் 'சுகமாக இயங்கு' [ஸுகம் சர] என்னும் கருத்தைத் தாங்கள் சொல்லியுள்ளீர்கள். மேலும், போகத்தில் விரக்தியடைந்து முக்தியடைய போகத்தை முழுமையாகக் கடக்க வேண்டும் என்கிறீர்கள். ஆகவே பலவித யோகப்**

---

* சார்வாகர் சொல்வது: 'உயிருடன் உள்ளவரையிலும் சுகமாக வாழு. கடன் பெற்றாவது நெய் வாங்கி உண். ஏனெனில் இந்த உடல் சாம்பலானபின் திரும்பி வரப்போவதில்லையே.'

**பயிற்சிகள் செய்து கஷ்டப்படுவதைவிட சார்வாகரின் கொள்கைக்கே முழு சந்தர்ப்பம் கொடுத்தாலென்ன?"**

**ஆ**ம், போகத்தில் ஆழ்ந்தவன் (ஒருகாலத்தில் திகட்டிப்போய்) யோகத்தை நோக்கிச் செல்ல வாய்ப்புள்ளது. கனவில் ஆழ்ந்து போனவன் தான் முழுமையாக விழித்திருப்பதாக நினைத்துக் கொள்வான். அனுபவம் தவிர வேறு எதன் மூலமாகவும் மனத்தில் வைராக்கியம் (விரக்தி) தோன்ற வழியில்லை, இருந்ததுமில்லை. உலகில் வாழ்ந்து களைத்துச் சலித்துப்போன பிறகுதான் ஒருவன் உலகத்திற்கு அப்பால் போய்விட வேண்டுமென நினைப்பான். நீரில் மூழ்கியவன் தான் வெளியேவரத் துடிப்பான்.

சார்வாகரை நான் மதத்திற்கோ, அறவழிக்கோ எதிரானவர் என்று கருதவில்லை. அறவாழ்க்கையின் உச்சிக்கு இட்டுச் செல்லும் ஏணிப்படிகளில் ஒன்றாகத்தான் நான் சார்வாகரை நினைக்கிறேன். நாத்திகத்தை ஆத்திகத்தின் படிக்கட்டாகக் கருதுகிறேன்.

நீ மதங்களை ஒருங்கிணைக்க வேண்டும் என்ற பிரச்சாரம் கேட்டிருப்பாய். இந்து மதத்தையும் இஸ்லாமையும் நெருக்கமாகக் கொண்டுவர வேண்டும் என்று சமூக ஆர்வலர்கள் கூறுகின்றனர். என் கண்ணோட்டத்தில் ஆத்திகத்தையும் நாத்திகத்தையும்தான் இணைக்கவேண்டும். ஏனெனில் அவற்றிடையே வேறுபாடுகள் உள்ளன.

இந்துக்களும் முஸ்லிம்களும் மதவிஷயங்களில் ஒரே மாதிரிதான் பேசுகிறார்கள். இவர்களை எப்படி இணைப்பது? இவர்கள் கூறும் சொற்கள் வெவ்வேறாக இருக்கலாம். அதனால் என்ன பெரிய வித்தியாசம் ஏற்படப்போகிறது?

**எ**னக்குத் தெரிந்தவர் ஒருவர். பெயர் ராமபிரசாத். அவர் இஸ்லாம் மதத்திற்கு மாறிவிட்டார். புதிதாக 'குதாபக்ஷ்' என்று பெயர் சூட்டப்பட்டது. அவர் ஒருமுறை என்னைச் சந்திக்க வந்தபோது இந்தத் தகவலைச் சொன்னார். நான் சுட்டிக்காட்டினேன். "மதம் மாறி என்ன மாற்றம் கண்டீர்? அடிப்படையான பெயரே மாறிவிட்டது என்கிறீரா? குதா என்றால் கடவுள், அதாவது ராம். பக்ஷ் என்றால் இனாம், பரிசு,

அதாவது பிரசாதம். ஆகவே குதாபக்ஷ் என்றால் அது மீண்டும் ராமபிரசாத் என்பதுதான்!

இங்கே வெறும் மொழி வேறுபாடுதான் உள்ளது. நாம் ஒருங்கிணைக்க வேண்டியது நாத்திகத்தையும் ஆத்திகத்தையும்தான். சார்வாகரையும் அஷ்டாவக்ரரையும் இணைக்க வேண்டும். நாத்திகம் என்பது கோயிலின் படியாகும்போது ஒருங்கிணைப்பு முழுமைபெறும். இப்படி எதிரெதிரான இரு கூறுகள் சேரும்போது துவைத (இரட்டை) மனப்பான்மை நீங்கிவிடும்.

நான் உனக்குச் சொல்வது சுத்த அத்வைதத்தைத்தான். ஆதிசங்கரரும் என் அளவிற்குக் கலப்படமற்ற அத்வைதத்தை உபதேசிக்கவில்லை. சார்வாகரும் மற்றவர்களைப்போல் கடவுளின் அம்சம்தானே. ஆகவே சார்வாகர் பேசினார் என்றால் கடவுள்தானே அவர் மூலம் பேசியிருப்பார். அதையும் ஒப்புக்கொள்வதே உண்மையான அத்வைதம்.

சார்வாகரின் பேச்சு இனிமையானது. சார்வாகர் என்னும் பெயருக்கு அர்த்தம் இனியமொழி பேசுபவர் என்பதாகும். அவருக்கு லோகாயதர் என்று இன்னொரு பெயரும் உண்டு. இதன் பொருள் லோகத்திற்கு, உலகிற்கு, மக்களுக்குப் பிரியமானவர் என்பதாகும். சமூகத்தில் சிலர் இந்துக்கள், சிலர் ஜைனர்கள், சிலர் பௌத்தர்கள், சிலர் முஸ்லிம்கள் என்றெல்லாம் உள்ளனர். இது மேற்பூச்சான வேறுபாடு. இவர்களுக்கு உள்ளே பார். எல்லோர் உள்ளேயும் சார்வாகர் இருப்பார். பல்வேறு மதங்களைப் பின்பற்றுவோரின் சுவர்க்கங்களின் அமைப்பு எப்படி உள்ளது என்று ஆராய்ந்தால் அவை சார்வாகர் காட்டிய சுவர்க்கத்தின் பிரதிபிம்பமாகவே இருக்கும். சுவர்க்கத்து இன்பங்களெல்லாம் சார்வாகக் கொள்கையின் அடிப்படையிலேயே அமைந்தவை.

'சுகமாக வாழ்க!' என்கிறார் சார்வாகர். ஆனாலும் சார்வாகர் ஒரு படிக்கட்டு மாத்திரமே என்றுதான் சொல்லுவேன். சார்வாகர் சொல்கின்ற முறைப்படி பெறும் சுகம் உண்மையான வாழ்க்கை சுகம் அன்று. ஏனெனில் அவர் தியானம் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. அவர் போகம் (அனுபவித்தல்) பற்றியே சொல்கிறார். யோக சூத்திரம் எதுவும் தரவில்லை. எனவே அவரது கோட்பாடு அரைகுறையானது.

இதேபோல் போகம் பற்றிக் குறிப்பிடாமல் உபதேசிக்கப்படும் யோகமும் அரைகுறையானது. இந்த இரண்டையும் ஏற்கும் துணிச்சல் யாருக்குமே இல்லைபோல் தோன்றுகிறது. நான் இரண்டையுமே அங்கீகரிக்கிறேன். எனவே நீ சார்வாகரைப் புறக்கணிக்க வேண்டிய தில்லை. அவரைப் படிக்கட்டாக மட்டும் பயன்படுத்தினால் நீ அஷ்டாவக்ரரின் தத்துவத்தை உன் வாழ்க்கையில் அமல்படுத்த இயலும்.

வாழ்க்கையின் சுகங்களை அனுபவி. பிறகுதான் அந்த சுகங்கள் உண்மையில் துக்கமானவை என்பது தெரியவரும். சுகங்களை அனுபவிக்க -அனுபவிக்க, அதன் சுவை மாற ஆரம்பிக்கும். அவற்றில் துக்கத்தின் கசப்பு கலந்திருக்கும். ஒரு காலகட்டத்தில் வாழ்க்கையின் எல்லா சுகங்களும் துன்பமாக மாறிவிடும். அப்போது நீ புதுவிழிப்புப் பெற முனைவாய். அப்போது உன்னை யாரும் தடுக்க முடியாது. ஏனெனில் நீ எடுத்த முடிவு உன் அனுபவங்களின் விளைவு நீ கொஞ்சம் தாமதிக்கிறாய். அவ்வளவுதான். 'ஒருவேளை இன்னும் கொஞ்ச சுகம் மிஞ்சியுள்ளதா? இன்னும் சற்று நேரம் தூக்கத்தைத் தொடரலாமா?' என்று யோசிக்கிறாய். 'இன்னும் படிக்க ஒரு பக்கம் இருப்பதாகத் தெரிகிறதே. புதிதாகச் சந்தித்த பெண் சந்தோஷம் தரக்கூடும். இன்னொரு கோப்பை மது அருந்தலாம். இப்படி எங்காவது சுகம் ஒளிந்திருக்கும். எல்லா திசைகளிலும் கடைசி முறையாக சுகத்தைத் தேடிப் பார்த்துவிடலாம்' என்று யோசிக்கிறாய்.

இதற்காக நீ நடுவில் ஓடிவந்துவிடக் கூடாது. பிறகு இலக்கை- ஆன்ம விழிப்பை அடைய முடியாதுபோய்விடும். தியானம் செய்ய அமர்ந்தால் 'கொஞ்ச சுகம் மிஞ்சியிருப்பதுபோல் தோன்றியதே. அதையும் சோதித்துப் பார்த்திருக்கலாமே' என நினைப்பாய். பிறகு குற்றவாளி போல் உணர்வாய்.

ஆகவே உலகை அறிந்துகொண்டுவிடு. உரித்து அறிந்துவிடு. வெங்காயத்தை உரிப்பதுபோல் தொடர்ந்து அறி. கடைசியில் கையில் ஒன்றும் மிஞ்சியிராது. உலகம் வெங்காயம் போன்றதுதான். வெறும் தோல்களின் அடுக்கு. உள்ளே ஒன்றுமில்லை. உலகில் சாரம் இல்லை என்பது உனக்கு வசப்பட்டுவிட்டால் நீ ஞானவிழிப்புப் பெறுவதை யாரும் தடுக்க முடியாது.

சார்வாகரின் உபதேசங்களைப் படித்து முடித்துவிடு. பிறகுதான் திருக்குரான், கீதை, பைபிள் படித்தால் அவை புரியும். சார்வாகரை நூலின் முதல் பகுதி என்றால் அஷ்டாவக்ரர் இரண்டாம் பகுதி.

நான் உன்னை சுகத்திலிருந்து விரட்டவில்லை; ஓடிப்போகச் சொல்லவில்லை. சுகத்தின் உண்மையான சொரூபத்தை உனக்கு அறிமுகப்படுத்தவே விரும்புகிறேன். உன் அனுபவங்களாலேயே நீ யதார்த்தத்தைப் புரிந்துகொள்வாய். நீ வைரம், முத்து என முதலில் நினைத்தவை எல்லாம் இறுதியில் அடிப்படையில் கல்வகைகளே என்று புரிந்துவிடும். பட்டறிவுதான் நிரந்தரமாகவும் உறுதியாகவும் இருக்கும்.

ஆனால் என் கருத்தை சமயத்தலைவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். புரோகித வர்க்கமும் ஏற்காது. உன்னை உலக இன்பங்களை எதிர்ப்பவனாக, வெறுப்பவனாக ஆக்கவேண்டும் என்பதுதான் அவர்களின் தொழில். நீ கச்சாப் பொருளாக அவர்கள் கையில் நெகிழ்பவனாக இருக்கும்வரைதான் அவர்களின் வியாபாரம் நடக்கும். வாழ்க்கை நிகழ்ச்சிகளால் சுயமாகப் பக்குவம் பெற்றவன் எந்த மதத்தலைவரையும் சரணடையமாட்டான். கடவுளை நோக்கிய அவனது பயணம் இடைத்தரகர் இல்லாத ஒன்றாக இருக்கும். உலகம் பொல்லாதது, பயனற்றது என அவனுக்குத் தெரிந்துவிட்டது. அவனுக்குக் கடவுள்தான் மிஞ்சியிருக்கிறார். அவன் வேறு எங்கும் போகவேண்டியதில்லை. அவனை இந்து, முஸ்லிம் அல்லது கிறிஸ்தவன் என்று கூறமுடியாது. அவன் இறைநம்பிக்கை உடையவன் என்ற நிலையில் மட்டுமே இருப்பான். கடவுளுடன் நேரடியாகப் பாலம் அமைத்துக்கொள்வான்.

ஆனால் மதகுருக்கள் நீ நேரடியாகக் கடவுளை நோக்கிப் பயணிப்பதை விரும்புவதில்லை. அப்படி அனுமதித்தால் அவர்களின் இடைத்தரகர் தொழில் என்ன ஆவது? புனித யாத்திரைக்குப் போகும் வழியில் ஆங்காங்கே முகாம்கள், கடைகள், சத்திரங்கள் இருக்கின்றன. இவை உன்னைத் தடுத்துப் பயணத்தைத் தாமதப்படுத்துகின்றன. சில இடங்களில் அங்கேயே தங்கிவிடலாம்போலத் தோன்றும். இவை போன்றே சமயத்தலைவர்களும் மடங்களும் உன்னைத் தாமதப்படுத்த, தடுக்க, தங்களிடமே தங்கவைக்க முயலும் உபாயங்கள் செய்கின்றனர்.

மதகுருமார்கள் சார்வாகர் கொள்கைக்கு எதிர்முரணான கொள்கையைப் பரப்புபவர்களாக உள்ளனர். ஆனால் ஒன்று நிச்சயம். சார்வாகரைச் சரியான முறையில் பின்பற்றுபவன் என்றாவது ஒருநாள் நிச்சயமாக ஞானவிழிப்புப் பெறுவான். அவன் வழியிலுள்ள முகாம்களில் தங்குவதில் ஆர்வம் காட்டாமல், எங்கும் நிற்காமல் கடவுளை நோக்கியே பயணிப்பான். மதத்தலைவர்களால் முழு விழிப்பு தரமுடியாது. அவர்களே இன்னும் முழுமையாக விழிக்கவில்லை. அவர்களைப் பின்பற்றுவோர் பாதித்தூக்கமும் பாதி விழிப்புமான நிலையில் வழியிலுள்ள முகாம்களாகிய ஜகந்நாத் புரி, காபா[1] ஜெருசலேம்[2], கிர்னார்[3], காசி என்று ஏதாவது புண்ணியத் தலத்தில் தங்கிவிடுகிறார்கள். பிறகு அங்கிருந்து மீள்வதில்லை.

எந்த தர்மகுருவும், எந்த மதசம்பிரதாயமும் மனிதனை சுயமாகச் சிந்திக்க, சுயமாகச் செயல்பட விடுவதில்லை. மதகுருவை அல்லது மதத்தை மீற முடியாதபடி மனிதன் கட்டிப் போடப் பட்டிருக்கிறான். மதத்தலைவர்கள் மனிதனுக்கு முழு சுதந்திரம் தருவதில்லை. அஷ்டாவக்ரர்போல் சுதந்திரத்தை ஆதரித்து உபதேசித்தவர்கள் மிகக் குறைவே. அவர் சொன்னார்: "சுதந்திரமாக இரு. உன் சுபாவப்படியே வாழு. யாருக்கும், எதற்கும் இணங்கி நடப்பதுபோல் ஒப்பந்தம் செய்துகொள்ளாதே. 'நீ எல்லாக் களங்கங்களுக்கும் அப்பாற்பட்டவன்' என்பதுதான் ஞானம் என்று அறிந்துகொள். ஞான விழிப்பு உனக்கு இயற்கையானது என்பதுதான் எல்லா தியானமும், யோகமும், மதத்தின் சாரமும் என்பதை அடையாளம் கண்டுகொள். நீ ஆத்மசொரூபமானவன்; வெளியுலக மாற்றங்களால் பாதிக்கப்படாதவன்; பற்று நீங்கியவன். இதைத் தெரிந்துகொண்டு விட்டால் பிறகு நீ விருப்பப்படி செயல்படலாம்; விருப்பப்படி வாழலாம்; உனக்குக் கட்டுப்பாடு ஏதும் இருக்காது."

இத்துணை புரட்சிகரமான சுதந்திரம் உனக்கு எந்த மதகுருவும் தரமாட்டார். சட்டதிட்டங்கள் வகுக்காமல், தனிமனித சுதந்திரத்தை

1 **Kabah** மெக்கா மசூதியின் அருகிலுள்ள புண்ணியத்தலம். இதை நோக்கித்தான் முஸ்லீம்கள் தொழுகை செய்கிறார்கள்.

2 **Jerusalem**. இஸ்ரேல் நாட்டின் தலைநகர். கிறிஸ்தவம், இஸ்லாம், யூதம் ஆகிய மும்மதங்களுக்கும் புனிதத்தலம்.

3 குஜராத்திலுள்ள சமணத்தலம். நேமிநாதர் கோயில்.

ஆதரித்ததால் அஷ்டாவக்ரரின் சம்பிரதாயம் என்று தனியானதோர் அமைப்பு ஏற்பட முடியாமல் போயிற்று. அவர் புரோகிதர்போல் சடங்குகளையும் நிர்ணயிக்கவில்லை. அவருக்கென்று கோயில் எழும்பவில்லை. ஆன்ம உலகில் தனிமனிதனின் சுதந்திரத்தை வற்புறுத்திய அவர் தாமும் தனிமனிதராகத் தனித்து நின்றார்.

ஆனால் மனிதனுக்கு இந்த அளவு சுதந்திரம் தர சமூகம் தயாராக இல்லை. சமூகம் என்பது என்ன? அடங்கிக்கிடக்கும் அடிமைகளின் கூட்டம்தானே.

இந்த அடிமைத்தனத்தை அழகாகக் காட்ட, 'அடிமைகளாகத் தூங்கியபடி இருந்தால் கவலையின்றி இருக்கலாம், நிம்மதியாகத் தூங்கலாம்' என்று எடுத்துச் சொல்வதற்கென்று சிலர் தேவைப்பட்டனர். அப்படி உருவானவர்களே மதத்தலைவர்கள்.

என்னைப் பொறுத்தவரையில் நான் கடவுளை முழுமையாக ஏற்கிறேன். அவரைப் பற்றிய சார்வாகக் கண்ணோட்டத்தையும் சேர்த்தே ஏற்கிறேன். எனக்கு ஒவ்வாதது, நான் ஏற்காதது என்று உலகில் எதுவும் கிடையாது. நான் கூறுவது—எதையும் புறக்கணிக் காதீர். ஒவ்வொரு சூழ்நிலையையும் பயன்படுத்திப் பயன்பெறுங்கள். ஒவ்வொரு கல்லிலுமாக ஏறுங்கள். அவற்றை மாடிப்படிகள்போல் கருதுங்கள். மேலே மேலே ஏறுங்கள். சார்வாகர் என்ற படியும் வழியில் வரும் இதுபோதும் என்று அங்கேயே உட்கார்ந்துவிடாதீர்கள். அது பாதி மலை ஏறியதுபோல்தான். நீங்கள் போய்ச்சேர வேண்டிய இடம் இன்னும் பாதித் தொலைவில் உள்ளது. நீங்கள் தொடர்ந்து படியேற வேண்டும்.

**சூ**ஃபி சம்பிரதாயக் கதை ஒன்று. ஒரு விறகுவெட்டி காடு தொடங்கும் இடத்தில் தினமும் மரம் வெட்டி, கிளைகளை எடுத்துச் செல்வான். உழைப்பால் முதுமையாகி விட்ட உடல். உணவுப் பற்றாக்குறையால் மெலிந்த சரீரம். அப்பகுதியில் தியானம் செய்துவந்த சூஃபி துறவி ஒருவர் அவன்மீது இரக்கம் கொண்டார். அவனைக் காட்டின் உள்ளே முன்னேறச் சொன்னார். தாமிரச் சுரங்கம் ஒன்று உள்ளது என்று தூண்டினார். அப்படியே காட்டினுள் சென்றவன் சுரங்கத்தைக் கண்டான். முடிந்த அளவு தாமிரம் வெட்டி எடுத்து விற்றான். முன்பு சாப்பாட்டிற்குக் கஷ்டப்பட்டவனிடம் ஒரு மாதச் செலவுக்கான பணம் கிடைத்துவிட்டது.

அப்பணம் தீர்ந்த பின் மீண்டும் காட்டிற்கு வந்தான். துறவி இருந்தார். அவர் முன்பைவிட அதிக தூரம் சென்று பார்க்குமாறு அவனிடம் சொன்னார். அவ்வாறே அவன் சென்றதில் வெள்ளிச் சுரங்கம் கண்ணில்பட்டது. வெட்டி எடுத்த வெள்ளியை விற்று ஒரு வருடச் செலவிற்குத் தேவையான அளவு பணம் சம்பாதித்துவிட்டான். அந்த ஒரு வருடம் அவன் காட்டுப் பக்கம் தலைகாட்டவில்லை.

பிறகு வந்தவனைத் துறவி காட்டின் உள்ளே முன்பைவிட அதிக தூரம் செல்லச் சொன்னார். அங்கே தங்கச் சுரங்கம் இருந்தது. அதிலிருந்து விறகுவெட்டி தங்கம் எடுத்து விற்றான். வாழ்க்கை முழுவதற்கும் தேவையான அளவு பணம் சேர்ந்துவிட்டதால் அவன் காட்டுப் பக்கம் போவதையே நிறுத்திவிட்டான்.

துறவியே ஒருநாள் தேடிக்கொண்டு அவன் வீட்டிற்கே வந்து விட்டார்! காட்டில் மேலும் முன்னேறித் தேடச் சொன்னார். அவ்வாறு அவன் சென்றதில் வைரச் சுரங்கம் கண்ணில் பட்டது. தோண்டிக் கிடைத்த வைரங்களை விற்றுப் பல பிறவிகளுக்கு வேண்டிய அளவு சொத்துச் சேர்த்துவிட்டான். பிறகு அவனுக்குக் காட்டின் நினைவே எழவில்லை. அங்குமிங்குமாக அலைந்து வாழ்க்கை இன்பங்களை அனுபவித்து வந்தான்.

துறவி அவனைப் பல இடங்களில் தேடி, கடைசியில் வேசிகளின் தெருவில் அவனைப் பிடித்துக்கொண்டார். காட்டிற்கு வந்து அவனை மேலும் முன்னேறிப் பார்க்கச் சொன்னார். அவ்வாறே அவன் சென்று வைரச் சுரங்கத்தையும் கடந்துபோய் ஒரு திறந்த வெளியைப் பார்த்தான். அவனுக்குப் பழக்கமான அதே துறவி அங்கே தியானத்தில் ஈடுபட்டிருந்தார்.

அவன் அவரிடம் சென்று, “சுவாமி, இங்கே என்ன சுரங்கம் உள்ளது? எதுவுமே கண்ணில் படவில்லையே,” என்று விசாரித்தான்.

“புதிய சுரங்கம் - அடுத்த சுரங்கம்- உனக்குள்ளே இருக்கிறது. இனி நீ என் அருகில் உட்கார்ந்திரு. கண்களை மூடிக்கொள். சாந்தமாக மனதை வைத்துக்கொள். உனக்கு இங்கே தியானச் சுரங்கம் வாய்க்கும் அதன் மூலம் கடவுள் என்னும் முதன்மையான செல்வத்தை அடைவாய். ஏ பைத்தியக்காரா! இதுவரை வெளிப்பொருள்களுக்காகச்

சுரங்கம் தோண்டியது போதும். இனி உள்ளே தோண்டு. உட்பொருளைப் பெற்று மகிழ்," என்று துறவி விளக்கினார்.

வாழ்க்கையில் முன்னோக்கிச் சென்றபடியே இருக்க வேண்டும். எங்கேயும் தேங்கிவிடக்கூடாது. தனத்திற்கு அப்பால் தியானம் உள்ளது. சார்வாகருக்கு அப்பால் அஷ்டாவக்ரர் இருக்கிறார். அற்ப சுகத்திற்கு அப்பால் பேரானந்தம் காத்திருக்கிறது. ஜடப்பொருளுக்கு அப்பால் கடவுள் உள்ளார். எனக்கு யாருடனும் விரோதம் கிடையாது. நான் வெறுத்தொதுக்கும் விஷயமும் எதுவும் இல்லை. உன் வாழ்க்கை நதி ஓடிக்கொண்டே இருக்கவேண்டும் என்பதை நினைவில்கொள். எங்காவது குட்டைபோல் தேங்கிவிடாதே. தேங்கும் நீர் நாற்ற மடிப்பதுபோல் உன் வாழ்க்கை தேங்கினால் அழுகிவிடும். வாழ்க்கை நதி பரமாத்ம சமுத்திரத்தைச் சென்றடையாது. பயணம் பாதியில் நின்றுபோகும். அத்துடன் நீ தொலைந்தாய்.

தொடர்ந்து பிரவாகி. கடல்வரை போகவேண்டும். உலகத்தின் வழியாகவே சென்று கடவுளைச் சென்றடைய வேண்டும். அவ்வாறு சென்றடைந்ததும் உனக்கோர் ஆச்சரியம் காத்திருக்கும். நீ பின்னால் திரும்பிப்பார்த்தால் எல்லா இடங்களிலும் கடவுள்தான் நிறைந்திருந்தார் என்பது தெரியவரும். எதிலெல்லாம் சுகம் போல் தோன்றியதோ அதற்குக் காரணம் அங்கே தியானத்தின் ஒரு கிரணமாவது இறங்கியிருக்கும். காமத்தில் உனக்கு சுகம் கிடைத்ததுபோல் தோன்றியிருந்தால் அது காமசுகமன்று. காமத்தை அனுபவிக்கையில் சிறிதளவாவது தியானம் (மனம் குவித்தல்) ஏற்பட்டதால் சுகமாக உணர்ந்தாய். உனக்குப் புகழ் கிடைத்து, அதில் நீ சுவை உணர்ந்தால், அதுவும் தியானத்தின் பிரதிபலிப்புதான். எங்கெல்லாம் உனக்கு சுகம் கிடைத்ததோ, அங்கெல்லாம் பரமானந்தத்தின் கிரணம் உன்மீது பட்டது எனலாம். எதுபோலவெனில், வானத்தில் சந்திரன் பிரகாசிக்கிறது. நீ அதன் பிரதிபிம்பத்தை ஏரி நீரில் பார்க்கிறாய். அது நிழல்தான் என்றாலும் சந்திரனின் நிழல்தானே? அதுபோல் காமனில் தெரியும் நிழல் ராமனுடையதுதான்!

**தரையில் புதித்த கற்களில்**
**வேலிக் கம்பிகளின் வரிசையில்**
**கம்பங்களில், இரும்புக் கதவுகளில்**
**கம்பிவலைகளில், சுவர்களில்**

**சாவி, பூட்டு, தாழ்ப்பாள்களில்**
**பாராக்காரர்களின் உறுமல்களில்**
**மழையாய்ப் பொழியும் குண்டுவீச்சில்**
**துன்பம் பொறுக்கும் வீரர்களில்**
**எங்கு நோக்கினும் நீயே எங்கும்**
**விதவித உருவம் தாங்கி நிற்கிறாய்**

இதையெல்லாம் நீ பிற்காலத்தில்தான் தெரிந்துகொள்கிறாய். நீ வாழ்க்கையின் முழுக்கதையையும் படித்தனுபவித்துவிட்டுத் திரும்பிப் பார்த்தால் எப்போதுமே எங்கும் எதிலும் கடவுளே பிரதிபலிப்பாகிறார் என்பதைத் தெரிந்துகொள்வாய். அந்தந்த சமயம் உனக்குக் கடவுளின் பிரதிபலிப்பு தெரியவில்லைதான். என் கருத்துகள் வழக்கத்திற்கு மாறாக, தலைகீழாக இருப்பதாக உனக்குத் தோன்றும். உதாரணமாக, காமத்தில் நீ பெறும் இன்பத்தில் பிரம்மசரியமும் சிறிது கலந்துள்ளது என்பது என் முடிவு. இது கேட்டு நீ அசந்துபோவாய். அது எப்படி என விளக்குகிறேன்.

காம உணர்வு எழுகிறது. காய்ச்சல்போல் உன்னைப் பாதிக்கிறது. மனத்தில் துடிப்பு அதிகமாகிறது. ஒரு கட்டத்தில் காம உணர்வு முழுமைபெற்று திருப்தி விளைகிறது. அக்கணத்தில் மனத்தில் காம உணர்வு அறவே இருப்பதில்லை. அந்த நிலை பிரம்மசரிய உணர்வு மேலிட்டதால் உண்டானது. அப்போது உனக்குக் கிடைத்த சுகம் பிரம்மசரியத்தின் விளைவேயன்றி காம திருப்தியால் விளையவில்லை. பிறகு சில மணி நேரம் காம ஆசையே ஏற்படுவதில்லை. அப்போது நமது மனம் பிரம்மசரிய உணர்வால் நிறைந்து சுத்தமாக இருக்கிறோம் என்ற கர்வம் தோன்றுகிறது.

உனக்குப் பசியால் வயிறு துடிக்கிறது. சாப்பிடுகிறாய். திருப்தி அடைகிறாய். திருப்தியை உணரும் இந்த கணத்தில் உபவாசத்தின் சுவை கலந்துள்ளது. பிறகு சில மணி நேரம்வரை உணவின் நினைவே எழுவதில்லை. உபவாசம் என்பதன் அர்த்தம் உணவு ஞாபகமே இல்லாமல் போவதுதான். அப்போது உடல் ஆரோக்கியமாக விளங்குவதாக உணர்வாய்; உடல் சுறுசுறுப்பாக உள்ளதாகத் தோன்றும். அவ்வளவு ஏன், உடலே இல்லாததுபோல் ஆச்சரியமாக இருக்கும்.

வேறுபல சூழ்நிலைகளிலும் உடல் மறந்துபோகிறது. நீச்சலடிப் பவர்கள் சூரிய ஒளியில், அலைகளை ஊடுருவிச் செல்கையில், ஒரு கட்டத்தில் ஆனந்த உணர்வு பொங்குகிறது. உடல் நினைவு சில வினாடிகள்வரை நீங்கிவிடுகிறது. பந்தயத்தில் ஓடுபவர்களின் உடல் வியர்வையால் நனைந்திருந்தாலும், மனம் அமைதியாக இருக்கும். எதைப் பற்றிய சிந்தனையும் இருக்காது. உடலிருப்பதும் ஞாபகம் இருக்காது. சாதாரணமாகவும், விசாலமான மரத்தடியில் நின்று குளிர்ச்சியான காற்று உடலை ஸ்பரிசிக்கும்போது மெய்ம்மறந்து போகிறோம். மெய்ம்மறத்தல் என்பதே உடலை மறத்தலைத்தான் காட்டுகிறது.

மனத்தத்துவ அறிஞர்களின் கருத்துப்படி, விளையாட்டு வீரர்கள் சந்தோஷமாக இருப்பது அவர்கள் தங்கள் உடலை மறப்பதால்தான். சந்தோஷம் இல்லாவிடில் ஓரிருவரே பரிசு பெறும் நிலையில் எதற்காக இத்தனைபேர் ஓடுவதும் நீந்துவதுமாக இருக்கிறார்கள்? இந்த முயற்சிகளில் ஈடுபடுகையில் அவர்கள் உடல்-உள்ளம் இரண்டையும் மறந்து சந்தோஷமாக இருக்க முடிகிறது. நீ உலாவும்போது சுற்றுப்புறத்தை ரசித்தபடி சென்றால் ஒரு கட்டத்தில் உடல் மறந்துபோகும். சுகத்தை மட்டுமே நீ உணர்வாய். இது தானாக, தன்னை மறந்த நிலையில் நிகழவேண்டும். நீ சுகமாக உணர்ந்ததைக் கேள்விப்பட்டு வேறொருவர் அதேபோல் உலாவக் கிளம்புகிறார். வழியெல்லாம் எங்கே சுகம், எப்போது சுகம் என்று எதிர்பார்த்தபடியே செல்கிறார். இதனால் தேக உணர்வு நீடிப்பதால் அவருக்கு சுகம் கிடைக்க வாய்ப்பில்லை. உடலால் நாம் சுகம் அனுபவிப்பதாக நினைக்கிறோம். உடல் நினைவு இல்லாமல் போகும் நிலைதான் பரம சுகம் அளிக்கும்.

நீ நுணுக்கமாகப் பார்த்தால் காம சுகம் என்பது உண்மையில் காம இயக்கம் முடிந்து காமத்திலிருந்து விடுபட்ட நிலையில் ஏற்படுகிறது. உணவில் கிடைக்கும் சுகம் பசியிலிருந்து விடுபட்ட கணத்தில் நிகழ்கிறது. சிறிது நேரத்திற்கு உடல்வழி ஆசைகள் தேவைப்படாத நிலை அது. உடலால் கிடைக்கும் சுகங்களும் தேகத்தை மறந்த நிலையிலேயே கிடைத்தன, விதேகரானபின் கிடைத்தன என்பது பின்னால்தான் புரிகிறது.

**என்னுடைய கண்களில் பொங்கும் நீர்**
**இருண்ட மேகம் பொழியும் மழை**
**எனது உதட்டில் பூக்கும் புன்னகை**
**புதிய வானவில்லின் பேரழகு**
**எல்லாம் அவன்தானே!**

நீ மௌனமாக இருந்தால் உன் மௌனத்தின் வழியாகக் கடவுள் பேசுவது கேட்கும். வேறு யாரும் பேச முடியாது. ஏனென்றால் வேறு யாரும் இல்லையே! உனது அன்பிலும், காமத்திலும், பிரார்த்தனையிலும் அவரேதான் ஊடுருவி நிற்கிறார். எல்லாமே அவருடைய தோற்றங்கள்தாம். பல்வேறு வடிவங்களில் காட்சி தருபவர் அவரே. இதைத்தான் நான் அத்வைதம் என்று கூறுகிறேன். என் பிரம்மம் மாயைக்கு எதிரானவர் அல்லர். என் பிரம்மம் மாயையிலும் ஒளிந்திருக்கிறார். மாயை வழியாகப் பல வடிவங்களை எடுக்கிறார்.

பூக்களின் அழகின் வழியாக எட்டிப் பார்ப்பவர் கடவுள். பெண்ணின் முக சௌந்தரியம் மூலம் கவர்ந்திழுப்பவர் கடவுள். குழந்தையின் குற்றமற்ற கண்களில் பிரதிபலிப்பாகிறவர் கடவுள். குழந்தையின் முகவசீகரம் மூலம் அவர் உனக்கு அழைப்பு விடுகிறார்.

ஆனால் மதகுருக்கள் குறுகிய கண்ணோட்டம் காரணமாக உன்னைக் கட்டுப்பாடுகளுக்குள் அடைத்துவிட்டார்கள். ஒவ்வொரு பொருளிலும் ஆபத்து அல்லது பாவம் இருப்பதாகக் கூறி உன்னை மிரட்டிவைத்திருக்கிறார்கள். தற்செயலாகத் தடையை மீற நேர்ந்தால் நீ உன்னைக் குற்றவாளிபோல் கருதும்படி உனக்கு மூளைச்சலவை செய்துவிட்டார்கள். உதாரணமாக நீ வேறு இன, மத, சாதிப் பெண்ணை நேசித்தால் இது பாவச்செயலோ என்று நீ உன்னையே சந்தேகிக்க வைக்கிறார்கள். ஒரு பெண்ணின் கண்ணழகை நீ தீய நோக்கமின்றி ரசித்தாலும் ரிஷி-முனிவர்கள் ஏற்படுத்திய கட்டுப்பாடுகளின்படி உன் ரசிப்பு ஒரு பாவச் செயலாகும்.

ஆனாலும் அழகை மேலோட்டமாக ரசிப்பதுடன் நின்று விடாதே. அழகியல் தத்துவத்தைத் தோண்டிக்கொண்டே செல். தாமிரம், வெள்ளி, தங்கம், வைரம் முதலிய சுரங்கங்களைக் கடந்துசெல். அழகின் கட்டங்களைக் கடந்துசெல். உன்னத அழகிற்கு அப்பாலும் ஒன்றுள்ளது. அதுவே தியானம்.

'நான்' 'நீ' என்றெல்லாம் பாகுபடுத்துவதிலிருந்து விடுபடு. இந்த வேறுபடுத்தும் மனப்பான்மையால்தான் சமூகத்தில் பிரச்சினைகள் தோன்றுகின்றன; வேதனை மிகுந்துள்ளது. எனினும் நீ பிரித்துப் பார்க்கும் வழக்கத்திலிருந்து விடுதலை பெறவில்லை. இத்தனை துன்பம், இத்தனை உறுத்தல்கள், நெஞ்சு சல்லடையாகி விட்டது. ஆனாலும் நீ விடுதலைபெற முயலவில்லை. உன்னை வெளியார் யார் விடுவிக்க முடியும்? வாழ்க்கையில் நீ அனுபவித்த வேதனைகள் உனக்கு குருவாக அமையவில்லை எனில் வேறு யார் உனக்கு குருபோல் போதிக்க முடியும்?

உலகம்தான் உன் குரு. வரவு-செலவு கணக்கைச் சரிபார்ப்பது போல், உனக்கு விளையும் அனுபவங்களை ஆராய்ந்துபார். எங்கெல்லாம் உனக்குத் துன்பம் நிகழ்ந்ததோ, அங்கெல்லாம் 'நான்' என்னும் உணர்வு தூக்கலாக இருந்திருக்கும். எங்கெல்லாம் உனக்கு வலி-வேதனை-உறுத்தல் உண்டானதோ, அங்கெல்லாம் 'நான்' என்னும் உணர்வு தூக்கலாக இருந்திருக்கும். எத்தனை காலம்தான் அறியாமைத் துயிலில் ஆழ்ந்திருப்பாய்? நீ விழித்துப் பார்த்தால் அகங்காரம் உன் ஆளுமையில் முள்ளாகத் தைத்து நிற்கிறது. அதுதான் பிராணவேதனையை ஏற்படுத்துகிறது. உன் ஒத்துழைப்புக் கிடைத்தால் உன் அகங்காரம் இப்போதே கரைந்துவிடும். உன் ஆதரவால்தான் அது உன்னிடம் நீடிக்கிறது.

வேடிக்கையாகச் சொல்வதானால் நீயே உன் துன்பத்தைத் தாங்கிப்பிடிக்கிறாய். நீயே உனக்கென ஒரு நரகத்தை நிர்மாணிக்கிறாய். 'நான்' 'நீ' என்னும் பிரிவுணர்ச்சியைக் கடந்துசெல்ல வேண்டும். அதை அன்பின் மூலமோ, தியானம் மூலமோ கடந்தாக வேண்டும்.

**மண்ணில் அமிழ்ந்து கிடக்கும் நான்**
**உனது ஆணிவேர் ஆகிடுவேன்**
**நீ என்னில் தோன்றும் பூ ஆவாய்**
**வானைநோக்கி மலர்கின்றாய்**
**மண்ணிலிருந்து நான் பாய்ச்சும் ரசம்**
**பூவில் சிவப்பாய்ப் பரவுகிறது**
**நீ தயாரித் தனுப்பும் நறுமணம்**
**நிலத்தை ஊடுருவிச் செல்கிறது**

**உடல்நினைவின்மை ஓர் ஒளியாகி**
**உடலில் பிரதிபலிப்பாகிறது**
**உடலின் ஒளி உடலின்மைக்கு**
**ஆரத்தி காட்டி வணங்குகிறது**
**துவைதம்-அத்துவைதம் கடந்து**
**எனது பணிவான கருத்து இதுவே**
**ஹே பிரபு! நானும் நீயும் என்றும் ஒன்று**

செடியின் உச்சியில் பூத்த மலருக்கும், பூமியின் கீழே அடர்ந்த இருட்டில் பதிந்திருக்கும் வேருக்கும் இடையில் வித்தியாசம் கிடையாது. இரண்டும் ஒன்றே. புத்தருக்கும் உனக்கும் இடையே, அறிவிலிக்கும் அறிஞனுக்கும் இடையே, மகானுக்கும் சராசரி மனிதனுக்கும் இடையே அடிப்படையில் வேறுபாடு கிடையாது; தனித்தன்மை வாய்ந்த வேறுபாடு இல்லை. மகான் மலர்ந்த பூபோல் ஆகாயத்தை நோக்கித் தலை நிமிர்த்தலாம். சராசரியான அல்லது சாமான்யன் நிலத்தின் ஆழத்தில் இருட்டில் புதைந்திருக்கலாம். இது வேறுபாடுபோல் தெரிந்தாலும் செடி ஒன்றேதான்.

நீ உலகில் எதையும் பிரித்து இரண்டாக, பலவாகப் பார்க்கும் பழக்கத்தை, மனப்பான்மையைக் கைவிடு. 'நான்-நீ' என்ற பேதத்தை மற. சிதறிக்கிடப்பதை இணைத்தால் மனம் ஒன்றில் குவிந்த, ஒன்றில் லயித்த, சமாதிநிலை கிட்டுகிறது.

## நான்காம் கேள்வி

**"ஓஷோ அவர்களே! போகத்தின் யாத்திரை கடைசியில் யோகத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. என்று நீங்கள் சொன்னீர்கள். அப்படியானால் யோகத்தில் பயணம் தொடங்கினால், வாழ்க்கை ஒரு சக்கரம் போல் சுழலுவதால், போகத்திலா போய் முடியும்? அஷ்டாவக்ரர் என்ன சொல்கிறார்?"**

**போ**கத்தில் தொடங்கும் யாத்திரை யோகத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. ஆனால் ஒரு நிபந்தனை. நடுவில் எங்கும் தேங்கிவிடக்கூடாது. அதேசமயம், அந்தப் பயணம் யோகத்தில் சேர்ப்பிக்கும் என்ற கட்டாயமும் இல்லை. தேங்கினால் தாமிரச் சுரங்கத்துடன் நின்றுவிடுவாய். போகயாத்திரை யோகத்தில்

முடியும் என்று நான் கூறவில்லை. முடியலாம் அல்லது முடியக்கூடும் என்றுதான் எதிர்பார்க்கிறேன். தேடிக்கொண்டே செல்; பாதியில் நிறுத்தாதே; முன்னேறு. பயணத்தை இடைவிடாமல் தொடரு. அது யோகத்தில் போய்முடியும்.

யோகம் ஒரு கட்டத்தில் போகத்திற்கு இட்டுச்செல்லலாம் என்பதை இரண்டு விதமாக விளக்க முடியும். யோகம் செய்த புண்ணியம் காரணமாக யோகி சுவர்க்கத்தை அடைகிறார். அங்கே யோகமும் தியானமும் செய்ய முடியுமா? அந்த இன்ப உலகில் போகங்களைத்தான் அனுபவிக்க இடமுள்ளது.

இன்னொரு கோணத்தில், இறந்தபின்தானே சுவர்க்கம். அதற்கு முன்பே யோகி இவ்வுலகில் இருக்கையிலேயே அணிமா, மகிமா என்று பல சித்திகளை - அதிசய ஆற்றல்களை - பெற்றுவிடுகிறார். கையில் ஒரு கம்பு கிடைத்தால் நாம் அதை வைத்து எல்லாவற்றையும் தட்டிப் பார்க்கிறோம். அதுபோல் சித்திகள் வசப்பட்டால், அவற்றை பரிசோதித்துப் பார்ப்பது இயற்கைதானே. அப்போது அந்த சித்திகள் யோகியைப் பலவிதமான உலக இன்பங்களில் கொண்டுபோய் தள்ளிவிடும். பதஞ்சலி முனிவர் இந்த நிலையை—சரிவை—வர்ணித்துள்ளார்.

போகப் பாதையில் முன்னேறி யோகத்தை அடைந்தவன் அப்படியே நின்றுவிட்டால், சிறிது காலத்தில் மீண்டும் போகத்தை நோக்கித் திரும்புவான். அத்தகையவன் யோகபிரஷ்டன் எனப்படுவான். யோகத்துடன் யாரும் நின்றுவிட முடியாது. கீழே வர நேரிடும் அல்லது தாமிரம்-வெள்ளி-தங்கம்-வைரச் சுரங்கங்களைக் கடந்து அப்பாலுள்ள நிலைக்குப் போகவேண்டும். உலகம் என்பது இடைவிடாத இயக்கம். அதில் ஒரே இடத்தில் தொடர்ந்து நிற்க முடியாது.

எடிங்டன் என்ற விஞ்ஞானி* உலகில் நின்றது நின்றபடி அல்லது அப்படியே இருத்தல் என்னும் நிலைகிடையாது என்கிறார். இங்கே எப்பொருளும் அசையாமல் அல்லது மாறாமல் இருக்க

* **Sir Arthur Stanley Eddington (1882-1944)** ஆங்கிலேயர், வானியல்-இயற்பியல் கணித அறிஞர். அறிவியல் மூலம் உலகத்தின் தன்மையை முழுமையாகக் கண்டுபிடிக்க முடியாது என்னும் கருத்துக்கொண்டிருந்தார்.

முடியாது. மரம் வளர்கிறது அல்லது பட்டுப்போகிறது. குழந்தை வளருகிறது; இளைஞன் வளர்கிறான்; முதியோர் தேய்கிறார்கள். வளர்வதும் தேய்வதும் (அழிவதும்) இங்கே தொடர்ந்து நடை பெறுகிறது. யாரும் இளமையுடன் நின்றுவிடுவதில்லை. நின்றுபோதல் என்பது வாழ்க்கையில் கிடையாது. குழந்தை இளைஞனாவதை நோக்கி முன்னேறுகிறது. இளைஞன் கிழவனாகிக்கொண்டே போகிறான். கிழவன் இறப்பை நோக்கிப் பயணிக்கிறான். இறக்கும் நிலையை அடைந்தவன் அடுத்த பிறவிக்குச் செல்வது பற்றி யோசிக்கிறான். வாழ்க்கை வட்டாகச் சுழல்கிறது.

முன்னேறியபடியே செல். யோகத்தையும் தாண்டிச் செல். அப்போது நீ சாட்சி நிலையை அடைவாய். அதற்கப்பால் ஒன்றும் இல்லை. இதுவே கடைசிக் கட்டம். கடைசி முகாம். சாட்சி நிலை என்பதன் பொருள் - நீ எதன் மூலம் எல்லாவற்றையும் பார்க்க முடிகிறதோ, அதைப் பார்க்க உபாயம் எதுவும் இனி கிடையாது. இவ்வாறு போகி-யோகி-சாட்சி என்று மூன்று நிலைகள் உள்ளன.

**பிறப்புடன் வாழ்க்கை தொடங்குவதில்லை**
**இறப்புடன் அது முடிவதுமில்லை**
**பிறந்து வாழ்க்கையில் தேடுவதையே**
**இறந்தும் வாழ்க்கை தேடுகிறது;**
**கடவுள்நம் வசப்படுவதில்லை எனினும்**
**அவரது அருளால் தான் நாம் பிறக்கிறோம்**
**வாழ்க்கை முடித்து இறக்கிறோம்;**
**பிறப்பும் இறப்பும் சாணை இயந்திர சக்கரங்கள்**
**கடவுள் அதில் உரசித் தேய்த்து**
**நமக்கு மெருகேற்றுகிறார்**
**முழுமையாய் மெருகேற்றிய பின்னர்**
**தன்னையே நம்மிடம் ஒப்படைக்கிறார்.**

இந்த சாட்சி நிலையில் இரண்டு சம்பவங்களுக்கு வாய்ப்புண்டு. ஒரு பேச்சுக்காகத்தான் இரண்டு என்பதும். நிகழும் சம்பவம் ஒன்றுதான். நீர்த்துளி கடலில் விழுந்தாலும், கடல் நீர்த்துளியை இழுத்தாலும் என்ன வித்தியாசம் வந்துவிடப்போகிறது? ஒன்று, சாட்சி கடவுளில் இணைவான் அல்லது கடவுள் சாட்சியைத் தனக்குள்ளே இழுத்துக்கொள்வார். இரண்டும் ஒன்றே. சொல்லும் விதம்தான் வெவ்வேறு.

**தேடி, தேடி, தோழி! கபீர் காணாமல் போனார்!**
**கடலில் கலந்தது நீர்த்துளி, அதை எப்படி இனி பிரிப்பது?**

என்று கபீர் பாடுகிறார். தேடியபடியே சென்றவன் ஒரு கட்டத்தில் காணாமல் போகிறான். தேடிச் சென்ற நீர்த்துளி கடலில் கலந்து தன்னையே இழந்தது. கபீர் இரண்டாம் வரியைச் சற்று மாற்றி மீண்டும் பாடுகிறார்.

**தேடி, தேடி, தோழி! கபீர் காணாமல் போனார்!**
**நீர்த்துளியுடன் சேர்ந்துகொண்டது கடல்—**
**அதை எப்படி இனி பிரிப்பது?**

இரண்டு சித்திரிப்புகளும் உண்மையே. நீர்த்துளி கடலில் கலந்ததென்பது முதல் அனுபவம். இது நீர்த்துளியின் தரப்பிலிருந்து கிடைக்கப்பெற்ற அனுபவம். நாம் தற்சமயம் நீர்த்துளி மட்டுமே போன்றவர்கள். முதல் பார்வையில் நீர்த்துளி கடலில் கலந்துவிட்டதுபோல் தோன்றும். கடலோ அளக்க முடியாதபடி விசாலமானது. நாமோ அற்ப நீர்த்துளி. கடல் எப்படி நமக்குள் வந்து கலக்கும்? நாம் அற்பமானவர்கள் என்னும் தாழ்வு மனப்பான்மை நம்மைவிட்டு நீங்குவதில்லை. ஆனால் நீர்த்துளி கடலில் கலந்ததும் அதுவும் கடலின் அங்கமாகி அற்பத்தன்மையை இழக்கிறது. பிறகு எது பெரிது -எது சிறிது என்னும் கேள்வி எழுவதில்லை. இருப்பது ஒன்றுதான். ஆகவே கடல் நீர்த்துளியில் கலந்துவிட்டதெனலாம்.

எங்கும் நிற்காதே. நின்றுவிட்டால் அழுகிப்போவாய். நட, நடந்துகொண்டே இரு. ஒரு கட்டத்தில் மேற்கொண்டு செல்ல இடம் இருக்காது. அந்தக் கடைசி இடம்தான், எல்லாவற்றையும் கடந்தபின் மிஞ்சியுள்ள ஒரே இடம்தான் கடவுள். அவருக்கு அப்பால், அந்த இடத்திற்கப்பால் எதுவும் கிடையாது. இவ்வாறு இனி மேற்கொண்டு போவதற்கு இடமில்லை என்று தெரிந்ததும் உன் பயணத்தை அத்துடன் நிறுத்திக்கொள். சிறிது இடைவெளி மிஞ்சியிருந்தால் கூட மேலும் நடந்து அதையும் பூர்த்திசெய். பயணம் நிறைவடையப் பெற்றவன் வீடு திரும்பியவனாவான். அந்த வீடு ('தாம்') பரமனுடைய வீடு (பரமதாம்-பரந்தாமன்) அங்கே நீ திரும்பிவந்து சேர்கிறாய்.

## கடைசிக் கேள்வி

**"ஓஷோ அவர்களே! நீங்கள் உங்கள் சீடர்களான சந்நியாசிகளை எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருக்குமாறு உபதேசிக்கிறீர்கள். ஆனால் தீட்சை சமயம் அவர்களுக்கு அணிவிக்கும் மாலையில் இணைந்துள்ள 'லாக்கெட்'டில் (பதக்கத்தில்) உள்ள படத்தில் நீங்கள் புன்னகைகூடச் செய்யாமல் கம்பீரமாகத் தோன்றுகிறீர்களே. ஏன் அப்படி?**

**உ**ன் கேள்வி சிரிக்கவைக்கும் கலையை நீ புரிந்து கொள்ளவில்லை என்பதை வெளிப்படுத்துகிறது. உன்னைச் சிரிக்கவைக்க நான் சில விஷயங்கள் சொல்லி, நான் சிரித்து, உன்னையும் சிரி என்று சொன்னால் அது உன்னால் முடியாமல் போய்விடும். உன்னைச் சிரிக்கவைக்க நான் கம்பீரமாகத்தான் இருந்தாக வேண்டும். நான் எவ்வளவு கம்பீரமாக இருக்கிறேனோ அந்த அளவிற்கு நீ சிரிப்பதற்கு வசதியாக இருக்கும். 'நன்றாகச் சிரி' என்று நான் மிகவும் கம்பீரமாக உன்னிடம் சொல்கிறேன், நான் வேடிக்கையாகச் சொல்லவில்லை. நீயும் என் உபதேசத்தை வேடிக்கையாக எடுத்துக்கொள்ளாதே. சிரிப்பதை நான் ஆன்மிகப் பயிற்சியாகக் கருதிவருகிறேன். மலர்ந்த முகத்துடன் நீ கடவுளின் இல்லத்தைச் சென்றடை. நீ விரைந்து ஏற்கப்படுவாய். நுழைவுக்கான அனுமதி எளிதில் கிடைக்கும்.

**எ**திரெதிர் வீட்டுக்காரர்களாக இருவர். ஒருவன் தினமும் நீண்ட நேரம் பிரார்த்தனை செய்வான். பூஜை முதலிய சடங்குகளும் புரிவான். எதிர்வீட்டுக்காரனோ கடவுளைக் குறித்து விசேஷமாக எதுவும் செய்ததில்லை. முதல் மனிதனுக்கு அவனது பக்தி காரணமாக சுவர்க்கம் கிடைத்தது. அது அவனுக்கு வியப்பளிக்கவில்லை. சுவர்க்கத்தில் வசிக்கத் தனக்கு உரிமையுண்டு என்றே அவன் கருதினான்.

ஆனால் சுவர்க்கத்தில் தன் எதிர்வீட்டுக்காரனையும் பார்த்து அவன் அதிர்ச்சியடைந்தான். 'இவன் எப்படி இங்கே வந்தான்? இங்கே வர இவனுக்கு என்ன தகுதியிருக்கிறது?' என்று நினைத்துக்

குழம்பினான். ஒருநாள் சுவர்க்கத்தைப் பார்வையிட வந்த கடவுளிடம் அவன் தன் மனக்குமுறலை வெளியிட்டான்.

கடவுள் சிரித்தார். "உன் எதிர்வீட்டுக்காரன் சுவர்க்கத்திற்குத் தகுந்தவன்தான். அவன் எனக்கு எந்த விதத்திலும் தொந்தரவு கொடுத்ததில்லை. உன்னைப்போல் விடியற்காலையில் சுப்ரபாதம் பாடி அவன் என் தூக்கத்தைக் கெடுத்ததில்லை! கண்ட நேரத்தில் கண்ட உணவுகளையெல்லாம் தின்னச்சொல்லவில்லை. இரவிலும் நள்ளிரவு பூஜை நடத்தி நான் தூங்கவிடாமல் எரிச்சலூட்டியதில்லை. நீயோ இரவும் பகலும் என்னை விதம் விதமான வரங்கள் கேட்டு, புகார்கள் செய்து என்னைத் திணறடித்துவிட்டாய். உன்னை நரகத்துக்கு அனுப்பி விடலாமென்றுகூட நினைத்தேன். உன் எதிர்வீட்டுக்காரன் பூஜை, சடங்குகள் செய்யவில்லைதான்; வரங்கள் கேட்கவில்லைதான். கடவுள் எல்லாம் அறிந்தவர் என்று அவன் என்னை நிம்மதியாக இருக்க விட்டான். ஆகவே அவனுக்கு சுவர்க்கமளித்தேன்," என்று விளக்கினார்.

நீ பக்தி என்ற பெயரில் கண்ணீருடன், வாடிய முகத்துடன் காணப்பட்டாய். முரட்டுத்தனம் காட்டினாய். இம்மாதிரியான அணுகுமுறை கடவுளுக்குப் பிடிக்காது. நீ பூவைப்போல் சிரித்த முகத்துடன் ஆன்மிகப் பயணம் செய். முடிந்தால் துள்ளிக்குதித்தபடி, நடனமாடியபடி செல். கடவுள் மகிழ்ந்து உன்னை வரவேற்று சுவீகரிப்பார். உனது ஆக்கபூர்வமான கண்ணோட்டத்தைப் பாராட்டும்வகையில் உன்னிடமுள்ள குறைகளை மன்னித்துவிடுவார். கடவுளை உண்மையாக நம்புகின்றவன் எந்த சூழ்நிலையிலும் அவரது விருப்பப்படியே எதுவும் நடக்கிறது என்று இருப்பான். ஆகவே இயற்கையிலேயே அவன் உற்சாகமாக இருப்பான். ஆனால் பூஜை-சடங்கு-பண்டிகை என்ற வகையில் கடவுளை நம்புபவன் தன் கோரிக்கைகள் ஏற்கப்படவில்லையே என்று சோகமாக இருப்பான். அவனது பக்தி இந்தக் குறைபாடு காரணமாக பூரணமானதாக இருக்காது. ஒரு கட்டத்தில் அவன் கடவுள் என்று ஒருவர் உண்டா என்றுகூட சந்தேகிப்பான்.

ஆகவே நீ எப்போதும் மலர்ச்சியுடன் இருக்க வேண்டும் என்பதை இவ்வளவு தீவிரமாகச் சொல்கிறேன். என் ஆலோசனையை மேலோட்டமாக எடுத்துக்கொள்ளாதே. உன் நன்மைக்காகத்தான் நான்

கம்பீரமாகத் தெரிகிறேன். இல்லாவிட்டால், நான் ஏதோ விளையாட்டாகச் சொல்வதாக அல்லவா நீ நினைத்துவிடுவாய். பிறகு நீ இது ஆழமான விஷயம் என்று உணரமாட்டாய். அடிப்படையில் எதையும் தீவிரமாக, தலைபோகிற விஷயமாக எடுத்துக்கொள்ளாத மனிதன் நான். என் உள்ளத்தினுள்ளே நீ எட்டிப்பார்க்க முடியுமானால் ஆட்டமும் பாட்டமும் கொண்டாட்டமும், சிரிப்பும் கும்மாளமும் அங்கே நிறைந்திருப்பதை நீ காண்பாய்.

உன்னிடம் என்ன சொல்கிறேனோ, உன்னை எவ்வாறு ஆகவேண்டும் என்று சொல்கிறேனோ, அவ்வாறு நானே ஆனபிறகுதான் இப்படிச் சொல்கிறேன். உன்னுடைய சிரமம் எனக்குப் புரிகிறது. உனக்கு சிரிப்பது சங்கடமாக உள்ளது. நீ சிரித்தாலும் முத்துப் பற்கள் சிதறிவிடுமோ என்று அஞ்சி கருமித்தனமாகச் சிரிக்கிறாய். ஆனால் அழத்தொடங்கினால் அருவிபோல் கண்ணீர் கொட்டுகிறாய். உன் சிரிப்பு நிமிடத்தில் மறைந்துவிடுகிறது. அழுகையோ மணிக் கணக்கில் தொடர்கிறது. அப்போது மற்றவர்கள் தேற்றினாலும் தட்டிக்கொடுத்தாலும் நீ அழுகையை நிறுத்துவதில்லை. வாழ்க்கையில் எதையும் எதிர்மறையாக, சோகமாக எடுத்துக்கொள்வதால்தான் உன் அழுகை நீடிக்கிறது.

இவ்வாறு அழுகை உனக்கு சுபாவமாகிவிட்டதால், நீ சிரிக்க பயப்படுகிறாய். சிரிப்பது உனக்கு ஒத்துவரவில்லை. அது முன்பின் தெரியாத செயல்போல் தோன்றுகிறது. அழுகை உனக்குப் பழக்கமான தோழன். அதனுடன் உனக்கு நட்புறவு உள்ளது. ஆகவே உன் சிரிப்பிலும் அழுகையின் சாயல் கலந்துள்ளது. உன் சிரிப்பு சுதந்திரமானதாக இல்லை; சுத்தமானதாக இல்லை; களங்கமற்றதாக இல்லை. அது இதயத்திலிருந்து பீறிட்டுக் கிளம்புவதாக இல்லை.

நீ எனக்குள்ளே எட்டிப் பார்த்தால் நான் சிரிப்பது உன் சிரிப்பைப்போல் இல்லை என்பதைக் கவனிப்பாய். என்னைப்போல் ஆனால்தான் என்னைப்போல் சிரிக்கவும் இயலும். எனது சிரிப்பு வேறு தளத்தைச் சேர்ந்தது. உயர்ந்த ரகமானது. நீ அந்தத் தளம்வரை வந்தால்தான் அதன் மதிப்பு உனக்குப் புரியவரும். ஒன்றைச் சரியாகப் புரிந்துகொள்ள அந்தத் தளத்திற்கே சென்று பார்க்க வேண்டும் என்றுதான் அஷ்டாவக்ரரும் கூறுகிறார்.

புத்தர் சிரித்திருப்பாரா? சிரித்திருப்பார். அவரது சிரிப்பு உன் சிரிப்பிலிருந்து வித்தியாசமாயிருக்கும். மகாவீரர் சிரித்தாரா? உன்னைப்போல் அழுகை கலந்து சிரித்திருக்கமாட்டார். அவரது சிரிப்பில் கலகல ஓசை இருந்திருக்காதுதான். ஆனால் மௌனமான, சாந்தமான, மென்மையான, கலப்படமற்ற, கறைபடாத, தூய சிரிப்பாக இருந்திருக்கும். மகாவீரரின் சிரிப்பானது அவரது நிலையை அடைந்தவர்களுக்குத்தான் கண்ணில்படும். அவர்களுக்குத்தான் அப்படிச் சிரிப்பதும் பழக்கமாக மாறும்.

**சிருஷ்டி என்பது**
**சோகத்தில் நிகழ்கிறது**
**இறைவன் துடிக்கிறார்**
**அடிக்கடி அவதாரம் எடுக்க**
**பிறரிடம் கவிஞன் சொல்ல வேண்டியதை**
**பிரபு முதலில் அவனிடம் சொல்கிறார்**
**சோக காவியம் எழுதும் தருணம்**
**கவிஞன் அழுவது பின்னால்தான்**
**கடவுள் கண்ணீர் விடுகிறார் முன்னால்!**

நான் உன்னை அழச்செய்ய வேண்டுமென்றால், உனக்கும் முன்னால் நான் அழுது முடித்திருக்க வேண்டும். நான் உன்னைச் சிரிக்கச்செய்ய வேண்டுமென்றால், சிரிப்பு எனது உயிரின் அங்கமாகப் பிரிக்க முடியாதபடி என்னுள் நிறைந்திருக்க வேண்டும். சிரிக்கும் அனுபவம் இல்லாவிடில் நான் உன்னைச் சிரிக்கும்படி தூண்ட முடியாது. தற்சமயம் நானும் நீயும் வெவ்வேறு தளங்களில் இருக்கிறோம் என்பது உண்மையே. ஆனால் ஒருகாலத்தில் நான் தற்பொழுது நீ உள்ளதைப் போலத்தான் இருந்தேன். நீ எதிர்காலத்தில் நான் தற்பொழுது உள்ளதைப்போல் வளர்ந்து பக்குவப்படுவாய் என்று நம்பிக்கை கொண்டுள்ளேன்.

எனது நம்பிக்கை பலிக்கும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**